# கம்ப ராமாயண சாரம்



இது, கம்ப ராமாயண இன்கவித் திரட்டு என்ற தலைப்பின் கீழ்ப், பொழிப்புரை, குறிப்புரை, ஆராய்ச்சியுரை, கதைத் தொடர்ச்சியுடன், ஆசிரியர் ராவ் ஸாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் ஜி. பி. வி. ஸி. அவர்களால், மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழ்த் திங்கள் வெளியீட்டில், சென்ற பன்னிரண்டாண்டுகளுக்கு மேற்பட்ட காலமாகத் தொடுத்து வெளியிடப்பட்டு வருகின்ற அரிய பெரிய ஆராய்ச்சி நூல். இதில் சிறந்த தீஞ்சுவையுள்ள செய்யுள்கள் தெரிந்தெடுத்துச் சேர்த்துத் தெளிவாக உரை வரையப்பட்டும் ஏனைய இனிய கவிகளின் கருத்துக்கள் கதைத் தொடர்ச்சியில் அமைக்கப் பெற்றும் இருத்தலால், இதைப் படிப்பதனால் கம்பராமாயணம் முழுவதையும் படிப்பதன் முக்கியமான பயனை அடையலாம். முதல் நான்கு காண்டங்கள் முற்றுப் பெற்று ஐந்தாங் காண்டம் வெளியாகி வருகின்றது.

மஹாமஹோபாத்யாய டாக்டர் சாமிநாதையரவர்கள், ஐரோப்பிய தமிழ்ப் புலவர் தலைவர் டாக்டர் ஜி. யூ. போப்பையரவர்கள் முதலியோரால் ஆசிரியரது உரை நடை, சிறந்த நயமுடையதென வியந்துரைக்கப்பட்டிருக்கின்றது.

இந்நூலில், உண்மையாக, ஐயத்துக் கிடமின்றிக், கம்பர் கருதியனவும் முந்திய உரைகளில் இல்லாதனவும் சிறப்பாக இனியனவுமான கருத்துக்கள் ஆசிரியரால் அரிது கண்டுபிடிக்கப்பட்டு, இனிதெடுத்துரைக்கப் பெற்றிருக்கின்றன. [ஒரு சில எடுத்துக்காட்டாக 'உருத்தெரிதன்மைய' ('கருத்தொரு தன்மைய' என்னும் பாடம்), 'சுற்றத்தார் தேவரொடும்', 'கொற்றவர் காண்டுக் காட்டி', 'பாழிய பணைத்தோள் வீர' என்ற பாட்டுக்களின் உரைகளைப் பார்க்க.]

கம்ப ராமாயண சாரத்தில் முதலாவது பாலகாண்டம், தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் விரைவிற் பதிப்பித்து வெளியிடப்பெறும். விலை ரப்பர் ரூபாய் 1 அணு 4. வி. பி. மூலம் ரூபாய் 1 அணு 10. செந்தமிழ்ச் செல்விச் சந்தாதார்களுக்கும் முன் கையொப்பக் காரர்களுக்கும் நாலணுக் குறைக்கப்படும்.

முன் கையொப்பக்காரராகச் சேர விரும்புவோர் தங்களுக்கு விலாசம் இன்னதென்றும் இத்தனை பிரதி வேண்டு மென்றும் இத்துடன் இணைத்திருக்கும் ஆர்டர் பாரத்தில் பூர்த்திசெய்து,

(1) அமைச்சர்,

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
கீழரதவீதி, திருநெல்வேலி.

அல்லது

(2) ஏஜண்டு,

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப்
(கிளை நிலையம்)

6, பவளக்காரத் தெரு, சென்னை.

என்ற விலாசத்துக்கு எழுதிப் பதிவுசெய்யப்பெறுதல் வேண்டும்.



ஷிலால் பிரஸ், திருநெல்வேலி.

........................................

______________193 .

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக அமைச்சர் அவர்கட்கு,

ஐயா,

தங்கள் விளம்பரத்தைப் பார்வையிட்டேன். தாங்கள் வெளியிடக் கருதியிருக்கிற கம்ப ராமாயண சாரத்தில் முதலாவது பாலகாண்டப் புத்தகத்தில் பிரதிகள் வாங்கிக்கொள்ளச் சம்மதிக்கிறேன். ஆதலால் என் பெயரைப் பதிவுசெய்துகொண்டு ஷை புத்தகம் வெளிவந்தவுடன் ராப்பர் பிரதி 1-க்கு ரூ. 1—4—0 / கலிகோ ,, ,, 1—10—0 வீதம்...........பிரதிகள் வி. பி. மூலம் அனுப்பினால், நான் ஷை வி. பி. பணத்தைக் கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பெயர் ______________________________

தொழில் ______________________________

ஊர் ______________________________

போஸ்டு ______________________________

ஜில்லா ______________________________

தமிழ்ப்பாடப்புத்தகம் (முதற்பாகம்):—இது, மதுரை செயின்ற் மேரி உயர்தரக்கலாசாலைத் தலைமைத்தமிழாசிரியர் ஸ்ரீமான். சு. முத்துப்பிள்ளையவர்களால் எழுதப்பெற்றது. இதில் உரைநடைப் பகுதியும் செய்யுட்பகுதியும் உள்ளன. அவை ஆறாம்வகுப்புமாணவர் கற்பதற்குத் தகுதியாயமைக்கப்பெற்றன. இதிலுள்ள வாசகபாடங்களும், செய்யுட்களும் மாணவர்களுக்கு நல்லறிவு புகட்டற்குரியன. அன்றியும் தெய்வபக்தி, பொதுநோக்கு, நல்லொழுக்கம், மனத்தூய்மை முதலான நற்குணங்களமைதற்கேற்ற பொருளுரைகள் ஆராய்ந்தெடுத்துச் சேர்க்கப்பெற்றுள்ளன. செய்யுட்களும் பொதுவான நீதிகளைப் போதிக்கத்தக்கன. மதத்துவேஷங்கொள்ளாது சமரசமான நல்லொழுக்கத்தைச் சிறுவர்களுக்குப் போதிப்பதற்கு இத்தகையபுத்தகங்களே மிகவும் பயன்படத்தக்கன. சொல்லப்படும் விஷயங்கள் மாணவர் மனங்கொள்ளும்படி தெளிவும் சுவையுமுள்ள செவ்வியநடையாலெழுதியிருப்பது பாராட்டத்தக்கது.

---

இராமாயணதருமம்:—இப்புத்தகம் சிந்தாமணிக் கிராமம் கர்ணம் ஸ்ரீமத். S. K. செல்லையங்கார் அவர்களால் எழுதப்பட்டது. வால்மீகிராமாயணம், கம்பராமாயணம் முதலான வடமொழி தென்மொழி நூற் சான்றுகளுடன் குருசிஷ்யதருமம், நன்மக்கட்பேறு, ஒழுக்கமுடைமை, பிறனில்விழையாமை, விருந்தோம்பல், மனைமாட்சி முதலான அரிய பல நீதிகளை இதன் ஆசிரியர் இதில் விரிவாக ஆராய்ந்திருக்கின்றனர். [illegible] செய்யும் குருக்களுக்கும், கதாகாலக்ஷேபஞ் செய்பவர்களுக்கும், உபாத்தியாயர்களுக்கும் இப்புத்தகம் மிகவும் உப[illegible] [illegible] பகுதியோடு எளிய தமிழ்நடையில் [illegible] ஆசிரியர் எழுதி வெளியிட்டிருப்பது [illegible] [illegible]. கிரவுன் 16-பக்கங்களையுள்ள இப்புத்தகத்தின் விலை ரூ 1—8—0. வேண்டியவர்கள் 'S. K. செல்லையங்கார், கர்ணம், சிந்தாமணிக் கிராமம், [illegible] குடி போஸ்ட், திருநெல்வேலி ஜில்லா'—என்ற விலாசத்தில் பெறலாம்.

---

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

---

'செந்தமிழ்' தொகுதி ௨௧, பகுதில் ௨-ல், ௫௨-ம் பக்கத்தில் ௧௨-ம் வரியில் 'இருதிறத்தாரும் ஒப்பும்படி இரண்டாம்பாட்டையும்' என்பதன் பின் 'கூறினார்' என்பதைச் சேர்த்துக்கொள்க. அதன்பின் 'தம்கதாநாயகன் விட்டுணுவின் அவதார மென்பதற்கு இயைய மூன்றும் பாட்டையும் உய்த்துணரும்படி இயற்றினரென்பது பொருந்தும்.' என்றிருப்பதை நீக்கி அடியில் வருவதைச் சேர்த்துக்கொள்க:—

தமிழ்நாட்டிலே, அச்சுப்பாடபுத்தகங்கள் ஏற்படுமுன்னே, பிள்ளைகள் வித்தியாரம்பகாலத்தில் படித்த அரிச்சுவடியென்ற நெடுங்கணக்கு, ஓலைச்சுவடியாயிருந்தது. அது, 'அரி நமோத்து சிந்தம். அ(ன), ஆ (வன்ன)' என்று ஆதியில் அரியெனத் தொடங்கி, அந்தத்தில் 'ஔ (வன்ன), (இ)ன் (னன்ன) அரி ஓம் நன்றாக குருவே துணை' என்றெழுதி முடிக்கப்பட்டிருத்தல் தவறாத முறையாயிருந்தது. நெடுங்கணக்குக்கு, அரிச்சுவடி, அரிவரியென்ற பெயர்கள் அந்தமுறைபற்றி ஏற்பட்டவை.

வைணவச்சிறுவர்மட்டுமாகவல்லாமல் பிறமதப்பிள்ளைகளும் அரிச்சுவடிபடிக்கும்போது 'ஆதி அந்தம் அரியென ஓதினார்'. இக்காலத்தும் பிள்ளைகளுக்கு முதல்முதலாகக் கல்வி கற்பிக்கத் தொடங்கும்போது உபாத்தியாயர், ஓலையில் 'அரி நமோத்து சிந்தம்' எனத்தொடங்கி, 'அரி ஓம் நன்றாக குருவே துணை' என்றெழுதி முடித்து, மஞ்சள்பூசிச் சித்தமாக வைத்திருக்கும் ஓலை அரிச்சுவடியைப் பிள்ளைகள் கையில்வைத்து முதலில் 'அரி நமோத்து சிந்தம், அ (ன), ஆ (வன்ன)' என்றும் முடிவில் 'அரி ஓம் நன்றாக குருவே துணை' என்றும் தாம் சொல்லிக்கொடுத்தும் பிள்ளைகளைச் சொல்லச்செய்தல் முற்றும் ஒழிந்துவிடவில்லை.

அன்றியும், அரிச்சுவடி முதலான எல்லா நூல்களுக்கும் காப்பு ஆகக் காவற்கடவுளாகிய திருமாலைப் பிரார்த்தித்தல் இயல்பே. ஆகலால், இந்த அரங்கேற்றச்சபையிலுள்ள எல்லாமதத்தினரும் இந்த இராமாயணகதாரம்பத்தில் கதாநாயகனாக அவதரித்த அரியை வணங்குதல் முறையாமென உய்த்துணரச்செய்து அவர்கள் யாவரும் தடையின்றி ஒப்புக்கொள்ளும்படி 'ஆதி அந்தம் அரி' என்ற மூன்றும் பாட்டையுங் கூறினார்.

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[செந்தமிழ்த் தொகுதி உ௩, பகுதி ௫, பக்கம் ௧௫௪௧, முகப்பு.]

*அயோத்தியாகாண்டம் மந்தரைசூழ்ச்சிப்படலத்தின் முதற் பக்கத்தில் 'என்று கூறுவாளுனன்' என முடியும் ௧௩-ம் வரிக்குப் பின் அடியில் வருவதைச் சேர்த்துக்கொள்க.*

அரசர்க்குரிய உறுதிப்பொருள்களை
வசிட்டன் இராமனுக்குக் கூறுதல்.

(*அந்தணர்பெருமை*)

*'கரிய மாலினும், கண்ணுத லானினும்,*
*உரிய தாமரை மேல்உறை வானினும்,*
*விரியும் பூதமொ ரைந்தினும்,* மெய்யினும்
*பெரியர்,* அந்தணர்; *பேணுதி உள்ளத்தால்'.*

*இ-ள்.* 'அந்தணர், *மும்மூர்த்திகளைக்காட்டிலும் (எங்கும்) பரந்த பஞ்சபூதங்களைக்காட்டிலும்* பரம்பொருளையேகாட்டிலும் *பெருமை யுடையவர்கள்: (ஆதலால்) அவர்களை (வெளிச்செயலாகமட்டுமன்றி) மனப்பூர்வமாக (வும்) வழிபடுவாயாக'.*

*மால் - விட்டுணு. கண்நுதல் - கண்(ணை உடைய) நெற்றி(யை யுடைய சிவன்). உரிய தாமரை மேல் உறைவான் - (தனக்கு) உரிமை யான தாமரை (மலராகிய ஆதனத்தின்)மீது வீற்றிருப்பவன் (ஆகிய பிரமன்).* ஐம்பூதம் - *பிருதிவி (மண்) அப்பு (நீர்) தேயு (தீ) வாயு (காற்று) ஆகாயமென்னும்* அஞ்சு தத்துவங்கள். தத்துவங்கள் சூக்கும மாய்த் தேகத்தின் அகத்தே உள்ளவை. மெய் - *உள்ளது - (என்றும் உள்ளதாகிய)* பரம்பொருள். *சத்து சித்து ஆனந்தம் ஆகிய சச்சி தானந்தம் என்பதில்* என்றும் உள்ளது *என்னும் பொருளுடைய* *சத்து, பிரமத்தை *உணர்த்தல் காண்க. மெய்யன் என்பது கடவுள் என்னும் பொருளுடையது என்பதையும் கருதுக. இராமசாதகம் சேஷசாஸ்திரியார் இயற்றிப் பதிப்பித்திருக்கிற அயோத்தியாகாண்ட உரையில், மேலே கூறிய* மெய் *என்ற பதத்துக்குப்* பரமாத்துமா

**சத்து - என்றும் உள்ளது (தமிழகராதி), பிரமம் (தமிழ்ச் சொல்லகராதி).*

என்று உரையெழுதியிருப்பதும் ஓர்க. பரமாத்துமா, கடவுள், பிரமம், பரம்பொருள் என்பவை ஒருபொருள் குறித்தவை. பேணுதல் - வழிபடுதல் (தமிழகராதி). உள்ளத்தால் - உள்ளத்தோடு - மனசார. ஆல் உருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வந்தது.

அந்தணர்பெருமையை இங்கே விதந்து கூறியிருப்பதுபோல, எங்கும் கூறியிருப்பதாகத் தெரியவில்லை. கூறமுடியுமென்று நினைக்கவும் முடியவில்லை: ஏனெனில், (எல்லாவற்றினும்) பெரிது என்ற பொருளுடைய பிரமம் என்னும் பரம்பொருளுக்குப், பெரிதாகவாதல் ஒப்பாகவேனுமாதல் ஒரு பொருளிருந்தாலன்றோ, அப்பொருளினும் பெரியர் அந்தணரென்று கூறமுடியு மென்பது.

வசிட்டமுனிவன், இராமனுக்கு இராசநீதி போதிப்பானாய் முதல் முதலாக அந்தணர்பெருமையைக் கூறுகின்றான். அதற்கு நியாயம்,—பூவுலகத்தில் அறிவில்பொருள்களினும் பெருமையுடையவை, ஓர்அறிவு முதல் ஐயறிவு ஈறாக உடைய படிப்படியாக உயர்ந்த அறிவுடைப்பொருள்கள்; அவைகளினும் பெருமையுடையவர், ஆறறிவுடைய மக்கள்; அவர்களுள்ளே சிறந்த பெருமையுடையவர், ஆறும் அறிவாகிய பகுத்தறிவினும் மேலாம் அறிவாகிய தத்துவஞானமுடைய அந்தணரென்பதாம். அது பொருந்தும்: ஆயினும், அந்தப் படிப்படி உயர்முறை, பூதம் மூவர் பரம்பொருளென வரிசைப் படுத்தாமல் மூவர் பூதம் பரம்பொருளென வரிசைப்படுத்தியிருப்பதில் இல்லையேயெனில், உள்ளதே. எவ்வாறுள்ளதெனில், பரம் பொருளொன்றே, ஐம்பூதங்களடங்கிய தத்துவத்தைக் கடந்த பொருள்; மூவரும் பூதங்களும் தத்துவத்துக் குட்பட்ட பொருள்கள்; எல்லா உயிர்களின் உடல்களும் பூதங்களின் பகுதிகளாலாகிப் பூதியங்களெனப்படும். இவ்விதிக்கு விலக்காயில்லாமல், மும்மூர்த்திகளின் மிகவுந் தூய மூர்த்தங்களும் (தேகங்களும்), பூதங்களின் மிகத் தூய்மையான பகுதிகளாலாகிய பூதசாரசரீரங்களே; ஆகவே, மும் மூர்த்திகள் பரம்பொருளின் சிறந்த அம்சபூதரேயாயினும், அவர்களுடைய தேகங்கள் பூதங்களின் பாகங்களே: அவர்கள் அவர்களுடைய தேகங்களினுள் அடங்கியவர்களென்பது கூறவேண்டியதில்லை. எப்பொருளும் அதன் பாகத்தினும் பெரிதென்பது தானே விளங்கும்: விளங்கவே,

மும்மூர்த்திகளடங்கிய அவர்கள் தேகங்கள் ஐம்பூதங்களின் பாகங்களாம் சிறுமைபற்றி அவர்களை முதலிலும், அப்பூதங்களை அவர்கள் பின்னும், அவைகளடங்கிய தத்துவத்தைக்கடந்த பரம்பொருளை அவைகளின் பின்னும் படிப்படி உயர்முறையாக (சோபானக்கிரமமாக) வைத்தானென்பது.

கம்பர், பரம்பொருளை 'மூன்று கவடாய் (மும்மூர்த்திகளாய்) முளைத்தெழுந்த மூலம்' என்றும், பரம்பொருளின் பின்னாம்சபூதரான 'செங்கண்மால் நான்முகன் சிவனென் றேகொலோ - (பரம்பொருளின் பூர்ணாம்சபூதனை) எங்கள்நா யகனையும் (இராமனையும்) நினைந்த தேழைமீ' என்றும், சிவவிட்டுணுக்களை 'யாரினு முயர்ந்த மூலத் தொருவராம் இருவர்' என்றும், 'அரன் அதிகன் உலகளந்த அரி அதிகன் என்றுரைக்கும் அறிவிலோர்' என்றும், பரம்பொருள், மூன்றுகூறாய் விட்டுணுவும் பிரமனும் சிவனுமாகி, முறையே 'ஆலமும் மலரும் வெள்ளிப்பொருப்பும் (உறைவிடமாக அமர்ந்து, அவைகளை)விட்டு, (மூன்று கூறும் ஒன்றுசேர்ந்த முழுத்தனி முதல்வனாகி இராமனாக) அயோத்தி வந்தான்' என்றும் கூறியிருக்கின்றார். அவர், பரம்பொருள், ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொருவரிடம் முனைந்துநின்று தொழிலாற்றல்பற்றி, அவ்வச்சமயத்தில் அவ்வவரை உயர்ந்தவரென்பதன்றி, எப்போதும் ஒருவரை மற்றவரினும் உயர்ந்தவரெனக் கருதும் சமயவாதக்கொள்கையுடையரல்லரென்பது, நடுநிலைநின்று கம்பராமாயணமுழுதும் ஆராய்வார்க்குத் தெளிவாம். ஆதலால், இங்கே, 'கரிய மாலினும் கண்ணுதலானினும்—உரிய தாமரை மேலுறை வானினும்' என வசிட்டன்கூற்றாகக்கூறியது, படிப்படி யுயர்முறைபற்றியதாயில்லாமல் 'உமைக்கு நாதற்கு மோங்குபுள் ளூர்திக்கும்—இமைப்பி னாட்டமோ ரெட்டினை யானுக்கும்' என்றதுபோல மும்மூர்த்திகளை உயர்வுதாழ்வு குறியாது கூறியதாயுள்ளதென்பது கவனிக்கத்தக்கது.

மேற்கூறியவாற்றால், மும்மூர்த்திகளினும் பூதங்கள் பெரியவை, பூதங்களினும் பரம்பொருள் பெரிது என்றது பொருந்துமாயினும், மும்மூர்த்திகளுள் ஒருவரால் படைக்கப்பட்ட அந்தணர், அவ்வொருவரையுள்ளிட்ட மூவர் பூதம் பரம்பொருளென்னும் முத்திறப்பொருள்களினும் பெரியரென்றது, பரமாணு பிரமாண்டத்தினும் பெரிதென்றாற்

போலச் சற்றும் பொருந்தாததாகத் தோன்றுகின்றதே, இது பொருந்து மாறும் உளதோ, உளதேல், அஃது யாதெனில்,—புற வுலகில் முன் அறியப்படாததனால் காரியாம்சத்தில் இல்லாததாகவிருந்த அமெரிக்காவைக் கோலம்பஸ் என்பார் பெரிது முயன்று கண்டுபிடித்து மற்றவர்களுக்குக் காட்டிக்கொடுத்து இம்மைப்பயனடையச்செய்ததுபோல, அகவுலகில் முன் அறியப்படாதிருந்த திரிமூர்த்திகள் பஞ்சபூதங்களடங்கிய தத்துவங்கள் *தத்துவாதீதமான பரம்பொருள் ஆகிய மூவகைப்பொருள்களையும் அந்தணர், அரிதுமுயன்று கண்டுபிடித்து, மற்றவர்களுக்குக் காட்டிக்கொடுத்து மறுமைப்பயனடையச்செய்த ஒப்புயர்வற்ற சீரிய கொடையாளராவர்: ஒருபொருளைக் கொடுத்தவனை அப்பொருளினும் பெருமையுடையவனென்னும் முறைப்படி, மேற்கூறிய முப்பொருள்களைக் கொடுத்த அந்தணரை அப்பொருள்களினும் பெருமையுடையாரென்றானென்பது.

இந்தக் கவியில் வரும் மேய்போலத் திருக்குறளில் மெய்யுணர்தல் என்னும் அதிகாரப் பெயரில் வரும் மேய்யும் அந்த அதிகாரத்தில் 'எப்பொருள்' 'கற்றீண்டு' என்னுங் குறள்களில் வரும் மேய்யும் 'ஓர்த்துள்ளம்' என்ற குறளில் வரும் உள்ளதும் பரம்பொருளை உணர்த்துதல் அறியத்தக்கது.

இந்தக் கவியிலும் இதற்குப்பின்னுள்ள 'அந்தணர்' 'ஆவதற்கும்' என்ற கவிகளிலும் கூறப்பெற்ற அந்தணர் என்னும் பெயரும் அந்தணரது பெருமையும் திருக்குறளில் நீத்தார்பெருமை யென்னும் அதிகாரத்தில்வரும் அந்தணர் என்ற பெயரோடும் அப்பெயருடையாரது பெருமையோடும் ஒத்திருத்தல் கருதத்தக்கது.

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

*தத்துவாதீதம் - தத்துவங்கடந்தது.

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி—உஎ.] விபவ௵ கார்த்திகைமீ [பகுதி—க.
Vol. XXVII. November-December-1928. No. 1.

## கம்பராமாயண இன்கவித்திரட்டு

[உகூ-ம் தொகுதியின் ருகூஅ-ம் பக்கத் தொடர்ச்சி]

404. "தேர்தந்த அல்குற் சீதை, தேவர்தம் உலகில் இம்பர்
வார்தந்த கொங்கை மாதர் வயிறுதந் தாளும் அல்லள்.
தார்தந்த கமலத தாளைத் தருக்கினர் கடையச் சங்க
நீர்தந்த ததனை வெல்வான் நிலம்தந்து நிரம்பிற் றன்றே." 7

இ-ள். சீதை, தேவலோகத்து மாதர் பூலோகத்து மாதர் (நாக லோகத்து மாதர் ஆகிய இவர்கள் எவர்கள்) வயிறும் (பெற்றுத்) தரப்பட்டவ ளல்லள். (பின்னை எவ்வாறு தரப்பட்டாளென்னில், அமுதம் அருந்திக் களிப்போமென்னும்) களிப்புடையோர் (ஆன தேவாசுரர் கடலைக்) கடைய, (அந்தக் கடல்) நீர், இலக்குமியைத் (தன்பால் தோன்றச் செய்து) தந்தது. (தரும்வனை, 'பாரும் நீரும்' என்றும் 'நீரும் நிலமும்' என்றும் சேர்த்துச் செப்பப்படுதற் கியைய, பூமியும் கடலும் ஒன்றற்கொன்று ஏற்றத் தாழ் வில்லாதிருந்தன. பின்பு இலக்குமியை ஈந்தகாரணத்தால் நீர் நிலத்தை வெற்றிகொண்டதாயிருந்தது. அப்படி வெற்றிபெற்றிருந்த நீரை) வெல்லும்படி நிலமானது (திருமகளினும் சிறந்த அழகுடைய சீதை யைத்) தந்து நிறைவுற்றது.

*

ஈற்றடியில் வந்த 'தந்த' என்பது அதற்கு இயல்பாகவுள்ள 'கொடுத்த' என்ற பொருளேயும் ஏனே மூன்றடிகளிலும் வந்த 'தந்த' மூன்றும் எதுகையில் நிற்றல்பற்றி முறையே 'போன்ற' 'அணிந்த' 'பூத்த' என்ற பொருள்களையும் தருதல் காண்க. இம்பர் - இவ்வுலகம் - பூமி. வார் - கச்சு. பாட்டிற் கூறப்பட்ட தேவமாதர் மானுடமாதரோடு கூறப்படாத நாகமாதர் உபலக்கணத்தால் உரையிற் சேர்த்துக் கூறப்பட்டிருத்தல் அறிக. 'மாதர் வயிறுதந்தாளு மல்லள்' என்பதன் பொருள் 'மாதர் (கள் எவர்கள்) வயிறும் தந்தாளல்லள்' என்பதாதலால், அதற்கியைய 'வயிறுதந்தாளு மல்லள்' என்பதில் உள்ள உம்மையைப் பிரித்துக்கூட்டி 'வயிறும் தந்தாளல்லள்' எனக் கொள்க. 'தரப்பட்டாள்' என்ற செயப்பாட்டுவினை படுவிகுதிதொக்குத் 'தந்தாள்' என வந்தது; எழுதப்பட்ட ஓலை எழுதிய ஓலையென வரல்போல. தார் - பூ. 'தார்தந்த' என்பது 'கமலத்தாள்' என்பதிலுள்ள கமலத்துக்கு அடை. பூவாததாமரை இலக்குமி இருக்கைக் குரியதன்று. அதனே நீக்குதற்குத் 'தார்(-பூ) தந்த(-பூத்த) கமலம்' என்று ளெண்க. தார்தந்த கமலத்தாள் - பூப் பூத்த தாமரையை (அப் பூவை ஆதனமாகக்கொண்டு) உடையவள் - இலக்குமி. 'தார்' என்பதற்கு மாலையெனப் பொருள்கொண்டால், (திருமாலுக்கு மண) மாலை அளித்த எனப் பொருள்பட்டுத், 'தார்' 'கமலத்தாளுக்கு' அடையாம். தருக்கு - களிப்பு. தருக்குதலுக்கு மிகுதல் (சிந்தாமணி, புறநானூறு, ஐங்குறுநூறு) என்றும் மேம்படுதல் (பரிபாடல்) என்றும் பொருளுண்டு. அப்பொருள்கள் கொண்டால், 'தருக்கினர்' என்பதற்கு (எண் அல்லது தொகை) மிகுந்தோர் (ஆன தேவாசுரர்) என்றும் (மக்களாதி உயர்திணை உயிர்களுள்) மேம்பட்டோர் (ஆன தேவாசுரர்) என்றும் பொருள்செய்க. சங்கநீர் - சங்குகளையுடைய சமுத்திரம். முந்நீர் என அடைபெறுமலே நீர் சமுத்திரத்தின்பெயராம் (உரிச்சொல் நிகண்டு). வெல்வான் - வெல்லும்பொருட்டு. வான் எதிர்காலங்காட்டும் வினையெச்சவிகுதி. அன்றே ஈற்றசை.

'கமலத்தாளே நீர் தந்தது, அதனைப்போலச் சீதையை நிலம் தந்தது' என்னுமல், 'அதனை வெல்வான் சீதையை நிலம் தந்தது' என்றதனால், இலக்குமியினும் சிறந்த அழகுடையாள் சீதையென்பது குறிப்பிக்கப்பட்டது.

சீதை இலக்குமியினும் சிறந்த அழகுடையாளென்பது குறிக்கக், 'கமலத்தாளை நீர்தந்தது ; அதனை வெல்வான் சீதையை நிலம் தந்தது' என்று கூறியவள் அம்மட்டோடு நில்லாமல் 'நிலம் தந்து நிரம்பிற்று' என நிரம்பிற்று என்பதை அதிகமாக ஏன் கூறினாளென்றால், நீர் ஒரு மகளைத் தந்ததுபோல, நிலம் ஒரு மகளைத் தாராதிருந்த குறை இப்போது சீதையைத் தந்து நிரம்பிற்று என்பதன்று: அது சிறப்புடைய காரண மாகாது, திருமகளினும் சிறந்த ஒரு மகளைத்தந்து பெருவெற்றிபெற்ற நிலம் கேவலம் குறைநிரம்பியதினும் சிறந்தபயன் அடைந்ததாதலால். 'நிரம்பிற்று' என்றதற்கு வேறுகாரணம் யாது என்றால், சிறந்த அழகு நிறைந்த சீதை, சிறந்த கலைகள் நிறைந்த பௌர்ணிமிச்சந்திரன் போல்வாள் ; ஏனைய எழிலுடை மாதரெல்லாரும், பௌர்ணிமித் திதி யல்லாத பல திதிக் கலாமதிகள் போல்வார் ; குறைமதிகளான மற்றெல் லாச் சந்திரர்க்கும் மேம்பட்ட நிறைமதியான பூரணைத் திங்களுக்கு மேற்பட்ட திங்கள் உளதாதல் இயலாதது: அதுபோல, இலக்குமியை யுள்ளிட்ட, அற்பமாகவேனும் அதிகமாகவேனும் அழகு குறைந்த மாத ரனைவர்க்கும் மேம்பட்டு நிறைந்த அழகுடைய சீதையினும் சிறந்த அழகுடைய பெண் உளளாதலும் இயலாதது. சீதை, 'இருதிறத் தார்க்கும் செய்த வரம்பிவர் இருவர்' என்றதற்கேற்ப, அழகுக்கு இறுதி எல்லையான சம்பூரண சௌந்தரியமுடையவள் ; இலக்குமி, ஏனையமாத ரியாவரினும் மிக்க அழகுடையாளேயன்றி முற்றழகுடையாளல்லள், முற்றழகுடையாளாயிருந்தால் மற்றொரு முற்றழகுடையாளால் நிகரப் பெற்றிருப்பாளேயன்றி வெல்லப்பட்டிராளாதலால். நீரும் நிலமும் என்ற இருபிரிவினவாகக் 'கமலத் தண்ணல் - ஆக்கிய உலகமெல்லாம் அன்றுதொட் டின்றுகாறும் - பாக்கியம் புரிந்த எல்லாம் குவிந்திரு படிவம் ஆகிய (நீர்தந்த) திருமகள் நிலந்தந்த) சீதை பெண்பாரிருவ ருள்ளே சற்றுக்குறைய முற்றழகுடைய திருமகளைத் தந்த நீர் பூரண பாக்கியத்திற் சிறிது குறைந்த பாக்கியமேயுடைய தாய்ப் பாக்கியம் நிரம் பாதது ; குறைபாடறவேயில்லாத முழுக்க வனப்புடைய சீதையைத் தந்த நிலம் சற்றுங் குறைவற்ற சம்பூரண பாக்கியமுடையதாய்ப் பாக் கியம் நிரம்பியது என்பாள் 'நிலம் நிரம்பிற்று' என்றாளென்பது. இப் படலத்தில் 'கோபமும் மறனும்' என்ற பாட்டில் [illegible]

என்பது, 'எல்லாம்' எனப்பட்டதுபோலப், 'பாக்கியம் நிரம்பிற்று' என்பது, நிரம்பிற்று எனச் சுருக்கிச் சொல்லப்பட்டிருக்கின்றது.

இன்னும், 'நிரம்பிற்று' எனக் கூறியதன் காரணம் நீர் அபூரண அழகுடைய இலக்குமியைத் தந்து பெற்ற வெற்றி அபூரணமானது, நிலம் பூரண அழகுடைய சீதையைத் தந்து பெற்ற வெற்றி பூரண மானதென்பான் 'நிரம்பிற்று' என்றானென்பதுமாம்: இனிமேல், நீர் ஒரு பூரண அழகுடையாளைத் தரினும், அதனால் அது நிலத்துக்குச் சமானமாமேயன்றி மேலானதாகி வெற்றிபெறமுடியாத குறைவுடைய தாக, நிலம் பூரண அழகுடையாளை முதற்கட்டந்து, மூன், நீர்பெற்றுத் தோற்றுவிட்ட வெற்றி போலாத தோலாத வெற்றிபெற்று நிறை வுடையதாகியதென்பான் 'நிரம்பிற்று' என்றானென்பதுமாம்.

இந்த அருபந்த கவி, முதற்கட் படித்த மாத்திரத்தில் அவசமாம் படி அதிசயமான களிப்பளிப்பதாய், மேற்கொண்டுபடித்து ஊன்றி நோக்க நோக்க மேன்மேலும் விருப்புவிளைக்கும் சுவைமலிந்த ஆழ்ந்த கருத்துக்கள் தொடுத்துப் புலப்படுவதாய், பேராச்சரியமும் பேரானந்த மும் ஒருங்கு பயந்து, அருமையினுமருமையாய் இனிமையினுமினிமை யாய் நனி சிறந்த கவிகளுள்ளே சிறந்ததோர் கவியாய்த் திகழ்வதென்பது திண்ணம். இது, சீதை அழகை விளங்கச்செய்யும் பன்னிருசூரியர் போன்ற பன்னிருகவிகளின் முடிவில் உள்ளதாய், அவ் அழகு வருணனையை இனிது முடிப்பதாய், அக் கவிமணிகளுள் முடிமணியாய் விளங்குவது உளங்கொண்டு கருதற்குரியது.

[தொடரும்.]

வே. ப. சுப்பிரமணியமுதலியார்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு

[இவ் விருபத்தேழாந்தொகுதியின் ௪-ம் பக்கத்தொடர்ச்சி]

சீதையின் அழகைப்பற்றிய சூர்ப்பநகையின் வருணனையைவிட்டு அப்பாற்செல்லுமுன், அவ்வழகைக் கம்பர் சூர்ப்பநகைவாயிலாக வருணித்திருப்பதற்கும் அவர் கவிக்கூற்றாகவருணித்திருப்பதற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்வது தகுதியாகத்தோன்றுகின்றது. இருவரும் இலக்குமியே சீதையாக வந்ததாகக்கொண்டார்களென்பது, கம்பர் கவிக்கூற்றாகச் சீதையை 'எப்பெண் பாலும் கொண்டிவ மைப்போர் உவமிக்கும்—அப்பெண் தானே ஆயின போது' என்றும் 'மலர்மேல் நின்றிம் மங்கையின் வையத் திடைவைக' என்றும் 'போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்' என்றும் கூறியதனாலும், அவர் சூர்ப்பநகைகூற்றாக 'அரவிந்த மலருள் நீங்கி அடியிணை படியிற் றோயத்—திரு இங்கு வருவாள் கொல்லோ' என்றும், 'தாமரை துறந்து போந்தாள்' என்றும் கூறியதனாலும் விளங்கும்.

சூர்ப்பநகைகூற்றில், இலக்குமி வேறு சீதை வேறு, அவளினும் இவள் சிறந்த அழகியென்று கொள்ளுதற்கிடனாகச் சீதையைநோக்கத் 'தாமரை இருந்த தையல் சேடியாம் தரமும் அல்லள்' என வருகிறதேயெனின், அதுவும் சீதை 'திருவின் முகத்துத் திரு அன்னாள்' என்ற கவிக்கூற்றும் உபசாரக்கூற்றுக்களன்றி உண்மைக்கூற்றன்றாமென்க.

பல இடங்களிற் கவிக்கூற்றும் சூர்ப்பநகைகூற்றும் சீதையை இலக்குமியென்பதில் ஒத்திருப்பினும், சூர்ப்பநகைகூற்றான 'தேர்ந்த' என்று மேற்கூறியபாட்டில் வரும் ஓரிடத்தில் எதுக்காட்டி விவரித்துச் சீதை இலக்குமியினும் சிறந்த அழகுடையாளென்பது புலப்பட உயர்த்துக் கூறப்பட்டிருப்பது உபசாரமாகக்கொள்ளுதற் கிடங்கொடாமல் உண்மையாகக் கொள்ளக்கூடியதாயுள்ளது. இஃதொன்றே கவிக்கூற்றுக்கும் சூர்ப்பநகைகூற்றுக்கும் வேற்றுமை குறிப்பது.

கதாசிரியர்கூற்றுக்கும் அவர் கதாபாத்திரங்களின்கூற்றுகக்கூறும் கூற்றுக்கும் ஒற்றுமையிருக்கவேண்டிய அவசியமில்லை. அதனினும், சூர்ப்பநகைபோன்ற சற்பாத்திரமல்லாத பாத்திரங்களின் கூற்று, கவிக்கூற்றோடு ஒத்திராமை சகசமேயாம். ஆதலால் மேற்கூறிய வேற்றுமை தோற்றத்திலன்றி உண்மையினும் வேற்றுமையாயிருப்பினும், அதற்குச் சமாதானம் கூறவேண்டிய ஆவசியகமில்லை.

அவ் வேற்றுமை, தோற்றம் மாத்திரத்தில் வேற்றுமையோ, உண்மையினும் வேற்றுமையோவென்னின், உண்மையில் வேற்றுமையன்றென்பது, சூர்ப்பநகை, தான், சீதையைத் 'தாமரை தவிரப் போந்தாள்' என்றதற் கிசைய, அவளை மகாலக்ஷ்மியேயாகவும், பாற்கடலில் அமுதம் தோன்றியகாலத்திலே தோன்றிய இலக்ஷ்மியை மகாலக்ஷ்மியின் ஓர் அம்சமேயாகவுங் கருதிக்கூறினாளாகக் கொண்டால் விளக்கமாம்.

சீதாலக்ஷ்மியும் திருப்பாற்கடலிலக்ஷ்மியும் மகாலக்ஷ்மியின் அவதாரங்களேயாக, அவருள் ஒருத்தி மேல், ஒருத்தி கீழ் என்பது எவ்வாறுபொருந்துமெனின், பரசுராமனும் தசரதராமனும் மகாவிட்டுணுவின் அவதாரங்களாயிருந்தும், முன்னவனைப் பின்னவன் வென்று மேம்பட்டவாறு பொருந்துமென்க.

[சூர்ப்பநகை, சீதை "கண்ணெதிர்ப்பட்டாள்போலும்" தன் வருணனையால் இராவணன் சீதைமீது கழிபெருங்காமமுறும், அவளைத் தான் அவனுக்கு அறிவித்த உபகாரத்துக்குப் பிரதிஉபகாரமாக அவன் பின்பு "தனை அவிழ் குழல்இவட் கண்டு தந்த என்—இளையவட் களிப்புன் என் அரசு" என்றவாறு, தான் எச்செயலைச் செய்யும்படிவேண்டினும் அதனைத் தடையின்றிச் செய்யுமளவு தன்பால் நன்றியறிவுணர்ச்சியும் உடையனாவனென்பதை அவன் முகக்குறியாலுணர்ந்து, தான் இராமனை அடைதற்கு இதுவே உபாயமென்று எண்ணி, இராவணனை நோக்கி "உன் வீரத்தை உலகோர் காணும்படி அதிவீரனான இராமனை வருடமேல்த்தாமல் வென்று, அவனுக்குரிமையான சீதையை வெற்றிக்குறியாக உனக்குரிமையாகக்கொண்டு, அவளோடு கூடியாடிக் குலாவுவாயாக; அவளை நீ அடையும்படி நான் செய்ததற்குப் பரிசாக, இராமனை

நான் கலந்து களிக்கும்படி எனக்குத் தருவாயாக" என்று கூறிப் பின்னும் கூறுகின்றாள்.

"அவரவர்க்குரியவற்றை அவரவர் அடையச்செய்வது விதியே. ஆயினும் அது அவைகளை அவ்வவர் அடைதற்குரிய காலத்திலேதான அடைவிக்குமன்றி முன்னதாக அடைவியாது. ஆதலால், நீ பெருந்தவஞ் செய்து பெற்றிருக்கின்ற ஒருபது திருமுகங்களும் இருபது செங்கண்கள் திண்டோள்களும் பெரிய மார்பமும் அரிய உருவமும் பயன்படுங் காலம் வாராமையால், இதுவரை சீதையை அடைந்தாயில்லை. அந்தக் காலத்தை நீ விரைவாக அடையும்படி அவளை உன்பாற் சேர்க்கக்கருதித் தூக்கமுயன்றேன். இது தான் என் பிழை. தூக்கத்தொடங்கிய போது இலக்குமணன் குறுக்கிட்டு என் மூக்கையும் காதையும் போக்கிவிட்டான். போக்கிய அப்போதே அங்கேயே ஆவியை அகற்றியொழித்தற்பாலேனான யான் நிகழ்ந்ததை நின்னிடம் நிகழ்த்திவிட்டு இறக்க எண்ணி இங்கே எய்தினேன்" என்றாள்.

அப்போது நன்மையென்பனவெல்லாம், தீமை ஒன்று தோன்றி ஊன்றிநின்றபோது, நிலைபாது தொலைதல்போலத் தங்கை பங்கமும் தம்பியர் கொலையும் கேட்டு அவன் மனத்தில் எழுந்த மானக்கொதிப்பும் கோபக்கொதிப்பும் இவ் விருகொதிப்பையும்போக்க மீக்கொண்ட வீரக்கொதிப்பும் ஆகிய எல்லாக் கொதிப்புக்களும் இருந்த இடம் தெரிந்திடாம லொழியக், காமக்கொதிப்பு ஆக்கிரமித்து, அவன் மனத்தை முழுதுங்கவர்ந்து, உயிரையும் பற்றிக்கொண்டது.]

## இராவணனுக்குச் சீதையே நினைவாதல்.

405. காலையும் மறந்தான்; தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான்;
உரனையும் மறந்தனன்; உற்ற பழியையும் மறந்தான்; வெற்றி
அரனையும் கொண்ட காமன் அம்பினால், முன்னைப் பெற்ற
வரனையும் மறந்தான்; கேட்ட மங்கையை மறந்திலாதான்.

இ-ள். மன்மதபாணத்தால் (சூர்ப்பநகை சொல்லக்) கேட்ட சீதையை (மட்டும்) மறவாதவன் (ஆன இராவணன், தன் தம்பியர்) கர (ன்முதலியோர் இராமனாற் கொல்லப்பட்ட துக்கத்தி)னையும் மறந்து

விட்டான்; (அந்த இராமன் தம்பியால் அறுக்கப்பட்ட தன்) தங்கை மூக்கை (ப்பற்றிய மானத்தை) யும் (தன் மனத்தினின்றும்) ஓட்டிவிட்டான்; (தனக்குள்ள) பலத்தை (க்கொண்டு, தம்பியர் உயிரையும் தங்கை மானத்தையும் போக்கியவர்களை அதஞ்செய்தற்கு முன்னெண்ணின எண்ணத்தை)யும் மறந்தொழிந்தான்; (அப்படி அதஞ்செய்யாததனால்) பொருந்தியபழியையும் நினைத்தானில்லை; (அருந்தவம்புரிந்து சிறந்த வரம்பெற்ற நாம் இவ்வாறு பழிபொருந்துதற் கிடங்கொடுத்தலாகாதென்று நினையாமையால்) முன்பு பெற்ற வரத் (தின் மகத்துவத்) தையும் மறந்துபோனான்.

கடிதல் - ஓட்டுதல். உரன் - (உரம் என்பதன் போலி) வலிமை. அரன் - சிவன். வரன், வரம் என்பதன் போலி. கேட்ட - கேட்கப்பட்ட; செய்வினை செயப்பாட்டுவினைப்பொருளில் வந்தது. 'நின்றார்' 'முன்னம்' என்பனவும் பாடங்கள்.

மன்மதன் சிவனால் எரிக்கப்பட்டானாயினும், அவன் சிவனை உமையை மணக்கச் செய்ததனால் அரனையும் வெற்றிகொண்ட காமனென்றார். அப்படிப்பட்ட காமன் இராவணனை வென்றது எளிதென்பது குறிப்பு. 'தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான் உரனையும்' என்பதற்குத் 'தங்கையினது மூக்கை அறுத்து நின்ற வீரனுடைய வலிமையையும்' என்பது முந்திய உரைகாரர் கூறியுள்ள பொருள்.

"காமனம்பினால் முன்னைப்பெற்ற வரமென்றது—அளகைநாயகன்றன்மகனாய நளகூபரனை விரும்பிவந்த அரம்பையைக் கண்டு காமுற்றுக் காமனம்பால் நைந்த இராவணன் அவ்வரம்பையை அவளெண்ணத்துக்கு விரோதமாக வலிதிற் புணரத்தொடங்க, அவள் சினந்து 'வந்தியாகநீ மாநில மாதர்தம் - சிந்தை யாலன்றி யாவரைத் தீண்டினும் - கந்த வார்குழ லார்கற் பெரியினால் - வெந்து வீழ்தி....' என்று அவள் கூறிய சாபத்தை." இத்தகைய சாபம் இராவணனுக்கு வேதவதியாற் கொடுக்கப்பட்டதென்று சில இடங்களிலும் பிரமனாற் கொடுக்கப்பட்டதென்று வேறு சில இடங்களிலும் வருதலுண்டு. இங்கே, சம்மானமாய் நன்மை குறிக்கும் வரம் என்பதற்குத் தண்டனையாய்த் தீமைகுறிக்கும் சாபமென எதிரிடைப்பொருள்கொண்டது வியப்புடையதாகத் தோன்ற

வில்லை. அன்றியும், இதுவரை இராவணன் சீதையை வலிதிற்சேர எண்ணினனென்று குறிப்பிக்கப்படவுமில்லை.

மனநூல்வாணர் (Psychologists) நெடுங்கால ஆராய்ச்சியும் சோதனையும் செய்து அரிது கண்டுபிடித்து நிலைநாட்டியுள்ள அதி முக்கியமான உண்மையைக் கம்பர் மானதப்பிரத்தியக்ஷமாகக் கண்டு இக் கவியிலே எளிதுவிளங்க இனிது புகன்றிருப்பது இறும்பூதினு மிறும்பூதென்பது கேள்விப்பட்டது. மனஇயல் விஷயத்தில் கம்பர் எத்துணை ஆழ்ந்த அபூர்வஞானமுடையவரென்பது இந்தக்கவியினால் விளங்குதல்போலக் கோலம்காண்படலம் ௧௧-ம் கவியில் 'மஞ்சர்க்கும் மாத ரார்க்கும் மனமென்ப தொன்றே யன்றோ' என்பதனாலும் இப்படலம் ௪00-ம் கவியில் 'இன்பமும் துன்பந் தானும் உள்ளத்தோ டியைந்த வன்றே' என்பதனாலும் விளங்குதல் காண்க. (மஞ்சர் - மைந்தர்.) அவர் மனவியல்பை நுணித்தறிந்திருந்தமையை விளக்கும் கவிகளை வேறுபல இடங்களினும் பார்க்கலாம்.

இராவணன் சீதையை ஏன் மறக்கவில்லையெனல்.

406 சிற்றிடைச் சீதை யென்னும் நாமமும் சிந்தை தானும்
உற்றிரண் டொன்றாய் நின்றால், ஒன்றொழித் தொன்றை உன்ன
மற்றொரு மனமும் உண்டோ? மறக்கலாம் வழிமற் றியாதோ?
கற்றனர், ஞானம் இன்றேற் காமத்தைக் கடக்க லாமோ?

இ-ள். சீதையென்ற நாம(ங் குறிக்கும் பொருளின் உருவ)மும் (இராவணனது) மனமும் பொருந்தி இரண்டும் ஒன்றாய்விட்டால், (அவ் விருபொருள்களுள் மனமாகிய ஒரு பொருள் தான் அவசமாய் இரண்டறக்கலந்துவிட்ட சீதை உருவாகிய) ஒருபொருளை (த் தன்னி னின்றும்) நீக்கி (மறந்து) விட்டு (அவ் விருபொருள்களல்லாதபொருள்க ளுள்ளே கொல்லுண்டகான், அரியுண்ட தலைமுதலியவற் றுள் யாதாயினும்) ஒன்றை (ப் பற்றி) நினைக்க முடியாது. அப்படி நினைக்க) மற்றொருமனம் (வேண்டும். அஃது) உண்டோ? (இல்லை. அஃதில்லாமற் சீதையை) மறக்கக்கூடிய உபாயம் வேறு யா (தேனும் இருக்கிற)தோ? (ஒன்றும் இல்லை இல்லாத இரண்டாம் மனம் துலை

யாக, இராவணன் சீதையை மறத்தல் கிடக்க. கற்ற அவன் கல்வி துணையாக ஏன் காமத்தைக் கடந்தானில்லையென்றால்,) கற்றவர்களுக்கு மெய்யுணர்வில்லையானால் காமத்தை வெல்ல முடியுமோ (முடியாது: இராவணன் கற்றவனாயிருந்தும் மெய்யுணர்வில்லானாதலால், காமத்தைக் கடக்கவில்லை யென்க.).

சிற்றிடை - சிறு இடை. நாமம், நாமத்தாற் குறிக்கப்படும் பொருளான சீதையின் உருவத்துக்கு ஆகுபெயர். சிந்தை - (இராவணனுடைய) மனம். ஞானம் - மெய்யுணர்வு. அதாவது தோற்றப்பொருட்டொகுதியான பிரபஞ்சநிலையையும் உண்மைப்பொருளான கடவுள் நிலையையும் உள்ளபடி அறியும் அறிவு. 'கற்றறிஞானம்' என்பதும் பாடம்.

ஒருவனுக்கு இரண்டுகைகளிருத்தல்போல இரண்டுமனங்களில்லை. ஒருகையில் அந்தக் கையோடுகையாய் ஒட்டிய ஒருபொருளை மற்றொருகையால் நீக்கிவிடுதல் சாத்தியமாதல்போலச், சீதையும் இராவணன் மனமும் பொருந்தி இரண்டும் ஒன்றாய்விட்டநிலையில் அவைகள் ஒன்றினின்றொன்றைப் பிரித்தல் இரண்டாம் மனம் இல்லாமையால் இயலாததாயிருந்ததென்பது கருத்து.

"சீதை யென்னும் நாமமும் சிந்தை தானும் உற்றிரண் டொன்றாய் நின்றால், ஒன்றொழித் தொன்றை உன்ன" என்பதில் 'ஒன்றொழித் தொன்றை' என்ற தொடருக்குச் 'சீதையை ஒழித்துச் சிந்தையை' அல்லது 'சிந்தையை ஒழித்துச் சீதையை' யென்ற நேரான பொருள் கூறாமல் 'சீதையைநீக்கிக் காண்முதலிய பொருள்களுள் ஒன்றை' யென்ற நேரல்லாத பொருளைக் கூறியதன் காரணம் யாதெனின், இப்பாட்டு இதற்குமுந்திய 'காளையும் மறந்தான்' என்ற பாட்டின் பொருளை விளக்கப் பாடியதாயிருத்தலாலென்பது.

ஈற்றயலடியிற் சீதையை 'மறக்கலாம் வழிமற்றியாதோ' என்ற வினா எழுப்பி, ஈற்றடியிற் காமத்தைக் கடந்தாலன்றிச் சீதையை மறக்கலாகாது; காமத்தைக் கடத்தல் கல்வியாலாகாது; கல்வியுடன் அதனினும் சிறந்த தத்துவஞானமும் இருந்தாற்றான் காமத்தைக் கடக்கலாமென்பாராய்க் 'கற்றனர் ஞானம் இன்றேல் காமத்தைக் கடக்கலாமோ?'

என்ற வினாவால் விடைபிறந்தார். இதனால் காமபரவசனான இராவண னது மனஇயல்பை விளக்குதலையொட்டிச் சிறந்த பயனுடைய ஒரு பொது உண்மையைப் போதித்திருத்தல் புந்தியிற்கொண்டு போற்றுதற் குரியது. இவ்வாறாகக் கதையோடு பொருந்திப் பொது நீதிகளும் உண்மைகளும் போதிக்கப்பட்டிருத்தலைக் கம்பராமாயணத்திற் பல இடங்களிற் பார்க்கலாம். உதாரணங்கள்காணத் தூரம்போகவேண்டா; இவ் வின்கவித்திரட்டில் இதனை அடுத்துத் தொடுத்துவரும் மூன்று கவிகளின் முடிவுகளை நோக்குக.

407. விதியது வலியி னாலும் மேலுள விளைவி னாலும்
பதிஉறு கேடு வந்து குறுகிய பயத்தி னாலும்
கதிஉறு பொறியின் வெப்ப காமநோய் கல்வி நோக்கா
மதியிலி மறையச் செய்த தீமைபோல் வளர்ந்த தன்றே.

இ - ள். ('ஊழிற் பெருவலி யாஉள மற்றொன்று—சூழினும் தான் முந் துறும்' என்றவாறு தடுக்கக்கூடாத) ஊழின்பலத்தினாலும் இனி (நிகழ்தற்பாலனவாக) உள்ள (மாரீசன் இறத்தல் முதலாய் இராவணன் இறத்தல் இறுதியான) சம்பவங்களாலும் (இலங்கை) நகரம் அடைய வேண்டிய தீங்குவந்து நெருங்கியதன் பயனாலும் (இராவணன்கொண்ட) கொடியகாமநோய் கல்வி (இருந்ததிசையையும்) பாராத அறிவிலி ஒருவன் (பிறர்காணாதபடி) மறைவாகச்செய்த தீவினை (எல்லாரும் காணும்படி பெரிதாக வளர்ந்திடல்) போலவும் வேகம் மிகுந்த யந்திரம்போல (வேகமாக)வும் வளர்ந்திட்டது.

"விதி—இருவினைப்பயன் செய்தஉயிரையே சென்று அடையும் நியதி." 'பல் ஆவுள் உய்த்து விடினும் குழக்கன்று — வல்லதாம் தாய் நாடிக் கோடலை; - தொல்லைப் - பழவினையும் அன்ன தகைத்தே தற் செய்த - கிழவனை நாடிக் கொளற்கு' என்பது இங்கே கருதத்தக்கது. வினை - சம்பவம் (இலக்கியச் சொல்லகராதி). பயம் - பயன் - பலன். பதி - ஊர்; தலைவன். கதி - விரைவு - வேகம். உறுதல் - மிகுதல். பொறி -

இயந்திரம். பொறியின் - இயந்திரம்போல (வேகமாக). தீமை - தீங்கு. 'பதி' இராவணனாகிய தலைவனைக் குறிப்பதாகவுங் கொள்ளலாம்.

'கதிஉறு பொறியின்' என்பதற்கு 'விரைதலுற்ற அறிவினாலே' என்பதும் '(புலன் றுகர்தலில்) வேகம் பொருந்திய இராவணனுடைய இந்திரியங்களிலே' என்பதும் முந்திய உரைகள். "பதிஉறு கேடுவந்து குறுகிப பயம் - நந்தியினது சாபத்தின்படி வானரரால் இலங்கை அழிய வேண்டியமை."

408. பொன்மய மான நங்கை மனம்புகப் புன்மை பூண்ட
தன்மையோ? அரக்கன் தன்னை அயர்த்ததோர் தகைமை யாலோ?
மன்மதன் வாளி தூவி நலிவதோர் வலத்தன் ஆனான்
வன்மையை மாற்றும் ஆற்றல் காமத்தே வதிந்த தன்றே.

இ - ள். இராவணன், தன் மனத்தினுள்ளே சீதை புகுந்ததனால், சிறுமை அடைந்த தன்மையினாலோ, தன்னைத் தான் மறந்ததன்மையினாலோ (வன்மைமிக்க தேவர்களியாவரும் அஞ்சும் அவனை மெல்லிய பூவே அம்பாகக்கொண்ட மென்மை மிக்க) காமதேவன் அம்பு எய்து வருந்தச் செய்யத்தக்க வல்லமையுடையவனானான். (இது வியப்பன்று;) எல்லாருடைய வல்லமையையும் நீக்கிவிடும் வல்லமை ("வெற்றி அரனையுங் கொண்ட") காமத்தின்கண்ணே தங்கியுள்ளது.

மயம் - அழகு; வடிவம்; சொரூபம் (இலக்கியச் சொல்லகராதி). புன்மை - சிறுமை; இங்கே எளிமை குறித்தது. தன்மையாலோ என்பது தன்மையோ என ஆல் உருபு தொக்கது. வருந்தல் வருத்தல் என்னும் பொருளுடையதாய்த் தன்வினை பிறவினை இரண்டிற்கும் பொதுவான 'நலிதல்' இங்கே வருத்தலென்னும் பிறவினைப்பொருளில் வந்தது. வலம் - பலம். வதிதல் - தங்குதல். அன்று ஏ அசைகள்.

சிவமயம் என்பது சிவத்தானாகிய நிறைவு, சிவரூபம் (தமிழ்ச் சொல்லகராதி) என்ற பொருளில் வருதல்போலப், பொன்னாலாகிய (—மகாலக்குமியாகிய அதாவது அத் தேவியின் எல்லா அம்சங்க

ளாலும் ஆகிய எனவே மகாலக்ஷுமியினது பூரணாவதாரமான) நிறைவு பொருந்திய என்ற பொருளிலும் பொன்னின் (—மகாலக்ஷுமியின்) சொரூபமான என்ற பொருளிலும் 'பொன்மயமான' என்பது வந்ததாகக் கொள்ளல் பொருந்தும். இது, முன்வந்த 'தேர்தந்த' என்ற 404-ம் கவியுரையின் கடைசியில் உள்ள மகாலக்ஷுமியே சீதையாக வந்தாளென்பதனோடு பொருந்துதல் காண்க. 'பொன்மயமான நங்கை' என்பதற்கு '(மிக்க ஒளியால்) பொன்மயமானவள்போலுள்ள சீதை' என்பது பொருந்திய உரை.

[காமபரவசனான இராவணன், இனி இங்கிருந்தால், நம்முடைய காமம் வெளிப்பட்டுவிடுமென்று, கொலுவிருக்கைவிட்டு, இயல்பாக எழுகின்ற நேரத்துக்குமுன் எழுந்து தன் மாளிகையினுள்ளேபோனான். போனவன், பள்ளியறையுள்ளே சென்று, தேவியர் யாவரும் போய்விட ஏவியபின்பு படுக்கையிற்சேர்ந்தான். காமாக்கினியால் ஆகமும் அகமுமேயன்றி ஆவியும் வேவதாயினான். அவ் வெப்பம் பொறுக்கமாட்டானாய், படுக்கையிலே தரிக்கமாட்டானாய், மாளிகையின் உள்ளினும் வெளியே மரங்கள் நிறைந்த வனம் குளிர்ச்சியை அளிக்குமென்று புறப்பட்டுப், பணிப்பெண்கள் அணி அணியாகத் தீபங்களேந்திச் செல்லாநிற்கச் சென்று, ஒரு சோலையை அடைந்து, அங்குள்ள ஒரு வசந்தமண்டபத்தில், அவன் எப்போதுவரினும் அப்போது சயனித்தற்குச் சன்னத்தமாய் அப்போதப்போது புதிதுபுதிதாக மலர்மெத்தை பரப்பிவைத்திருந்த மஞ்சத்தைச் சார்ந்தான். அப்போது பின்பனிப்பருவத்திறுதியும் இளவேனிற்பருவத்துவக்கமும் சந்திக்கும் சமயமாயிருந்தது. தானுற்ற காமவெப்பத்தை அப்போது நிகழ்ந்த பருவவெப்பமென்று அவன் கோபிக்க, அஞ்சி அகன்றதுபோலப் பின்பனிப்பருவம் கழியக், கிரமமாக அடுத்துவருவதாகிய இளவேனிற்பருவம் எய்தியது.]

## இராவணனது விரகதாபம்.

409\. வன்பனை மாறும் தீய மன்னரும் குளிர வாழும்
மென்பனி எரிந்த தென்றால், வெயிலை யியம்ப லாமோ?
அன்பெனும் விடமுண் டாரை ஆற்றலாம் மருந்தும் உண்டோ?
இன்பமும் துன்பும் தானும் உள்ளத்தே யுறைவ தன்றே?

இ - ள். (வெயிலால் வெதுப்பப்பட்டிருந்த) மரங்களும் மலைகளும் குளிரும்படி (அவைகளின்மீது பனி படிந்து) தங்கும் பனிக்காலமே (இராவணனுக்கு) வெப்பமாயிருந்ததென்றால், வேனிற்காலத் (தின் வெப்பத்)தை விளம்பவேண்டுமோ? (வேண்டா.) காமமாகிய விடத்தை உண்டவர்களை (அவ்விடத்தால் விளையும் வேதனையால் வருந்தாதபடி) ஆற்றக்கூடிய மருந்தும் உண்டோ? (இல்லை) இன்பமும் துன்பமும் (என்ற இரண்டுநிலைகளும் அவரவர்க்குப் புறத்தேயுள்ள நிலையோடு பொருந்தாமல் அவரவர் அகத்தேயுள்ள) மனநிலையோடு பொருந்தியவைகளன்றோ? (ஆம்.)

பணை-கிளை. பணைமரம்-கிளைகளையுடைய மரம். பணைத்தல் பருத்தலென்னும் பொருட்டாதலால், 'பணைமரம்' பருத்தமரமுமாம்.

மிகக் குளிர்ச்சியான தேசங்களில், பனிக்காலத்தில், மரங்கள் தீயினாற் கருகினாற்போல இலைகள் உதிர்ந்து நிறமிலையுட்கொண்டு வெயிலிற் பிறபொருள்களினும் குளிர்ந்திருக்கும் மரங்களும் கரிந்து தீந்து போகவென்பார் 'மரமும் தீய' என்று சொன்னலாம். வெயிலில் மற்றைப் பொருள்களினும் வெப்புற்றிருக்கும் மலைகளும் குளிர என்று விரித்துக் கூறி 'மலைகளுங்குளிர' என்பதில் உள்ள உம்மைப்பொருளை விளக்கலாம். பனி, பனிக்காலத்துக்கு ஆகுபெயர்.

'எதிரிடைகள் இசைபுடையன' எனப் பொருள்படுகின்ற 'Extremes meet' என்ற ஆங்கில வாக்கியப்படி, துக்கமேலீட்டாற் போலவே சந்தோட மேலீட்டாலும் கண்ணீர்பெருகுதலும், மிக்க இருளிற்போல மிக்க ஒளியிலும் அறவே கண் தெரியாமையும் 'எதிரிடைகள் இசைபுடையன' என்னும் உண்மையை விளக்கும் நிகழ்ச்சிகளாம். இங்ஙனத் தெரியவந்த அதி துக்க சமாசாரத்தாலும் அதிசந்தோட சமாசாரத்தாலும் சிலர் இறந்திருக்கின்றனரென்று கூறுவதுண்டு. கடும் பனித்தேசத்திற் கொடுங்குளிர்க் காலத்தில் இரும்புத்துண்டைத் தொட்டோர் கை, தீக்கனலைத் தொட்டோர்கைபோலக், கொப்புளங்

கொள்ளுமென்றும், உக்கிரமான உட்டணம் உள்ள பிரதேசத்தில், கொடிய கோடைக்காலத்தில், மரங்கள் இலைகளிழந்து கருகிநிற்றல் போல, உறைபனித்தேசங்களிற் கடுமையான பனிக்காலத்தில் மரங்கள் இலைகள் உதிர்ந்து நிற்குமென்றும் கூறுவதும் உண்டு. ஆதலால், 'வன்பணை மரமுந் தீயவாழும் பனிக்கால' மென்றது மிக்க பொருத்த முடைத்தாம்.

அன்பு-ஆசை. அது, இங்கே ஆண் பெண்ணையும் பெண் ஆணையும் விரும்பும் ஆசையாகிய காமத்தை உணர்த்திநின்றது. 'அன்றே' என்பது, அல்லவா என்று பொருள்படுகின்ற, சொல்வோன் குறிப்பாலும் முன்பின் தொடர்ச்சி (context) யாலும் உடன்பாட்டுப் பொருளுணர்த்தும் எதிர்மறை வினவாக வாயினும், 'அன்று' 'ஏ' என்னும் இரண்டு அசைச்சொற்கள் இயைந்துநின்று வேறுபொருளுணர்த்தாது ஓசை நிறைக்கும் அசைநிலையாகவாயினும் கொள்ளும்படிநிற்றல் குறித்துக் கொள்ளற்குரியது.

மேலே 'காலையும் மறந்தான்' என்ற பாட்டுரையின் முடிவிலே இப் பாட்டின் ஈற்றடி வாக்கியம் கம்பர் மக்கள் மனஇயலை மிக்குணர்ந்தவ ரென்பதை விளக்கும் பல உதாரணங்களுள் ஒன்றாக எடுத்துக் காட்டப் பட்டிருக்கிறது. இவ் வாக்கியம் சீதளமான சோலையிலே குளிர்ச்சியான இரவிலே இராவணனுக்கு வெப்ப உணர்ச்சி மிக்கது, அவன் மனநிலை காமம் காரணமாக மாறியதனாலெனப் புலப்படுத்தலோடு, சிறந்ததோர் பொது உண்மையைப் போதிக்கின்றது.

இந்த அநுபவசித்தமான அருமந்த அறிவுபொதிந்த அழகிய அரும்பெற லமுதவாக்கியம், தமிழ்ப் பெருங்காப்பியக் கவிஞருள் கம்ப ரொருவருக்கே சித்தியவரென்று கருதப்பெற்ற கச்சியப்பமுனிவர் தணிகைப் புராணத்தில் வீராட்டகாசப் படலத்தில் 'அறிவுடையார்க்கு நரகமும் சுவர்க்கமாம்: அறிவிலார்க்குச் சுவர்க்கமும் நரகமாம்' என்னும் உயரிய உண்மைப்பொருள்படக் கூறியுள்ள;

விரகு மேவரின் நரகமும் துறக்கமே; வெதிர்க்கும்
நரக மேவிர கில்லுழி நபத்தகும் இடமும்:
அரவ மாலையான் கயிலையும், அலரவன் தனக்குப்
புரவி லாத்துயர்க் கவநியில் புவனம் ஆகியதே.

என்னும் ௫௰-ம் கவியை நினைவுகூரச் செய்கின்றது. கைலாசத்துக்கு வந்து சிவனை வணங்கித் தன்னை வணங்காத அகந்தை மிகுந்த பிரமனைக் குமாரக்கடவுள் வேதமுதன்மொழிபொருள் வினவ, அவன் விளம்ப மாட்டாது விளம்பனஞ்செய்து விழிக்க, அக்கடவுள் வெகுண்டு அவனை அக் கயிலையின்கண்ணே தானே சிறையிலிட்டசந்தர்ப்பத்திற் கூறப் பட்டது இக் கவி.

மேற்படி ஈற்றடி வாக்கியம், ஒருவகையிலும் ஒருவரையொருவ ரறியாத உத்தமக்கவிகள் உள்ளங்களிலே ஒரே தன்மையான ஒள்ளிய உயரிய உண்மைகள் உதயமாவதற்கு ஓர் உதாரணமாக உள்ளது. எவ்வாறெனின், மாளிகைவிட்டுச் சோலையை உற்ற இடமாறுபாட்டா லும் பனிக்காலம்போய் வேனிற்காலம் வந்த காலமாறுபாட்டாலும் விரகதாப வேதனை குன்றுமல் மீதூரக், காமாவேசமான மனநிலை காரணமாக வருந்திய இராவணனாகிய இராமாயணகாவிய கதாநாயகனது எதிரியின்திறத்துக் கவிச்சக்கரவர்த்தி கூறிய 'இன்பமும் துன்பந்தா னும் உள்ளத்தோ டியைந்த அன்றே' என்ற கருத்தே 'காதை நாயகன் கடவுளே! கதைநிகழ் களனோ,—மீத லத்தொடு பாதலம் பூதலம்! விடயம்,—பேத மின்றிமாந் தருக்கெலாம் உரித்து எனப் பெரிதும்— ஓத நின்ற காப்பியம்'* ஆகிய பாரடைஸ் லாஸ்டு (Paradise Lost) என்ற ஆங்கிலப் பெருங்காவியகர்த்தாவான மிலிட்டனர் (Milton) மனத்திலும் தோன்றியிருக்கிறது.

மேற்படி ஆங்கிலகாவியத்தின் கதாநாயகனான கடவுளின் எதிரி யான சாத்தனது (Satan) வீராவேசமான மனநிலை விளங்க, 'காலத்

* சுவர்க்கநீக்கச் சிறப்புப்பாயிரம் 8-ம் கவி.

தான் இடத்தான் மாறிடுதல் மருவா மனத்தேன்' 'மனமே தனக்கு வாழிடமாம். மனம் தன்உள்ளே பவர்க்கத்தைத்—துவான் சுவர்க்க மதுஆக்கச் சுவர்க்கம் பவர்க்கம் ஆக்கவல்லும்' என்ற பொருள்கள் உள்ள 'One who brings a mind not to be changed by place or time'. 'The mind is its own place, and in itself—can make a Heaven of Hell, a Hell of Heaven' இவற்றை அச் சாத்தன் கூறினனென்று கூறிய மில்டனார்கூற்று, காலமாறுபாடு இடமாறுபாடுகளால் இன்ப துன்பங்கள் எய்துவனவல்ல; அவை அவரவர் மனநிலைமைச் சார்ந்தன என விளக்கும் 'இன்பமும் துன்பந் தானும் உள்ளத்தோ டியைந்த அன்றே' என்ற கம்பர்கூற்றோடு கருத் தொத்திருத்தல் பெருத்த வியப்பை அளிப்பதாம்.

மேலே எடுத்துக்காட்டிய ஆங்கிலகவிபகவிப்பகுதிகள் வரும் சந்தர்ப்பத்தையும் அவற்றை விளக்கும் முன்பின் தொடர்ச்சியான பகுதிகளையும் இத்திரட்டிவாசகர் தெரிந்துகொள்ள விரும்புவாராதலால், அவை யெல்லாவற்றையும் இதனடியில் தருகின்றேன். அவ்வாசகருள் ஆங்கில மறியாதார்க்கும் பயன்படும்படி அவ்வாங்கிலப் பகுதிகளின் மொழிபெயர்ப்பாயுள்ளதும், மேற்படி பாரடைஸ் லாஸ்டு என்ற நூலுக்குச் சுவர்க்க நீக்கம் எனப் பெயரிட்டு அதன் பன்னிருபகுதிகளுள் முதற்பகுதியாகிய முதற்காண்டம் என்னால் விருத்தப்பாவில் மொழிபெயர்க்கப்பட்டு ஒருதலைமுறைக்காலமான முப்பது வருட)த்துக்கு முன்பு அச்சிட்டு வெளியிடப்பட்ட புத்தகத்துள்ளது மான தமிழ்க்கவிப்பகுதியையும் அதன்பொருளைவிளக்கும் வசனப் பகுதியையும் தருகின்றேன்:—

பரமண்டலத்தில், பராபரன் ஒருவனுக்கே குறைந்த
உயர்ந்த பதவியில் இருந்த சாத்தன், அப்பராபரன் இட்ட
கட்டளையைக் கடந்ததற்காக, அவனும்
அவனைப் பின்பற்றிய அவனுடைய
பரிவாரதேவதைகளும்
பாதாளத்திலே படைக்கப்பட்டிருந்த
நரகத்துள்ளே தள்ளப்பட்டபோது,
அவன் கூறியது.

"Is this the region, this the soil, the clime,"
Said then the lost Archangel, this the seat
That we must change for Heaven?-this mournful gloom
For that celestial light? Be it so, since He
Who now is sovran can dispose and bid
What shall be right: farthest from him is best,
Whom reason hath equalled, force hath made supreme
Above his equals, Farewell, happy fields,
Where joy for ever dwells! Hail, horrors! hail,
Infernal World! and thou, profoundest Hell,
Receive thy new possessor—One who brings
A mind not to be changed by place or time
The mind is its own place, and in itself
Can make a Heaven of Hell, a Hell of Heaven.
What matter where, if I be still the same,
And what I should be, all but less than he
Whom thunder hath made greater? Here at least
We shall be free; the Almighty hath not built
Here for his envy, will not drive us hence:
Here we may reign secure; and, in my choice,
To reign is worth ambition, though in Hell:
Better to reign in Hell than serve in Heaven.*

*Paradise Lost, Book I, lines 242—263.

## இதன் மொழிபெயர்ப்பு.

“இன்ன நாடோ இந்நிலமோ இவ்வெங் குளிரும் வெப்பும் உறும்
இன்ன இடங்கொல் லோதுறக்கத் தீடா யாம்பெற் றிடக்கடவேம்?
இன்னல் தரும்இவ் இருளோ அவ் எல்லுக் கிணையா வற்பதும்?” என்
றின்ன காலை அழிந்துளதா துவர்கோன் இயம்பிப் பினும்இ சைப்பான்.

தாக, இன்றிறையா நண்ணும் அன்னான் எது
என்று விதிக்க விதித்தபடி இயைக்க வல்லா னதலினால்.
ஒன்றும் மனோதத் துவங்களின்ஒத் தூற்றமதனால் நயின்மேலாந்
துன்றும் அவன்பால் நின்றுநெடுந் தூரந் திருத்தல் நனிநன்றே.

தருக விடைநீர் களிப்பென்றுந் தங்கும் ஆனந் தத்தலங்காள்!
வருக வருக பயங்கரங்காள்! வருக தாழ்ந்த பிலஉலகே!
அரிய ஆழ நரகே! கா லத்தான் இடத்தான் மாறிடுதல்
மருவா மனத்தேன் நின்புதுக்கா வலனோன் வரவேற் றிடுவாயே.

மனமே தனக்கு வாழிட மாம், மனந்தன் உள்ளே பவர்க்கத்தைத்
துனுவான் சுவர்க்க மதுவாக்கச் சுவர்க்கம் பவர்க்கம் ஆக்கவல்லும்.
தனிவான் உருமின் எனின்உயர்ந்தோன் தனக்குத் தாழ்வாம் தாழ்வொழிய,
எனவாற் றானும் குறைவில்லா திருக்கும் முறையே உளேன் என்னில்,

முன்னம் இருந்த படியென்றும் முற்றும் உளனேல், யாங்கணியான்
மன்னி யிடினும் அதனாலென்? மற்றிங் கெனினும் சுவாதீனம்
துன்னி வாழ்தும்; இங்கணியாம் துய்க்க நோக்கி அழுக்கறுக்கும்
அன்ன பொருள்ஒன் றும்படைத்தான் அல்லான் எல்லாம் வல்லானே.

இங்கு நின்று நமைத்துரத்தான்; யாம்ஓர் கவற்சி யிலாதாட்சி
இங்கு புரிய லாம்; நரகின் எனினும் இறைமை நயத்தகும்; ஈ.
திங்கென் கருத்தால்: வானிடைத்தொண் டியற்று குடியா வாழ்தலினும்
இங்கு நிரயத் திறையவனா எய்தல் இனிய தினியதரோ.”*

இ-ள். அழிவடைந்துள்ள தேவதூதத்தலைவன் இந்தச் சமயத் தில் [அவர்கள் இறங்கிய இடத்தை நோக்கிப்] பின்வருமாறு கூறு கின்றான்:—“இந்த நாடோ! இந்த நிலமோ! இந்தக் கொடுங்குளிரும் கொடும் வெப்பும் உள்ள இடமோ! நாம் பரமண்டலத்துக்குப் பிரதியாக

*சுவர்க்கநீக்கம், முதற்காண்டம், பாட்டுக்கள் [illegible].

ஏற்றுக்கொள்ளவேண்டும்? துக்ககரமான இந்த இருளோ, அந்தத் திவ்ய ஒளிக்குப்பதிலாகப் பெற்றுக்கொள்ளவேண்டியது? இப்போது அரசனு யுள்ளவன், இன்னது நீதி என்று விதிக்கவும் விதித்தபடி நிலைநிறுத்த வும் வல்லவனாதலால், அவையெல்லாம் அவன் கருத்துப்படியே யிருக் கட்டும். மனோசக்திகளால் நம்மை ஒத்துப் பலத்தினால் நமக்கு அதிகனாகிய அவனிடத்திலிருந்து நாம் எவ்வளவுதூரத்தில் இருக்கிறோ மோ, அவ்வளவும் நல்லதே. நித்தியானந்தத் தலங்களே! நீங்கள் எனக்கு விடைகொடுப்பீர்களாக! பயங்கரங்களே! வருவீராக! பாதாள மே! நீயும் வருவாயாக! ஏ அரிய ஆழமுடைய நரகே! காலதேசபேதத் தால் மாறுதல் அடையாத மனத்தை உடையனாகிய உன்னுடையபுதிய அரசனாகிய என்னை வரவேற்றுக்கொள்வாயாக. மனமானது [மற்றொன் றையுந் தனக்குச்சாரிடமாகவேண்டாது] தனக்குத்தானே இடமா யிருக்கிறது. அது [சுகம் அநுபவிக்கும் சுபாவமுடையதாயிருந்தால் நரகமத்தியிலும் சுகம் அடைவதாயும், துக்கம் அநுபவிக்கும் சுபாவ முடையதாயிருந்தால் சுவர்க்கமத்தியிலும் துக்கம் அடைவதாயும் இருப்பதால்] தனக்குள்ளே நரகத்தைச் சுவர்க்கமாக்கவும் சுவர்க்கத்தை நரகமாக்கவும் வல்லது. இடி ஒன்றினால் அதிகனாகிய அவனுக்குச் சற்றுத் தாழ்ந்திருக்கும் தாழ்வொழிய, வேறெந்தவகையிலும் குறை யின்றி நான் இருக்கவேண்டியபடியே முன்னிருந்ததுபோலவே எப்போ தும் இருக்கின்றனன் என்னில், நான் எங்கிருந்தாலும் என்ன? இங்காயி னும் நாம் சுவாதீனராக வாழ்வோம். இங்கு, நாமனுபவிக்கப்பார்த்துத் தான் பொறாமைகொள்ளும்படியான பொருளொன்றையும் எல்லாம் வல்லான் படைத்துவைக்கவில்லை. ஆதலால், அவன் இங்கிருந்தும் நம்மைத் துரத்தமாட்டான். இங்கு நாம் கவலையில்லாமல் அரசாட்சி செய்யலாம். நரகத்திலாயினும் இராசாங்கம் ஆசைப்படத்தக்கதென் பது என் அபிப்பிராயம். பரமண்டலத்தில் தொண்டுசெய்வதினும் நர கத்தில் அரசாளுதல் நல்லதே.*

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

*சுவர்க்கநீக்கவசனம், முதற்காண்டம், பக்கங்கள் கூ௨-உ௬௩.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[சஉ-ம் பக்கத்தொடர்ச்சி.]

421 பொன்நோக்கியர் தம்புலன் நோக்கிய புக்க ணொடும்
இன்நோக்கியர் இல்வழி யெய்திய நல்வி ருந்தும்
தன்நோக்கிய நெஞ்சுடை யோகியர் தம்மைச் சார்ந்த
மென்னோக்கியர் நோக்கமும் ஆமென மீண்ட தவ்வேல்.

இ - ள். விலைமாதர் (வீட்டுக்குச்சென்று அவர்) களுடைய (ஐம்) புல (நுகர்ச்சியாகிய கலவி யின்ப) த்தை (அடைய க் கருதிய தரித்திரர் (பொருள் கொடுக்கமாட்டாமையால் அம்மகளிரால் ஏற்றுக்கொள்ளப் படாமல் அவர் வீட்டினுள்ளே நுழையமாட்டாமல் திரும்புதல்) போல வும், (விருந்தினர் வரக்கண்டபோது உண்டாகிய மனமகிழ்ச்சியை வெளி யுறச்செய்யும் முகமலர்ச்சியோடுகூடிய) இனிய பார்வையுடையார் (ஆகக் கணவன் மனைவி யிருவரும்) இல்லாத வீட்டின்) இடத்தே உற்ற உத்தம விருந்தினர் (அவ்வீட்டினுள்ளே செல்லாமல் திரும்பிவிடுதல்) போலவும், தன் (ஆன்ம சொரூபத்தி) னை (அறியக்கருதி யோகாப்பியாசஞ்செய்து அந்தர் முகமாக) நோக்கிய மனத்தையுடைய யோகிகளை (மோகிகளாக் கும்படி) அடைந்த மாதர் (காமக்குறிப்போடு பார்க்கும்) பார்வை (அவ் யோகியர் மனத்துள்ளே செல்லமாட்டாமல் திரும்புதல்) போலவும் (இரா வணன் எறிந்த) அந்தச் சூலாயுதம் (சடாயுவின் மார்பினுட் புகமாட்டா மல்) திரும்பியது.

பொன் நோக்கியர் - (தம்பால் வரும் ஆடவர், அழகுடையாரோ அவ லட்சணமுடையாரோ, இளைஞரோ கிழவரோ என்று நோக்காமல் அவர் தரும்) பொன்னையே (பொருளையே) நோக்குதலுடையார் (ஆன விலை மாதர்). நோக்குதல் - கருதுதல். "காமமாவது ஒருகாலத்து ஒரு பொருளால் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத்தனை இன்பமாதலால், அதனைக் கருதுதல் 'புலனோக்குதல்' எனப்பட்டது." புலநுகர்வுதனை (புறநானூறு: "பொருளின்மை அச்சத்தன் துன்பமாதலால், வறிய ரை 'புன்கணோர்' எனா ...." இன் நோக்கியர் - இனிய பார்வை

புடையார். இல் - இல்லாத. வழி - இடம். நல் விருந்து - (“மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து - நோக்கக் குழையும் விருந்து” என்றபடியுள்ள) உத்தம விருந்தினர். நன்மை - உத்தமம் (பிங்கலம் கஎஅ௯). தன் நோக்கிய - தன்னை நோக்கிய. மெல் நோக்கியர் - மெல்லிய பார்வையுடையார். வடமொழிவாணர் ‘மிருதுபாஷி’ கௌன்னும் ‘மென்மொழியார்’ போல, ‘மென்னோக்கியர்’ மாதரென்னும் பொருளுடையது. நோக்கியர், நோக்கு என்ற பகுதிப்+இ என்ற இருதிணை முக்கூற்றொருமைவிகுதியும் அர் என்ற பலர்பால்விகுதியும் சேர்ந்து வந்தது. ஆம் - போதும்.

‘இன்னோக்கியரில்வழி பெய்திய நல்விருந்தும்’ என்பதற்கு “இல்லாள் முகத்தைப்பார்த்து அவள் கருத்துப்படி நடப்பவாது மனைக்கண் சென்ற நல்விருந்தினரையும்” என்பதும் “இனிய பார்வையுடைய [நற்குண நற்செய்கையுள்ள] மகளிர் இல்லாதவிடத்திற் சென்றடைந்த நல்ல விருந்தினரையும்” என்பதும் முந்திய உரைகள்.

“தன்னையறிந்தவன் தலைவனையறிவான்” என்னும் தத்துவஞான சம்பந்தமான பழமொழிப்படி கடவுளையறிதற்கு வாயிலாகத் தன்னையறிய முயலுதல் இப்பாட்டின் மூன்றும் அடியிற் குறிக்கப்பட்டது. சடாயுவின்மார்பிலெறியப்பட்ட சூலம் உள்ளே செல்லமாட்டாமல் (சுவர்மீதெறிந்த பந்துபோலத்) திரும்பியதென்பதற் குவமானமாகக் கம்பர் மூன்று உலக உண்மை நிகழ்ச்சிகளை இனிதெடுத்துக் கூறியிருத்தல் கவனிக்கத்தக்கது.

‘தன் (னை) நோக்கிய நெஞ்சுடையோகியர்’ என்பதில் ‘தன்’ நெஞ்சைக் குறித்ததாகக்கொண்டால் ஒருமை பன்மை மயங்காத வழாநிலையாம்; யோகியரைச் சுட்டுவதாகக்கொண்டால் அம்மயக்கமுடைய வழுநிலையாம்: அதனை ஒவ்வொருயோகியும் தன்னைத் தன்னைத் தனித்தனி நோக்கிய யோகியரெனப் பொருள்செய்து வழுவமைதியாகக் கொள்ளவேண்டும்.

‘புன்கண்’ என்பது புறநானூற்று [illegible] பாட்டில் ‘புலன்உழு தண்டார் புன்கண்’ என்ற இடத்தும் [illegible] பட்டிருத்தலின் [illegible] வேறொருக்கும் [illegible] பொன்றபொருளில் [illegible] கொண்டதாக [illegible] அப்பொருள் [illegible] [illegible]

தும் மேற்கோள் காட்டாமல் முந்திய உரைகாரர் புன்கணோர் வறிஞரென உரை செய்திருக்கின்றனர்: ஆதலால், 'புன்கணோர்' என்பது, அது நிற்கும் இடத்தின் ஆற்றலால் வறிஞரென்றே பொருள்கூறத் தகுவதா யிருப்பதுபற்றியே அச்சொற்கு அப்பொருள்கூறினார்போலும்.

'புன்கணோரும்' என்ற சொல்லை எடுத்துவிட்டு, அது நிற்குமிடத்தில், முன்வந்த 'பொன்'னையே பிடித்து எடுத்தாண்டு கூறியதுகூற லாய்ச் சிறவாத 'பொன்னிலோரும்' என்பதைத் தவிர்த்து வேறெச் சொல்லைக்கொண்டு நிரப்பினும் பொருள்சிதைந்துவிடும்; அல்லது மோனை சிதைந்துவிடுமென்பது ஒருதலை. அவ்வாறாக, அந்தப் 'புன்கணோரும்' என்ற அருட்பொருட்சொல்லைப் பொருட்பொலிவும் மோனைப்பொலிவும் ஒருங்குபொருந்த அமைத்த பான்மைத்திறம் விளக்கும் கவித்திறம் கவிஞராயுள்ளார்கருத்தை ஈர்த்துக் கவர்ந்து இன்புறுத்தும் இயல்பினது.

[இராவணனை வேறு படை யெடுக்கவிடாமல், சடாயு, சாரதி தலையைப் பறித்து, மூசத்திலெறிந்து வருந்தச்செய்தான். அதனால் அவன் கோபங்கொண்டு தண்டாயுதத்தால் தாக்கச் சடாயு தரைமேற் சாய்ந்தான். சாடவே, சாரதியில்லாத் தேரைத் தசமுகன் தானே செலுத்துவானாய் விரைவாக விட்டான். சீதை மிகப் புலம்பினாள், அதுகண்டு, சடாயு, தண்டாயுதத்தைப் பொருட்படுத்தாமல், 'பயப்படாதே' என்று பரிந்துகொண்டு பறந்துவந்து "எங்கடா இனிப் போவது!" என்று தன்னை முன் தாக்கிய தண்டாயுதத்தை இனித் தாக்காதபடி பற்றிப் பறித்தெறிந்து, இராவணன் தேருவதற்கு இடையூறாகக் குதிரைகளைக் கொன்றதோடின்றி விடாமல் தேரையுஞ் சிதைத்து அம்மட்டில் அமையாமல் அவன் தலைமேற்பாய்ந்து தலைகளிலும் மார்பி லும் தோள்களிலும் சிறகாலடித்து அலகாற் கொத்தினான். இராவணன், மூர்ச்சையடைந்து முடிசாய்த்து இருந்தான். மெலிந்துவிட்டவனை மேற் கொண்டு தாக்குதல் [illegible], சடாயு தாக்குதலைத் [illegible] "இராவணா! இப்பொழுது உன் வலி!" என்றான். அவன், தெளிந்து, [illegible]

[illegible]

உதவ உயிர்க்குயிராக வைத்திருந்த ஒள்வாளை உறையினின்றும் உருவி ஓங்கி ஓச்சினான். அத் தெய்வவாள் ஆர்மீது பிரயோகிக்கப்பட்டாலும் அவர் ஆவியையுண்ணும் வன்மையதாகையாலும் ஆயுளிறுதிக்காலம் அடுத்ததாலும், சடாயு, சிறகறுப்புண்டு, மலைகள் சிறகுகளுடையவைகளாயிருந்தகாலத்தில் இந்திரன் எறிந்த வச்சிராயுதத்தால் இறகற்ற ஒரு மலைபோல விழுந்தான்.

## சடாயு சாகுநிலையடைந்ததைக் கண்ட சானகியின் தயக்கம்.

தனக்கு ஆதாரமாயிருந்த கொழுகொம்பு முறிந்துவிழத் தானும் விழும் கொடிபோலச் சடாயு சாய்ந்துவிழக்கண்ட சானகி தயங்கித் தரையில்விழுந்து புரண்டாள். "எனக்கு அபயம் அளித்துக் காக்க வந்த அந்தத் தூயோன் தோற்பதே! இந்தத் தீயோன் செயிப்பதே! நன்று! நன்று! 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்ற ஆப்த வாக்கியமும் பொய்த்ததே!" என்று வருந்தினாள்.

## இராவணன் சீதையைத் தரையோடு தோள்மேற் சுமந்துகொண்டுபோதல்.

இராவணன், இனித் தப்பாதில்லையென்று, சானகியை அவள் இருந்த தரையோடும் தூக்கிபெயர்த்துத் தோள்மேல் வைத்து விண்வழியே விரைவாகச் சென்றான். அவன் போகும் வேகத்தால் உண்டாகிய அதிர்ச்சியால் உடல்வருந்த முன்னமே துன்பத்துக்கு மேல் துன்பமுற்று உள்ளம் சோர்ந்திருந்தவள் இப்போது உடலும் சோர்ந்து உணர்வுநீங்கிக் கிடந்தாள்.*

## இராவணன் சென்றதுகண்டு சடாயு தன்னுள்ளே கூறிக்கொள்ளல்.

சடாயு, இராவணன் சென்றதுகண்டு 'இராமலக்குமணர் வந்திலர். அவர்களை இவன் வெல்லவல்லவ னல்லன்; வருந்தித்தேடி இந்த

*சீதையின் துன்பநிலைமை இச்சமயத்தில் இறந்நிலையாக வருணித்தால், வாசகர்மனம் தாங்கமாட்டாமல் கலிந்துவிடுமென்று, கம்பர், இங்கே, அவள், துன்ப உணர்வு தெரியாதபடி [illegible] கூறி, ஒருவர் [illegible] துன்பமடைந்தபோது அவர்க்கு அறிவைமயக்குதல் இயற்கையாதலின் [illegible] அவளுக்கு நன்றி செலுத்துகின்றது.

தட்டியதனால் (நேர்ந்த தீங்கை நினைந்து வருந்தித் தளர்கின்ற மனத்தினேன் மருங்கே தனியாக வந்த (தற்கு) இயல்பு (ஆன காரணம், யான் அபாயத்துக்குள்ளாகி உதவிவேண்டி அலறினாற்போல என் தகுதிக்கு) ஈனமான வார்த்தைகளை வழங்கிய இராக்கதன்சொற்களைச் சீதை பொய்யென்றெண்ணாமல் (மெய்யென்று நம்பி இலக்குமணனை நோக்கிக்) கூறுபவள், (அவன் தானாக எனது உதவிக்கு ஏகாமைபற்றிக் கோபித்து,) வன்சொல்வழங்கி (என்னிடம் ஏகும்படி) ஏவியதனால், (தான் தெளிவாகத் தெரிந்திருந்த) என் நிலைமையைத் (தன்பொருட்டன்றி அவள் பொருட்டுத்) தெரியவந்த மயக்கமே (என்று இராமன் அநுமானித்தறிந்தான்).

புன்மை - குற்றம்; சிறுமை (இலக்கியச் சொல்லகராதி). புன்சொல் - அற்பமானவார்த்தை; குற்றமானவார்த்தை. பகுவாய் - பிளவுபட்ட வாய். இராக்கதர்வாயைப் பிலவாய் என்பதும், முழை (-குகை) வாய் என்பதும் வழக்கம். இராமன் 'பகுவாய் அரக்கன்' என்றது மாரீசன் இறக்கும்போது வாய்திறந்து அலறியதை நினைந்துபோலும். 'மடமங்கை' என்பதில் மடம் என்பதற்குப் பேதைமை இளமை என்ற இருபொருள்களும் பொருந்துமாயினும், இராமன் தனக்கு அபாயம் நேராமையை இலக்குமணன் தெரிந்துகொண்டதுபோலச் சீதை தெரியாமையால் அவளை 'மடமங்கை' என்றானென்க.

'மனமுந்தளர்ந்த' என்பதற்கு "(உடம்பொடு) மனமுந்தளர்ந்த" என்று முந்திய உரைகளில் பொருள்கூறப்பட்டிருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் இலக்குமணனுடைய உடற்றளர்ச்சிக்குத் தக்க காரணம் யாதும் கூறப்படவில்லையாதலாலும், இருந்தால் அது மனத்தளர்ச்சியேயாதலாலும் 'மனமும்' என்பதில் உம்மை ஒரு பொருளுங் குறியாது இசைநிறைக்கவந்ததென்க. இவ்வாறு உம்மை கம்பராமாயணத்தில் பலஇடங்களில் வருவதைக் காணலாம்.

இராமன், இலக்குமணனை சீதையைத் தனிக்கவிட்டுவந்ததற்குக் காரணம் சீதைமயக்கமே யென்று ஊகித்துணர்ந்தது இப்பாட்டிற் கூறப்பட்டிருக்கின்றதாதலால், 'மருள்' இலக்குமணனது இயல்புகாரணமாக ஏற்படாமல் சீதை பேதைமையால் ஏவியதுகாரணமாக ஏற்பட்டதென்பது போதரும்.

என்றால் இராக்கதன் இறந்தானென இலக்குமணன் தெளிவாகத் தெரிந்ததுபோலச் சீதையும் தெரிந்திருந்தால், இறந்தவன் எத்தகையனென அறியவும் அவனைக் கொன்றதற்காக என்னோடு சந்தோடங்கொண்டாடவும் இருவரும் வந்திருப்பார்கள்; இலக்குமணன்மட்டுந் தனியே வந்திரான், யான் எதிரியால் அபாயநிலையுற்றிருந்ததாகத் தவறாகச் சீதையெண்ணி இலக்குமணனை எனக்கு உதவிசெய்யும்படி ஏவியதனால் அவன் தனியே வந்திருக்கிறானென்று இராமன் கருதினானாதலால், 'இளவீரன் வந்த இயல்பே' என்றுமட்டுங் கூறாது 'தனியே இளவீரன் வந்த இயல்பே' என்றானென்க.

## இராமன், இலக்குமணனால், நிகழ்ந்ததை யறிந்து சீதையைக்காணச் செல்லுதல்.

[விதி என்ன கேடு விளைக்கவிருக்கிறதோ என்று விசனித்துக் கொண்டிருந்த இராமன், தன் காலில் வீழ்ந்து இலக்குமணன் வணங்க, அவனை வாரியெடுத்து மார்போடணைத்து "எதற்காக வந்தாய்?" என, அவன் நிகழ்ந்ததைக் கூறச் "சீதையைக் கவரக்கூடியவர்கள் நாம் அவளைவிட்டு நீங்கச்செய்த சூழ்ச்சி இது" என்று சொல்லி, "உன் செய்கை அவள் சாவாது தடுக்கச்செய்ததாதலாற் குற்றமற்றது, அவள் மனக்கலக்கத்தாற் செய்ததால் அவள் செய்கையும் குற்றமானதன்று, உங்கள் இருவர் செய்கைகளுக்குங் காரணமாய், நீ தடுத்துங் கேளாது மாயமானின்பின் சென்ற என் செய்கையே குற்றமுடையது, இனித் தாமதித்தல் தகாது, அவளைக் கண்டாலன்றித் துன்பம் தொலையாது, காணச்செல்வோம்" என்று விரைந்தோடிப்போய்ப் பார்த்துச் சீதையைக் காணாமையால், தேகத்தைவிட்டு வெளியேபோயிருந்த சீவன் திரும்பி வந்து தேகத்தைக் காணாமல் திகைத்ததுபோலத் திகைத்துநின்றான்.]

## இராமன் சீதையைக் காணாது திகைத்தல்.

423 மைத்த சிந்தையன், கனந்துழை யணங்கினைக் காணா
உய்த்து வாழ்தரு வேறொரு பொருளிலான் உதவ
வைத்த மாநிதி மண்ணொடு மறைந்தனர் வாரிப்
பொய்த்துளார்கொளத் திகைத்துநின் றானையும் போன்றான்.

இ-ள். சீதையைக் காணாமல் (திகைத்து உயிர்வாழ்க்கையில் வெறுப்படைந்து) மனங் கசந்தவனான இராமன்,—(தான் புதைக்கும்

## இராமன் இராவணன்சென்ற தேர்த்தடம்பற்றிச் செல்லும்போது செத்தான்போற் கிடந்த சடாயுவைக் காணல்.

[இராமன் திகைக்கவே, பிரமாதிதேவரெல்லாம் திகைத்து, யாது செய்வானோ ஏது விளையுமோ என்று அஞ்சி நடுங்கினர். அப்போது, இலக்குமணன், இராமனை நோக்கிச் "சீதையைக் கவர்ந்தவர் தீண்டுதற்கஞ்சித் தரையொடு பேர்த்தெடுத்ததையும் தேர்த்தடத்தையும் பார்த்தனம். வலியில்லார்போல வாளா நில்லாமல், அவர்கள் நெடுந்தூரங் கடந்தேகுமுன் தொடர்ந்து போவோம்" என, இராமன் "ஆம், அதுவே இனிச் செய்தற்பாலது" என்று இலக்குமணனோடு தேர்சென்றவழியே தீவிரமாகச் சென்றான். அவ்வழியில் ஒரு வீணைக்கொடி ஒடிந்து கிடப்பதைக் கண்டார். அது ஆயுதத்தாலன்றித் துண்டத்தால்* துண்டமாயிருப்பதைக்கண்டு சடாயுசெயலென்று தெரிந்து அவன் அன்பை நினைந்து கண்ணீர் சோர, "இலக்குமணா! சீதையைக் கவர்ந்து சென்றவரை நம் பெரியதந்தை தடுத்துச் சமர்செய்திருக்கிறான். அந்தோ! அதி வயோதிகன்! அசகாயன்!"† என்று கவலைகூர, இலக்குமணன் "அவன் எவராலும் மெலிவிக்கமுடியாத வலிமிக்கவன். பகைவர்களை இன்றைப்பொழுது முழுதும் தடுப்பது திண்ணம். தனியாகவே சத்துருக்களைச் சயித்துச் சீதையை மீட்டாலும் மீட்பான். ஆயினும் நாம் சென்று அவனோடு சேர்ந்துகொள்வோம். ஆலோசனை செய்துகொண்டு ஆலசியஞ்செய்தலாகாது" என்றான்

விரைந்து தொடர்வதே மேலென்று மிகுவேகமாக இருவோரும் போகும்போது அந்தரத்தினின்று இந்திரவில் முறிந்து வீழ்ந்துகிடந்தாற்போன்ற ஒரு பாரமானவில் ஒடிந்துகிடக்கக் கண்டார்கள். இராமன் "இலக்குவ! இந்த வில்லின்வலிமை வியக்கத்தக்கது. இப்படிப்பட்ட வில்லை இறுத்தவன் பலத்தை என்னென்பேன்" என்றான். இருவரும் இறைப்பொழுது விம்மிதராய்நின்று மீண்டும் விரைந்து தொடர்ந்து செல்லும் வழியில் ஒரு நெடிய சூலாயுதத்தையும் இரண்டு பெரிய அம்பறாத்தூணிகளையுங் கண்டு மேற்செல்கையில் தேர்க்குதிரைகளும் சாரதியும் செத்துக்கிடக்கக் கண்டார்கள். பின்பு பல சூரியர் பாரில் விழுந்துகிடந்தாற்போன்ற பல கிரீடங்களையும் தோளணிகளையும் பார்த்தார்கள்.

* துண்டம் - மூக்கு. † அசகாயன் - துணையில்லாதவன்.

அப்போது இராமன், "கிரீடங்கள் தோளணிகள் மிகப்பலவா யிருத்தலால், எதிர்த்தோர், தொகைமிகுந்தோராயிருத்தல்வேண்டும்" என, இலக்குமணன், "தலைகள்பல, தோள்கள்பலவென்றால் நம் தந்தையை இத்துணைத் தூரம் தொடர்ந்து போர்புரியச்செய்தவன் ஒருவனே, அவன் இராவணனாம்" என்றான். இளையோன் உரைத்ததை நன்குமதித்துக்கொண்டு விரைந்துசென்ற இராமன், தென்சமுத்திரத்தில் வெள்ளிமலைகிடந்து விளங்கினாற்போல, இரத்த வெள்ளத்துள் சடாயு கிடக்கக் கண்டான். உடனே கண்கள் நீர்சொரிய, அவன்மீது, வெள்ளிமலைமேல் நீலமலை வீழ்ந்தாற்போல, வீழ்ந்தான். வீழ்ந்தவன், மூர்ச்சித்து, விழிமூடி, மூச்சின்றி நெடுநேரம் கிடந்தான். இலக்குமணன், சீதநீர் தெளிக்கத் தெளிந்து, வருந்திப் புலம்புவானாயினான்.]

424 தாதையரைத் தனயர் கொலைநேர்ந்தார்
யாரே உள்ளார்! முடிந்தானே முன்னொருவன்
எந்தாயோ! எற்காக நீயும் இறந்தனையால்!
அந்தோ! வினையேன் அருங்கூற்றம் ஆனேனே!

இ - ள். தமது தகப்பன்மாரைக் கொல்லக் கொடுத்தவராகிய புத்திரர் (எனக்குமுன்) யாருளர்! முன்பு (பால் பிரித்தது காரணமாக) ஒரு தந்தை இறந்துபோனானே! என் தந்தையே! என் பொருட்டு நீயும் இறந்துபோனாயே! அந்தோ! பாவியேன் (உங்கள் இருவருக்கும்) இயமனானேனே!

தாதை - தகப்பன். தனயன் - புத்திரன். நேர்தல் - கொடுத்தல். 'கொலைநேர்தல்' என்பது, குவ்வுருபு தொக்குநிற்கப்பெற்றுக் கொலைக்குக் கொடுத்தல், என்றாவது, ஆக என்பது தொக்குக் கொலையாகக்கொடுத்தல் என்றாவது பொருள்படுகின்றது. 'பலிநேர்தல்' 'பலிகொடுத்தல்' என்பனவைபோலக் 'கொலைநேர்ந்தார்' என்பதற்கு முந்திய உரைகாரர்கள் 'கொலைசெய்தார்' என்று பொருள்கொண்டனர், 'நேர்தல்' என்பது 'செய்தல்' என்னும் பொருளில் வழங்கக் கண்டதில்லை. 'எந்தாய்' எந்தை யென்பதன் விளி எந்தை - என் தந்தை. 'எந்தாயோ' என்பதில் ஓகாரம் புலம்பலில் வந்த விளியுருபு. 'முடிந்தான் முன்னொருவன்' 'இறந்தனையோ' என்பனவும் பாடங்கள்.

425 மாண்டேனே யன்றோ! மறையோர் குறைமுடிப்பான்
பூண்டேன் விரதம்; அதனால் உயிர்பொறுப்பேன்

*நீண்டேன் : மரம்போல நின்றொழிந்த புன்றொழிலேன்.*
*வேண்டேன்இம் மாமாயப் புன்பிறவி வேண்டேனே !*

இ - ள். (இவ்வளவு இழிந்த நிலையை அடைந்த யான்) செத்(த பிரேதத்தை ஒத்)தேனேயன்றோ ! (அவமானத்தால் உயிர் தானே ஒழிந்திருந்தற்பாலேன். அது தானே பொழியவில்லையாயினும், அதனைத் தற்கொலைசெய்து போக்கி இறந்திருந்தற்பாலேன். ஏன் இறவாதிருக்கின்றேனென்றால்,) மறையவர்குறைமுடிக்கும்பொருட்டு (ஒரு) விரதத்தை மேற்கொண்டேன். அதனால், (வெறுக்கப்பட்டுச் சுமையாயிருக்கிற) உயிரைத் தாங்கினவனாய் (வாழ்நாள்) நீளலுற்றேன். (எனக்குத் தீங்குசெய்தார்க்கு எதிர்த்தீங்கு செய்யேனாய்த் தன்னை வெட்டுவாரையும் ஒன்றும் செய்யாத) மரம்போல நின்ற (வீரர் வெறுக்கும்) ஈனமான செய்கையுடையேன். (இத்தனைக்கும் இடமான) இந்த மாயப்பிறப்பை வெறுக்கின்றேன் ! (மிகவும்) வெறுக்கின்றேன்! (என்றான் இராமன்).

பொறுத்தல் – தாங்குதல் – சுமத்தல். 'நின்றொழிந்த' என்பதில் 'ஒழி', வெறுப்பைக்குறித்துநின்றது. ஒருவர் ஒருவனை அல்லது ஒருத்தியைக் கோபித்துப் 'போயொழி' என்பதில் உள்ள 'ஒழி' போன்றது. புன்மை - குற்றம் - சிறுமை (இலக்கியச்சொல்லகராதி). மாயம் - பொய் (பரிபாடல்); களவு (சிலப்பதிகாரம்); வஞ்சம் (புறப்பொருள் வெண்பாமாலை). பிறவி, மெய்யாய்ப் பிறவாநிலையான முத்திக்கு மறுதலையாதலால், மாயப்பிறவி என்பதற்கு (1) பொய்யான பிறப்பு என்றும், (2) பிறவாநிலையோடு பிறப்புநிலையை ஒப்பிட்டால், அது சாக்கிரநிலையோடு சொப்பனநிலையை ஒப்பிடுதல்போலாமாதலால், கனப்போன்ற பிறப்பு என்றும், (3) பொய்யாய்க் கனவுபோன்றிருந்தும் மெய்யென்று நம்பும்படிசெய்தலால் வஞ்சப்பிறப்பு என்றும் பொருள்கூறலாம். வேண்டாமை - வெறுப்பு (குறள். ௪).

தூக்கமயக்கம் அபினி தின்ற மயக்கம்போன்ற மயக்கத்துக்குள்ளானொருவன், தேட்கொட்டுத் துன்பம்போன்ற துன்பமுற்றபோது, இவ்வொரு மயக்கந்தெளிந்து தன்னுணர்வுவரப்பெறுதல்போல, மாயன் 'மாயப்புன்பிறவி' மயக்கத்துக்குள்ளாகிச் சக்தியாகக் கொலையான துயருற்றபோது, பிறவிமயக்கம் நீங்கப்பெற்றுப் பூர்வநிலை ஞாபகத்துக்கு வர, 'என் பிறப்பெடுத்தேன், பிறவாதிருந்தேனில்லையே, இப்போது தவறிப் பிறந்துற்றதுபோல இனி எப்போதும் பிறவிக்குட் படேன்' என்று கூறினாற்போல, அம்மாயன் அவதாரமான இராமன்,

தன்மனைவி கவரப்பட அவளை மீட்கமுயன்ற தன் பெரியதந்தை கொலையுண்ண உண்டாகிய கொடுந்துயரடைந்தபோது, சுருதிஞானக் கவி பாவித்து, மற்றெல்லாரையும் மாயைக்குட்படுத்தும் மாமாயனான மகாவிட்டுணுவே இராமனாக மனுடப்பிறப்பெடுத்தபோது பிறவித்துன்பந் தாங்கமாட்டாது வருந்தி 'வேண்டேன் இம் மாமாயப் புன்பிறவி வேண்டேனே' என்றென்றுகூறிப் பிறவி, பெருமயக்கத்தையும் மிகு வருத்தத்தையும் விளைவிக்கும் இயல்பினதென்பதை நன்குணர்த்தியிருக்கும் நயம் பாராட்டத்தக்கது.

426 என்றாரம் பற்றுண்ண, ஏன்றானைச் சான்றோனைக்
கொன்றானும் நின்றான! கொலையுண்டு நீகிடந்தாய்!
வன்றாட் சிலை ஏந்தி, வாளிக் கடல் சுமந்து
நின்றேனும் நின்றேன்; நெடுமரம்போல் நின்றேனே!

இ - ள். 'காக்குங் கடமையுடைய நான் காக்கத் தவறியதனால்) என் மனைவி (ஒருவனால்) பிடிக்கப்பட, (அவளைப் பிடித்தவனிடமிருந்து மீட்க அவனை) எதிர்த்(துப் போர்செய்)த உன்னைக்கொன்றோன் (ஆன கொடியோன் கொல்லப்படாமல் உயிரோடு) இருக்கின்றான்! (சாந்தசீலனான) நீ கொலையுண்டு கிடக்கின்றாய்! (உன்னைக் கொன்றவனைக் கொல்லுதற்கு உபயோகப்படாத) வலியவில்லை ஏந்திக்கொண்டு தொகைமிகுத்த அம்புகளையுஞ் சுமந்துகொண்டு நிற்கின்ற நான் (தோற்றத்தில் வீரன் போல) நின்றேன்! (உண்மையில்) நெடுமரம்போல (ஒருசெயலுமின்றி) நின்றேன்!

தாரம் - மனைவி. ஏலல் - எதிர்த்தல். ஏன்றானை - எதிர்த்தானை - எதிர்த்தவனாகிய உன்னை. சான்றோர் - பெரியோர். சான்றோனை-பெருந்தகைமையுடைய உன்னை. வல்தாள் - "வலிய (கால்களென்னும்) அடிப்பக்கங்களாகிய (விற்குதையுள்ள) முனைகள்." சிலை - வில். வாளி - அம்பு. "கடல் என்றது, தொகுதியென்ற மாத்திரமாய் நின்றது. கீழ் ௧௱௩-ம் கவியில் 'மழை' என்பது போல."

இப்பாட்டில், இராமன், தன் மனைவியைத் தான் பாதுகாக்கத்தவறினமைக்கு வெட்கத்தோடுகூடிய கழிவிரக்கமும், அவளை மீட்கப் போர்செய்து உற்றுழி உதவிய சடாயுவுக்கு நன்றியறிவோடுகூடிய அன்பும், அவன் கொலையுண்டமைக்குப் பரிதாபத்தோடுகூடிய துக்க

பிறப்பினது இன்ப துன்பங்கள் விதிவசப்பட்டவை (—விதியின் செயலால் உண்டாருபவை; பிறப்பை ஒழித்தாலன்றி ஒழிக்கக்கூடாதவை) என்ற கொள்கையை (நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். ஒப்புக்கொண்டு விதியோடு முரணுது அதற்கிணங்கி முயற்சிசெய்வோமாஞல் விதிவசமான இன்ப துன்பங்களை நமக்கிணங்கியவைகளாக்கலாம். விதிவலியைக் கொண்டே விதிவலியை வெல்லும் மதிவலியாலன்றி வேறு) மதிவலியால் விதி (வலி)யை வெல்லவல்லேமாவோமோ!" (ஆகோம் என்ருன் சடாயு).

அதிசயம் - புதுமை. திருக்கு - கண். திருசியம் - காணப்பட்டது. அதிருசியம் காணப்படாதது. அதிருசியம், அதிசயமென மருவியது. அதிசயமென்பது, இங்கே, முன்காணுதது, எதிர்பாராதது, புதுமையானது என்ற பொருளில் வந்தது. சீதை எவ்வாறு கவரப்பட்டாளென்பதைக் கேட்ட சடாயு, அது எதிர்பாராத புதுமையான சம்பவமென மனத்துள் நினைத்து அதனை 'அதிசயம்' (ஆனது) என்ருன். துதி அறு பிறவி - புகழற்ற ஜென்மம். முத்திக்குத் தடையாயிருப்பதால், பழித்தற்குரிய பிறவி யென்பான் துதி அறு பிறவி என்ருன்.

காரணமின்றிக் காரியமின்று. யாவும் காரண காரியத்தொடர்ச்சி நியதி கடவாதவை. எந்த நிகழ்ச்சிகளின் திறத்தில் காரணகாரியத் தொடர்ச்சி தெரியப்படவில்லையோ, அந்த நிகழ்ச்சிகளைத் தெய்வச்செயலென்பது சகசம். தெய்வச்செயலென்பதற்குப் பிரதியாக விதியின் செயல் ஊழின்செய லென்று உரைப்பதும் உலகவழக்கம். இதனுல், விதியென்பது தெய்வசம்பந்தமுடையதென்பது தெளிவாம். இது காரணமாக, 'விதி' 'தெய்வம்' எனப்படுவதுண்டு. "ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி, யென்பன ஒரு பொருட்கிளவி." (குறள் உரை) விதி, நன்மைசெய்யும் உயிர்கள் நன்மைப்பயனை அடையுமென்ற தெய்வத்தின்விதியாம். தெய்வத்தின்விதியைத் தெய்வம் என்றது உபசாரம். தெய்வம் ஆகுபெயராய்த் தெய்வத்தின்விதியை யுணர்த்தியதெனலுமாம். கடவுளின் அடிகள் சுருக்கமாக 'அடிகள்' எனப்படுதலும், 'அடிகள்' 'கடவுள்' எனப்படுதலும்போலத் தெய்வத்தின்விதி 'விதி' எனப்படலும் 'விதி' 'தெய்வம்' எனப்படலும் ஆயினவென்க.

விதியென்பது பிரமன்பெயர்களிலும் ஒன்று. 'விதியின் தலை அரிந்த விதி' என்பதில் முந்தியவிதி பிரமனுகிய தேவனையும் பிந்தியவிதி

ஊழாகிய தெய்வத்தையும் உணர்த்தும். இந்த விதி, மும்மூர்த்திகள் முதலிய எல்லாச் சமயத்தெய்வங்களுக்கும் மேற்பட்டது. அதன் தன்மையை ஆராய்ந்து பார்த்தால், அது மேற்கூறியவாறு மனிதர் அறியாத காரணகாரியத்தொடர்ச்சி நியதியாயிருப்பதனோடு அவர்கள் அறிந்த காரணகாரியத்தொடர்ச்சி நியதியாயும் இருப்பதாம். அது கடவுளின்விதி, முறை, நியதி என்னலாந்தன்மைபற்றி அதற்கு விதி முதலிய பெயர்கள் வழங்குகின்றன.

'ஸயன்ஸ்' (Science) என்ற சாஸ்திர விதிகளை அறிந்தோர் அவ் விதிகளைக் கொண்டே அவ்விதிகளினாலாம் விரோதங்களை விலக்குதலும் அநுகூலங்களை அடைதலும், செய்தல்போல, [உதாரணமாக, மின்சார (Electricity) சக்தியால் நிகழும் இடியினால் கேடடையாதபடி மின் வாங்கி (Lightning Conductor) அமைத்துக் கட்டடங்களைக் காத்தல் போன்ற பிரதிகூல நீக்கமும் மின்சார விசிறி விளக்கு முதலியன உண் டாக்குதல்போன்ற அநுகூல ஆக்கமும் பெறுதல்போலக்] கடவுளின் விதிகளை அறிந்து அவ்விதிகளை உபயோகித்தே அவற்றாலாம் தீமைகளை நீக்குதலும் நன்மைகளை ஆக்குதலும் செய்ய வல்லோமாவோமென்பான் பிறவியின் இன்பதுன்பங்கள் விதிவசமென்பதை மேற்கொண்டால், மதிவலியால் விதியை வெல்ல வல்லமாவோம் என்பதை உணர்த்துதற்கு 'பிறவியின் இன்ப துன்பங்கள் விதிவசமென்பதை மேற்கொளாவிடின் மதிவலியான் விதி வெல்லவல்லமோ' என்றானென்க.

சீதையை இராவணன் கவர்ந்தது, விதியினால் நேர்ந்தது. அது உன் பிழையால் நேர்ந்ததன்று வருந்தாதே யென்ற கருத்துப் புலப்பட 'அதிசயம் ஒருவரால் அமைக்கலாகுமோ' என்று சடாயு இராமன் தேறு மாறு கூறினன். இராமன் தான் சீதையை நீங்கிய பிழையினாலேயே அவள் கவரப்பட்டாளென்றுகொண்டிருந்த எண்ணம் நீங்கினாலன்றி, அவன் துன்பம் முதல் நீங்காதென்று கருதி, அவ்வெண்ணம் நீங்க இவ் வண்ணங்கூறினனென்க.

இராவணனால் சீதை கவரப்பட்டதுபற்றிச் சடாயு 'அதிசயம் ஒருவரால் அமைக்கலாகுமோ' என்றது, கைகேசி சூழ்வினையால் இராமன் காட்டுக்குப்போகுதல்பற்றி வசிட்டன் 'ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற் பாலதோ' (நகர்நீங்குபடலம்-[illegible]) 'வெவ்வினை அவர்தர விளைந்ததேயு

மன்–றிவ்வினை இவன்வயின் எய்தற்பாற்றன்று' (செ. ௧௬௩) என்றதை நினைவுக்குக் கொண்டுவருகின்றது.

[மேற்கூறியவாறு சடாயு கூறிப் பின்னுங் கூறுவானாய் "விதியின் வன்மை மிகப்பெரிது. பிரமனைத் தலை அரிந்து உலகங்களனைத்தையும் படைத்த அவன் தன் அரியுண்ட தலைக்குப் பிரதியாக ஒருதலை படைக்கமுடியாது செய்த விதிக்குச் செயற்கரியதுண்டோ? தன்னை வணங்கினோர்க்குச் சகல ஐசுவரியமும் தருதலால் ஈசுவரனெனப் பேர் பெற்ற சிவனைத் தரித்திரருள் தரித்திரனாய் மண்ணோடுங் கிடையாமல் மண்டையோட்டில் இரந்துண்ணச்செய்த விதியின்வலி பெரிது, பெரிது, மிகவும் பெரிது.* அப்படிப்பட்ட விதியின் செயலால் உனக்கு இந்தத் துன்பம் நேர்ந்தது. துன்பம் வந்தபோது அது சிந்தையைத் தபிக்கச்செய்தற் கிடங்கொடுத்தல் அறியாமைப்பாலது. தேறுதல் அடைவாயாக. சீதை கவரப்பட்டது, அவளை மீட்டற்கு நீ இராவணனை யிராக்கதரை யழிப்பாயாதலால் அரக்கர்கொடுமையால் தளர்ச்சியுற்றிருக்கும் தருமம் கிளர்ச்சியுறுதற்கும் துன்பமடைந்திருக்கும் தேவர் இன்பமடைதற்கும் ஏதுவாய்க் கேடுபோலவந்த ஆக்கமாம். அரக்கரென்னும் களைகளைக் களைந்து தேவரென்னும் பயிரைச் செழித்து வளரச்செய்து சீதையை மீட்டு இன்புற்று நீடு வாழ்வாய்.

சடாயு தன் சிறகை இராவணன் வெட்டினனென,
இராமன் கோபங்கொள்ளல்.

சீதையை இராவணன் கவர்ந்தெடுத்துச் செல்லும்போது தெரிந்து எதிர்த்துத் தடுத்துத் தாக்கி என்னாலானமட்டும் போர்புரிந்தேன். அவன் சிவனிடம் பெற்ற தெய்வவாளால் என் சிறகுகளை வெட்டினான். இந்நிலையுற்றேன்" என்ற வார்த்தை சென்று செவிக்குட்புகவே, இராமன் புருவங்கள் நெற்றிமேலேறின; கண்கள் இரத்தங்கக்குவன போலச் சிவந்தன; நெருப்புப்போலச் சுடுகின்ற நெட்டுயிர்ப்புப் புறப்பட்டது.]

---

* "குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க் கிமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் மதுரைப் பரமேட்டி
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் மையீற் பலிதேர்கொண்
டிடங்க ளோறு மிரப்பாயென் றேச வார்க்கென் பேசுவனே."

என்ற திருவிளையாடற்பாட்டு இங்கே நினைவுகூர்தற்குரியது.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி ௨அ.] பிரமோதூத ஹு சித்திரைமீ [பகுதி-௬.
Vol. XXVIII April-May 1930. No. 6.

## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[ககூகூ-ம் பக்கத்தொடர்ச்சி.]

### நட்புக்கோட்படலம்.

இராமன் சுக்கிரீவனோடு சிநேகஞ் செய்ததைக் கூறுவது.

[இராமலக்குமணரிடம் சுக்கிரீவனைக் கொணர்வதாகக் கூறிச்சென்ற அநுமான், அவனிடம் "[illegible] எல்லாரும் ஈடேறினோம்! வாலிக்குக் காலன் வந்தான்! நாமும் நம் [illegible] உய்ந்தோம்! உய்ந்தோம்! அவனைக் கொன்று உனக்கு அரசளிப்பவன் வந்தான்" என்று கூறி உவகைக்கூத்தாடினன். பின்பு, இராமலக்குமணர்வரலாறு முழுதும் மொழிந்து, "அவர்கள் சீதையைத்தேடுதற்கு உனது உதவியைநாடி உன்னுடன் சிநேகஞ்செய்யவந்திருக்கின்றார்கள். அவர்களைக் காணவா" என, அவன், "உன்னை உடைய எனக்கு என்னது அரிது" என்று முகமன் மொழிந்து, அவனுடன் சென்று இராமலக்குமணரை அடைந்தான்.

அடைந்தவன், ஒரு மரகதமலை, சிகரத்தில் மேகம் வீற்றிருக்க, அதன்மேற் சந்திரன் தவழ, அதன்கீழ்த் தாமரைமலர்கள் பூத்துப் பொலியக் கண்டாற்போலச் சிகையும் முகமும் கைகளும் கால்களும் [illegible] ஒளிர்ந்த [illegible] புகழ்மேனியனான இராமபிரானையும் [illegible] போல நின்ற இலக்குமணனையும் பார்த்தான்.]

சுக்கிரீவ... ராமலக்குமணரைக் கண்டு அதிசயபரவசனாகுதல்.

439 நோக்கினன், நெடிது நின்றான், நொடிவரும் கமலத் தண்ணல்
ஆக்கிய உலகமெல்லாம் அன்றுதொட் டின்று காறும்
பாக்கியம் புரிந்த வெல்லாம் குவிந்திரு படிவம் ஆகி
மேக்குயர் தடந்தோள் பெற்று வீரராய் விளைந்த என்பான்.

இ-ள். (சுக்கிரீவன், இராமலக்குமணரைப்) பார்த்து (அவர்கள் அழகில் ஈடுபட்டு,) நெடுநேரம் (அதிசய பரவசனாய்) நின்று பிரமன் படைத்த உலகத்தாரெல்லாரும் (படைப்புத் தொடங்கிய) அந்நாள் முதல் தொட்டு இந்நாள்மட்டும் செய்த புண்ணியங்களெல்லாம் திரண்டு மண்டைண்டுவடிவமாகி மேலாக வளர்ந்த *தோள்கள் பெற்று வீரராகிப் மிகவும் ப்பட்டன என்று எண்ணுவானானான்.

நெடிது - நெடுநேரம். நொடித்தல் - சொல்லுதல். அண்ணல் - பெருமையிற் சிறந்தோன். நொடிவு அரு கமலத்து அண்ணல் - சொல்லுதற்கரிய (மகிமையுடைய திருமாலின் உந்தித்) தாமரையில் உதித்த பெருமையுடையோனான பிரமன். ஆக்குதல் - சிருஷ்டித்தல். காறு - அளவு. பாக்கியம் - புண்ணியம். படிவம் - வடிவம். மேக்கு - மேல். புரிந்தபாக்கியம் என மாறுக. 'ஆய்' ஆக என்னும் எச்சத்திரிபு. 'விளைந்தன' என்பது அன் சாரியை பெறாமல் 'விளைந்த' என நின்றது.

"'புரிந்ததெல்லாம்,' 'பெற்ற', 'விளைந்ததென்பான்' என்பன பிரதிபேதம்."

உலகமெல்லாம் புரிந்த பாக்கியமெல்லாம் குவிந்து மேக்கு உயர் தடந்தோள்பெற்று இருவீரர் படிவமாக ஆகி விளைந்தன என இயைத்தும் பொருள்கூறலாம்.

'நின்றான்' என்பது, அதன் சாதாரண அருத்தமான நிற்றலைச் செய்தானென்ற பொருளுடையதாகவன்றிக் கண்டபொருளின் அதிசயமான அழகில் கருத்து ஆழ்ந்து அழுந்த அவசமாகி அந்த அழகை நோக்கிய கண் இமையாமல் நோக்கி நுகரும் இன்பநுகர்ச்சியிற் பொழுது போவது தெரியாமல் தாழ்த்து நின்றானென்னும் விசேடமான பொருளுடையதாகப் பிரயோகிக்கப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. ...தையைக் கண்டபோது 'நெடிது நோக்கி,..............அழகுக்

கெல்லை யில்லையா மென்ன நின்றாள்' என்பதையும், அவர் சீதாராமர் இருவரையும் ஒருசேரப் பார்த்தபோது 'பொருகிறத்தானை நோக்கிப் பூவையை நோக்கி நின்றாள்' என்பதையும் (சூர்ப்பனகைப்படலம் சுய. சுக), அயோமுகி இலக்குமணனைக் கண்டு 'நின்றனள் ஆசையின் நீர்கலு ழும்கண்—குன்றி நிகர்ப்ப குளிர்ப்ப விழிப்பாள்' என்பதையும் (அயோமுகிப்படலம் சகூ), இராமலக்குமணரைக் கண்ட அநுமான் 'இருவரை எய்தநோக்கி..............................நின்றான்' என்பதையும் (அநுமப்படலம் கக) காண்க.

சுக்கிரீவன், இராமலக்குமண ரிருவருடைய அவயவங்களனைத்தை யும் நோக்கி அகம் மிக மகிழ்ந்தவன், 'மேக்குயர் தடந்தோள் பெற்று' எனத் தோள்களை மட்டும் சொல்வானேனெனில், அவன் அவர்கள் தோள்களை நோக்கினபோது அவை அசாதாரண அற்புத பலமுடையவை யென்றும் அந்தப் பலம் வாலிதோள் வலிக்கு அதிகமானதாய் அவனைக் கொல்லவல்லதென்றும் கருதியதனாலென்னலாம். அவ்வாறு கருதியது காரணமாகவே, அவர்களது அழகு அருள் அறிவு ஆற்றல் ஆகியவைக ளுள் ஆற்றலைச் சிறப்பாகக்கொண்டு அவர்களை அழகினர் அருளினர் அறிவினரென்னாமல் 'வீரர்' என்றான் போலும்.

'உலகமெல்லாம் புரிந்த பாக்கியமெல்லாம் வீரராய்' உற்றன அல்லது வந்தன அல்லது தோன்றின அல்லது வெளிப்பட்டன என்னாமல் 'விளைந்தன' என்றது, உலகத்தாருடைய புண்ணியங்கள், ஒன்றும் குன்றுதலின்றி, எல்லாம் சேர்ந்து இருவீரராக உருவான மாத்திரையாயில்லாமல், அப் புண்ணியங்களனைத்தும் விதைகள் போல ஒன்று பலவாக விளைந்து ஒருக்கு இரண்டு இரண்டு வீரராயினவென்று குறித்தற்குப்போலும்.

இராமலக்குமணரால் மனிதசாதி தேவசாதியினும்
சிறப்புடையதாயினதெனல்.

440 தேறினன், அமரர்க் கெல்லாம் தேவராம் தேவ ரன்றே,
மாறிஇப் பிறப்பில் வந்தார், மானுட ராகி மன்னோ,
ஆறுகொள் சடிலத் தானும் அயனுமென் றிவர்க ளாதி
வேறுள குழுவை யெல்லாம் மானுடம் வென்ற தன்றே.

இ - ள்., (முற்பிறப்பில்) தேவர்களெல்லாருக்கும் (முதன்மை யுடைய) தேவர்களாகிய (மும்மூர்த்திக ளென்னும்) தேவர் (களாயிருந்த வர்) கள் இப்பிறப்பில் (மூவராந்தன்மையும் தேவராந்தன்மையும்) மாறி (இருவராய்) மனிதராய்வந்தார் (அவர், இவ்விருவரும்: ஆகவே,) சிவனும் பிரமனும் என்ற இவர்கள் முதலிய எவ்வாறாகவுள்ள (தேவ) கணங்க ளெல்லாவற்றையும் மானுடமாம் செய்ததென்று நிச்சயித்தான் (சுக்கிரீவன்).

அமரர் - தேவர். சடிலம் - சடை. அயன் - பிரமன். குழு-கணம் - கூட்டம். மானுடம் - மனிதஇனம் - மநுஷ்யஜாதி. அன்றே மன்னோ அசைகள். பாட்டின் முடிவில் நின்ற ஏ தேற்றப்பொருளில் வந்த இடைச்சொல். அன்றே என்பதை அல்லவா என்னும் பொருளுடைய தாகவுங் கொள்ளலாம். என்றே தேறினன் என(க் கடைதலைவிற்பூட்டு ஆக) இயைக்க. 'தேவர்க்குந் தேவரெனவே' 'வந்த மானுயர் யாக்கை' 'வென்றதன்றே' என்பனவும் பாடங்கள்.

கவியில் மனிதப்பிறப்பை இப்பிறப்பென்றதனால், உரையில் தேவப் பிறப்பு முற்பிறப்பெனப்பட்டது காண்க.

முற்பிறப்பில் மூவராய்த் தேவராயிருந்தவர்கள் இப்பிறப்பில் இருவராய் மனிதராய் மாறிவந்தார்களென்பது முன்னிரண்டடிக் கருத்து. முன்பு, தேவசாதி, மனிதசாதியினும் சிறந்ததாயிருந்தது: இப்போது, அத்தேவருள் முதல்வரான மூத்தேவர் இருமனிதராயிருப்பதனால், தேவசாதியினும் மனிதசாதி சிறந்ததாய்விட்டதென்பது பின்னிரண் டடிக் கருத்து. மூத்தேவர் இருமனிதரானாரென்ற கருத்து, இதன் முன் (அநுமப்படலம் ௭-ம் கவியில்) அநுமான் 'தேவருக் கொருதலைவ ராம்முதற் றேவரெனின், மூவர்மற் றிவர்இருவர்' என இராமலக்குமண ரைக் குறித்துக் கூறியதை அநுவதித்துப் பூரிப்பதாயிருத்தல் காண்க.

'அமரர்க்கெல்லாம் தேவர்தந்தேவர்' என்ற பாடங்கொண்டால், அதற் குத் தேவர்களெல்லாருக்கும் (மேலான) தேவர் (ஆன மூவர்)களுடைய தேவர் (ஆன முழுமுதற்கடவுள்) என்று பொருள் கொள்க.

'அமரர்க்கெல்லாந் தேவர்தந் தேவர்' என்பதற்குப் பொருள் "எல்லாத் தேவர்கட்கும் கடவுளாகிய முழுமுதற்கடவுளே [ஸ்ரீமஹாவிஷ்ணுதாமே]" என்பது முந்திய உரை.

## இராம சுக்கிரீவர் சினேகவருணனை.

[இராமன், இருக்குமிடத்தைக் கைநீட்டிக்காட்டி, "இங்கேயிருக்க" எனச் சுக்கிரீவன் இருந்தான். இராமச் சந்திரனும் சூரியபுத்திரனும்" சந்தித்த காட்சி அமாவாசையன்று சந்திர சூரியர் சந்தித்த தோற்றம் போன்றது. அவர்கள் இருவரும் இணங்கி இணைந்திருத்தல், இராக்கதர் கூட்டமான பாவ இருள் நீங்க, அவ்விருளால் அடங்கி ஒடுங்கியிருந்த தேவர்கூட்டமான புண்ணிய ஒளி ஓங்க நன்றுநும் நல்லோரையும் ஒன்றுகூடுதல் ஒத்தது.]

441 கூட்டமுற் றிருந்த வீரர், குறித்ததோர் பொருட்கு முன்னாள்
ஈட்டிய தவமும் பின்னர் முயற்சியும் இயைந்த தொத்தார் :
மீட்டும்வா ளரக்க ரென்னும் தீவினை வேரின் வாங்கக்
கேட்டுணர் கல்வி யோடு ஞான மும் கிடைத்த தொத்தார்.

இ-ள். (சினேகராய்ச்) சேர்க்கையுற்றிருந்த இராம சுக்கிரீவர், (ஒருவர்) உத்தேசித்த ஒருகாரிய (நிறைவேற்ற)த்துக்கு (அவர்) முற்காலத்தில் (முந்திய சென்மத்தில், தோற்றுச்) சம்பாதித்த புண்ணியமும் இக்காலத்தில் (இந்தச் சென்மத்தில், செய்த) முயற்சியும் ஒன்றுகூடிய தொத்தார்கள்: பின்னும் (எதனை யொத்தாரெனில்,) இராக்கதரென்னும் பாவ (விருக்கத்தின் மேற்பாக)த்தை (அறுத்துத் தள்ளி, அடிப்பாகத்தை வெட்டியொழித்து) வேரோடழிக்க (விரும்பினார்க்கு)க் கல்வியும் ஞானமும் (ஆகிய இரம்பமும் கோடரியும்) கிடைத்ததையும் ஒத்தார்கள் (என்க).

பாசாரமப்படலம் ௫0-ம் கவியில் 'எண்ணிய பொருளெலாம் இனிது முற்றுக' என்பதிற்போல, இந்தக் கவியிலும் 'பொருள்' 'காரியம்' என்ற பொருள்பட நின்றது. ஈட்டல் - சம்பாதித்தல். 'கூட்டமொத்திருந்த' என்பதும் பாடம்.

"கல்வியும் ஞானமும் கூடியவழியே தீவினையொழிதல்போலவும், ஊழ்வினையும் முயற்சியும் கூடியவழியே ஒரு காரியம் முற்றுதல்போலவும், இவ்விருவரும் நண்பினராய்க் கூடியதனாலேயே ராக்ஷஸஸம்ஹாரம் நிறைவேறுமென்பதாம். உவமையணி."

## சுக்கிரீவன் இராமனைத் துதிக்க, இவன் தான்வந்தது எதற்காகவென, அவன் தன்நிலைகூறிச் சரணடைதல்.

[அப்போது, சுக்கிரீவன், இராமனை நோக்கி "உன்னை அடையப் பெற்ற என்னிலும் புண்ணியர் எவருமிலர். எனது நல்வினைப்பயன் சருவலோகநாயகனாகிய உன்னை அடையும்படி எனக்கு உதவியது. விதியே உதவும்போது, பெறுவதற்கரியது எதுவிருக்கிறது" என்று, இதயமாரப் புகழ்ந்துரைத்தான். இராமன், "நீ இந்த மலையில் இருக்கின்றாயென்று சவரியென்னுந் தவமுதியாள் சாற்றத் தெரிந்து, எங்கள் கவலை உன்னால் நீங்குமென்று இங்கே வந்தேம்" என்றான். சுக்கிரீவன், "என் தமயன் வாலி என்னைக் கொல்லுதற்கு ஓங்கிய கையினனாய், யான் உலகெங்கும் ஓடியும் விடாது தொடரத் தப்பிப்பிழைத்து, இந்த மலையில் வந்து சேர்ந்தேன். அவன் இங்கு வந்தால் நாசமடைவானென்ற சாபமுளதாதலால், இதுகாறும் உயிரோடிருக்கிறேன். உன்னைச் சரணடைந்தேன். என்னைக் காப்பாயாக" என்றான்.]

### இராமன் சுக்கிரீவனுக்களித்த சிநேக வாக்குத்தத்தம்.

442 என்றஅக் குரக்கு வேந்தை இராமனும் இரங்கி நோக்கி,
"உன்றனக் குரிய இன்ப துன்பங்கள் உள்ள, முன்னாள்
சென்றன போக; மேல்வந் துறுவன தீர்ப்பல்: அன்ன
நின்றன எனக்கும் நிற்கும் நேர்"என மொழியும் நேரா,

443 "மற்றினி உரைப்ப தென்னே, வானிடை மண்ணில் நின்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்; தீயரே யெனினும் உன்னோ
டுற்றவர் எனக்கும் உற்றார்; உன்கிளை எனதென் காதற்
சுற்றம்உன் சுற்றம்: நீஎன் இன்னுயிர்த் துணைவன்"என்றான்.

இ - ள். ("என்னைக் காப்பாயாக") என்றுசொன்ன சுக்கிரீவனை இராமன், (மனம்) இரங்கி (க் கருணையோடு)நோக்கி "உனக்குரிய இன்ப துன்பங்களுள் இதற்குமுன் (நீ அநுபவித்துக்) கழிந்தவை போகுக. இனிமேல் வரும் துன்பங்களை நீக்குவேன். அவைகள் (தம்முள், ஒரு கால், எவைகளேனும் நீக்கப்படாமல் எஞ்சிநின்றால், அப்படி) நின்ற துன்பங்கள் எனக்கும் உனக்கும் சமம். (அவற்றை நான் உன்னோடு பாதிபாதியாகப் பகுந்தநுபவிப்பேன்)" என்று வாக்குத்தத்தம் அளித்து

(அதனை வலியுறுத்துவானாய்,) "இனி வேறுகூறுவானேன்; விண்ணில் (ஆயினும்) மண்ணில் (ஆயினும் வேறெங்காயினும்) உன்னை வருத்தினோர் என்னை வருத்தினோர் (ஆவர்): உன்னோடு (இட்டாராகச்) சேர்ந்தோர் துட்டரேயாயினும் எனக்கும் இட்டர் (ஆவர்): உன் உறவினர் என் உறவினர் (ஆவர்): என் பந்துக்கள் உன் பந்துக்கள் (ஆவர்): நீ என் பிராண சிநேகிதன் (ஆவாய்)" என்றான்.

குரங்கு வேந்து குரக்கு வேந்து என வலித்தல் செய்யுள்விகாரம். இராமனும் என்பதில் உள்ள உம்மை, பொருள் குறியாத அசைநிலை. போக - போகுக: வியங்கோள் வினைமுற்று: செய்ய என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக்கொண்டு பொருள்கூறுவாருமுளர். நேரா — கொடுத்து. செறுதல் - வருத்துதல். 'செலினஞ்சிற் செறிற் சாம்பும்' (கலித். 78) தமிழகராதி.

'நின்றன (வான துன்பங்கள்) எனக்கும் நிற்கும் நேர் (—சமம்— எனக்குப் பாதி உனக்குப் பாதி)' என்றது, "துன்பம் அரையாம் துணைவரது கூட்டத்தால் - இன்பம் இரட்டியாமே" (அகலிகை வெண்பா) என்ற கருத்துள்ள ஆங்கிலப்பழமொழியை நினைவுறுத்துகின்றது.

இராமன் செய்த சிநேகவாக்குத்தத்தத்தில் 'தீயரேயெனினும் உன்னோடுற்றவர் எனக்கும் உற்றார்' என்ற பகுதி, விவாதத்துக் கிடமானதாகத் தோன்றுகின்றது. 'உற்றவர்'க்கு முன்வரும் 'செற்றவ'ரையும் பின்வரும் 'கிளை'யையும் சுக்கிரீவன் செற்றவர் (- வருத்துபவர்) ஆகவும், கிளை (-சுற்றத்தார்) ஆகவும் விரும்பி ஆக்கிக்கொள்ளவில்லை. அவர்கள், அவன்விருப்பத்தாலல்லாமற் செற்றவரும் கிளையும் ஆனவர். அவ்வாறன்றி, 'உற்றவர்' (—சிநேகிதர்) அவன் விருப்பத்தால் உற்றவராக்கிக்கொள்ளப்பட்டு அவனுக்கு உற்றவராயுள்ளவர். இராமன் அவனை நண்பனாக ஆக்கியதுபோல ஆக்காதிருந்தானாயினன்றி, ஆய்ந்தபின் "நட்டபின் வீடில்லை* நட்பாள்பவர்க்கு" (குறள் 791) என்பதனால் விலக்குதல் அறமாகாது. அதே நியாயத்தால் சுக்கிரீவனும் அவனால் நண்பினராக்கப்பட்டாரை விலக்குதல் கூடாமை தெளிவாம். அவன் ஆராய்ந்து துணிந்து தன்னோடு நண்பாகக்கொண்டிருப்பான். அப்படிக் கொள்ளப்பட்ட நண்பினர், ஒருகால், தீயராயிருந்தாலும், அத

*வீடு = விடுதல்.

போனவன் நெடுங்காலம் திரும்பாமையால் கலங்கிக் கண்ணீர் சொரிந்து கொண்டிருந்த இவனை நோக்கி மந்திரிமார் முதலியோர் 'உன் தமையன் இறந்தமையால் அரசுபுரிதல் உனது கடமை' என, 'அது தவறு யான் உள்ளே சென்று அவனைத் தேடிக் கண்டு கூட்டிவருவேன். அவன் கொல்லப்பட்டிருந்தால், கொன்றவனைக் கொன்றுவருவேன். கொல்ல முடியாவிட்டால், இறந்துவிடுவேன்' என, 'எங்களை நீ காவாயாயின், யார்காப்பார்? நீ காக்கக்கடவை' என்று வற்புறுத்தி அரசாட்சியை இவனிடம் அவர்கள் கொடுத்ததுண்டு. இவன் (மனசோடு) கொண்டதில்லை.

இவன் காத்திருந்த பிலத்துவாரவழியே மாயாவி வந்துவிடாமல் தடுக்க மலைகளை அடுக்கி அடைத்துவிட்டு, இவனைக் கூட்டிவந்து, இறைமைவகிக்கச்செய்து எங்கள்மலையில் யாங்கள் இருக்கையில், வாலி மாயாவியை மடித்துப் பாதாளவாயிலை அடுத்துத் தம்பியை விளித்துப் பிரதியுத்தரம் பெறாமையால், 'தம்பி காத்த தன்மை நன்றாயிருந்தது!' என்று எண்ணி, அடுக்கிய மலைகளை உதைக்க, அவைகள் நெடுந்தொலை பறந்தொழிந்தன. அவன் கோபத்தோடு எங்கள் மலைமேல் வறிவர, இவன் எதிர்கொண்டு சென்று அடிபணிந்து நின்று, 'மந்திரிகள் முதலியோர் வற்புறுத்தலை மறுக்கமாட்டாது, உன் காவலை யான் புரிந்தேன். என் பிழைபொறுத்து உன் காவலை ஒப்புக்கொள்' என்றதை ஏற்றுக்கொள்ளாமல், சீற்றம் மிகுந்து, இவனைத் தாக்குவானாகிக் கடல் கடைந்த காதலங்களாற் குடல்கலங்க உடல்கடைந்திட, இவன் உலைந்து, இனி நின்றிடில் உயிர் சென்றிடுமென்று உலகமுடிவுவரையும் விரைந்தோடியும் அவன் தொடர்ந்தோடிப் பற்றி மாய்க்கப்புக்கபோது, அற்றம் வாய்க்கப்பெற்றுத் தப்பிப் பிழைத்து, அவன் வராமல் தடுக்கும் சாபக் காப்புடைய இந்த மலையில் வந்து தங்கி யிறவாதிருக்கின்றான்."]

வாலி கொடுமையும் சுக்கிரீவன் துன்பமும்.

௪௧௪ "உரிமை யென்றிவற் குரிய தாரமாம்
அருமருந் தையும் அவன்வி ரும்பினான்
இருமை யுந்துறந் திவன் இருந்தனன்
கருமம் இங்கிதே கடவுள்" என்றனன்.

இ-ள். "சுவாமீ! (வாலி, சுக்கிரீவனுடைய செல்வத்தைக் கவர்ந்ததோடமையாமல், பொதுவாக உடையவனுக்கும் அவன் உறவினர் முதலியோர்க்கும் உரிமையாம் செல்வம்போலன்றிச் சிறப்பாக உடையவனொருவனுக்கே உரிமையாதல்பற்றி) உரிமை யென்று (பெயர்)

வழங்கப்பெற்று இவனுக்கு உரிமையாயுள்ள மனையாளாகிய ஆரமுதம் போல்பவளையும் அவன் காதலித்(துக் கவர்ந்)தான். (செல்வமும் மனைவியும் ஆகிய பொருள்கள்) இரண்டையும் (ஒருசேர) இழந்து, இவன், (துன்பம் மிகுந்தவனாய்) இருக்கின்றான். இந் நாட்டில் (இவன் விஷயமாக நடந்த) செய்தி இதுவே.''

உரிமை - மனைவி. இவற்கு - இவனுக்கு. தாரம் - மனைவி. மருந்து - அமிர்தம். ''விரும்பினான் - காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது.'' இருமை - இரண்டு (குறள் உ௩ உரை). துறத்தல் - நீங்குதல். கருமம், காரியம், செய்தி, வரலாறு, சங்கதி என்பன ஒருபொருள் குறிப்பன. கடவுள், அண்மைவிளி; பெரியாரை மரியாதையாகச் 'சுவாமி' யென விளித்தலை உணர்த்திநின்றது. உருமை யென்பதும் பாடம். ருமை சுக்கிரீவன் மனைவியின் பெயர். 'ரோமம்' உரோமம் எனப்படல் போல, 'ருமை' உருமையெனப்பட்டது.

கங்கைப்படலம் ௩அ-ம் கவியில், குகன் இலக்குமணனை நோக்கிச் சுவாமியே என்ற மரியாதைவிளிப்பொருள்படத் 'தேவர' என்றது போல, இங்கே அநுமான் இராமனைநோக்கிக் 'கடவுள்' என்றான்.

அருமருந்தையும் என்பதில் உள்ள உம்மை, ஒருபொருளுங் குறியாது ஓசைநிரப்புவதாகக்கொண்டால், அசைநிலையாம்; மனைவியின் சிறப்பை யுணர்த்துவதாகக்கொண்டால், உயர்வுசிறப்பும்மையாம்; 'செல்வத்தைக் கவர்ந்ததல்லாமல்' என்பதை வருவித்தால், இறந்தது தழீஇய எச்சவும்மையாம்.

வாலிக்குச் சுக்கிரீவன் தம்பியாயினும் குடியென்பதனாலும் குடிகளின் உடைமைகள் அரசன் உடைமைக ளென்பதனாலும் இவன் செல்வத்தை அவன் கைப்பற்றினா னென்ற போலிநியாயம் ஒருபுற மிருக்க, அவன் பாதாளத்துள்ளிருந்த தன்னை வெளியே வரவொட்டாமற் கனத்த மலைகளாற் பிலத்துவாரத்தை அடைத்துத் தன் இராச்சியத்தை இவன் தீய கருத்துடன் கைக்கொண்டானென்று எண்ணியது உண்மைக்கு மாறாயினும், அவ்வெண்ணங்காரணமாக அவன் இவன் செல்வத்தைப் பறித்துக்கொண்டதனால், அச் செய்கை அவன் மனமறியச் செய்த அநியாயமாகாதெனினும், அவன் இவன் மனைவியை வௌவியது அநியாயமாகாது போகாதென்பதனை வற்புறுத்த அவன் இவன் பத்தினியை அபகரித்தானென்று வெறுமனே* கூறாமல், 'உரிமையென்றிவற்குரிய' என்ற விசேடணத்தோடுகூடிய தாரத்தைக் கவர்ந்த தென்றான்.

*வெறுமனே - வாளா - சும்மா (பதற்றுப்பதம்).

உ

கடவுள் துணை.


# செந்தமிழ்.

தொகுதி-௨௮.] பிரமோதூத ஹு ஆனிமீ [பகுதி-௮.

Vol. XXVIII. June-July 1930. No. 8.


## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௨௫௨-ம் பக்கத் தொடர்ச்சி.]

### மராமரப்படலம்.

இராமன் எய்து துளைத்த ஏழு மராமரங்களைப்பற்றிக்கூறுவது. (ஆச்சாமரம், சாலமரம், மராமரம் என்பவை ஒருபொருள் குறித்தவை.)

மராமரவருணனை.

448 ஊழி பேரினும் பேர்வில ; உலகங்கள் உலைந்து
தாழும் காலத்தும் தாழ்வில ; தயங்குபே ரிருள்சூழ்
ஆழி மாநிலம் தாங்கிய அரும்பெருங் கிரிகள்
ஏழும் ஆண்டுசென் றொருவழி நின்றென இயைந்த.

இ - ள். (இராமன் அணுகிய ஏழு மராமரங்கள், ஒரு கற்பம் கழிதலும் மறுகற்பம் வருதலுமாகக்) கற்பங்கள் மாறி (மற்றெல்லாப் பொருள்களும் நிலைமாறி)னும் (தம் நிலை) மாறுதலில்லாதவைகள்; (கற்பமுடிவிற் கடல் கரைகடந்து பெருகுதலால்) உலகம் நிலைகுலைந்து (கடல்நீருள்முழுகித்) தாழுங்காலத்திலும் (முழுகாமல் அந்நீர்க்கு மேற்பட்டுநின்று) தாழ்தலில்லாதவைகள் ; அரிய பெரிய ஏழு குலபருவதங்களும் (தாம் நின்ற இடங்களைவிட்டு) அவ்விடத்திவ்வந்து, ஒருசேரநின்றாற்போல (உயரமும் பருமையும் மிகவும் அதிகமாக)ப் பொருந்தியன.

❋

ஊட - கற்பம். உலகங்கள என்பதில் கள அசை. உலகம— (வருணிக்கப்படாநின்ற மராமரங்கள் நிற்கும்) பூமி. தயங்குதல் - திகைத்தல். ஆழி - சக்கரம்; ஆகுபெயராய்ச் சக்கரவாளகிரியை யுணர்த்திநின்றது. மா நிலம்—பெரிய பூமி. தயங்கு பேர் இருள்சூழ் ஆழி மா நிலம்—திகைக்கும்படியான மிகுந்த இருள் சூழ்ந்த சக்கரவாள பருவதம் (சுற்றெல்லையாகச்) சூழ்ந்த பெரியபூமி. "'பேரிருள்' என்றது சக்கரவாளபருவதத்துக்கு அப்பாலுள்ள காடாந்தகாரத்தை". ஏழு கிரிகள் சத்தகுல பருவதங்க ளெனப்படுவன. அவை கைலை இமயம் மந்தரம் விந்தம் நிடதம் ஏமகூடம் கந்தமாதநம் என்பன. ஆண்டு—அவ் விடம்—ஆம் மரங்கள் உள்ள வனம். ஒருவழி-(அவ்வனத்தில்) ஒரு (குறித்த) இடத்தில்.

'பேர்வினும்,' 'தயங்குபேருளால்,' 'குலகிரிகள்,' 'நின்றென வியந் தான்' என்பனவும் பாடங்கள்.

மலைக்குப் பூதாம் (பூ—பூமி; தாம்—தாங்கல்) என்ற பெயருண்மை யை 'நிலந்தாங்கிய கிரி' என்றது நினைவுறுத்துகின்றது.

இந்தக் கவியும் இதனை அடுத்து வருங் கவிகளும், இராமன் வல்லமையை மேம்படுத்தற்கு அவன் எய்து துளைத்த ஏழு மரங்கள் சாலப் பெரியவையும் வலியவையுமானவையென்று கூறுவனவாய், உயர்வுநவிற்சியா யுள்ளவை. தன்மைநவிற்சியணியின் சார்பினாராய் உயர்வுநவிற்சியணியை வெறுப்பார் மிகப் பலருளராய இக் காலத்திற் கவனிக்கவேண்டிய தொன்றுண்டு. அது, களிப்பு விளைக்கும் கவி சாதுரியத்தோடுகூடியது தன்மைநவிற்சியாயினும் உயர்வுநவிற்சியாயி னும் ஏற்றுப் போற்றுதற்குரியது; அச் சாதுரியமில்லாதது எதுவாயி னும் புறக்கணித்தற்பால தென்பது.

இக் கவிகளிற்போல அபரிமித அதிசயமும் ஆனந்தமும் விளைய விருக்ஷங்கள் விதந்துரைக்கப்பெற்றமை வேறு தமிழ்நூலெதனிலேனும் பிறமொழிநூலெதனிலேனும் உளதோவென்பது சந்தேகம்.

கவி, இராமன் எய்தற்கு எய்திய ஏழுமராமரங்களுக்கும் ஏற்ற உவமை மலைகளேயாமெனமனத்துட் கருதினர். கருதியவர், ஏழென்

னும் எண்ணையுடைய அம் மரங்கள்போல, அவ்வெண்ணுடைய மலைக ளிருந்தால், அவை உவமித்தற்குச் சிறப்பாயிருக்குமென்று சிந்தித்தார். சிந்தித்தவர், சத்தகுலபருவதங்கள் ஞாபகத்துக்குவர, அவைகளை அம் மரங்களுக்கு உவமையாக உரைக்க உன்னினார். உன்னியவர், ஏழுமரங்கள் ஓரிடத்திருக்க, ஏழு குலமலைகள் வெவ்வேறிடத்திருக்கும் பொருத்தக்குறைவு புலப்பட, அக் குறையை நிரப்புவாராய், இல்பொரு ளுவமையாக, அந்தச் சத்தகுலாசலங்கள் தாம் நின்றஇடங்களினின்று பெயர்ந்துசென்று ஓரிடத்துற்றனபோன்றன வென்றார்.

மரங்களுக்கு மலைகளை ஒப்பாக உரைத்தவர், மலைகளின் அடிப் பாகம் பாறையாயிருப்பது மரங்களின் அடிப்பாகத்துக்கும் பைஞ் சோலைகளையுடைய மலைகளின் மேற்பாகம் பச்சிலைக் கிளைக ளடர்ந்த மரங்களின் மேற்பாகத்துக்கும் ஒத்திருக்கும் காட்சி உளக்கண்ணெதிரே உதயமாக, அதனைக் கற்பனைசக்தியாற் புனைந்துரைப்பாராய் அடுத்த கவி கூறுகின்றார்.

449 கலைகொண் டோங்கிய மதியமும் கதிரவன் தானும்
தலைகண் டேகுதற் கருந்தவம் தொடங்குறும் சாரல்
மலைகண் டோமென்ப தல்லது, மலர்மிசை அயற்கும்,
இலைகண் டோமெனத் தெரிப்பரும் தரத்தன ஏழும்.

இ - ள். சந்திரனும் சூரியனும் (தனது*) உச்சியைக் கண்டு செல்லுதற்குத் தவம் (செய்யத்) தொடங்கும் அடிவாரத்தையுடைய (ஒரு) மலையைப் பார்த்தோம் என்று சொல்லுவதேயல்லாமல் இலையை (யுடைய மரத்தை)ப் பார்த்தோம் என்று பிரமதேவனும் சொல்லுதல் கூடாத உயர்வுடையன(வாக ஒவ்வொன்றும் உள்ளன, அந்த மரங்கள்) ஏழும்.

சாரல்—மலையடிவாரம். அயன்—பிரமன். தெரிப்பரும் என்பதில் அருமை கூடாமையைக்குறித்தது. தரம்—உயர்வு (இலக்கியச்சொல்லக ராதி). தரம் தன்மையென்பது பூர்ந்திய உரை.

பிரமதேவன், இராமன் எய்யக் கருதிய ஏழு மராமரங்களுள் ஒன்றைப் பார்ப்பானானால், அவன் அதன் அடிப்பகுதியைமட்டும்

* மரத்தினது.

காணமுடியும். கண்டு, அந்த அடிப்பாகத்தை மலையென்று மயங்கு வான். மயங்கி, இந்த மலை சந்திரசூரியர் செல்லும் வானவீதிக்கு மிகவும் உயர்வாயிருப்பதால், அச் சந்திரசூரியர் இதன் உச்சியைக் காணப்பெறுதல் புகழ்ச்சிக்குரியதென்றும் அக் கருத்துத் தவஞ்செய்தா லன்றி நிறைவேறாதென்றும் தவஞ்செய்தற்குத் தக்க தானம் இம் மலைச் சாரலே யென்றும் எண்ணித் தவஞ்செய்யும்படியான தன்மையுடையது இந்த மலையென்று கருதுவான். அந்தப் பிரமதேவன் எந்த மரத்தின் அடிப்பாகத்தைப் பார்த்து இவ்வாறு கருதுவானோ, அந்த மரத்தின் இலை(களோடு கூடியகிளை)களைக் காணாதலால், அம் மரத்தைப்பற்றிப் பேசுங்கால், 'மலையைக்கண்டோம்' என்பானேயன்றி 'மரத்தைக் கண் டோம்' என்னான். அப்படிப்பட்ட மரங்கள் இராமன் எய்ய எண்ணிய ஏழுமரங்க ளென்பது கருத்து.

450 ஒக்க நாளெலாம் உழல்வன உலைவில ஆக,
மிக்க தோர்பொருள் உளதென வேறுகண் டிலமால்,
திக்கும் வானமும் செறிந்தஅத் தருநிழற் சீதம்
புக்கு நீங்கலின் தளர்வில, இரவிதேர்ப் புரவி.

இ-ள். சூரியனது தேர்க்குதிரைகள், ஒரேவிதமாக (ஒருநாள் போல) எல்லாநாள்களிலும் (ஓயாமல்) அலைவன. (ஆயினும் அவைகள்) இளைப்பில்லாதனவாதற்கு (த் தக்க காரணம் அம் மரங்களின் நிழலூடு புகுந்து போகுதலே. அக் குதிரைகளின் இளைப்பை நீக்குதற்கு அந் நிழலினும்) மிக்கது (ஆன) வேறொருபொருள் உண்டென்று (யாம்) கண்டிலேம் (அக் குதிரைகள் எல்லாத்) திசைகளிலும் வானத்திலும் நெருங்கி (மூடி)ய அந்த (ஏழு மரா) மரங்களின் குளிர்ந்த நிழலுட் புகுந்து நீங்குதலால் தளர்ச்சியில்லாதிருக்கின்றன.

"தினந்தோறும் [நாள் முழுதும்] ஒரேவிதமாக (ஓயாமல்) ஓடிச் செல்பவையாகிய சூரியனது தேரிற் பூட்டப்பட்ட ஏழு குதிரைகள் சிறிதும் வருத்தமில்லாதனவாயிருத்தற்கு மேம்பட்டதொரு காரணம் உண்டென்று வேறே கண்டோமில்லை. எல்லாத் திக்குகளிலும் ஆகாயத்திலும் நெருங்கிப் பரந்த அம் மரங்களின் குளிர்ந்த நிழலை அடைந்து செல்வதனால் (அக் குதிரைகள்) தளர்ச்சியில்லாதனவாம்" என்பது மற்றைய உரை.

ஒக்க—சமமாக—ஒரேவிதமாக. உழலல்—அலேதல் (தமிழ்ச்சொல் லகராதி). உலேவு – இளைப்பு (ஷை). மிக்கது – மேன்மையுடையது. செறிந்த—நெருங்கிய. சீதம்—குளிர்ச்சி. புக்கு—புகுந்து. இரவி – சூரியன். பரிவி—குதிரை.

முந்தியகவியிற் சூரியனையும் இலையையும் (மரங்கள்) ஏழையும் சொல்லியவர், அவற்றின் தொடர்பாகச் சூரியனது பச்சையிலைநிறமுடைய ஏழுகுதிரைகளை நினைந்து, அவைகள் ஒருகணமும் ஓயாமல் ஒவ்வொருநாளும் உலகைச் சுற்றி உழன்றும் களைப்புறாமையைக் கருதி, அதற்குக் காரணம் காணமுயன்று கண்டுபிடித்தார்போன்று, அந்தக் காரணத்தைக் கூறுவாராய், அது ஏழுகுதிரைகளும் ஏழுமாமரங்களின் குளிர்ந்த நிழல்வழியாக நிதமும் செல்லுதலால் அக் குதிரைகளுக்கு அன்றன் றுண்டாம் அயர்ச்சி அன்றன்று அகன்றுவிடுதலே யென்று அம் மரங்களின்பெருமையைப் பாவித் துரைப்பண்ணினர்.

[அம் மரங்கள், தமது மேற்பாகத்தைக் காணப்பெற்றோர் இவை மலர்கள் இவை நட்சத்திரங்களென்று பகுத்தறியப்படாதபடி உயரத்தே பூத்த ஒளிமிக்க பூக்கள் பொலிவனவாய், நட்சத்திரமண்டலத்தை அளாவி வளர்ந்த மகோன்னத வளர்ச்சியுடையவைகள்.

அம் மரங்களின் தளிர் இலை அரும்பு காய்கள் காற்று மோதி உதிர்வனவும், கனிகள் கனிந்து முதிர்ந்தும் காற்று மோதியும் உதிர்வனவும் ஆகியவைகள், பூமியில் விழாமல் ஆகாயகங்கையில் விழுந்து அந் நதியோடு பெரும்புறக்கடலிற் போய்ச் சேர்வனவாம்.

அம் மரங்கள், ஒவ்வொன்றும், வேர் பாதாளத்தின் அடிக்குக் கீழேயும் உச்சி விண்முகட்டுக்கு மேலேயும் செல்லப்பெற்று, மகாமேருவென்னும்படியும், முன் ஒருகால், இருகாலால் மூன்று லோகங்களையும் அளந்து கடந்த திரிவிக்கிரமனை மகாவிட்டுணு வென்னும்படியும் உள்ளவை.]

451. வள்ளல் இந்திரன் மைந்தற்கும் தம்பிக்கும் வயிர்த்த
உள்ள மேயென ஒன்றிஞென் றுள்வயிர்ப் புடைய;
தெள்ளு நீரிடைக் கிடந்தபார் சுமக்கின்ற சேடன்
வெள்ளி வெண்படம் குடைந்துகீழ்ப் போகிய வேர.

இ-ள். வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் (ஒருவருக்கொருவர் பகை மிகுதியால் இளக்கம் ஒழிந்து கடினப்பட்டு) வயிரமான மனங்கள் (வயிரத்தன்மையில் ஒன்றுக்கொன்று தாழாமை) போல ஒன்றுக்கொன்று (குறையாத) உள் வயிரம் உடையன (அம் மரங்கள். அவைகள்) பூமியைத் தாங்குகின்ற ஆதிசேடனுடையபடத்தைத் துளைத்துக்கொண்டு கீழே போகிய வேரினையுடையன.

வள்ளல் - கொடையாளன். இந்திரன்மைந்தன் - வாலி. வயிர்த்தல் - வயிரித்தல் - வயிரமடைதல் - கடினப்படல். தெள்ளுதல் - தெளிதல். நீர் - கடல். இடை - மத்தி. நீரிடைக் கிடந்த பார். கடல் சூழ்ந்தபூமி. வெள்ளி வெண்படம் - வெள்ளிபோலும் வெண்மையான படம். வேர - வேரையுடையன. 'வயிரத்துள்ளமே' 'உள்வயிரத்த' என்பனவும் பாடங்கள்.

### இராமன் வில்லின் நாணை எறிதல்.

[அப்படிப்பட்ட மரங்களை இராமன் பார்வையிட்டு எய்ய எண்ணி வில்லின் நாணை விரலால் எறிந்து எழுப்பிய இடங்காரத் தொனி இவ்வுலகன்றி ஏனைய எல்லா உலகங்களும் அதிர ஆரவாரித்ததென்றால், பக்கத்தில்நின்றவர் பட்டபாட்டை எப்படிப் பகர்வது !]

### இலக்குமணன் தவிர நாணொலிகேட்டவரெல்லாரும் அஞ்சி ஓடுதல்.

452. அரிந்த மன்சிலை நாண்நெடி தார்த்தலும், அமரர்
இரிந்து நீங்கினர்; கற்பத்தின் இறுதியென் றயிர்த்தார்:
பரிந்த தம்பியே பாங்குநின் றான்மற்றைப் பல்லோர்
புரிந்த தன்மையை உரைசெயிற் பழிஅவர்ப் புணரும்.

இ-ள். இராமனது வில்லின்நாண் மிகுதியாக ஒலித்தமாத்திரத்தில், விண்ணவர்கள் வெருவி ஓடிப்போய்க் கற்பாந்தகாலம் (வந்துவிட்டதுபோலும்) என்று சந்தேகங் கொண்டார்கள். இலக்குமணன் ஒருவனே (இராமன்) பக்கம் (விட்டுப் பெயராமல்) நின்றான். மற்றைய (சுக்கிரீவன் முதலிய) பலரும் செய்த (செயலின்) தன்மையைச் சொன்னால், அவர்களைப் பழி அடையும்.

அரிந்தமன் - விட்டுணு இராமன். ஆர்த்தல் - ஒலித்தல். அமரர் - தேவர். இரிதல் - அஞ்சுதல் - ஓடுதல். இறுதி - முடிவு. அயிர்த்தல் - சந்தேகித்தல். பரிதல் - அன்புறல். பாங்கு - பக்கம். பல்லோர் - பலர். அவர்ப் புணரும் - அவரைச் சேரும்.

'அமரர் இரிந்து நீங்கினர்' என இங்குவருவா னேனெனில், இராவணாதி இராக்கதரால் இம்சிக்கப்பட்ட இமையோர் இராவணனுள்பட இராக்கதரெல்லாரையும் சங்கரிப்பதாகச் சங்கற்பஞ்செய்திருக்கிற இராமன்செயல்களை இடைவிடாமல் அந்தரத்தினின்று எப்போதும் கவனித்துப் பார்த்துக்கொண்டிருப்போராதலால், அவர்கள், அபூர்வமும் அருமையும் ஆச்சரியமுமான செயலாகிய மராமரமெய்தலை அவாவோடு எதிர்பார்த்துநின்றனர்; அப்படி நின்றவர், இராமன்வில்லின் நாணொலி கேட்டுப் பயந்து, அம்பெய்தல் காணும் அவாவை அறியாமலே அகலவிட்டு ஓடினரென்பதாம்.

சுக்கிரீவன் முதலியோர், இராமன் வின்னாணொலி கேட்டபோது, செய்தசெயல் பயந்தோடியதே. அவர்கள், வீராயுள்ளார் செய்யத்தகாத அந்தப் பேடிச்செய்கையைச் செய்ததைச் செப்பினால், அவரைப் பழி சேருமென்று, சமற்காரமாக, அவர்கள் பயந்தோடினார்களென்பதைச் சொல்லாமற் சொன்னார்.

## இராமன் அம்பெய்தல்.

[அப்படி ஓடின வானர வீரரில், பயம் ஒருபக்கம் இருக்க, 'எய்தலைக் காண்போமாக, அம் முயற்சியில் உயிர்போகநேரினும் நேருக' என்று துணிந்து திரும்பிய அநுமானாதியோரை 'என்ன துணிவப்பா இவர்களுக்கு! இவர்களன்றோ தீரர்! என்று ஏனைய வானரவீரரேறுகள் மெச்சிப்புகழ்ந்து வியந்துகொண்டிருக்கும்போது, இராமன், ஓர் அம்பை யெடுத்து, நாணில் தொடுத்து, முதுகுற இழுத்து, மூடக்கி விடுத்தான்.]

## இராமபாணம் ஏழுமரங்களையன்றிக் கீழேழுலகையும் உருவித் திரும்புதல்.

453 ஏழு மாமரம் உருவிக்,கீ ழுலகமென் றிசைக்கும்
ஏழும் ஊடுபுக் குருவிப்பின் உடன்அடுத் தியன்ற

ஏழி லாமையால், மீண்டதவ் விராகவன் பகழி;
ஏழு கண்டபின் உருவுமால்: ஒழிவதன் றின்னும்.

இ - ள். (அப்படி விடுத்த) அந்த ராமபாணம், (அதற்கு இலக்காகக் குறித்த அந்த) ஏழு பெரிய மரங்களையும் துளைத்து(ச் சென்று, அது சென்ற திசையில் இருந்த) கீழுலகமென்று சொல்லப்பட்ட (உலகங்கள்) ஏழையும் ஊடு நுழைந்து உருவி(ச் சென்று), அப்பால் (அவ் வுலகங்களை) அடுத்துப் பொருந்திய ஏழு (என்ற இலக்கமுடைய பொருள்) இல்லாமையினால், (தனது இருப்பிடமான இராமன் அம்பறாத் தூணிக்குத்) திரும்பிவந்துசேர்ந்தது: (அது திரும்பிவிட்டதனால் இம்மட்டோடொழிந்ததென் றெண்ணவேண்டா.) இன்னமும் (எப்போதாயினும்) ஏழு (ஆகவுள்ள பொருள்களைக்) காணுமானால் (அவைகளையும்) துளைக்கவேசெய்யும்; (துளையாது சும்மாவிருந்து) ஒழிவதன்று.

மா - பெருமை. மா மரம் - பெரிய மரம். இசைத்தல் - சொல்லல். ஊடு - உள்; நடு. புக்கு - புகுந்து - நுழைந்து. இயலல் - பொருந்தல். மீளல் - திரும்புதல். பகழி - அம்பு. இன்னும் - இன்னமும் - மறுபடியும்.

"கீழுலகமேழ் - அதலம், விதலம், சுதலம், தாரதலம், ரஸாதலம், மகாதலம், பாதாளம் என்பன. மூன்றாமடியிலும் நான்காமடியிலும் ஏழு - ஆகுபெயர். கண்டபின் - பின்னீற்று எதிர்கால வினையெச்சம் ஆல் - அசை."

இந்த அம்புக்கு ஏழென்றவையெல்லாம் இலக்கோ என்று ஏழெண்ணுடைய இருதிணைப்பொருள்களெல்லாம் நடுங்குதல்.

454 ஏழு வேலையும், உலகமே லுயர்ந்தன ஏழும்,
ஏழு குன்றமும், இருடிகள் எழுவரும், புரவி
ஏழும், மங்கையர் எழுவரும், நடுங்கினர்; 'என்னே!
ஏழு பெற்றதோ, இக்கணைக் கிலக்கம்!' என் றெண்ணி.

இ - ள். (சத்தசமுத்திரமென்ற) ஏழுகடல்களும் (சதுர்த்தச புவனமென்ற பதினான்கு உலகங்களுள் துளைக்கப்பட்ட கீழேழ் உலகங்கள்போக எஞ்சிய) மேலேழுலகங்களும் (சத்தகுலாசலங்களென்ற; ஏழு

மலைகளும் (சத்தருஷிகளென்ற) ஏழு இருடிகளும் (சூரியன்தேரிற் பூட்டிய சத்தசந்தசுகளென்னும்) ஏழுகுதிரைகளும் (சத்தமாதரென்ற) ஏழுமாதரும் 'என்னே! இந்த அம்புக்கு ஏழு (என்னும் தொகையுடைய பொருளின மெதுவும்) இலக்காகப் பெற்றதோ?' என்று எண்ணி(ப் பயந்து) நடுங்கினர்.

வேலை - சமுத்திரம். புரவி - குதிரை. உயர்ந்தன (ஆன) மேல் ஏழு உலகமும் எனக் கூட்டுக. 'பெற்றதோ' என்ற ஒருமைப் பயனிலைக்குச் சொல்லாற் பொருந்தாத 'ஏழு' என்ற எழுவாயைப் பொருளாற் பொருந்தும்படி அந்த 'ஏழு' என்பதற்கு 'ஏழென்னும் தொகையுடைய பொருளினம்' எனப் பொருள்கூறியிருத்தல் காண்க. 'ஏழென்னுந் தொகையுடைய தெல்லாம் குறியாகப் பெற்றதோ?' என்பது முந்திய உரை. அஃறிணையெழுவாய்கள் மிகுந்தும் உயர்திணையெழுவாய்கள் குறைந்து மிருந்தும் எல்லா எழுவாய்களும் 'நடுங்கினர்' என்ற உயர்திணைப்பயனிலை கொண்டது, உயர்திணையின் சிறப்புப்பற்றி என்க. 'என்னே' ஓர் அதிசய இரக்கக் குறிப்புச்சொல். 'நடுங்கின' 'என்ப' என்பனவும் பாடங்கள்.

"ஏழென்னும் எண்ணினையுடைய பலபொருள்களை ஒருங்கே யமைத்தது, கவிசமத்காரம். ஏழுவேலை - உவர்நீர், கருப்பஞ்சாறு, மது, நெய், தயிர், பால், நன்னீர் இவற்றின் மயமானவை. மேலே ழுலகம் - பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், ஜநலோகம், மஹர் லோகம், தபோலோகம், சத்தியலோகம் என இவை. ஏழுகுன்றம் - கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி என்பன: இவை ஸப்தகுலாசல மெனப்படும். இருடிகள் எழுவர் - அத்திரி, பிருகு, குத்ஸர், வஸிஷ்டர், கௌதமர், காசியபர் ஆங்கிரஸர்: இவர்க்குப் பிறவாறு முரைப்பர். காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என்ற ஏழு சந்தசுகளும் சூரியனது தேரின் குதிரைகளென நூல்கள் கூறும். மங்கைய ரெழுவர் - பிராஹ்மி, மாஹேச்வரி, கௌமாரி, நாராயணி, வாராகி, இந்திராணி, சாமுண்டி."

### இராமனைச் சுக்கிரீவன் வணங்கித் துதிக்க, மற்ற வானரர் மகிழ்ந்து வாழ்த்தல்.

[இவ்வாறாக, ஏழென்னும் எண்ணுடைய எல்லாரும் யாவையும், எண்ணி முதலிற் கலங்கினாரென்றாலும், பின்பு அந்த அம்பு தரும மூர்த்தியான தாசரதியினுடைய படையாதலால் தீங்குசெய்யாதென்று தெளிந்தார்கள். அப்போது, சுக்கிரீவன், இராகவன் பாதங்களில் விழுந்து பணிந்து "நீ தேவாதிதேவனே! உன்னை எனக்குத் துணையாக இங்கே வரச்செய்தது எனது நல்லூழ். இனி எனக்கு ஆகாத காரியம் யாதும் இல்லை. தாயே போலும் தயாபரனான உனக்கு அடியேன் அடியார்க்கடியேன்" என்று தாழ்மையோடு சொன்னான். மாருதி முதலிய மற்றைய வானரர் மகிழ்ச்சிக் கள்ளுண்டு மயக்கந்தலைக்கேறி 'வாலிகாலன்வாழி!' என்று ஆடிப் பாடிக் களித்தார்கள்.

### துந்துபிவரலாற்றைச் சுக்கிரீவன் சொல்லத் தொடங்குதல்.

இராமன், அந்த மலைமேல் வேறொரு மலை கிடந்தாற்போலக் கிடந்த எருமைமுகமுடைய துந்துபியென்னும் அசுரனது கங்காளத்தைக் கண்டு, "இது, இயமனூரும் எருமைக்கடா இறந்ததன் எலும்பா?" என்று வினவச் சுக்கிரீவன் சொல்லுவானானான். (கங்காளம் - உடல் முழு எலும்பு.)]

மராமரப்படலம் முற்றிற்று.

---

## துந்துபிப் படலம்.

துந்துபியென்னும் அசுரன் எலும்பை இலக்குமணன் கால்விரலால் நெடுந் தொலை போய்விழ எறிந்ததைக் கூறுவது. "இவ் வசுரனது முழக்கம் துந்துபியென்னும் வாத்தியத்தினது பேரொலியை ஒத்தலால், இவனுக்கு இப் பெயர். துந்துபி - பேரிகை."

### வாலி துந்துபியைக் கொன்றெறிந்ததனால், மதங்கமுனி ஆச்சிரமம் அசுத்தமாக, அம் முனி வாலியைச் சபித்தல்.

["காரெருமை என்னும் முகமும் பேரிகை என்னும் குரலும் துந்துபி என்னும் பெயருமுடைய ஓர் அசுரன், விட்டுணுவிடஞ் சென்று

போருக் கழைக்க, விட்டுணு சிவனிடம் செல்லச் சொல்ல, சிவன் இந்திரனிடமும் இந்திரன் வாலியிடமும் போகச் சொல்லிப் போக்குக் காட்டி ஒருவர்பின் னொருவராகக் கடத்திவிடக் கடைசியாக வாலியை அடைந்து "போர்புரிய வா" என்றான். வலிந்து சண்டைக்கு வந்தவனும் வந்தசண்டையை விடாதவனும் நெடுங்காலம் கடும்போர் புரிந்தனர். முடிவில், வாலி, துந்துபியை மண்ணில் மோத்துண்டு மண்டையுடைந்து காலொடிந்து இரத்தங் கக்கக் காலால் எற்றிக் கையாற் குத்தித் தூக்கியெடுத்துத் தூரம்போய்விழ எறிந்தான். அதனால், துந்துபியின் உடம்பு இந்த மலையில் விழுந்திட, உயிர் அந்த உலகை அடைந்தது. ஆவி நீங்கிய ஆகமும் அதனினின்று சிந்திய இரத்தமும் மதங்க முனியின் ஆச்சிரமத்தை வாலாமை* செய்ததைக்கண்டு, அம் முனிவன், கோபங்கொண்டு, இது வாலிசெயலென்று ஞானதிட்டியாலறிந்து "அவன் இங்கு வருவானாயின், தலை வெடித்துச் சாகக் கடவன்; அவனைச் சேர்ந்தார் போந்தாற் கல்லாகக் கடவர்" எனச் சபித்தான்" என்று சுக்கிரீவன் சொன்னான்.

## இலக்குமணன் துந்துபி எலும்பை வெகுதூரம்போய்விழ எறிதல்.

இராமன் "இந்த ஆச்சிரமத்தை அசுத்தப்படுத்திய இதனை அப்புறப்படுத்து" என, இலக்குமணன் எளிதாக அதனைக் கால்விரலால் எற்ற, அது வெகுதூரம் போய்விழுந்தது. அந்த அரிய செயலைக் கண்ட வானரர் ஆச்சரியமடைந்து உற்சாகமுற்று ஆரவாரித்தனர். அப்போது, சுக்கிரீவன், இராமனை நோக்கி "நான் தெரிவிக்கவேண்டிய தொன்றுண்டு" என்று தெரிவிப்பா னாயினன்.]

துந்துபிப் படலம் முற்றிற்று.

---

*வாலாமை — அசுத்தம்.

## கலன்காண் படலம்.

*சீதையின் ஆபரணங்களைச் சுக்கிரீவன் காட்ட இராமன் கண்டதைக் கூறுவது. (கலன் - ஆபரணம்).*

### சுக்கிரீவன் சீதைநகைகளை இராமனுக்குக் காட்டல்.

*[" முன் ஒரு நாள், இந்த இடத்திலே, யாங்கள் இருந்தபோது, வானத்திலே மிகவும் உயர்ந்ததானத்திலே ஒரு மாது கதறியது காதில் விழுந்தது. அவள், இராவணன் எடுத்துக்கொண்டுபோன சீதை போலும். அனையாள், தன் ஆபரணங்களை ஒரு சேலையுள்வைத்து முடிந்து யாங்கள் இருந்த இடத்தில் எறிந்தாள். அவைகள் சேதமுறாமற் கையேந்தி ஏற்றுச் சேமமாக வைத்திருக்கின்றோம்." என்று சுக்கிரீவன் சொல்லி அந்த முடிப்பை எடுத்துக்கொண்டுவந்து இராமனுக்குக் காட்டினான்.]*

### சீதையின் ஆபரணங்களால் இராமன்பால் உண்டான மெய்ப்பாடுகள்.*

455. தெரிவுற நோக்கினன், தெரிவை மெய் அணி,
எரிகனல் எய்திய மெழுகின் யாக்கை போல்
உருகினன் என்கிலம்! உயிருக் கூற்றமாய்ப்
பருகினன் என்கிலம்! பகர்வ தென்கொலாம்!

*இ-ள். (அந்த முடிப்பிலிருந்த) ஆபரணங்களை (ச் சீதையினுடையவைதாமாவென்று) தெரிந்துகொள்ளும்படி (இராமன்) பார்த்தான். (பார்க்கவே, சுவாலித்து) எரிகின்ற தீயை அடைந்த மெழுகுருவம்போல (மேனி நெகிழ்ந்து) உருகினானென்று சொல்லவும் வல்லேமல்லேம்; (அமுதம்போல) உயிருக்குப் பலம் (அளிப்பது) ஆக(க் கருதி அந்த ஆபரணங்களை) விழுங்கினான்(போல ஆசையோடு பார்த்தான்) என்று சொல்லவும் வல்லேமல்லேம்; (அவன் அடைந்த நிலைமையை) யாதென்று சொல்வது? (இன்னதென்றுசொல்ல இயலவில்லையென்றபடி.)*

---

*மெய்ப்பாடுகள் - அகத்துநிகழ்ச்சிகளைப் புறத்தார்க்குப் புலப்படுத்தும் உடற்குறிகள்.

தெரிவை - பெண். மெய் - தேகம். அணி - ஆபரணம். மெழுகின் என்பதில் இன் சாரியை. யாக்கை - உடம்பு. என்கிலம் என்பதில் கில் ஆற்ற லுணர்த்தும் இடைநிலைச்சொல். ஊற்றம் - வலி - பலம். ஆய் ஆக என்னும் எச்சத்திரிபு. பருகுதல் - விழுங்குதல். என் - யாது. கொல் ஆம் இரண்டும் அசை. 'உருகுதல்' தேகம் குழைந்து மெலிதலையும் ஊற்றமாய்ப் பருகுதல் உடம்பு பலப்பட்டுப் பூரித்தலையும் குறிப்பித்தன.

உருகியது பிரிவாற்றாமையாலும் பருகியது ஆபரணத்தை அடைந்தமைபோல ஆபரணத்தை அணிந்தவளை அடையலாமென்னும் ஆசையாலும் என்க. ஆபரணதரிசன* மாகிய ஒரே காரணத்தால், உருகுதலும் பருகுதலுமாகிய ஒன்றுக்கொன் றெதிரிடையான காரியங்கள் நிகழ்ந்தன என இக்கவியிலும், அந்த ஆபரணபரிசனத்தால்†, நீங்கின உணர்வு மீண்டது, நீங்காதிருந்த உயிர் வதைக்கப்பட்டாற்போல வருந்தியது என்ற இரண்டு எதிரிடைச் செயல்களும் தேகம் சந்தனத்தாற் குளிர்ந்தாற்போலக் குளிர்ந்தது, தீயினால் வெதும்பினாற்போல வெதும்பியது என்ற வேறிரண்டு மாறுபட்ட நிகழ்ச்சிகளும் நிகழ்ந்தன எனப் பின்வரும் 'விட்டபே ருணர்வினை' என்ற கவியிலும் அநுதாபமும் ஆச்சரியமும் உண்டாகக் கூறினார். இவ்வாறே, சீதை ஆபரணங்களைக் கண்ட இராமன்மெய்ப்பாடுகள்போல, இராமன்கணையாழியைக் கண்ட சீதையின்மெய்ப்பாடுகள் நிகழ்ந்ததை 'வீங்கினள் மெலிந்தனள் குளிர்ந்தனள் வெதுப்போ - டேங்கினள்' (உருக்காட்டுபடலம் ௬௬) என்றும் 'ஒருகணத் திரண்டு கண்டேன் ஒளிர்மணி ஆழி ஆன்ற - திருமுலைத் தடத்து வைத்தாள் வைத்தலும் செல்வ நின்பால் - விரகமென் பதனின் வந்த வெங்கொழுந் தீயினால்வெந் - துருகிய துடனே ஆறி வலித்தது குளிர்ப்புள் ளூற' (திருவடிதொழுதபடலம் ௭௭) என்றும் கூறியிருத்தல் காண்க.

456. நல்குவ தென்இனி? நங்கை கொங்கையைப்
புல்கிய பூணும்அக் கொங்கை போன்றன ;
அல்குலின் அணிகளும் அல்குல் ஆயின ;
பல்கலன் பிறவும்அப் படிவம் ஆனவே.

---

* தரிசனம்—காணுகை. † பரிசனம்—தொடுகை.

இ-ள். (சீதையினால் அணியப்பட்டு அவள்) தனங்களைப் பொருந்தியிருந்த ஆபரணங்கள் அந்தத் தனங்கள் போன்றன; (அவ்வாறே) மற்றைய பல ஆபரணங்களும் (அவை அவை அணியப்பட்டிருந்த அந்த) அந்த அங்கங்கள் போன்றன: (இவ்வாறு இராமனுக்கு மகிழ்ச்சி அளித்த ஆபரணங்கள்) இதன்மேல் அளிப்பது (ஆன மகிழ்ச்சி) யாது (உளது)?

நல்கு - உதவு. என் - யாது. இனி - இதன்மேல் - இதற்கதிகமாக. புல்கு - புல்லு - பொருந்து. பூண் - ஆபரணம். அல்குல் - அரை (தமிழுகராதி). படிவம் - உடலுறுப்பு (தமிழ்ப் பெயரகராதி). ஆன - போன்றன. 'ஆதல்' போலல் எனப் பொருள்படல் "ஆள்வா ரிலிமா டாவேனோ" என்பதிற் காண்க. உம்மை பிரித்துப் 'பிற பல்கலனும்' என இயைக்க. 'படிக ளாயவே' என்ற பாடமும் உண்டு. அதில், கள் அசை.

சீதையின் ஆபரணங்கள் அவைகளை அணிந்திருந்த அவள் அங்கங்கள்போல இராமனால் பாவிக்கப்பட்டு அவன் அவைகளைத் தரிசித்த போதும் பரிசித்தபோதும் அவனுக்கு இன்பம் ஈந்தன வென்பதாம்.

457. விட்டபே ருணர்வினை விளித்த வென்கெனோ!
அட்டன உயிரை அவ் வணிகள் என்கெனோ!
கொட்டின சாந்தெனக் குளிர்த்த என்கெனோ!
சுட்டன என்கெனோ! யாது சொல்லுகேன்!

இ-ள். (இராமன் திறத்தில் அந்த ஆபரணங்கள்) நீங்கின உணர்வை (மீண்டு வர) அழைத்தனவென்று சொல்லுவேனோ! உயிரைக் கொன்றன (போல வருந்தச் செய்தன) என்று சொல்வேனோ! பூசின சந்தனம்போல (அவன் மேனியை)க் குளிரச் செய்தன வென்று சொல்வேனோ! தீயைப் போலத் தபிக்கச் செய்தனவென்று சொல்வேனோ! என்ன வென்று சொல்வேன்!

விடுதல் - நீங்குதல். விளித்தல் - அழைத்தல். என்கென் - என்று சொல்வேன். அடுதல் - கொல்லுதல். அட்டன - கொன்றன. அணி - ஆபரணம். கொட்டுதல் - பூசுதல் (தமிழ்ப் பெயரகராதி); அப்புதல் (தமிழுகராதி). 'குளிர்த்த,' குளிர்ந்த என்பதன் பிறவினை: குளிரச் செய்தன என்பது பொருள். குளிர்ந்த என்பதும் பாடம்.

"பிரிந்திருக்கின்ற சமயத்தில் அப் பிரிந்த பொருளை நினைப்பூட்டு கின்ற பொருள்கள் யாவும் ஒருபால் மகிழ்ச்சியையும் ஒருபால் வருத் தத்தையும் விளைத்தல் இயல்பாதலால், இங்ஙனம் மாறி மாறிக் கூறினர். ...............இராமபிரானுக்கு இயல்பாகவுள்ள பேரறிவு பிராட்டியைப் பிரிந்ததனாலாகிய வருத்தத்தால் நீங்கியிருந்தது அவளது அணிகலங் களைக் கண்டதனால் மீண்டுவாலாயிற்றென்பது முதல்வாக்கியத்தின் கருத்தும், அவ் வணிகலங்கள் அவளது அழகிய அவயவங்களை நினைப் பூட்டிப் பிரிவுத் துயரை மிகுவித்து அப் பெருமானுக்கு மாணவேதனை யைச் செய்வனவு மாயின வென்பது இரண்டாம்வாக்கியத்தின்கருத் தும், அவை அவனது விரகதாபத்தைத் தணிவித்தனவென்பது மூன் றாம்வாக்கியத்தின்கருத்தும், அத் தாபத்தை மிகுவிப்பனவுமாயின வென்பது நான்காம்வாக்கியத்தின் கருத்துமாம். இன்னபடியென்று ஒன்றைத் துணிந்து கூறமாட்டாமையின், இங்ஙனம் விகற்பித்து, 'யாது சொல்லுகேன்' எனலாயிற்று."

453. மோந்திட நறுமலர் ஆன; மொய்ம்பினில்
ஏந்திட உத்தரி யத்தை ஏய்ந்தன;
சாந்தமும் ஆய்ஒளி தழுவப் போர்த்தலால்
பூந்துகில் ஆயஅப் பூவை பூண்களே.

இ - ள். (இராமனுக்கு) சீதையின் ஆபரணங்கள், மோந்து பார்த் தற்கு நறு (மணமுடைய) மலர்கள் போன்றன; தோள்களில் ஏந்த உத்தரீயம்போலாயின; (அவ் வாபரணங்களை மோந்தபோதும் ஏந்திய போதும் அவற்றின்) ஒளி (அவன் உடம்பைப் பொதிந்தாற்போலப்) பொருந்தலாற் சந்தனம் போன்று, (அவ்வொளி உடலை) மூடுதலால் அழகிய (போர்வை) வஸ்திரமும் போன்றன.

நறுமை – நன்மணம் (ஐங்குறுநூறு). ஆன – போன்றன. மொய்ம்பு - தோள். உத்தரீயம், அங்கவஸ்திரம், மேலாடை என்பவை ஒருபொருள்குறித்தவை. ஏய்ந்தன - போன்றன. சாந்தம் - சந்தனம். ஆய் - போன்று, தழுவல் - பொருந்தல். பூந்துகில் - அழகிய வஸ் திரம்; பூப்போல மென்மையான ஆடையுமாம். ஆய - போன்றன. பூவை - பெண். பூண் - ஆபரணம். உம்மைபிரித்து ஒளிதழுவச் சாந்தமாய் (ஒளி) போர்த்தலாற் பூந்துகிலும் ஆய என இயைக்க.

சாந்தமும் என்பதில் உள்ள உம்மையை அசைநிலையாகவுங் கொள்ளலாம் செய்யுளாதலால், பூந்துகிலுக்குப்பின் உம்மை தொக்கதாகக்கொண்டு, ஒளி (உடம்பைத்) தழுவப் போர்த்தலால், 'சாந்தமும் ஆய்ப் பூந்துகிலும் ஆய' எனவும் கொள்ளலாம். பூந்துகிலாயின என்பதும் பாடம்.

## சோகித்த இராமனைச் சுக்கிரீவன் தேளிவித்தல்.

[இவ்வாறாக, இராமபிரான், சீதாதேவியின் ஆபரணத்தால், மகிழ்ச்சியும் வருத்தமும் மாறி மாறி அடைந்தபோது, இறுதியாக விரகதாபவேதனை, விடமேறினாற்போல, மிகுதியாக, அதனை ஆற்றும் ஆற்றலின்றி, உள்ளமும் உடலும் ஒருங்கு தளர்ந்து, நினைப்பும் மூச்சும் நெடும்பொழுது நீங்கித் தன்வசமிழந்து, தரையிற் சாய்ந்து விழுந் தருணத்தில், அருகிலிருந்த சுக்கிரீவன், அவனைத் தழுவித் தாங்கி, அவனுடைய பரிதாபநிலைமையைப் பார்க்கச் சகியாதுத் துக்கம் மிகுந்து சொல்லுகின்றான். "அந்தோ! இந்த ஆபரணங்களைக் காட்டி உன் உயிரைப் போக்கினேன்போலும்! ஐயா! வருந்தாதே! தேவி எந்த உலகத்திலிருந்தாலும் தேடிக் கண்டுபிடித்து, அவளைத் திருடிய தீயவனை மாயச்செய்து, அவளை மீட்டுக்கொண்டுவந்து கொடுத்து என் சேவகத்தைக் காட்டுவேன். அவளைக் கவர்ந்த காதகன் கரங்கள் இருபதும் சிரங்கள் ஒருபதும் உன் அம்பு ஒன்றுக்கும் பற்றுமோ! அப்படிப்பட்ட பெருமையுடைய நீ அந்த அற்பனைத் தண்டித்தற்கு எழுந்தருளல் வேண்டா. இங்கேயே யிருந்தருள். அடியேன் சென்று அவன் சிரங்களைத் திருகி யெறிந்து தேவியைச் சிறையினின்று திருப்பிக்கொண்டு வந்து சேர்ப்பேன். சிறியேன் சிறுதொண்டைச் சிறிது திருக்கண் சார்த்தியருள்.

"நீ இட்ட கட்டளையை இயற்றும் ஏவலரோ, ஆற்றல்மிக்க அநுமானாதியரேம்; தம்பியோ, பேராற்றல் பெரிதுள்ள பெருந்தகை; நீயோ ஆர்துணையும் வேண்டாத அசகாயசூரன். இப்படியெல்லாமிருக்க, எப்படி உன்னைக் குறைவுடையவனாகக் கருதுகின்றாய்? உன்னாலாகாத காரியம் ஒன்றுமின்று. மும்மூர்த்திகளுள் எம்மூர்த்தியும் உன்னை ஒவ்வார். ஒவ்வொருவராக ஒவ்வுதலில்லாத அவ் விறைவர் மூவரும், ஒன்றுசேர்ந்து ஒருவரானாலன்றி உனக்கு ஒப்பாகார், எனது சிறு

குறைதீர்த்தல் பிற்பாடாகுக. இப்போது யாங்கள் தேவியைத் தேடச் செல்வேம். விடைதருக" என்று சுக்கிரீவன் சொன்னான்.

அவ்வாறு சொல்லவே, அதுவரையும் அவன் சொல்லியதைக் கண்மூடியிருந்தபடியே கேட்பதன்றிச் சொல்லக்கடவதில்லாதிருந்தது ஒற் சும்மா இருந்த இராமன், 'விடைதருக' என்றதற்கு மறுமொழி அளிக்கவேண்டிய அவசியத்தால் அறிவு கிளப்பப்பெற்றுக் கண்திறந்து அன்புடன் நோக்கிச் சொல்லுகின்றான்.

## சானகியைச் சிறைமீட்காமைக்காகத் தாசரதி தன்னை நொந்துகொள்ளல்.

"தீவினையேன் சீவனோடிருக்கும்போதே அவள் ஆபரணங்களை அகற்றிவிட்டாள். நாயகன் சாகுமுன் நகைகளைநீத்த நாயகி என் காலத்துக்குமுன்காலத்தில் எவளேனும் இருந்ததுண்டோ! இதனால் யான் இருந்தும் இறந்தேனேயன்றோ! அவள், 'நாயகன் வருவான், நம்மை மீட்பான்' என்றிருக்க, நான் வீணே நாட்போக்கிக்கொண்டிருக்கின்றேன்! அவளைக் காத்தற்குதவாமற்போனதன்றி மீட்டற்கும் உதவாதிருக்கிற வில்லை வெட்கமின்றி வீணே சுமந்துகொண்டிருக்கின்றேன்! தக்கோராயுள்ளோர், தம்மொடு எவ்வகைத் தொடர்புமில்லாமல் தற்செயலாகத் தாம் செல்லும்வழியிற் செல்லும் தையலாரை ஆரேனும் துன்புறுத்துவாரானால், அவரைத் தடுத்து அவரோடு அமர்புரிந்து ஆவியும் ஈகுவர். யானோ, என்னையே பரமாகநம்பிய என் இல்லாள் துன்பத்தையும் தீர்க்காதிருக்கின்றேன். எனது முன்னோர் கடலைத்தோண்டினர். கங்கையை வானகத்தினின்று மண்ணகத்துக்கு வரச்செய்தனர். அத்தகைய அருஞ்செயல்கள் புரிந்தவர்கள் பெருங்குலத்திற் பிறந்த யானோ, என் மனைவியின்வருத்தத்தையும் மாற்றமாட்டாத மகா நிர்ப்பாக்கியனாயிருக்கின்றேன். எனது பூர்வீகர்புகழைப் புகல்வானேன். என் தந்தை, இந்திரனை வென்று இந்திரலோகத்தைக் கைப்பற்றிய, அந்தகனும் அஞ்சும் சம்பராசுரனைச் சயித்து, இந்திரனுக்கு அவன் இராச்சியத்தை ஈந்து அரிய புகழ்பூண்டான். அவன்வயிற்றிற்பிறந்த யான் பெரிய பழி பூண்டேன். என் தந்தை சத்தியவாக்குத்தவறாதபடி காக்க, முடிசூடாத யான், மனைவியை மாற்றான் கவராமற் காவாத பழிசூடினேன்",

என்று நொந்து துன்பம் மேலிடச் சோர்வானனை இராமனைச் சுக்கிரீவன், ஆறுதல்வார்த்தைகள்கூறித் தேறுதலடையச்செய்தான்.

தேறுதலடைந்தவன், "சிநேகித! நீ தேற்றியதனால் தேறினேன். தேற்றாதிருந்தால், செத்திருப்பேன். இனி, எனக்குச் சாதலே தாரகம். உயிர்விடா தொழியேன். ஆயின், உன்குறை தீர்த்தாலன்றி உயிரை விடேன்," என்றான்.

## இராமனாதியர் வாலி வாழ்ந்த மலையை அடைதல்.

அப்போது, அநுமான் அஞ்சலித்து "அடியேன் அறிவித்துக் கொள்ளுவ துள்ளது. அதனைத் திருச்செவி சேர்த்தருள். வாலியை மடித்து மன்னவன் சுக்கிரீவனாகச்செய்து, சேனையைத் திரட்டினா லன்றித் தேவியைத் தேடலரிது. அவளை ஒளித்துவைத்திருக்கும் இராக்கத ரிருப்பிடத்தை யாமறியேம். அவளை ஒவ்வோரிடமாகத் தேடினால், அதற்கு அளவற்ற ஆண்டு வேண்டும். அன்றி, அரக்கர், அவளை அடிக்கடி வெவ்வேறிடங்களிற் கொண்டுபோய்வைப்பார்கள். ஆதலால், எல்லா இடங்களிலும் ஏககாலத்திற் சென்று தருவுதல் இன்றியமையாதது. அது, படையாலன்றி முடியாது. எம்மவர் படை எழுபது வெள்ள முள்ளது. ஊழிக்காலக் கடல்போல உலகமுழுதும் ஒருமிக்கச் சென்று தேடவல்லது" என்றான்.

அதுகேட்டு, இராமன் "வாலியிடம் போவோம். வாருங்கள்" என, எல்லாரும் புறப்பட்டனர். அவர்கள், சிங்கம் புலிகள் திரண்டு செல்லல் போல, மலைமேல் மலையாகப் பல மலைகளேறிப் பல யோசனை உயரம் போய் வாலியிருந்த மலையை அடைந்தனர். அடைந்தவர்கள், அப்பாற் செய்யவேண்டியது யாதென் றாலோசனை செய்வாராயினர்.

கலன்காண்படலம் முற்றிற்று.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

உ

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௨௫௨-ம் பக்கத் தொடர்ச்சி.]

## வாலி வதைப்படலம்.

### இராமன் வாலியைக்கொன்றதைக் கூறுவது.

### சுக்கிரீவன் போருக்கழைக்க, வாலி புறப்படத், தாரை* தடுத்தல்.

[இராமன் சுக்கிரீவனை நோக்கி "நீ வாலியைப் போருக் கழைத்து வந்து போர்செய்யும்போது மறைந்து நின்று வாளி எய்து அவனைக் கொல்வது தக்கதென்பது யான் நீக்கமாக ஆலோசித்துச் செய்த முடிவு" என்றான். தன் தமயனை எவ்வாற்றானும் கொல்லும் நோக்க முடைய சுக்கிரீவன், அதற்கிசைந்து சென்று, வாலிவாயிலின் முன் மோதும்படி "போர்க்குப் புறப்படு, போர்க்குப் புறப்படு" என்று ஆர்ப்பரித்து, இடியிடித்தாற்போலத் தோள்புடைத்துத், தொடைதட்டி வீர ஆரவாரம் செய்தான். அந்த ஆரவாரம், குகைக்குள் உறங்கும் சிங்கத்தின் செவியுள்ளே வெளியிலிருந்து பிளிறுகின்ற யானை முழக்கம் புகுந்தாற்போல, மாளிகைக்குள்ளே வெண்மலர் மெத்தையின்மேல், வெள்ளிய பாற்கடலில் வெள்ளியங்கிரிபோற் கிடந்து நித்திரை செய்யும் வாலி காதுள் நுழைந்தது. நுழையவே, அவன் ஆச்சரியமடைந்து, 'ஒளித்துப் பிழைத்திருந்தவன் வெளிப்பட்டுவந்தது நன்றாயிருக்கின்றது' என்று, இகழ்ச்சிக்குறிப்பு வெளிப்படச் சிரித்து 'இதோ! வந்து விட்டேன்' என்று உரத்து உரைத்த ஓசை அண்டமுகட்டைத் தாக்க, வீறுகொண்டு விரைந்தெழுந்து போக, அவன் மனைவி தாரை தடுக்க, "நில் நில், விலக்காதே, அஞ்சாது அறைகூவியவன் ஆவியை அமராங்கணத்தில் உண்டு மீள்வேன்" என "உன் தோள்வலிக்கு ஆற்றாது போய்த்திரிபவன் புதுவலிமை பெறவில்லை, மற்றொருவரும் உதவியில்லை. அப்படியிருக்க இப்பொழுது வலிந்து போர்க்கு வந்தது வலியிருந்த துணை படைத்தமையால்" என, "அவனுக்காக மூன்றுலகத்தோரும் ஒன்றுகூடிக்கொண்டுவந்து என்னை எதிர்த்தாலும், அவர்களனைவரும் இறந்து ஒழிதல் தேற்றமானது.

* தாரை - வாலி மனைவி.

ஆதலால், ஒருவரும் அவனுக்குத் துணையாக வரார். எவரேனும் வருவாரெனில், அவர் பலத்திற் பாதி எனக்குச் சேரும். என் பலத்தோடு அவர்தம் பலத்திற் பாதியும் அடைந்த என்னை அவர்கள் எவ்வாறு வெல்வார்கள்"? என, "இராமனென்பவன் அவனுக்கு உயிர்த் துணைவனாகி உன்னைக்கொல்ல உடன்வந்துள்ளானென, உண்மையன்புடையா ருளரறிந்துரைத்தனர்" என, "அடி, பாவி! அந்த ஆண்டகை திறத்தில் அடாதது கூறி அபசாரப்பட்டுவிட்டாய்! அவனி மாந்தர்க்கு அறநெறிகள் இவைகளென அவைகளை அநுட்டித்துக்காட்ட அவதரித்திருக்கிற அறக்கடவுளான அவன்' இருவர் பொரும் போரில் இடையே புகுந்து ஓரவாரமாக ஒருவருக்கு உதவிசெய்வானென்று, பெரிய பேதைமைப் பெண்மதியாற்கூறிப் பிழைபாடு பெரிதுடையை ஆனாய். மாற்றாந்தாய் வார்த்தைப்படி தம்பிக்குத் தன் அரசப்பெருஞ்செல்வம் அனைத்தையும் அகமகிழ்ந்து அளித்துத் 'தம்பிய ரல்லது தனக்கு வேருயிர்' இல்லாத சகோதரவாஞ்சை வடிவமானவன், யானும் என் தம்பியும் போர்புரியும் போது என்மீது அம்பு விடுவானோ! சிறிதுபோது பொறுதியோடிரு. இமைக்குமுன் சென்று, அவனையும் அவனுடன்வந்தாரையும் கொன்று திரும்புவேன்" என்றான். அவள் அச்சத்தால் மறுத்துரை வழங்க மாட்டாதவளானாள்.

தாரை தடையை மீறிவந்த வாலி வடிவை இராமன் வியத்தல்.

மலையினின்று புறப்பட்டுச் சுக்கிரீவனெதிரே தோன்றிய வாலி, தூணினின்று வெளிப்பட்டு இரணியனெதிரே தோன்றிய நாரசிங்கம் போலநின்றான். அப்போது, இராமன், அவன் தோற்றங்கண்டு ஆச்சரியங்கொண்டு, இலக்குமணனை நோக்கித் "தம்பி, இவனை நன்றாகப் பார். மானவர் வானவர் தானவர் ஏனவர்* யாவரும் இவனுக்கு இணையாகாரென்பது கிடக்க; எந்தக்கடல்தான் எந்தமலைதான் எந்தக்காலாக்கினிதான், இவனை நேரும்? சொல்" என்றான்.

வாலி சுக்கிரீவரைப்பற்றிய இராமலக்குமண சம்வாதம்.

இலக்குமணன் தமயனைப் பகைத்த தம்பியை நம்புதல் தகாதெனல்.

இலக்குமணன் "சுக்கிரீவன், தமயனைக் கொல்லும் இயமனைக் கொண்டுவந்திருக்கின்றான்; சாதாரணமாகத் துரோகங்கள் செய்யும் சண்

*ஏனவர் = மற்றவர்.

டையைச் செய்பவர்தவனல்ல னென்பது என்மனத்தை வருத்துதலால், வாலி மேனி மாண்பை மதித்துணரமாட்டாதிருக்கின்றேன். இன்னும், என் மனம் பொறுக்கமாட்டாது புழுங்குகின்ற ஒன்றைப் புகல்வேன். தருமமுறைதவறித் தம் காரியத்தைச் சாதிக்குமுபல்வாரை நம்புதல் நல்லதல்ல. தனது தமயனைப் பகைவனுகக்கருதிச் சூழ்ச்சிசெய்து மாய்க்கத் துணிந்தவன், மற்றவர் திறத்தில் பற்றுக்கோடாவனே?" என்றான்.

## இராமன், மனித ஒழுக்கத்தைப்போல வானர ஒழுக்கத்தை மதிப்பிடலாகாதெனல்.

458 "அத்தா, இது கேள்"என, ஆரியன் கூறு வான்:"இப்
பித்தாய விலங்கின ஒழுக்கினைப் பேசலாமோ?
எத்தாயர் வயிற்றினும் பின்பிறந் தார்கள் எல்லாம்
ஒத்தால், பரதன்பெரி துத்தமன் ஆதல் உண்டோ?

இ-ள். "அப்பா, (யான் கூறும்) இதனை (க்கூர்ந்து) கேள்". என்று இராமன் கூறுகின்றான்: "(பகுத்தறிவுடைய மனிதர் நடக்கைகளைப் பற்றிப் பேசுங்கால், இது நியாயமானது, இது அநியாயமானதென்று பேசுதல்போல,) இந்தப் பகுத்தறிவில்லாத மிருகங் (களான குரங்கு)களின் நடக்கைகளை (ப்பற்றி)ப்பேசுதல் பொருந்துமோ? (மிருக சகோதரருள் தமயனைப் பகைத்த சுக்கிரீவன் கிடக்க; மனிதசகோதரருள்) எல்லாத் தாய்மார் வயிற்றிலும் பிறந்த தம்பிமாரெல்லாம் (தமயன்மாருக்கு அன்புடைமையில் (ஒத்தவர்களாயிருந்தால், பரதன் (தம்பியரெனப்படுவாருள்) சிறந்தவனுவ துண்டோ?

அத்தன்—அப்பன். அன்பு பற்றித் தம்பியை அத்தா என விளித்தது மரபுபற்றிவந்த வழுவமைதி. ஆரியன்—வணங்கப்படத் தக்கவன்; அறிஞன்; தலைவன்; இராமனைக் குறித்தது. பித்தம், அம்—கெட்டுப் பித்து என நின்றது. பித்து—(அறியுத;) தெளிவின்மை—பகுத்தறிவின்மை. ஒழுக்கு, ஒழுகு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர்: அம் சாரியை பெற்று ஒழுக்கம் எனப் பெரும்பான்மையாக வழங்கும்.

தமயன் திறத்தில் பகைமை மிகுந்த சுக்கிரீவனைப் பற்றிப் பேசும்படி நேரவே, தனக்கு அளவற்ற அன்புடைய தம்பிபரதன் ஞாபகம்வர,

இராமன் 'எத்தாயர் வயிற்றினும் பின்பிறந் தார்கள் எல்லாம்—ஒத்தால், பரதன்பெரி துத்தமன் ஆதல் உண்டோ?' என்றான்.

இங்கே இராமன், தம்பியருள் பரதன் உத்தமனென்றது, பொதுமைபற்றிக் கூறியது; தன் தம்பியருள் பரதன் சிறந்தவனெனக் கருதிக் கூறியதன்று: அக்கருத்துப்படக் கூறியதெனின், அது, சொல்லப் பெற்ற தம்பிக்குக் கேட்கலாற்ற தம்பியைக் கீழாகக் கூறியதாய், அபசாரமாவதேயன்றி, உண்மையிராதுமாம். இராமன், பரத லக்ஷுமணரை இரண்டு கண்கள் போலக் கொண்டு இருவர் பாலும் ஒத்த அன்புடையவன். ஒருகால், ஒருவர்பால் சற்று ஏற்றமான அன்புடையனாயிருந்தால் அவ் ஏற்றமான அன்பு இலக்ஷுமணன் பாலதாமென்பது, இராமன் இலக்ஷுமணனைப் பிரிந்து வருந்தியபோது தனக்குத்தானே கூறிய 'என்னைத்தரும் எந்தையை என்னையரை—பொன்னைப்பொருகின்ற பொலங்குழையாள்—தன்னைப்பிரியவுளேன் ஆவது தான்—உன்னைப் பிரியாத உயிர்ப்பலவோ' (அயோமுகிப்படலம் சஂ0) என்றதனாலும், பின்பு, திரும்பிவந்து சேர்ந்த இலக்ஷுமணனுக்குக் கூறிய தந்தை தாயர் மற்றைத் தம்பியர் முதலாகப்] 'பிரியவர் யாவரும் பிரிக, பேரிடர்—வருவன யாவையும் வருக, வார்கழல்—செருவலி வீரநிற் றீருமல்லது—பருவரல் என்வயிற் பயிலற் பாலதோ?' (ஷை அசூ) என்றதனாலும் விளங்குதல் காண்க.

இராமன், பரத லக்ஷுமண ரிருவருள் எவன்பால் ஏற்றமான அன்புடையானென்பது இயம்பவொண்ணாதது போல, அவ் விருவருள் யாவன் இராம பத்தி மிக்குடையானென்பதும் இசைக்கமுடியாததென்பது, இராமன் பதினான்கு வருட வனவாச காலம் கழிந்து அயோத்தியை அடைந்தபோது 'அந் நெடுங்கால முழுவதும் தவவேடந் தாங்கி முறையே நாட்டிலிருந்தும் காட்டிலுறைந்தும் இராம சேவைசெய்து இளைத்திருந்த பரத லக்ஷுமண ரிருவரையும் ஒருசேரப் பார்த்த உலகத்தோர், யாருடைய மேனி அதிகமாக நைந்ததென இதயம் நைந்திடலானார்' என்ற 'பொருளடங்கிய 'காடுறைந் துலைந்த மெய்யோ கையறு கவலை ஊரா—நாடுறைந் துலைந்த மெய்யோ நைந்ததென் றுகம் நைவ' (மீட்சிப்படலம் ௬சஅ) என்றதனால் விளங்கும்.

## இராமன், எவரும் குற்றமற்றவரில்லை, அவரவர்பால் அடையக்கூடிய அநுகூலத்தை அடைதல் அறிவுடைமை எனல்.

459 "விற்றாங்குவெற் பன்ன விலங்கெழில் தோளா, மெய்ம்மை
உற்றார்சிலர் அல்லவ ரேபல ரென்ப தன்மை:
பெற்றார்உழைப் பெற்ற பயன்பெறும் பெற்றி யல்லால்
அற்றார்நவை யென்றலுக் காகுநர் ஆர்கொல்?" என்றான்.

இ-ள். "(உலகத்திலே, உண்மையுடையார் (ஒரு) சிலரே (உள்ளார். உண்மையுடையார்) அல்லார் (மிகவும்) பலரா என்று (அறிவுடையார்) கூறுவது உண்மை (என்பது உலக அநுபவமுடையார் நன்கறிந்தது). (தமக்குத் துணையாகப்) பெற்றவரிடத்தே (பெறக்) கிடைத்த பிரயோசனத்தைப் (புறக்கணித்துத் தள்ளிவிடாமல்) பெறுக்கொள்ளுந்தன்மை (அறிவுடைமை. அவர் குற்றமே யில்லாதவரா யிருந்தாலன்றி, அவருதவியைப் பெற்றுக்கொள்ளாமை அறிவுடைமையாகாது. உலகத்திலே மிகப்பெரும்பாலார் குற்றமுடையாரே) அல்லாமல் குற்றமற்றாரென்று கூறுதற்கு (தகுதி) ஆனவர் யார் இருக்கின்றார்கள்?" என்றான்.

வில் தாங்கு வெற்பு அன்ன இலங்கு எழில் தோள் — வில்லைத் தாங்கிய (மலையுண்டெடல் அம்) மலை போன்ற பிரகாசிக்கின்ற அழகுடைய தோளுடையோனே. உழை - இடம். பெற்றி - தன்மை. ஆகுநர் - ஆகுவார். நகரம் இடை நிலை.

"(வேத சாஸ்திரங்களிற் கூறியபடி) தவறாத நல்லொழுக்கம் பொருந்தியவர் சிலரே: அந் நல்லொழுக்க முடையவரல்லாதவரே பலர்: என்பது உண்மையாகும்; (நாம்) சந்திக்கப் பெற்றவரிடத்தில், நேர்ந்த நற்குணத்தைக் கிரகித்துக்கொள்ளுந்தன்மை யல்லாமல் குற்றமற்றவரென்று சொல்லுதற்கு உரியவர் யாவருளர்? என்று (இராமன் இலக்குமணனை நோக்கிக்) கூறினான்." என்பது முந்திய உரை. "'நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு—புல்லிதழ் பூவிற்கு முண்டு' என்றபடி குற்றமில்லாதவர் உலகத்தில் அரியராதலால், அவரவரிடமுள்ள குணங்களை மாத்திரம் நாம் கிரகித்துக்கொள்ளவேண்டு மென்று பெருமாள் இளைய பெருமாளுக்குச் சமாதானங் கூறியருளின ரென்பதாம்" என்பதும் முந்திய உரை.

முந்திய பாட்டில், சுக்கிரீவன் தமயனைப் பகைத்தமைக்குச் சமாதானங் கூறிய இராமன், இந்தப் பாட்டில், 'அப்படிப் பகைத் தாலும், சாதாரணமான சண்டை செய்யாமல், பகைவனுக்குக் கூற்றுவனாக ஒரு துணையைக் கொண்டுவந்து வைத்துக்கொண்டு சூழ்ச்சியான போர் புரிதல் குற்றமானது, அத்தகைய குற்றமுடையவனைத் துணையாகக் கொள்ளக்கூடாது, என்றதற்குச் சமாதானங் கூறினனென்க.

## வாலி சுக்கிரீவ யுத்தம்.

மேலே கூறியவாறு இராம லக்ஷுமணர் வாலி சுக்கிரீவரைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்போது, அவ் இரு வீரரும் எதிர்த்தார்கள். அவர்கள், ஒருவரையொருவர் எதிர்ந்து நின்ற நிலையில், இரு குன்றுகள் எதிரெதிர் நின்றவற்றுக்கு இணையாயினர். இருவோரும், பொருவாரானபோது, யானையொடு யானையும் யாளியொடு யாளியும் அடர்ப்பன நிகர்த்தனர். ஒருவரை யொருவர் சாரிசுற்றல், குலாலசக்கரச்சுழற்சி நிகர்த்தது. உருமை*மாது பொருட்டுப் பொருதல் புரிபவரான இரு சகோதரரும் திலோத்தமை யணங்கு நிமித்தம் செருச்செய்த சுந்தோபசுந்தரென்ற சோதரிருவரை நேர்ந்தனர். கோபமென்ற ஒரு கொடிய குணம் இருவடிவுகொண்டு ஒன்றோடொன்று பொருதல் போலப் பொருதனர்.

அவர்கள், புரியும் போர்வேகத்தால், மண்மேலுள்ளாரோ, விண்மேலுள்ளாரோ, கண்மேலுள்ளாரோ என்று, காண்போர் கருதாநிற்கப், பொருதார்கள். ஒருவரை யொருவர் குத்தும் ஓசை இடியோசை ஒத்தது. அவர்கள் பல்லினுற் கடித்தும், கையினுற் புடைத்தும், காலால் உதைந்தும், வாலால் வரிந்தும், மலைகொண்டெறிந்தும், மரங்கொண்டறைந்தும், தோல்வி வெல்வி துலங்காமல், நெடும்போது கடும் போர் புரிந்தார்கள். முடிவில், வாலி செயசாலியாகிச் சுக்கிரீவனை நெருக்கியபோது, அவன், தப்பியோடித் தாசரதியிடம் சார்ந்தான்.

## சுக்கிரீவனைத் தரையில் மோதிக் கொல்லத் தலைக்குமேலே தூக்கிய வாலி மார்பில் இராமன் அம்பெய்தல்.

அப்போது, அவன், "சுக்கிரீவ, நீயும் உன் அண்ணனும் ஒத்திருந்தமையால் உனக்கு உதவிசெய்ய ஒண்ணுமற்போயிற்று. வேற்

* உருமை - சுக

றுமை தெரிய இந்தக் கொடிப்பூமாலையை அணிந்து செல்" என, மீண்டு சென்றான். சென்றவன், தமயனைத் தாக்க, அவன், தோற்றோடியவன் மீட்டும் வருவானோ' என்று சந்தேகித்து, இயமனும் பயமுறும்படி சினந்து நோக்கிச், சிறு நகை செய்து, தம்பியின் உயிர்த்தலந்தோறும் ஊக்கத்தோடு தாக்க, அவன், ஆற்றமாட்டானாய் இராமன் இருந்த இடத்தை நோக்கினான். நோக்கிச், செயலின்றித், தியங்கித், திகைத்திருந்த சுக்கிரீவனது சோர்வை வாலி பார்வையுற்று, இதுவே இவனை எடுத்துத்தூக்கி எற்றிக் கொல்லுதற்கேற்ற சமயமென்று, தம்பியின் இடுப்பிலொருகையும் கழுத்திலொருகையுமாகப் பிடித்து எடுத்துத் தன் தலைக்கு மேலாகத் தூக்கியபோது, மறைப்பற்றுத் திறப்புற்ற வாலி மார்பு குறித்து இராமன் வாளிவிடுத்தான்.

மாப்பெரும்பூதங்களின் வன்மை முழுதும் வாய்ந்திருந்த வலிய வாலி மார்பினூடு, வாழைப்பழத்துள் ஊசி இறங்குதல்போல, இராம பாணம் எளிதாக நுழைந்தது. சற்பாந்த காலத்திலே, ஊழிப்பெருங் காற்றால் மோதப்பட்டு, நிலை பேர வீழும் மகாமேரு போல, இராமபாணத்தால் தாக்கப்பட்ட வாலி, நிலைகுலைந்து நிலத்தில் விழுந்தான்.

### வாலி, தம்பியைப் பிடித்த கையைத் தளரவிட்டாலும் அம்பினைப் பிடித்த கையை அகலவிடாமை.

469 சையம் வேரொடும் உரும்உறச் சாய்ந்தெனச் சாய்ந்தான்,
வையம் மீதிடைக் கிடந்தபோர் அடுதிறல் வாலி,
வெய்ய வன்தரு மதலையை மிடல்கொடு கவரும்
கைநெகிழ்ந்தனன்; நெகிழ்ந்திலன் கடுங்கணை கவர்தல்.

இ-ள். இடி வீழ்ந்ததனால் அடியோடு (பேர்ந்து) மலைவீழ்ந்தாற்போல (நிலைகுலைந்து) வீழ்ந்து பூமிமீது கிடந்த வாலி, சுக்கிரீவனை வலிமையோடு பிடித்த [illegible] கைநெகிழ்ந்தான் (என்றாலும், அக் கைகளால் தன் நெஞ்சின் நுழையும்) பாணத்தை அகப்படுத்தும் தொழிலில் (சிறிதும்) நெகிழ்ச்சியுற்றானில்லை.

சையம் - மலை. உரும் - இடி. போர் அடு திறல் வாலி - யுத்தத்தில் (பகைவரைக்) கொல்லும் வல்லமையுடைய வாலி. சாய்ந்தான் முற்றெச்சம். வெய்யவன் தரு மதலை - சூரியன் பெற்ற பிள்ளை - சுக்கிரீவன். மிடல்-வலி-பலம். கவர்தல்-பிடித்தல் (தமிழ்ச் சொல்லகராதி); அகப்

படுத்தல் (தமிழகராதி). 'நெகிழ்ந்திலன் கடுங்கணை கவர்தல்' என்பதற்கு 'உக்கிரமான (இராம) பாணம் (தனது உடம்பையும் உயிரையும்) பற்றிய பிடி நெகிழப் பெற்றானில்லை' என்பது முந்திய உரை.

வாலி, சுக்கிரீவனைப் பிடித்த பிடியை நெகிழவிட்டாலும், இராம பாணத்தைப் பிடித்த பிடியை நெகிழவிட்டானில்லை என்ற கவி சமற்காரம் கண்டு களிக்கத்தக்கது.

இங்கே 'நெகிழ்ந்திலன் கடுங்கணை கவர்தல்' என்ற பகுதி, பாரதம் பதினேழாம் போர்ச்சருக்கம் ௨௯-ம் பாட்டில், அர்ச்சுனனது அம்பினால் கன்னனுடைய உயிர் போம்போது அவன் 'கைத்தலம் மறந்த தில்லைவிற் குனிப்பும் கடுங்கணை தொடுத்திடும் கணக்கும்' என்ற பகுதியை நினைவுறச் செய்கின்றது. 'கடுங்கணை' என்ற சொற்றொடர் இந்த ஒத்த பகுதிகளிரண்டினும் வருதல் கவனிக்கத்தக்கது.

**வாலி, அகப்படுத்திய அம்பைப் பிடுங்க முயன்று வருந்தல்.**

[வாலி, தன் மார்பிலே பாய்ந்த பாணத்தை அப்புறம் போகவொட்டாமல் அகப்படுத்தினான். அகப்படுத்தியவன், ஆக்கிரகங்கொண்டு, விண்ணை யிடித்து விழுத்துவேன், மண்ணை வேரோடு பேர்த்துக் கவிழ்த்துவேன் என்பனவாதிய வீர எண்ணங்களெண்ணி, அகப்படுத்தப் பட்டும் அழுந்துதலொழிந்திலாத இதனை எவினோன் யாவனோ என்று ஐயுற்றான். ஐயுற்றவன், எவினானைக் காணக் கருதிக் கண்கள் கனற்பொறி சிதற அனைத்துத் திசைகளையும் சினத்தோடு நோக்கினான். அந்த அம்பைக் கை கொண்டும் கால் கொண்டும் வால் கொண்டும் தன் முழு வலியினாலும் பறிக்க முயன்றும் பறிக்க முடியாமையால் வருந்தி மலைந்து மலை உருளல்போலப் புரளலுற்றான்.

பின்பு, இதனை எவினோர் தேவரோ எனச் சந்தேகித்துத், தேவர் இத்தனை சத்தியையுடைய இதனை எவுதற்குப் போதிய ஆற்றலுடையரல்லரென் றெண்ணி, இதுபவர் செயலன்று, ஒருவன் செயலே, அவ்வொருவன் தேவ தேவர் மூவரையும் ஒரு சேர அப்பான் என்று துணிந்து இந்த ஆயுதந்தான் யாவதோ அறியேன்; இது திருமால் சக்கராயுதமோ, சிவன் சூலாயுதமோ, செவ்வேள் வேலாயுதமோ என் மார்பை உருவும் வலிமையுடையதல்லவே என்று மனம் புழுங்கினான்.

[தொடரும்.]

**வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.**

அம்பிற் செதுக்கப்பட்டிருந்த ராம நாமத்தை வாலி காணல்.

461 மும்மைசால் உலகுக் கெல்லாம் மூலமந் திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தைத் தானே
இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை இராமன் என்னும்
செம்மைசேர் நாமம் தன்னைக் கண்களில் தெரியக் கண்டான்.

இ - ள். மூன்றுலகங்களினும் உள்ளார் அனைவருக்கும் மூலமந் திரமா யுள்ளதும், (பரமபதமாகிய - மிக மேலான சொல்லாகிய) தன் னைச் செபிப்பார்க்குத் தன்னையே (—பரமபதத்தையே - மோட்சத்தையே) தருகின்ற ஒப்பற்ற பெருமையுடைய சொல்லாயுள்ளதும், தான் (வே றொன்றின் துணையை வேண்டாமல் தனியாகவே இப் பிறப்பிலேதானே எழுவகைப்பிறவி (நோய்)க்கும் மருந்தாயுள்ளதும், 'ராம:' என்று (பிர சித்தமாகச்) சொல்லப்பெற்றதுமான சிறப்புப் பொருந்திய திருநாமத் தைக் கண்களால் தெளிவாகக் கண்டான், (வாலி).

மும்மைசால் - மூன்றாக அமைந்த. மும்மை - மூன்று (குறள் உரு உரை). தமர்க்கு - தம்மவர்க்கு - தன்னைச்செபிக்கும் அடியார் களுக்கு' எழுமை - தேவர் மனிதர் மிருகம் பறவை ஊர்வன நீர்வாழ் வன தாவரம் என்னும்) எழு (வகைப்) பிறப்புக்கள். 'தன்னை' என்பது உயர்வுபற்றியெனினும் எதுகைநோக்கி யெனினும் இரண்டையுங்கொண் டெனினும் 'தம்மை' எனப்பட்ட தென்க. 'தமக்கு' என்பதும் பாடம். அதற்குச் செபிப்பார் தமக்கு (—செபிப்பார்க்கு) என்று பொருள்கூறுக.

வைணவர்க்கு மூலமந்திரமாய் ஸ்ரீமந்நாராயணன் மந்திரமாகிய 'ஓம் நாராயணாய நம:' என்பதை அவர்கள் செபித்தல்போல, அவன் அவதாரமான இராமன் மந்திரமாகிய 'ராமா' என்பதையும் செபிப்பர். இதனையும் மூலமந்திரமென்றது, உபசாரமாகக் கூறப்பட்டதெனினும், அதனோடொத்த மகிமையுடையதென்பது பற்றிக் கூறப்பட்டதெனினும் பொருந்தும். இவ்விரு மந்திரங்களுள் பிந்தியதே பிரபலமாய்ப் பெரு வழக்காய்ச் செபிக்கப்படுவதாகக் காணப்படுகிறது. இது, பின்முளைத்த கொம்பு முன்முளைத்த காதுக்கு மேலாய்விட்டது' என்ற பழமொழி யை நினைவுறுத்துகின்றது.

'தம்மை' என்றது, 'ராமா' என்ற சொல்லின் பொருளான இராம னைப் புலப்படுத்தி, அதன்மூலமாக இராமனாக அவதரித்த ஸ்ரீமந் நாரா

யணனைச்சுட்டி, அவனை அடையும் முத்தியாகிய 'பரமபதம்' என்பதை உணர்த்தியது. "'தம்மை' என்றது அந்த நாமத்தின் பொருளான எம்பெருமானைக் குறித்தது" என்றார் முந்திய உரைகாரரும்.

ராம மந்திரம், ஓம் நாராயணாயநம என்ற மந்திரத்தினோடு ஒத்த மகிமை குறிப்பதென்பது கொண்டால், 'தனிப்பெரும்பதம்' என்றது ஒப்பற்ற பெருமையுடைய சொல்லென்று பொருள்படும்; அது (ஓம் நாராயணாயநம), பல சொற்றொடராயிருத்தல்போலன்றி, இது (ராம), தனிச்சொல்லாயிருப்பதைக்கருதினால், 'தனிப்பெரும்பதம்' என்பது ஒற்றையாய் மகத்துவமுடையதாயுள்ள சொல்லென்று பொருள் படும்.

ராம மந்திரத்தைச் செபிப்பார்க்கு இப்பிறப்பின் இறுதியிலே முத்தி சித்திக்குமென்பதுபற்றியும் முத்தி அடைந்தார் திரும்பப் பிறவாரென்பதுபற்றியும் 'இம்மையே எழுமைநோய்க்கும் மருந்தினை' என்றார்.

நீதி துறந்த ராமன் பிறந்ததால், தொல்லறந்துறவாத சூரியகுலமும் அந்த நல்லறந்துறந்த தென்று வாலிநகையும் நாணமுங் கொள்ளல்.

461 இல்லறம் துறந்த நம்பி எங்களுக் காகத் தங்கள்
வில்லறம் துறந்த வீரன் தோன்றலால், வேத நூலில்
சொல்லறம் துறந்திலாத சூரியன் மரபும் தொல்லை
நல்லறம் துறந்த தென்னு நகைவர, நாணுட்கொண்டான்.

இ. ள். (கைகேயி சொற்படி காட்டுக்குப்போவதற்காகக்) கிருகத்தனாயிருந்தமை நீங்கி (வானப்பிரத்தன் ஆன புருடோத்தமனும் (என் தம்பிக்கு அநுகூலமும் எனக்குப்பிரதிகூலமுமாக,—இருவர் சேனா சகிதராய்ப் போர்செய்யாராய்த் தொந்தயுத்தஞ்செய்புங்கால், அவ்விருவருள் ஒருவருக்குதவியாக மற்றொருவனை வேறெவரும்தாக்கும் அதருமத்தினும் அதிக அதருமமான மறைந்து நின்று தாக்குதலைச் செய்வானாகி) எங்கள் பொருட்டுத் தங்கள் (சத்திரியசாதிக்குரிய) யுத்ததருமத்தைக் கைவிட்ட வீரனுமான இராமனொருவன் பிறந்ததனால் வேத சாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட நல்ல தருமங்களை (ப் பரம்பரை பரம்

பரையாக) அநுட்டித்துவந்த (உயர்ந்த) சூரிய குலமும் (ஏனைய இழிந்த குலங்கள் போலப்) பழமையான சுதருமத்தைத் துறந்து விட்டதே யென்றெண்ணி, (இராமனைப்பற்றி இகழ்ச்சிச்) சிரிப்பு (ஒருபுறம்) உண்டாக, (மற்றொருபுறம், இவன் ஒருநாளும் தருமநெறி தவறானென்ற முழுநம்பிக்கையுடன் 'தருமமே தவிர்க்குமோ தன்னைத்தானரோ' என்று இவனைக்குறித்து என் மனைவியிடஞ் சொன்னேனே! என்னே! என் மதியீன மிருந்தவாறு! என்றெண்ணி; மனத்துக்குள்ளே (தன்னைப் பற்றிய) வெட்கமுற்றான்.

இல்லறம் - மனைவியுடன் வீட்டிலிருந்து வாழும் கிருகஸ்தாச்சிரமம்: 'இல்லறம் துறந்த' என்றது மனைவியுடன் காட்டிலிருந்து வாழும் வானப்பிரஸ்தாச்சிரமத்தை மேற்கொண்ட என்ற பொருள் பயந்து நின்றது, துறந்த - நீக்கிய. நம்பி - ஆடவரிற் சிறந்தோன் - புருடோத்தமன். வில்லறம் - விற்போர்க்குரிய நெறி; பொதுவாய்ச் சத்திரிய தருமத்தைக் குறித்தது. தங்கள் சத்திரிய சாதிக்குரிய வில் லறமென்பது, சுருக்கமாகத் 'தங்கள் வில்லறம்' எனப்பட்டது. வேதம் நூல் - வேதங்களும் நூல் (-சாத்திரங்)களும்; வேதமாகிய நூல். மரபு - வமிசம் - குலம். 'எம்மனோர்க்காக' என்பதும் பாடம்.

“நகைப்பு வந்தது இகழ்ச்சிபற்றி. 'பிறர்பழியும் தம்பழியும் நாணு வார் நாணுக்கு, உறைபதி யென்னு முலகு' என்றபடி பிறர்க்குவரும் பழியையும் தமக்கு வந்ததாகவே கருதி நாணுதல் உயர்ந்தோரியல்பாத லால், இராமனது பழிக்கத்தக்க செயலைக்குறித்து வாலி நாணங் கொண்டான். அன்றி, நாண் உட்கொண்டது, இங்ஙனஞ்செய்த போலி வீரனது அம்புபட்டதனால், தான் உயிரிழக்கநேர்தல் கருதி யென்றலு மாம்”

“வாலி இராமன் செயல்பற்றியுண்டான சிரிப்பை மறையாமல் வெளிப்படக்காட்டித், தன் செயலாலுண்டான வெட்கத்தைக்காட்டா தடக்கினனென்பார், 'நகைவர நாணங்கொண்டான்' என்னாது 'நகைவர நாண் உட் கொண்டான்' என்றாரென்றலுமாம்.

### வாலி எதிரே இராமனை வருதல்.

[“என்ன ஆச்சரியம்! நல்வினை தவறச்செய்திட்டானே! இனித் தாழ்ந்தோர் தன்மையைச் சாற்றுவானேன் என்று வாலிகூறியது காதில்

வீழ்ந்திருக்க, அவனெதிரே, அரசநீதி தவறாமற் காக்க அவதாரஞ்செய்த இராமன் வந்தான். வில்லோடு விண்மீது மின்னுந் தம் மேகம் மண்மீது வந்தாற்போலவந்த கோதண்டராமனை வாலி கோபித்து நோக்கி "என்ன எண்ணி என்ன பண்ணினாய்!" என்று ஏசுவானாய்ப் பேசுவானானான்.

## இராமனை வாலி இகழ்தல்.

"தன் குலப்பெருமைக்குத் தாழ்வுநேராமல் சத்தியத்தைக்காக்கத் தன் இன்னுயிரைத் தியாகஞ்செய்த தரும்வான தசரத சக்கரவர்த்திக்கு மகனாகவும் பரம தருமாத்துமாவான பரதாழ்வானுக்குத் தமையனாகவும் பிறந்தாயே! அரசனானவன் அநியாயக் குற்றஞ்செய்யாமல் தடுத்துத் தானே செய்தானானால், அவன் செய்ததனைப்பற்றிக் குற்றம், குற்ற மற்றதாய்விடுமோ!

உனது குலமோ, கருங்கடல் தோண்டினோர் கங்கையை வருவித்தோர் முதலிய பெரியோர் பிறந்த பெருஞ்சிறப்புற்றது! உனது வீரமோ, கரதூடணாதி பல ஆயிர அரக்கரை ஏகனாக எதிர்த்து வென்ற பிரதாபம்பெற்றது! உனது தலைமையோ, திரிலோகத்தையும் உட்கொண்டது! உனது குணஞ்செயல்களோ, உத்தமமானவை! உனது ஆற்றலோ அபாரமானது! உன் பெருமை இப்படியெல்லாமிருக்க, நீ எல்லாமறிந்திருந்தும் ஏதுமறியாதவன்போலத், தருமம் தடுமாற இந்த அகிருத்தியத்தைச் செய்பலாமோ?

## சீதையைப் பிரிந்ததனால் சித்தந்திகைத்து இச்செயல் செய்தாய்போலு மெனல்.

463 "கோவியற் றருமம், உங்கள் குலத்துதித் தோர்கட் கெல்லாம்,
ஓவியத் தெழுத வொண்ணா உருவத்தாய், உடைமை யன்றோ;
ஆவியைச், சனகன் பெற்ற அன்னத்தை, அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனைபோலுஞ் செய்கை."

இ. ள். "சித்திரத்திலே தீட்டமுடியாத (திவ்விய சௌந்தியதேக) லட்சணமுடையோனே, இராச தருமங்கள் (எல்லாம்), உங்கள் குலத்திற் பிறந்தோ ரெல்லார்க்கும் (அவர்களுடனே பிறந்து) உரிமையானவை யன்றோ, (அப்படியிருக்க, இப்படிச் செய்தாயாதலால்) ஆவியைப் போன்ற தேவியைப் பிரிந்தபின்பு (சித்தப்பிரமை கொண்டு, நற்செய்கை யென்று மயக்கித் தீச்செய்கை செய்யும்) செய்கைத்திகைப்பை அடைந்தாய் போலும்."

கோ. அரசன். இயல்—இயற்கை. கோ இயல் தருமம்—அரசர் (களுடைய) இயற்கைத் தருமங்கள். ஓவியம்—சித்திரம். எழுதல்—ஓவியந்தீட்டல் (தமிழ்ச்சொல்லகராதி) சித்திரித்தல். உருவம் அழகு; வடிவம். ஆவி, அன்னம் உவமையாகுபெயர்கள். இன்றியமையாமையி லும் மிக்க அன்பிற்கு இடமாதலினும் ஆவியும், நடையழகில் அன்ன மும், சீதைக்கு உவமை. அமிழ்து—இனிமைக்கேயன்றிக்கிடைத்தற் கருமைக்கும் உவமையாயிற்று. ஓவியர்க்கெழுத, உடைமையன்றே, பிரிந்தபின்பு என்பனவும் பாடங்கள்.

வாலி, தன் ஆவிக்கே ஆபத்து விளைவித்துவிட்ட இராமன்பாற், கோபமும் இகழ்ச்சியும் கொண்டானெனினும், அவன்பால் வைத்திருந்த அன்பும் மதிப்பும் முழுதும் நீங்கினானில்லையென்பது, இக்கவியிலும் இதன் முன்னும் பின்னும் உள்ள இராமதூடண கவிகள் பெரும்பாலன வற்றிலும் இலை மறை காய்போல் இனிது விளங்குதல் நோக்கத்தக்கது. முந்திய பாட்டுக்களில், 'தீமைதான் பிறரைக் காத்துத் தான் செய்தால் தீங்கன் றுமோ' எனக்குற்றஞ் சுமத்திய போதே 'தாய்மையு மன்றி நட்பும் தருமமும் தழுவி நின்றாய்' என்றும், குலநல முதலிய பல நலங் களும் உயர்வொப்பின்றியுடைய நீ 'திண்மை அலமரச்செய்யலாமோ அறிந்திருந் தயர்ந்து ளார்போல்' என்றும் வந்தவைகளினும், இப்பாட் பாட்டில், இயற்கைப் புத்தியோ டிருந்தால் செய்யாத தீச் செயலைத் தேவியைப் பிரிந்து சித்தந் திகைத்தமையாற் செய்தாய்போலும் என்றத னிலும் வாலிக்கு இராமன் மீதிருந்த அன்பும் மதிப்பும் முற்றும் நீங்க வில்லையென்பது தெற்றெனப் புலப்படும்.

பின்வரும் பாட்டுக்களிலும் வாலியின் இராம பக்தித்தீபம் அருகி ஒளிர்வுற்றதேயன்றி அறவும் ஒளி அற்று அவிந்தொழிந்திடவில்லை யென்பது அறியப்படும். தன்னை இராமன் மறைந் தெய்ததற்குப், பின்னர், இலக்குமணன் சமாதானங் கூறக்கேட்டு வாலி திருப்தியடைந்த வுடனே, அந்த அன்புத் தீபம் திடீரெனக் குதித்தோங்கியெழுந்து கொழுந்துவிட் டெரிந்து சொலிப்பதனால், அத்தீபம், எப்போதும் அவிந்ததில்லை யென்பது விசதமாம்.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௨அ-ம் தொகுதியின் ௬௬௨-ம் பக்கத்தொடர்ச்சி].

அரக்கராசன் அகிருத்தியஞ்செய்ததற்குக்
குரக்குராசனைக் கொல்லல் முறையோ வெனல்.

464 "அரக்கர்ஓர் அழிவு செய்து கழிவரேல், அதற்கு மாறோர்
குரக்கர சதனைக் கொல்ல மனுநெறி கூறிற் றுண்டோ!
இரக்கம்எங் குகுத்தாய்! என்பால் எப்பிழை கண்டாய் அப்பா!
புரக்கழி வித்துநீ பூண்டாற் புகழையார் பரிக்கற் பாலார்!"

இ-ள். "அரக்கர் (அரசன்) ஓர் அகிருத்தியத்தைச்செய்து (அகப்படாமல் தப்பிப்) போய்விட்டால், (அவனைக் கண்டுபிடித்துத் தண்டிப்பதை விட்டு) அதற்கு மாறாக (அகப்பட்ட) குரங்குராசனைக் கொல்லும்படி மனு (தர்மசாஸ்திர) முறை கூறியிருக்கிறதோ! (உனக்கு இயல்பாக உள்ள) இரக்கத்தை எங்கே கவிழ்த்துவிட்டாய்! (என்னைக் கொல்லுதற்கு) என்னிடத்தில் என்னகுற்றத்தைக் கண்டாய்! (அரசர்க்குரிய காத்தற்றொழிலுக்கு எதிரிடையாக என்னைக்கொன்று) காத்தலை அழித்தலான இச்செயலை நீ மேற்கொண்டாயானால், (காத்தற்றொழிலாலுண்டாம்) புகழைப்பூண்பார் (வேறு) யார் (இருக்கின்றார்)!"

அழிவு - அகிருத்தியம்: அழிம்பு என உலகில் வழங்குவது. அரக்கர் ஓர் அழிவுசெய்து என்றது இராவணன் சீதையைக் கவர்ந்ததைக் குறித்தது. கூறிற்று - கூறினது. உகுத்தல் - சிந்தல். புரக்கழிவு என்பதில் புர என்பதை (ப் புரத்தல் அதாவது காத்தல் என்று பொருள்படும்) முதனிலைத் தொழிற்பெயராகக்கொண்டு, புரக்கு அழிவு எனப் பிரித்துத் புரத்த (ற்றொழி) லுக்கு அழிவு எனக்கொண்டு பொருள் கூறப்பட்டது. புரத்தல்வல்லனென்னும் பொருளுடைய புரவலன் என்பதில் புர முதனிலைத்தொழிற்பெயராயிருத்தல் காண்க. அறக்கழிவு (- உலகவழக்கத்திற்குப் பொருத்தமில்லாதது. தொல். பொ. 218, தமிழகராதி) என்பதில், அறம் உலகவழக்கத்தொடு பொருந்து

மூடைமை எனக்கொண்டு அறத்தின் கழிவு ( - அழிவு தமிழகராதி) அறக்கழிவு என வழங்கலாயின தெனலாம். அதுபோலப் புரக் (குதலின்) கழிவு ( - அழிவு) புரக்கழிவு எனப்பட்டதெனலுமாம். அறத்துக்கு மாறான பாவம் அறக்கடையெனப்படுவதுபோலப் புர (த்தலு) க்கு மாறான அழித்தல் புரக்கழிவெனப்பட்ட தெனலுமாம். பரித்தல் — தரித்தல். குரங்கு அரசு, குரக்கரசு என வலித்தல்விகாரமுற்றது.

'அதற்கு வேறோர்,' 'குரக்கினத்தரசை,' 'பரக்கழி,' 'புரக்கழி' என்பனவும் பாடங்கள். புரக்கழிவு என்ற பாடம் திரிசிரபுரம் வி. கோவிந்தபிள்ளை (இரக்தாக்ஷிவருஷப்) பதிப்பிற் கண்டது.

உனக்கு இயல்பான இரக்கம் நீங்கா திருந்தாயானால், நிரபராதியான என்னைக் கொன்றிராயென்பான், 'இரக்கமெங்குகுத்தாய்' என்றான்.

ஐயோ! புகழெனப்பட்டவையனைத்தையும் பூண்டிருந்த நீ அநியாயக்கொலைசெய்து அபகீர்த்திக்காளாய்விட்டாயே! இனிப் புகழைப் பூணத்தக்கா ரெவருமில்லையே! என் றிரங்குவானாய்ப் 'புரக்கழிவுது நீ பூண்டாற் புகழையார் பரிக்கற் பாலார்!' என்றான்.

முன் 'திகைத்தனை போலும் செய்கை' என்று குறிப்பாகக் கூறியதை வெளிப்படையாகக் கூறுவானாய் மனைவியை வௌவினவனை மாய்க்கும் கிரமமானசெயலைச் செய்யாமல் விட்டு, அதற்கு மாறாக, அக்கிரமமாகக் குற்றஞ்செய்யாதவனைக் கொன்றாயென்றான்.

விதிவிலக்குகள் மேலியவர்க்குமட்டுமோ?
எளியவரை வலியவர் வருத்தினலும்
இசையன்றி வசையுண்டோ? எனல்.

465 "ஒலிகட லுலகந் தன்னில் ஊர்தரு குரங்கின் மாடே
கலியது காலம் வந்து பரந்ததோ? கருணை வள்ளால்!
மெலியவர் பால தேயோ, ஒழுக்கமும் விழுப்பந் தானும்?
வலியவர் மெலிவு செய்தால், புகழன்றி வசையும் உண்டோ?"

பொ - ள். "உலகத்திலே (இப்போது நிகழ்வது தீமை நிகழாத) திரேதயுகம். அப்படிப்பட்ட யுகத்தில் இப்படிப்பட்ட குரங்குக்கொலை நிகழ்ந்ததனால்) கலிகாலம் குரங்குகளுக்குமட்டும் வந்ததோ? நல்லொழுக்கமும் (அதனால் உண்டாம்) சிறப்பும் எளியவரிடத்துமட்டும்

இருக்கவேண்டியனவோ? வலியவர் (எளியவரை) மெலிவு (உறும்படி வருத்தஞ்) செய்தால், (அதனால் அவர்க்குப்) புகழ் (உண்டாவது) அன்றிப் பழி (உண்டாவதும்) உண்டோ."

ஒலி கடல் உலகம் - ஒலிக்கின்ற கடல் (சூழ்ந்த) பூமி. ஊர்தல்— ஏறுதல் (பெரும்பாணாற்றுப்படை). ஊர்தி - ஏறப்படுவது (சிந்தாமணி). ஊர்தரு குரங்கு - (மரம்) ஏறும் குரங்கு. அம்பு எய்தல் காண்டும் என்னுது 'எய்தல் காண்டும்' (மாராமரப்படலம்) என்றதுபோல மரம் ஊர்தரு (- மரமேறும்) குரங்கென்னுது 'ஊர்தரு குரங்கு' எனப்பட்டது. 'ஊர்தரு குரங்கு' என்பதற்கு 'ஓடித்திரிகின்ற குரங்கு' என்பது முந்திய உரை. தரு, துணைவினை. மாடு, ஏழனுருபு. அது, ஆறனுருபு: கலியது காலம் - கலிபுருடனுடைய காலம் - கலியுகம். வள்ளல் - (தன்னிடம் வந்த யாசகர் எவரையும்) வரையாது (- விலக்காமல்) கொடுப்போன் வள்ளல் விளிவேற்றுமையில் வள்ளால் என ஈற்றயல் நீண்டது. கருணை வள்ளால் - கிருபையுடைய கொடையாளனே. "மெலியவர் - அறிவு ஆண்மை ஆற்றல் என்றவற்றிற் குறைபாடுடையவர். அவற்றில் மிக்கவர், வலியவர்". ஒழுக்கம் நல்லொழுக்கத்தைக் குறித்தது. விழுப்பம் இங்கே ஒழுக்கத்தாலுண்டாம் சிறப்பைக்குறித்தது. 'ஒழுக்கம் விழுப்பம் தரலால்' எனக் குறளில் வருதல் காண்க. மெலிவு ஆகுபெயராய் மெலிவுறுதற்குக் காரணமான வருத்தத்தைக் குறித்தது. மெலிவு - இழிதொழிலென்றது முந்திய உரை.

'உறைதரு குரங்கு,' 'வந்து கலந்ததோ,' 'வலியவர் பிழையைச்' என்பனவும் பாடங்கள்.

வாலி, தன்னை அக்கிரமமாகக்கொன்ற இராமன் 'வாலியை வென்ற சூரன்' எனப் புகழப்படுவானன்றி இகழப்படானென்பதைக் கோபத்தோடும் வருத்தத்தோடும் மனத்துட்கொண்டு 'வலியவர் மெலிவுசெய்தாற் புகழன்றி வசையும் உண்டோ?' என்றான். இக்கருத்து நன்கு விளங்க அவன் இதன்பின் 'அறைகழல் அலங்கல் வீர ராயவர் புரிவ தாண்மைத் துறையெனலாயிற் றன்றே' என்பதைக் காண்க.

இவ் விருவாக்கியக் கருத்துக்களோடு இதன்முன் கூறப்பட்ட 'தீமைதான் பிறரைக் காத்துத் தான்செய்தாற் றீங்கன்றாமே?' என்ற

வாக்கியக்கருத்து, தீமை நன்மையாகத் தவறுபடப் பாவிக்கப்படுந்தன்மையில் ஒப்புநோக்குதற் குரியது. இம்மூன்றுவாக்கியங்களும், வலியவரது நற்செயல்களையேயன்றித் தீச்செயல்களையும் பகுத்தறிவில்லாத உலகம் பாராட்டுகிறதேயென்று வாலி மனம் எரிந்து வருந்தி மொழிந்தனவாய், இராமனை "வாழுயர் தோற்றம் எவன்செய்யும் தன்னெஞ்சம்—தான் அறி குற்றப் படின்" என்ற குறட்கருத்துப்படி வருத்தமுறுத்தக் குறித்தனவா யுள்ளன.

நாட்டிலே உன் அரசை உன்தம்பிக்குக் கொடுத்தாய்;
காட்டிலே என் அரசை என்தம்பிக்குக் கொடுத்தாய்;
இச்செயல்களினும் புதுமையானவை யாவையெனல்.

466 "கூட்டொரு வரையும் வேண்டாக் கொற்றவ! பெற்ற தாதை
பூட்டிய செல்வம் ஆங்கே தம்பிக்குக் கொடுத்துப் போந்து
நாட்டொரு கருமம் செய்தாய்! எம்பிக்கிவ் அரசை நல்கிக்
காட்டொருகருமம்செய்தாய்! கருமந்தான் இதன்மேலுண்டோ!"

இ-ள். "(ஏ!) அசகாயசூர! (உன்னைப்) பெற்ற பிதா (வான தசரத சக்கரவர்த்தி உனக்கு) உரியதாக்கிய (அரசுச்) செல்வத்தை (உன்) தம்பி (பரதனு) க்குக் கொடுத்து (விட்டுக் காட்டுக்கு) வந்ததனால், நாட்டிலே ஒரு (புதுமையான) காரியத்தைச்செய்தாய்! என் தம்பி (சுக்கிரீவனு) க்கு இந்த (எனது) அரசு (ச்செல்வத்தைக்) கொடுத்ததனால், காட்டிலே ஒரு (புதுமையான) காரியத்தைச் செய்தாய்! (புதுமைமிக்க) இப்படிப்பட்ட செயலினும் மேலான (புதுமையுடைய) செய லுண்டோ!"

கொற்றம் வெற்றியன்றிப் பலத்தையும் குறிக்கும்: இங்கே பலத்தைக் குறித்ததாகக்கொள்ளல் பொருத்தமானது. 'வேறொருவரது சகாயமில்லாமல் பகைவரை வெல்லும் பலமுள்ளவன்' என்ற பொருளுடைய அசகாயசூரன் என்ற வடமொழித்தொடர்க்கு, 'கூட்டொருவரையும் வேண்டாக்கொற்றவன்' என்ற மொழிபெயர்ப்பு நெஞ்சுள் நெடிது நின்று நிரம்பவும் மகிழ்வூட்டும் நீர்மையதாயிருத்தல் காண்க. ஆங்கே—அப்பொழுதே அல்லது அந்த இடத்திலேயே. போந்து - வந்து. கருமம் - செயல்.

பெரும்படைகளோடு தன்னை எதிர்த்த கரதூடணாதியரை இராமன் எவரொருவர் துணையுமில்லாமல் தன்னந்தனியனாய் நின்று

பொருது கொன்று வென்ற போர்த்திறத்தை நினைந்து, 'கூட்டொரு வரையும் வேண்டாக்கொற்றவ!' என்றான்.

நாட்டிலேயன்றிக் காட்டிலேயும் வான்முறைக்கு மாறாகத் தமயனாசைத் தம்பிக்குக் கொடுக்கும் புதுமையானசெயல்கள் புரிந்தாய்! அச்செயல்களால், நாட்டிலே, வேண்டுமென்றன்றி ஓர் அரசனையும் காட்டிலே வேண்டுமென்றே ஓரரசனையும் உயிரொழியச்செய்தாய்! இப்படிப்பட்ட அபூர்வமும் அநியாயமுமான செயல்களினும் அதிகமான செயல் யாதிருக்கின்றது! என்று இராமனை நோக்கி வாலி பரிகாசமும் பரிதாபமும் ஒருங்கு புலப்பட உரைத்தானென்பது கருத்து.

நாட்டிலே தன்னலங்கருதாது, தியாகமூர்த்தியாய், எல்லாச்செல்வங்களையுந் தன்னுட்கொண்ட அரசப்பெருஞ்செல்வமனைத்தையும் தம்பிக்குக் கொடுத்துப் பரம பரித்தியாகபரனெனப் பார்முழுதும் பாவிய மிகவுயர்ந்த புகழ்பெற்ற நீயே, காட்டிலே இராவணனைவெல்லச் சுக்கிரீவன் துணையைவேண்டிச் சுயகாரியதுரந்தரனாய், உன்னை எதிராத நிரபராதியான என்னை மறைந்துநின்று கொல்லும் மாபாதகத்தைச் செய்து மிக இழிந்த வெம்பழியுற்றாய்! அச்செயலினுஞ் சிறந்தது மில்லை. இச்செயலினும் இழிந்ததுமில்லை. இப்படி ஒன்றற்கொன்றெதிரிடையான செயல்கள் செய்தலில் உனக்கு மேற்பட்டவர் யார் இருக்கின்றனரென்று விரித்துப் பொருள்கூற இக்கவி இடந்தருகின்றது.

வீரர் எதுசெய்யினும் வீரமென்றாய்விடுகின்றதே!
இப்படி என்னை வஞ்சித்த நீ
எப்படி இராவணனைக் கோபிக்கலாமெனல்.

467 "அறைகழல் அலங்கல் வீரர் யாவர் புரிவ தாண்மைத்
துறையெனலாயிற் றன்றே! தொன்மையின் நன்னூற் கெல்லாம்
இறைவ,நீ என்னைச் செய்த தீதனில், இலங்கை வேந்தன்
முறையல செய்தா னென்று முனிதியோ? முனிவி லாதாய்."

இ - ள். "('கருடி கற்றவன் இடறிவிழுந்தால் அதுவும் ஒரு வித்தை' எனபதுபோல) வீரர்செய்வது (பேடிச்செயலானாலும்) வீரமென(ப் பகுத்தறிவில்லாத உலகத்தாரால் சொல்லப்பட) லாய்விட்டதே. (பேடித்தனமாக என்னை மறைந்து கொன்ற உன்னை 'வாலியை வென்ற

வீரன்' என்று உலகத்தார் சொல்வார்க ளென்றவாறு.) பழைய நீதி நூல்களுக்கெல்லாம் (போதனு) குரு (என்னுமாறு அவைகளை நன்கு கற்று வல்லவன்) ஆனவனே! நீ என் திறத்திற் செய்தது இது—இப்படி வஞ்சகமாக மறைந்து கொலைசெய்தது—என்றால் (நீ அறியாமல், உன்மனைவியைக் கவர்ந்த) இராவணன் அக்கிரமஞ்செய்தானென்று கோபிக்கக் கடவையோ?"

அறை கழல்—ஒலிக்கின்ற வீரகண்டை. அலங்கல்—(வெற்றி) மாலை. துறை—ஒழுங்கு—முறை. ஆண்மைத் துறை—வீரர்முறை; வீரச்செயலையுணர்த்திநின்றது. அன்றே—அல்லவா: அன்று ஏ அசைக ளெனலுமாம். தொன்மை—பழமை. 'நன்னெறி' 'நல்வழி' என்பவை நீதிநெறி நீதிவழி எனப் பொருள்படல்போல, 'நன்னூல்', நீதிநூல் (—நீதிசாஸ்திரம்) எனப் பொருள்படநின்றது. இறைவன்—குரு. தலைவ னென்பது முந்திய உரை. முறை—கிரமம். முறை அல என்பதில் அல என்பதை அல்லது என்பது லகர ஒற்றும் தகர உகரமும் தொக்கு வந்ததாகக் கொண்டு பொருள் கூறப்பட்டது. திருவவதாரப்படலம் கஙு-ம் பாட்டில் வருவது வருவ எனப்பட்டதுபோல, இங்கே அலது அல எனப்பட்டது. முறை அல என்பதற்கு நீதியல்லாத காரியங்கள் என்பது முந்திய உரை. முனிதல்—கோபித்தல். முனிவு இலாதாய் என்பது, நீ, கொலை களவு கள் காமம் பொய் என்னும் பஞ்சமாபாதகங்களுள் முதலாவதான கொலைப்பாவஞ் செய்தவனுதலால், நான்காவதான காமசம்பந்தமான பாவஞ்செய்த இராவணனைக் கோபிக்கத் தகுதியில்லாதாய் என்ற பொருள் குறித்துநின்றது. '(இயல்பிற்) கோபமில்லாதவனே' என்பது முந்திய உரை.

இராமன் தன் பெருங்குற்றத்தையுணராதும் இராவணனது சிறு குற்றத்தைப் பெரிதாகப் பாராட்டுவதாக வாலி கூறியது, 'தன் கண்ணில் உத்திரங்கிடப்பதை யறியாமல் பிறன்கண்ணில் துரும்பு இருப்பதைச் சுட்டிக்காட்டல்போல' என்னும் ஆங்கிலப்பழமொழியை நினைவுகூரச் செய்கின்றது.

அகாரணமாக வாரபட்சஞ்செய்தாயெனல்.

["உன் திறத்தில் ஒருதன்மையரான இருசகோதரர்களுள் ஒருவன்மேல் அன்பு செலுத்தி ஒருவன்மேல் அம்புசெலுத்தல் தருமமோ? வீரமோ? உன் பூமிக்கு என் தேகம் பாரமோ? எதுகருதி இது செய்தாய்?"]

வலிய யான் இருக்க, எளிய என்தம்பியைத் துணைக்கோண்டது, சிங்கத்தைவிட்டு முயலைத் துணைக்கோண்டதுபோலு மெனல்.

468 "செயலைச் செற்ற பகைதெறு வான்தெரிந்
தயலைப் பற்றித் துணை அமைந் தாயெனில்,
புயலைப் பற்றும் அப் பொங்கரி போக்கி ஓர்
முயலைப் பற்றுவ தென்ன முயற்சியே!"

இ - ள். "(நீயும் இலக்குமணனும் சீதையைக் காத்திருந்த) காவலை (மாயமானால்) அழித்த (எனவே, அவளைவிட்டு உங்களைப் பிரியச்செய்து அவளைக்கவர்ந்த) பகைவ(னை இராவண)னை அழித்தற் பொருட்டு வேறொருவனை (சுக்கிரீவனை)த் துணையாகக்கொண்டா யென்றால், (அது,) சிங்கத்தைவிட்டு முயலைப்பற்றுவது (போலாம்). (இது) என்ன (பைத்தியகார) முயற்சி!"

செயல்—காவல் (பிங்கலந்தை). செற்ற—அழித்த. பகை—பகைவன். செயல்—ஒழுக்கம் (சூடாமணி நிகண்டு). இப்பொருள் கொண்டால், 'செயலைச் செற்ற பகை' என்பது (பிறனில்விழையாமையாகிய) ஒழுக்கத்தை (ச் சீதையைக் கவர்ந்ததனால்) அழித்த என்று பொருள்படும். தெறுவான்—அழிக்கும்படி. தெரிந்து ஆராய்ந்து. அயல்—அந்நியம்; ஆகுபெயராய் அந்நியனை உணர்த்தியது. புயல்—மேகம். பற்றும்—பிடிக்கும். பொங்குதல்—(கோபத்தால்) கொதித்துக் கிளர்தல். அரி—சிங்கம். அப்பொங்கரி என்பதில் அ பலரறிசுட்டு. பிரசித்தமான என்னும் பொருட்டு. 'பற்றுறும் பொங்கரி' என்பதும் பாடம்.

புயலைப் பற்றும் பொங்கு அரி—(விசைகொண்டு குதித்து மேற் பாயுங்கால் ஆகாயம் அளாவ எழும்பி) மேகத்தைப் பிடிக்கின்ற கோபத்தோடு கூடிய சிங்கம்.

புயல், 'மேகம்போன்றதான யானை' என்பது முந்திய உரை. அவ்வுரை 'புயல்-உவமையாகுபெயர்; கரிய பெரிய வடிவிலும் மதமழை சொரிதலிலும் பெருமுழக்கத்திலும் உவமை' எனல் காண்க.

சந்திரனுக்கு மறுவுண்டு, சூரியனுக்கு மறுவில்லை யென்பதொழிய மறுவற்ற சூரியகுலத்தை நீ பிறந்து மறுவுற்றதாக்கினை யெனல்.

469 "காரி யன்ற நிறத்த களங்கம்ஒன்
றாரி யன்ற மதிக்குள தாமென்ப:
சூரி யன்மர புக்கும்ஓர் தொல்மறு
ஆரி யன்பிறந் தாக்கினை யாமரோ."

இ-ள். "கருமைபொருந்திய நிறத்தையுடைய களங்கம் ஒன்று சந்திரனுக்குள்ளதென்று சொல்வார் (உலகத்தோர்): (மறுவற்ற சூரியனுக்கும் மறுவுண்டென்று சொல்லும்படி, அச் சூரியனை மூலபுருடனாகவுடைய) சூரியகுலத்துக்கு ஒரு மறுவை (அக்குலத்தில்) நீ பிறந்து உண்டாக்கினாய்! (இது இரங்கத்தக்கது)."

கார் - கருமை. இயன்ற - பொருந்திய. ஊர் - ஊர்கோள்—பரிவேடம். தொல் - பழமையான. மறு - குற்றம். புதிதாக இராமனால் உண்டான மறுவைத் தொல்மறு (—பழமையான மறு) என்பது முரணாயிருத்தற்குச் சமாதானமாகத் 'தொல் மறு - மூன்னோரனைவரையும் தொடரும் மறு' என்றது முந்திய உரை. (பழிச்) சொல் (ஆகிய) மறு தொல் மறு என எழுதுவோரால் மாற்றியெழுதப்பட்டது போலும். மறு களங்கத்துக்கும் குற்றத்துக்கும் பொதுவாய்ச் சூரியனைக் குறிக்கும்போது களங்கம் என்றும் சூரியகுலத்தைக் குறிக்கும்போது குற்றம் என்றும் பொருள்படக்கூறிய நயம் காண்க. ஆரியன் - தலைவன். ஆம் அரோ அசைகள். 'களங்கநிறத்தொன்மை,' 'உளதாமென' என்பனவும் பாடங்கள்.

[தொடரும்]

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[கஉகூ-ம் பக்கத்தொடர்ச்சி].

பகையல்லாதவனை மறைந்துநின்று கொன்ற நீ
வீரரேறுபோல வெட்கமின்றி நிற்கின்றாயே! எனல்.

470 "மற்றொ ருத்தன் வலிந்தறை கூவ வந்
துற்ற என்னை ஒளித்துயி ருண்டநீ
இற்றை யிற்பிறர்க் கும்இகல் ஏறென
நிற்றி போலும் கிடந்த நிலத்தரோ!"

இ-ள். "சுக்கிரீவன் வலியப் போர்செய்தற் கழைத்ததனால் வந்துசேர்ந்த என்னை (வஞ்சமாக) மறைந்து (நின்று அம்புவிட்டுக்) கொன்ற நீ (இந்த அதம அதர்மகாரியத்தைச் செய்த) இன்றைத்தினத்திலேயே (உன் அநியாயச்செயலாற் கொல்லுண்டு யான்) கிடக்கின்ற (இந்த) இடத்திலேயே பிற (வீர) ரெல்லாருக்கும் வலிய ஆண்சிங்கம்போல வெட்கமின்றி (இறுமாந்து) நிற்கின்றாயே!"

அறைகூவல் - போர்செய்தற் கழைத்தல். இற்றை - இன்றைத் தினம். இகல் - வலி. ஏறு, சிங்கம் முதலிய மிருகங்களின் ஆண்; இங்கே அவற்றுட் சிறந்த ஆண்சிங்கத்தைக் குறித்தது. நிற்றி - நிற்கின்றாய். போலும் ஒப்பில் போலி. அரோ - ஈற்றசை.

வாலியை அழித்தாயல்லை,
தருமவேலியை அழித்தா யெனல்

471 "நூலி யற்கையும் நும்குலத் துந்தையர்
போலி யற்கையும் சீலமும் போற்றலை,
வாலி யைப்படுத் தாயலை, மன்அற
வேலி யைப்படுத் தாய்விறல் வீரனே."

இ - ள். "(மறைந்து நின்று என்னைக்கொன்றதனால் தருமம், சாஸ்திர முறையையும் உங்கள்குலத்து முன்னோர் (அநுசரித்த) முறையையும் (அவர்கள்) நல்லொழுக்கத்தையும் பாதுகாத்தவ னல்லாதவனாயினாய். வாலியைத்தொலைத்தாயல்லை! தருமவேலியைத் தொலைத்தாய்!"

இயற்கை—முறைமை. நும்—உங்களுடைய. உந்தை—உன் தந்தை. உந்தையர்—உங்கள் முன்னோர். இராமனையும் அவன் தம்பியரையும் உளப்படுத்தி நும் குலத்து உந்தைய ரென்றான். 'வாலியை' யென்றது 'என்னை' யென்றபடி. வலி தன்மைப்படர்க்கை. இவ்வாறு தன்னைப் பிறன்போலக் கூறியதனால் ஒருவகை நயம் அமைதல் கவனிக்கத்தக்கது. விறல்—வெற்றி; வலி.

உன் செயல், தோற்றத்திற் குரங்கினைக் கொன்றதாய், உண்மையில், அறந்தனை அழித்ததாயுள்ளது என்பது குறிப்பு.

உண்மையாக வாலியைக் கொன்றிருக்கவும், வாலியைக் கொன்றா யல்லையென முரண்படக்கூறி, அதிசய முண்டாக்கிப் பின்பு, அக்கொலை சிறிது, அதனால் விளையும் பயன் பெரிது, அப்பயன் இன்றளவும் அழியாது நிலையாயிருந்த தருமவேலியை அழித்ததாயுள்ளதென்று கூறிய சாதுரியம் பாராட்டற்பாலது. அரசன் அக்கிரமஞ்செய்தால், அவனைப் பிறர் பலர் பின்பற்றுவர்: அதனால் தருமம் அழிந்துவிடு மென்பது கருத்து.

பயிர் குடியாக, ராஜநீதி வேலியாக, பயிரைக்காக்கும் காவற்காரன் குடிகளைக்காக்கும் அரசனாக,—வேலி அழிக்கப்பட்டால் மிருகங்கள் மேய்தலுக் குள்ளாகிப் பயிர் அழிந்துவிடல்போல, நீதி அழிக்கப் பட்டால் தீயோர்கொடுமைக்குள்ளாகிக் குடி அழிந்துவிடுமென்றும், காவற்காரனே வேலியை அழித்தாற்போல அரசனே நீதியை அழித்தால், அது போன்ற விபரீதவினை வேறு யாதுளது! என்றும் விரித்துக் கூறுதற்குரிய கருத்தைச் சுருக்கமான சொற்களால் எளிது விளங்க இனிது கூறியிருக்கும் நயம் கூர்ந்து நோக்குதற்குரியது.

மனைவியைக் காவாத வில்லைவைத்திருந்தது,
ஆயுதமில்லாதவன்மார்பில் அம்புவிடவோ? என் றிகழ்தல்.

472 "தாரம் மற்றொரு வன்கொளத் தன்கையில்
பார வெஞ்சிலை வீரம் பரிப்பதென்!
நேரும் அன்று மறைந்து நிராயுதன்
மார்பின் எய்யவோ, வில் இகல் வல்லதே!"

இ-ள். "(நீ கொண்ட) மனையாளை மற்றொருவன் (கவர்ந்து) கொள்ள (வொட்டாமல் தடுத்து அவனைக்கொன்று அவளைக் காக்கப் பயன்படாமல் வீண்) பாரமும் கொடுமையுமாயுள்ள வில்லை வீரத் (தோற்றத்) தோடு தாங்கியிருப்பது எதற்காகவோ? (உனக்கு ஒரு தீங்கும் செய்யாதிருப்பதேயன்றி) ஓராயுதமுமில்லாதிருப்பவன்மார்பிலே (வீரர்போல நேரில் நின்று எய்தலே நீதியற்றதாயிருக்க) நேராக அல்லாமல், (பேடிகள்போல வஞ்சகமாக,) மறைவாக (நின்று) எய்தற்கோ (நீ) விற்போர்வன்மையுடைத்தாயிருப்பது!"

தாரம் - மனைவி. பரித்தல் - தாங்குதல். இகல் - போர். தாரம் சிலை இரண்டாம்வேற்றுமைத்தொகை. வீரம் மூன்றாம்வேற்றுமைத் தொகை. 'வீரம் பழிப்பதே' என்பதும் பாடம்.

வாலி இராமனை நோக்கி, "பாரியைப்பறிகொடாது பாதுகாத்தற்குப் பயன்படுத்தப்படாத பாரவில்லை, வீரர்போல, ஏன் இறுமாப்போடு ஏந்தியிருக்கிறாயென்றெண்ணினேன்; எண்ணித் தெளிந்தது யாதெனில், அவ்வில்லைத் தொழிற்படுத்தாது சும்மாவைத்திருத்தலாகாதென்று நிராயுதனை மறைந்து கொல்லுதற்குபயோகித்துச் செய்யக்கடவதைச் செய்யாதுவிட்டதேயன்றிச் செய்யாதொழியக்கடவதைச்செய்து விதிவிலக் கிரண்டையுமே மீறினாயென்பது" என்றானென்க.

இராமன் தன்னை மறைந்தெய்ததற்காக, வாலி மனமெரிந்து வருந்திக் கூறிய 'திகைத்தனைபோலும் செய்கை' யென்றற்றொடக்கத்த

ஏச்சுப்பேச்சின் இறுதியாக அதன் மகுடமென்னும்படி இப்போது கூறியதினும் அதிகபலமாக ரோசமுண்டாகும்படி இழித்து ஏளனஞ் செய்தல் இயலாததாயிருத்தல் நோக்கத்தக்கது.

## வாலிக்கு ராமன் மறுமொழி பகருதல்.

["உன் குலப்பகைஞனை மாயாவியைக்கொல்லப் பாதாளத்துள்ளே போன நீ, நெடுங்காலம் திரும்பாமையால், இறந்தாயென்று உன்குலப் பெரியோர் உன் தம்பியை 'அரசாள்க' என, இசையானாய், 'மன்னனை மாய்த்தவனை மாய்ப்பேன், மாய்க்கொணாதெனில் மாள்வேனேயன்றி ஆளேன்' என, அப்பெரியோர் அரசை வற்புறுத்திக் கொடுத்ததுண்டு, அவன் (மனசொடு) கொண்டதில்லை. நீ திரும்பிவந்தபோது, விரும்பி வரவேற்று, வணங்கி 'உன் அரசை ஒப்புக்கொள்' என்றனன். அவன் தம்பியென்ற அன்பு சற்றும் இல்லாயாய் அவன் குற்றமற்றவனென் றறிந்தும், கொல்லப்புகுந்தாய். அஞ்சி அபயமென்றும் அருளினை யில்லை. தோற்றனனென்று தொழுதும் கூற்றுவன்போலக் கொல்வது குறித்தாய். உயிர்தப்ப ஓடியவனை உய்யவிடாது தொடர்ந்தாய். இப்போது அவன் உயிரோடிருப்பது, 'இந்த மலைக்கு வாலி வந்தால் இறந்திடுக' என மதங்கமுனி சபித்த சாபத்தையுடைய மலையை அடைந்திருப்பதனாலன்றி நீ மனமாரக் கொல்லாமல் விட்டிருத்தலாலன்று."]

### ஏதிலானில்லாளைக் கவர்வானுக்கு எவ்வகைப்பெருமையும் இல்லையெனல்:

473 "ஈர மாவதும் இற்பிறப் பாவதும்
வீர மாவதும் கல்வியின் மெய்ந்நெறி
வார மாவதும் மற்றொரு வன்புணர்
தார மாவதைத் தாங்கும் தருக்கதோ ?"

இ - ள். "(கொல்ல முடியாத தம்பியைக் கொல்லாதிருந்தாயே யன்றிக் கவரக்கூடிய அவன் மனைவியைக் கவராது விட்டாயில்லை.) அன்பும் குடிப்பிறப்பும் கல்வியின் (பயனை) உண்மையொழுக்கத்துக்கு

உரிமையும் (உடையேமென்று களிப்புற்றிருந்தாய்; இவைகளை உடைமை) மற்றொருவன் மணஞ்செய்த மனைவியைப் பிடித்துக்கொள்ளும் அகங்கார (ச்செயலோடு பொருந்து) மோ ?"

ஈரம் - அன்பு. இற்பிறப்பு - உயர்குடிப்பிறப்பு. வாரம் - உரிமை. கல்யாணஞ்செய்தலென்னும் பொருளுடைய மணம்புணர்தல், புணர்தலெனச் சுருக்கிக் கூறப்பட்டது. தாங்குதல் - பிடித்துக்கொள்ளுதல் (தமிழகராதி). தருக்கு - அகங்காரம். அது பகுதிப்பொருள்விகுதி. 'தருக்கரோ' என்பதும் பாடம். 'தருக்கதோ' என்ற பாடம் திரிசிரபுரம் வி. கோவிந்தபிள்ளை பதிப்பிற் கண்டது.

'தாங்கும் தருக்கரோ' என்பதற்கு, 'பாதுகாக்கும் பெருமையேயன்றோ' என்பது முந்திய உரை.

போர்வீரர்தருமத்துக்கும் இல்வாழ்வார்தருமத்துக்கும் பொருந்தாதசெயல்கள் செய்தாயாதலால் உன்னைக் கொன்றேனெனல்.

[ " நாம் வலியேமென்று மெலியாரை வெகுண்டு வேதனைப்படுத்தலால் வீரதருமம் கெட்டுவிடும். பூவையர்கற்பழித்தலாற் பொதுத்தருமமே கெட்டுவிடும். நீ சுக்கிரீவனைத் துன்புறுத்தியும் அவன்மனைவியை வௌவியும் இருதருமங்களையும் ஒருசேரக் கெடுத்தாயாதலாலும் எனக்கு இன்னுயிர்நண்பனான உன்னுடைய தம்பியைக் காத்தல் என்னுடைய கடனாதலாலும் உன்னைக் கொன்றேன்" என்றான் இராமன் ]

## இராமனுக்கு வாலி எதிர்மொழி இயம்பல்.

எங்களுக்கேற்பட்டது விவாகச்சேர்க்கையன்று, இயற்கைச்சேர்க்கையே யெனல்.

414 "ஐய, நுங்கள் அருங்குலக் கற்பின்அப்
பொய்யில் மங்கையர்க் கேய்ந்த புணர்ச்சிபோல்
செய்தி லன்எமைத் தேமலர் மேலவன்
எய்தின் எய்திய தாக இயற்றினான்."

இ - ள். "(மனித இனத்தினரான) உங்களுடைய குல (த்துத் தோன்றும்) மாதருக்குப் பொருத்தமான (விவாகஞ்செய்தே ஆடவரைச்) சேர்தல் என்ற ஏற்பாட்டைப் பிரமதேவன் செய்திருப்பது) போல, (மிருக இனத்தைச் சேர்ந்த வானரரான) எங் (கள் மாதர்) களுக்கு (ஒரு ஏற்பாடும் அங்ஙனப்) பிரமதேவன் செய்யவில்லை. (எங்களுள் எவனேனும் எவளையேனும்) அடை (யும்படி நேர்) ந்தால், (அவ்வடைதல் கல்யாணச் சடங்கில்லாமல் அவன் அவளைக் கலத்தலுக்கு) அடைந்ததாகுமாறு செய்திருக்கிறான்."

ஐய—ஐயனே—தலைவனே. அண்மைவிளி. நுங்கள்—உங்கள். கற்பின்—கற்பினையுடைய. அ பலரறிசுட்டு. பொய் இல்—பொய்ம்மையில்லாத. "பொய்யின்மை—மனம்வேறு சொல்வேறு தொழில்வேறாகாமை, திரிகரணசுத்தி." புணர்ச்சி—(விவாகஞ்செய்து) கலத்தல் (ஆகிய விவாகப்புணர்ச்சி). எமை—எங்களுக்கு; உருபுமயக்கம். தேம் மலர் மேலவன்—வாசனையுடைய (தாமரை) மலர்மேலிருப்பவன்—பிரமன். எய்தல்—அடைதல்.

ஆண் பெண் நெருங்கநேர்ந்தால் பொருந்தநேர்ந்ததாக யாங்கள் சிருட்டிக்கப்பட்டிருக்கிறோம் என்பது கருத்து.

["ஆதலால் என்செயல் இயற்கையானதேயன்றிக் குற்றமாகாதென்று கொள்வாயாக" என்றான் வாலி.]

வாலி கூறிய சமாதானம் போலியாமென
இராமன் ஏதுக்காட்டி விளக்குதல்.

["நீ, உன் தம்பி, அநுமன் முதலியோர், வடிவத்தால் வானரராயினும், தேவர்களது புதல்வராயிருத்தலாலும் அறநெறியை ஐயந்திரிபற அறிந்திருத்தலாலும் மிருகங்களாகீர்; ஆதலால் மிருகச்செயல் உனக்கு அடாததே".]

மிருக உடம்புடையாயாயினும் மனிதஅறிவுடையாயாதலால்
நீ செய்த தவறு தவறே யெனல்.

475 "பொறியின் யாக்கைய தோ? புலன் நோக்கிய
அறிவின் மேலதன் றோ? அறத் தாறுதான்:
நெறியும் நீர்மையும் நேரி துணர்ந்த நீ
பெறுதி யோ? பிழை உற்றுழு பெற்றிதான்."

இ-ள். "அறநெறியானது, (மக்களுக்கும் மிருகங்களுக்கும் பொதுவான) ஐம்பொறிகளையுடைய உடம்பைச் சார்ந்ததோ? (அவ் வைம்பொறி வாயிலாக அடையும்) புலன்களை (ஏற்று ஆராய்ந்து பகுத்து) அறிகின்ற (மக்களுக்கே உரித்தான) அறிவைச் சார்ந்த தன்றோ? (மக்கள்போல அவ் அற) நெறியையும் (அறநெறிப்படி ஒழுகுவார் நற்பயனையும் ஒழுகாதார் தீப்பயனையும் அடையச்செய்தலாகிய அவ் அறநெறியினது) இயல்பையும் செவ்விதாகத் தெரிந்த நீ (மிருகங்களுக் கியல்பான, ஆண் பெண் முறைதவறிச் சேர்தல் போன்ற) பிழையை உற்று (அப்பிழையால் அம்மிருகங்கள் குற்றத்துக்குள்ளாகாமல்) உறும் தன்மையைப் பெறுதற்பாலையோ?"

பொறி புலன்கள் முறையே வடமொழியில் இந்திரியங்கள் விஷயங்கள் எனப்படும். மேல் - இடம். மேலது - இடத்தினது. அறத்து ஆறு - அறநெறி - தருமமார்க்கம் - நல்லொழுக்கம். மூன்றாவதடியில்வரும் நெறி அறநெறியைக்குறித்தது. நீர்மை—இயல்பு—தன்மை. நேர்மை—செவ்வை—நுண்மை. நேரிது (ஆக) செவ்வையாக; நுண்ணிதாக. பெறுதி—பெறுவாய். 'புலனுகிய', 'புலனுக்கிய', 'நெறியினேர்மையை நேர்நின் றுணர்ந்தநீ' என்பனவும் பாடங்கள்.

"நீ, வடிவினால் விலங்காகிய வானரம்போலிருப்பினும், பகுத்தறிவுடைமையால் மனிதர்போலுதலால், தருமமார்க்கத்தை யறிந்திருந்தே தவறுகள்செய்தது தகாது என்பதாம். தொல்காப்பியத்து மரபியலில் 'மக்கள் தாமே ஆறறிவுயிரே - பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே'

என்ற சூத்திரத்தின் உரையில் 'சிறப்பென்றதனால், குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையன வெனப்படுமிட் டனவுணர்வுடையன உளவா யின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராயடங்கு மென்பது' என்பது இங்குக் காணத்தக்கது."

முதலைபிடிக்க, மூலமே! என்று முறையிட்டு முத்திபெற்ற யானை (யைத் தெய்வமென்னுமல்) மிருகமெனலாமோ வெனல்.

176 "மாடு பற்றி இடங்கர் வலித்திடக்
கோடு பற்றிய கொற்றவற் கூயதோர்
பாடு பெற்ற உணர்வின் பயத்தினால்
வீடு பெற்ற விலங்கும் விலங்கதோ?"

இ - ள். "(தனது தேகத்தில் ஒரு) பக்கத்தை (க்கௌவி)ப் பிடித்து முதலையிழுத்ததனால் (பாஞ்சசன்னிய மென்னும்) சங்கை (இடக்கையினிடத்து)ப் பிடித்த திருமாலை (ஆதிமூலமே! என்று கூவி யழைத்து) ஓலமிட்ட ஒப்பற்ற பெருமைபெற்ற அறிவின் பல (ன் படைத்தமையி)னால் (தன்னைப் பிடித்த முதலைவாயினின்றும்) விடுதலை பெற்ற (கஜேந்திராழ்வா னென்னும் யானையாகிய) மிருகமும் மிருக (மென்று சொல்லப்படு)மோ?"

மாடு — பக்கம். இடங்கர் — முதலை. வலித்தல் — இழுத்தல். கோடு — சங்கு. கொற்றம் — வெற்றி. கொற்றவன் — வெற்றியுடைய வன். கூய — கூவிய — ஓலமிட்ட (கந்தபு. மாகாளர். ௬. தமிழ்ச்சொல் லகராதி). ஓர் — ஒப்பற்ற. பாடு — பெருமை. பயம் — பயன் — பலம் — பலன். வீடு — விடுதலை; முத்தி. விலங்கு — மிருகம். அது பகுதிப்பொருள்விகுதி. 'விலங்கரோ' என்பதும் பாடம்.

முதலைவாய்ப்பிடியினின்றும் பிறவிக்கட்டினின்றும் ஒருங்கே விடு தலைபெற்ற என்ற இருபொருள்பட 'வீடுபெற்ற' என இரட்டுற மொழிந்த நயம் நோக்கத்தக்கது.

கஜேந்திராழ்வான்போல நீ உருவத்தால் மிருகமானாலும், உணர் வால் மனுடனாதலால், மிருகச்செயல் (தம்பிமனைவியைச்சேர்தல்) செய் தது தவறென்பது குறிப்பு.

தீமை நன்மை தெரியாமை மிருக இயல் :
நீ அறியாத நீதி யாதுமில்லை யென்பதை
உன் பேச்சு உருபித்த தெனல்.

477 "நன்று தீதென் றியல்தெரி நன்னெறி
இன்றி வாழ்வதன் றோ விலங் கின்இயல்?
நின்ற நன்னெறி நீ அறி யாநெறி
ஒன்றும் இல்லைஉன் வாய்மை உணர்த்துமால்".

இ-ள். "மிருகசுபாவமென்பது, (இச்செயல்) நல்லது (இச்செயல்) தீயதென்று பகுத்தறிகின்ற அறிவில்லாமல் உயிர்வாழ்வதன்றோ? (அதற்கு மாறாக, உலகத்தில் வழங்கா) நின்ற நன்னெறிகளுள்ளே நீ அறியாதது ஒன்றும் இல்லாமையை (நீ இப்போது விவகாரமாகக்கூறிய) உன் வாய்ச்சொற்களே தெரிவித்துவிட்டன. (எல்லா நன்னெறிகளையுந் தெரிந்துவைத்தும் அவைகளுக்கு மாறாக நீ நடந்தது தவறேயென்பது குறிப்பு.")

இயல் — தன்மை — சுபாவம். விலங்கு — மிருகம். வாய்மை — வாக்கு — (திருவிளை. வெள்ளையானை, 2. தமிழ்ச்சொல்லகராதி) — வாய்மொழி. ஆல் ஈற்றசை. விலங்கின்னியல் என்பதில் னகர ஒற்று விரித்தல். 'விலங்கின்னிடை' என்பதும் பாடம். இதற்கு 'மிருகங்கட்கு (மனிதரோடு) வேறுபாடு' என்பது முந்திய உரை.

விதி விலக் கறியாத மனிதர் மிருகங்களே ;
விதிப்படி ஒழுகும் மிருகங்கள் தெய்வங்களே யெனல்.

478 "தக்க இன்ன, தகாதன இன்னவென்
றொக்க உன்னல ராயின், உயர்ந்துள
மக்க ளும்விலங் கே, மனு வின்நெறி
புக்க வேல், அவ் விலங்கும் புத்தேளிரே."

இ-ள். மனிதர்களும், இன்னவை தகுதியானவை, இன்னவை தகாதவை யென்று பகுத்தறியாராகில், மிருகங் (களுக் கொப்பானவர்)

களே. மிருகங்களும், சன்மார்க்கத்திற் பிரவேசித்தவைகளானால், தெய்வங் (களுக்கொப்பானவை) களே.

தக்க, புக்க — அன்சாரியை பெறாத தக்கன புக்கன; இறந்தகால வினையாலணையும்பெயர்கள். இன்ன — இவை. ஒக்க — பொருந்த. உன்னல் — நினைதல். விலங்கு — மிருகம். புத்தேள் — தெய்வம். 'உன்னலாகி' யும் பாடம்.

விலங்கும் மனிதரே என்பது இயல்பான முடிவு. அதுவே உயர்வுகுறிக்கற்குப் போதியதாயிருக்கவும், 'விலங்கும் மனிதரே' என்னாது 'விலங்கும் புத்தேளிரே' என நனி உயர்த்திக்கூறி நன்னெறிச் சிறப்பை நயம்பட வற்புறுத்திய கவிசாதுரியம் பாராட்டற்பாலது.

"மநு வடசொல்; இது இங்கே அவனாற் செய்யப்பட்ட தரும சாஸ்திரத்தைக் குறித்தலால், கருத்தாவாகுபெயர். மநுவின்னெறி னகரமெய் விரித்தல். ஏல் — எனில்; மரூஉ. புத்தேளிர் இர் பலர்பால்விகுதி; கேளிர், மகளிர் என்ற இடங்களிற் போல."

புண்ணியஞ்செய்து, புண்ணியபலனையடைந்ததுபோலப்
பாவஞ்செய்து, பாவபலனையடைந்தா யெனல்.

["நன்னெறியில் நின்று சிவபூசை செய்த புண்ணியபலனாக நாற்பெரும் பூதங்களின் வலிமையையும் ஒருசேர நண்ணினாய் தீநெறியிற் புகுந்து தம்பியைக் கொல்லமுயன்று அவன்மனைவியைக் கவர்ந்து இல்லறமாண்பைக் கெடுத்த பாவபலனாக என் அம்புக் கிரையானாய்" என்றான் இராமன்.]

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-உகூ.] பிரஜோத்பத்தி ௵ ஆனி௴ [பகுதி-அ.

Vol. XXIX. June-July-1931. No. 8.

## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

(உஉ0-ஆம் பக்கத் தொடர்ச்சி).



### வாலி தத்துவஞானம் பெற்றதனால் உற்ற நன்மைகளை உரைத்தல்.

["இராமமூர்த்தீ, நீ எனக்கருளிய ஞானதிருட்டியினால், நீ யாவனென்றும் உன் தன்மை இதுவென்றும் தெரிந்துகொண்டேன். அதனால் அரியவற்றுள் அரியதான முத்தியை எளியவற்றுள் எளியதாக எய்தினேன். காணப்படும் நீதி, காணப்படாத எப்பொருளின் இயற்கைக்குணமென்று உலகத்தார் அநுமானமாக அறிகிறார்களோ, அப்பொருளேயான உன்னை அந்த ஞானதிருட்டியால் யான் பிரத்தியட்சமாகக் காணலானேன். இந்தக் காட்சிக்கு ஏற்றமான காட்சி ஏதும் இல்லை. உன்னால் அநுக்கிரகிக்கப்பெற்றார் அடைவதும் முத்தியே. நிக்கிரகிக்கப்பட்டார் அடைவதும் முத்தியே. நிக்கிரகவாயிலாக எனக்கு முத்தி சித்திக்கச் சித்தம்வைத்தருளினாய்.

என் தம்பி, வெற்றரசைத் தான் அடைந்து, வீட்டரசை
யான், அடையவிட்டா னெனல்.

என்னைக்கொல்ல, உன்னைச்சேர்ந்த என் தம்பி, அநித்தியமான வெற்றரசைத் தான் அடைந்து, நித்தியமான வீட்டரசை யான் அடைய விட்டான். அவன் செய்த உதவியினும் சிறந்தஉதவி யில்லை"]

## என் தம்பி தவறியற்றினும் என்மேலேவிய காலபாணத்தை ஏவாதே எனல்.

484 "ஓவிய உருவ, நாயேன் உளதொன்று பெறுவ துன்பால்:
பூவியல் நறவம் மாந்திப் புந்திவே றுற்ற போது,
தீவினை இயற்று மேனும், எம்பிமேற் சீறி என்மேல்
ஏவிய பகழி என்னும் கூற்றினை ஏவல்" என்றான்.

இ - ள். "நாய்போலும் கடையேன் உன்பால் பெறும் வரம் ஒன்று உண்டு. (அது யாதெனில்,) என் தம்பி, (இயல்பாக நற்குணமுடையவன். ஆயினும், அவன்) கள்ளைக்குடித்துப் புத்தி (சுபாவம்) மாறி (மயங்கி) ய போது குற்றஞ்செய்வானானால், அவன்மேற் கோபித்து, என்மேலேவிய காலபாணத்தை ஏவாதிருப்பாயாக (என்பது)" என்றான் (வாலி, இராமனை நோக்கி).

ஓவியம் - சித்திரம். உருவம் - வடிவம். ஓவிய உருவ - சித்திர(த்தில் விளங்கும் சிறந்த வடிவம்போல அழகிய) வடிவமுடையானே. இயல் - பொருந்திய. நறவம் - மது - கள். மாந்தல் - குடித்தல். புந்தி - புத்தி. வேறுறல் - மாறுபடல். இயற்றும் - இயற்றுவான் - செய்வான். எம்பி - என் தம்பி. பகழி - அம்பு. காலன்போலத் தப்பாதுகொல்லும் பாணத்தை, உரையில், காலபாணமென்றது கையடைப் படலம் 'எண்ணிலா' என்ற பாட்டில் வரும் 'காலவேல்' போல்வது.

'உளது ஒன்று பெறுவது உன்பால்' என்பதை உன்பால் பெறுவது ஒன்று உளது என முழுதும் வரிசையாகப் பின்முன்னாக மாற்றுக. வசனநடைக்கு முற்றும் மாறாய், வார்த்தைகள் அனைத்தும் முறையாகப் பின்முன்னாக அமையப் பாடியுள்ள 'உளதொன்று பெறுவ துன்பால்' என்ற வாக்கியத்தின் சொற்கிடக்கைமுறை வியந்து நோக்குதற்குரியது. சிறந்த செய்யுள்நடை, அதன் எளிமையும் தெளிவும் காரணமாக, செய்யுள்நடையென்ற நினைவே எழாதவாறு நிகழ்தற்குச் செய்யுளகமாயுள்ள இவ் வாக்கியம் ஏற்றதோர் உதாரணமாயிருத்தல் காண்க.

சீறி என்பது, எம்பிமேற் சீறி, என்மேற்சீறி என இயைத்தற்குரித்தாகநிற்றல் கவனிக்கத்தக்கது. இப்படி நிற்பது, அலங்காரத்தில்

'நடுநிலைத்தீபகம்' என்றும், பொருளின்கோளில் 'தாப்பிசை' என்றும், சூத்திரநிலையில் 'சிங்கநோக்கு' என்றும் கூறப்படும்.

வாலி, தன்னைக் கொல்வித்த தம்பியை மன்னித்ததேயன்றி, வாளி துளைக்கும் மரணவேதனையினால் வருந்தும்போதும், மறதியுறாது, தம்பி நன்மையை நாடி வரம்வேண்டினானெனக், கன்னெஞ்சு படைத்தாரும் கனிந்துருகிக் கண்ணீர் சொரியும்படி வாலியின் பேரன்பும், பெருந்தகைமையும் விளங்கக் கூறியிருக்கும் வித்தகக் கவிநயம் மிகவும் பாராட்
. .

### இராவணனை, வாலாற்பற்றிவந்து, இராமனிடம் ஏற்பியாமைக்கு இரங்கல்.

[“யான், உனக்கு வேறு பெருதவி யாதெனினும் செய்யும் பெரும்பேறு பெற்றிலனெனினும், வஞ்சக ராவணனை வாலினாற் சுற்றிப் பற்றிக்கொணர்ந்து பாதகாணிக்கையாக உன் திருமுன்னர் வைத்துக் குரங்குசெய்யக்கூடிய சிறுதொண்டுசெய்யும் சிறுபேறும் பெற்றேனில்லை; செய்யாது கழிந்த செயலைப்பற்றிப் பேசலாற் பிரயோசனமில்லை. ஆதலின் இது நிற்க.

### அநும சுக்கிரீவர் ஆற்றல் சாற்றல்.

இனி எந்தக் காரியமேனும் செய்யவேண்டியதேற்பட்டால், அதனைச் செய்யத்தக்க அறிவும் ஆற்றலும் உடையன் அநுமன். சுக்கிரீவனும் அநுமனும் போன்ற துணைவர் வேறு யாருமிலர். இவர்களால் உனது தேவியைத் தேடி அடைந்து சிறப்புடன் வாழ்வாயாக” என்று கூறினான்.

### தம்பிக்கு நன்மதிகூறி இராமனுக்கு அவனும் சுற்றமும் அடைக்கலமெனல்.

பின்பு தம்பியை அருகில் அழைத்துத் தழுவி அணைத்து “உனக்கு உறுதியானதொன்றை உரைக்கின்றேன் உற்றுக்கேள்” என்ற போது, அண்ணனது அன்புமிகுதியை அறிந்து, அகம் மிக நெகிழ்ந்து, ஆற்றொணாத் துக்கம் மிக்கு, அழுது வருந்தும் தம்பியை “வருந்தாதே” என்று வருத்தம் மாற்றி “வேதவேதாந்தங்கள், இதுவே முடிவான மெய்ப்பொருளென்று, துணிந்து கூறும் பரம்பொருளை, கோதண்ட

ராமனாகத் தருமநெறியை நிலைபெறச்செய்ய, அவதரித்திருக்கிறதென் பதை அணுவளவும் ஐயமின்றி அறிவாயாக. என்னைப்போல நித்தமும் கோரகத் தீமையும் மறைவாக வஞ்சகமும் செய்தாரும், இவன் அம்பால் இறப்பரேல் ஈறும் காப்பு மில்லாத வீடு பெறுவரென்றால், உன்னைப் போலத் திருவடித்தொண்டுசெய்வார் பெறும்பேற்றைப் பேசவேண்டுமோ? நீ தேடிப்போய் அடையவேண்டிய இறைவன் தான் தேடிவந்து உன்னை அடையப்பெற்றாய்! ஊழே உதவிடில், யாதே அரியது! நீ முன் செய்த தவப்பயனாக, ஈசனே ராசனாக இவனுக்கு அடியனாகி இருமைப்பயனை யும் ஒருமிக்க அடைந்தாய். இவன் காலா விட்ட கட்டளைகளைத் தலை யாற் செய்து அபாயம் உற்றால், ஆருயிர்கொடுத்து உதவுவாயாக. நீ இராசனெனினும் இவனுக்கு அடிமையென்பதை என்றும் மறவாயாக’’ என்று நன்மதிகூறியபின், இராமனைநோக்கி “இவனும் இவன் சுற்றமும் உனக்கு அடைக்கலம்’’ என்று கும்பிட்டுக்கூறினான்.

## அங்கதனை அழைப்பித்தல்.

பின்பு தம்பியைநோக்கி “உன் செல்வச் சிறுவனையிட்டுவா’’ என, அவன் கொணர, அங்கதன் வந்தான்.]

## அங்கதன் வரவும் அவன் கண்ட காட்சியும்,

485 சுடர் உடை மதியம் என்னத் தோன்றினன். தோன்றி, யாண்டும்,
இடர் உடை உள்ளத் தோரை எண்ணினும் உணர்ந்திலாதான்,
மடல் உடை நறுமென் சேக்கை மலையன்றி, உதிர வாரிக்
கடலிடைக் கிடந்த காதற் றாதையைக் கண்ணிற் கண்டான்.

இ-ள். (வெண்ணிறமுடைய அங்கதன்,) ஒளியுடைய (வெண்) மதி (வந்தாற்)போல வந்தான். துன்பமுடைய மனத்தினரை (க்கண்டறி யாதவனாய்த், துன்புடையார் இப்படி யிருப்பரெனச் சொல்லக்கேட்ட போது, அவர்கள் நிலைமையை மனத்தினாற் பாவித்தறிய முயன்று, எண்ணி) எண்ணிப்பார்த்தாலும், தெரியமாட்டாத (பாலப்பருவமுடைய அ)வன், (சற்றுமுன்பு, சுக்கிரீவனோடு போர்புரியப் புறப்படுமுன் படுத்திருக்கப் பார்த்த) மலர்மெத்தைமலைமேலன்றி, இரத்தவெள்ளக் கடலுக்குள்ளே கிடந்த பிதாவைக் கண்டான். (அவன் பரிதாபநிலை பாவித்தற்பாலதன்றிப் பகரற்பாலதன்றென்றபடி.)

சுடர் உடை மதியம்—ஒளி உடைய சந்திரன். யாண்டும்—எப்பொழுதும்—எக்காலத்தும். இடர்—துன்பம். உடை—உடைய. எண்ணினும்—எண்ணினாலும்—நினைத்தாலும். உணர்கிலாதான்—உணரமாட்டாதவன். மடல்—பூவிதழ். நறுமை—நன்மணம். சேக்கை—படுக்கை. உதிரம்—இரத்தம். வாரி—வெள்ளம்—பெருக்கு. காதல்—அன்பு. காதல் தாதை—தான் அன்பு வைத்திருக்கும் தந்தை; தன்பால் அன்பு வைத்திருக்கும் தந்தை. மடநடை, கடிநடை எனபனவும் பாடங்கள்.

'இடருடை உள்ளத் தோரை எண்ணினும் தெரிகிலாதான்' என்பதன் பொருள் 'துன்பமுள்ள மனத்தையுடையவரை மனத்தினால் அறிந்து மிலாதவன்' என்பது முந்திய உரை.

தன்னொடு தொடர்பில்லாத பிறர்துன்பத்தை எண்ணிப்பார்க்க முயன்றாலும் அறியாத பாலப்பருவமகலாத பச்சைப்பிள்ளை தன் பிதாவே மரணவேதனையுறும் நிலையிலேயிருக்கப் பார்த்தானென, நயம்பட, நடந்ததை நடந்தவாறு கூறும் தன்மைநவிற்சியாக, மிக்க இரக்கம் பிறக்க உரைத்த கவித்துவம் மிகவும் பாராட்டத்தக்கது.

தன்மைநவிற்சி, புனைந்துரை என்ற ஒன்றற்கொன்று எதிரிடையான இருவகை அலங்காரங்களுள் முன்னதைக் கொள்ளுவதும் பின்னதைத் தள்ளுவதும் தற்கால விற்பனர் பற்பலர் செயலாயிருப்பது நியாயமன்றென்பது நினைவுக்கு வந்ததனால், நயம்படக்கூறும் தன்மைநவிற்சி யெனப்பட்டது. நயம்படக்கூறாத தன்மைநவிற்சி அலங்காரமாகாது. நாற்காலிக்கு நாலுகால், நாய்க்கு ஒரு வால் என்பவைபோன்றவை சுவையற்ற வெறுமையான தன்மைநவிற்சியாமன்றிச் சுவை பெற்ற அலங்காரத் தன்மைநவிற்சி ஆகாதென்பது கூறாமலே விளங்கும். உண்மைக் கவிகளாயுள்ளார் தன்மைநவிற்சியலங்காரமாக உரைப்பதை உணர்வோர், 'இதிற் கூறப்பட்ட தன்மைநவிற்சியைத் தெரிந்திருக்க வேண்டிய நாம் இதுகாறும் தெரியாதுபோனோமே, இதனை அறிய எவ்வளவு இன்பமாயிருக்கிறது' என எண்ணி, மனமுருகி மகிழுறுவர். அத்தகைய தன்மைநவிற்சியலங்காரம் 'இடருடை உள்ளத்தோரை எண்ணினும் தெரிகிலாதான்' என்றதன்கண்ணே இனிதமைந்திருக்கின்றது. பாலப்பருவத்தில் துன்பம் அறியாமல் வளர்க்கப்பட்ட புத்தபகவான்போலத் துன்பம் அறியாத சிறுபிள்ளைகள், துன்புற்றோர்

இப்படியிருப்பவெனச் சொல்லக்கேட்டபோது, அதனைத் தெரிந்து கொள்ளமாட்டாமல் திகைக்குந்தன்மையை அதி உசிதமான ஸமயத்தில் அங்கதன்மேலேற்றிக்கூறிய அருமையான கவிசாதுரியம் ஆச்சரியமும் ஆனந்தமும் ஒருங்குபயப்பதாயுள்ளது.

### வாலி மீது அங்கதன் வீழ்தல்.

[சந்திரன் தரையில் வீழ்ந்துகிடக்க, அதன்மேல் நட்சத்திரம் வீழ்ந்தது போல வாலிமீது அங்கதன் வீழ்ந்தான்.]

## அங்கதன் புலம்பல்.

### இயமன் உன்னை அஞ்சாம லணுகினனே! என்று புலம்பல்.

486 "எந்தையே! எந்தையே! இவ் எழுதிரை வளாகத் தியார்க்கும்
சிந்தையால் செய்கை யால்ஓர் தீவினை செய்தி லாதாய்!
நொந்தனை! அதுதான் நிற்க. நின்முகம் நோக்கிக் கூற்றம்
வந்ததே யன்றோ! அஞ்சா தாரதன் வலிமை தீர்ப்பார்!"

இ-ள். என் ஐயாவே! என் ஐயாவே? இந்தப் பூமியிலே யாருக்கும் எண்ணத்தினாலும் (சொல்லினாலும்) செயலினாலும் ஒரு தீங்கும் செய்யாதவனே! (அப்படித் தீங்குசெய்யாத நீ, தீங்கு செய்யப்பட்டாய்! என்ன ஆச்சரியமான அநியாயம்! இதுகாறும் எதிரிகள் செய்த தீங்குகளால்—அவை உன்னை ஊறுபடுத்தமாட்டாமையால்—வருந்தினையில்லை. அப்படிப்பட்ட நீ இப்போது ஊறுபட்டு) வருந்தினாய்! (என்ன பரிதாபமான ஆச்சரியம்!). (வருந்தும்பாலனல்லாத நீ) வருந்தினதிருக்கட்டும். (நீ வருந்தினால் என்னை? வலிபற்றுச் சாகக்கிடக்கும் புலியையும் ஆடு காண அஞ்சுமன்றோ, அதுபோல, இயமன், உன்னை நொந்த நிலையிலும் காண அஞ்சுவானே. அவன், உன்னைக் காண்பது கிடக்க, உன் பேர் கேட்டாலும் அஞ்சினவன் தானே. அந்த) இயமன் உன் முகத்தை அஞ்சாமல் அணிந்து நோக்கி (எதிர்ந்து, கிட்டவும்) வந்துவிட்டானே! (ஆ! முன் காலத்தில் உன் போல அவன் அஞ்சும் ஆற்றலுடையராய் வாழ்ந்த இரணியன், சூரபன்மன் முதலிய அநேகர் அந்திய காலத்தில் அவனுக் கிரையாயினாரன்றோ!) அவன் வலிமையை ஒழிக்க வல்லார் யார்? (ஒருவருமில்லை).

எந்தை - என் தந்தை. திரை - கடல். வளாகம் - இடம். எழு திரை வளாகம் - ஏழு கடல் சூழ்ந்த இடமாகிய பூமி. அது - கொடுந் தது. 'சிந்தையாற் செயலால்' என்றதனால் 'சொல்லால்' என்பது உப லக்கணமாக உரையில் வருவித்துக்கொள்ளப்பட்டது.

வாலி சுக்கிரீவனை நாட்டைவிட்டுத் துரத்தி அவன் சொத்துக்களை யும் மனைவியையுங் கவர்ந்த தீய செயல்களை அங்கதன் அறிந்திருப்பா னன்றோ: அறிந்திருந்தும், 'பார்க்கும்—சிந்தையாற் செய்கையாலோர் தீங்கொன்றும் செய்திலாதாய்' என்றதேதனாலென்றால், வாலியின்சார் பினர்மத்தியில் வாழ்ந்த அங்கதன், அவர்கள், தம்முள்ளே சுக்கிரீவனை துரத்தியன்றி அவன் மனைவி கவரப்பட்டமைபற்றிப் பேசுங்கால், அச் செயல்கள், பகைவர்சொத்துக்களையும் அவர் மனைவியரையும் பறித்துக் கொள்ளல் தருமமாதலால், நியாயமானவையெனக் கேட்டிருந்ததனா லென்க.

## வாலியின் வால்வலிகூறிப் புலம்பல்

487 "தறையடித் ததுபோல் தீராத் தகையஇத் திசைகள் தாங்கும்
கறையடிக் கழிவுசெய்த கண்டகன் நெஞ்சம், உன்றன்
நிறையடிக் கோல வாலின் நிலைமையை உன்னுந் தோறும்,
பறையடிக் கின்ற அந்தப் பயம்அறப் பறந்த தன்றே!"

இ - ள். "(ஆணி) தறையடிக்கப்பட்டது (இடம்விட்டுப் பெய ராதது)போல (எட்டுத் திசைகளிலும் பூமியைத் தாங்கிக்கொண்டு, நிற் கும் இடத்தினின்று) நீங்காத தன்மையுடையன(வாக) இந்த (ப் பூமி யின் எட்டு) த் திசைகளையும் தாங்குகின்ற யானைகளுக்குத் தோல்வியை உண்டாக்கிய இராவணனது நெஞ்சு, (அவனைச்சுற்றிக் கட்டித் துன் புறுத்திய) உனது வாலை நினைக்குந்தோறும் (படபடென்று) பறையடிக் கும் பயம்முழுதும் (இருந்தஇடந் தெரியாமல்) பறந்துபோய்விட்டதே!"

'இந்த ஏடு எழுதினது அந்த ஏடு எழுதாதது' என்பதில், 'எழுதி னது'ம் 'எழுதாதது'ம் போலத், 'தறையடித்தது,' பெயர்ச்சொல்லாக வந்தது. தீர்தல் - நீங்குதல் - நிலைபெயர்தல். தகை - தன்மை. கறை- உரல். கறை அடி - உரல்போலும் கால். கறையடி அன்மொழித் தொகையாய் உரல்போலும் காலையுடைய யானையை உணர்த்தியது.

கண்டகம் - முள். கண்டகன், முள்போலத் தேவர்களுக்கு உபத்திரவஞ் செய்த இராவணனைக் குறித்தது. நிறை அடி கோலம் வால் - (பலம்) நிறைந்த அடியையுடைய அழகிய வால். நிலைமை - தன்மை. நெஞ்சு பறையடித்தல் - நெஞ்சு பயத்தினால் அடித்தல். அற - முற்ற - முழுதும். கறையடிக்கிழிவு, நெஞ்சமுற்ற, பறையடிக்கின்றது என்பவையும் பாடங்கள்.

இராவணன் திக்குவிசயஞ்செய்தகாலத்தில், திசையானைகள் அவன் மார்பிற் பாய்ந்து கொம்பு முறிந்த பங்கமுற்றதை யுட்கொண்டு 'கறையடிக் கழிவு செய்த' என்றான்.

தன்னை யெதிர்த்துத் தாக்கிய எட்டுத் திசை யானைகள் கொம்பு முறிந்தனவேயன்றித் தான் ஊறுபடாத மகாபலசாலியும் திக்குவிசயஞ் செய்து திரிலோகங்களையும் செயித்துத் தன்னடிப்படுத்தியவனுமான இராவணன், வாலியினது பகைவரைத் தாக்கும் உறுப்புக்களுட் சிறந்த வாலை நினைத்தபோது அஞ்சி நெஞ்சு அடியடிப்பானானால் வாலியினது காசாரமாகிய மற்றைப் பெரிய உறுப்புக்களின் வலிமையின் பெருமையை என்னென்பது! என்பது குறிப்பு:

கயிலாயபதி காலினாலடக்கிய இராவணேசுரனை வாலி வாலினாலடக்கினானென, வாலி வாலின் வலிமை இந்தக்கவியில், இனிதெடுத்துக் கூறப்பட்டது. இதைத்தொடர்ந்து, அடுத்த கவியில், அவன் கால் வலிமையும் கைவலிமையும் கூறப்படுகின்றன.

### வாலியின் கால்வலியும் கைவலியும் கூறிப் புலம்பல்.

488 "குலவரை நேமிக் குன்றம் என்றுஉள உயர்ந்த கோட்டின்
தலைகளும், நின்பொற் றோளிற் றழும்பினிற் றவிர்ந்த வன்றே;
மலையுடன் அரவும் மத்து மதியமும் பலவும் தாங்கி
அலைகடல் கடைய வேண்டின், ஆர்இனிக் கடைவார்! ஐயா."

இ-ள். "ஐயா! (பூமியின் மத்தியப் பிரதேசங்களிலுள்ள மலைகளிலே உயர்ந்தனவாயுள்ள அஷ்ட) குலபர்வதங்கள் (பூமியின் சுற்றுப் பிரதேசத்தில் உள்ள) சக்கரவாளகிரி என்று (பேர் சொல்லப்பெற்று) வானம்போலுயர்ந்த மலைகளின் முடிகள் (நீ, தினந்தோறும் சிவபூஜை செய்ய, எட்டுத்திசைச் சமுத்திரங்களுக்கும், ஒரு மலையுச்சியினின்று மற்றொரு மலையுச்சிக்குத் தாவிக், குதித்துச் செல்லும்போது,) உன் அழ

கிய கால் (பட்டுண்டாம்) தழும்புகளை, இனி நீங்கினவையாமன்றோ (நீ இறந்ததனால்). (மந்தரம்) மந்தரமலையும் (கடைகயிறாக வாசுகிப்) பாம்பும் (அடை தூணாகச்) சந்திரனும் வேறு (உபகரணங்கள்) பலவுங் கொண்டு (அமுதம் கடைந்தெடுத்தற்கு வலிமைபடைத்தவன் நீ ஒருவனே யிருந்தாய்! நீ இறந்ததனால்), இனிமேல் அலைகடலைக் கடை(ந்து அமுதத்தை அடை)ய (அமரர் திரும்ப) விரும்பினால், யார் கடைவார்?"

நேமிக்குன்று—சக்கரவாளகிரி. என்று—என்று சொல்லப்பட்டு. கோடு—மலை. தலை—உச்சி. தலைகளும் என்பதில் உம்மை உயர்வுசிறப்பு. வான் உயர்—'வானைப்போலுயர்ந்த' (வானுபம[illegible]). மற்றும் பலவும் என இயைக்க. மற்றும் பலவும் என்றவை, "ஸ்ரீ கூர்மமாகிய அடைகல், ஔஷதிகள் முதலியனவை." தழும்பினிற்றவிர்ந்த, மலைகளும், மலைகோளும் என்பனவும் பாடங்கள். சிவபூசை செய்வோர், பூசை செய்யக்குறித்த இடத்திலுள்ளேதானே, சிவனைத் திசைமுடிவுகளில் வீற்றிருப்பதாகப் பாவனையால் தாபனஞ்செய்து பூசனை புரிவர். வாலியோ, அப்படியன்றித் தனது சிவபூசை முடித்தற்குத் தினந்தோறும் திசைமுடிவுகளுக்கே சென்று திரும்புவான். அப்படிச் சென்று திரும்பும்போதெல்லாம், வேகமாகத் தாவிக் குதித்துச்செல்லும் அவன் கால்பட்டுக் கருங்கல்மலைகள் வடுப்பட்டன வென, அவன் காலின் கடுமையும் கடினமும் ஒருங்கு விளக்கக், 'தலைவரை நேமிக் குன்றம் என்று வானுயர்ந்த கோட்டின்—தலைகளும் நின்பொற் றாளின் தழும்பினித் தவிர்ந்த வன்றே' என்றான்.

தேவரும் அசுரரும், சாதற் கஞ்சிச் சாவாமருந்தென்னும் தேவாமிருதத்தைப் பெற விரும்பித், திருப்பாற்கடலிலே ஆதிசேஷ சாயியாக அறிதுயிலமர்ந்த திருமறுமார்பனை அடைந்து, வணங்கி,

"ஒண்டளிர்ச்சரணஞ் சரணமென் றடைந்தேம். உலப்பினைக்கடக்குமாறெமக்குத்
தண்டுழாய் அலங்கற் கருணையங் கடலே, காட்'' டென, நாரணன் எழுந்து†

"மத்து மந்தரம், வாசுகி கடைகயி, றடைதூண்
மெத்து சந்திரன், சுராசுரர் வேறுவே றன்ன
கொத்தி ரண்டுபோல் வலிப்பவர், ஒடி கொடுத்துக்
கத்து வாரிதி மறுகுற, அமுதெழக் கடைவீர்"*

† காஞ்சிப்புராணம் மணிகண்டேச்சரப் படலம். * அகலிகைப்படலம்.

என்று பணித்தருள, அவர்கள் அவ்வாறு செய்யத் தொடங்க, அவன்,

> இருதிறத் தவருள் வான்சுவை அமிழ்தம் எறுழினாற் கடைந்தெடுத் தவரே,
> பருகிடத் தகுமால்; வினையோர் எய்தற் பாலதன் றென்பது கேட்டுப்,
> பொருதிறல் அசுரர், மகிழ்ந்தெழுந் தார்த்துப், பொறியரா இருபுடை பற்றித்
> தருவலி யமையால் ஈர்த்தனர்: அசலம், தன்பெயர் நாட்டிய தன்றே.†
>
> இயக்கலாற் றாமை இளைத்ததா னவரை, எதிருறுங் கடவுளர், நோக்கி,
> வியத்தக எழுந்து, "நீர் இனி விடுமின் விடுமின்" என் றெய்தி, வா சுகியை
> வயத்துடன் பற்றி ஈர்த்தனர். அவரும், வலிஇழந் தெய்த்தனர், நின்றார்.
> செயத்தகும் திறம்வே றினியென யாரும் சிந்தையிற் கவலைகூர் பொழுது †

தினந்தோறும் திசைகள் எல்லாத்திலுக்கும் சென்று சிவபூசை செய்து வரும் வாலி அவர்கள் நின்ற திக்குநோக்கி வர, அவர்கள், அவனை எதிர்கொண்டு சென்று, வரவேற்று, முகமன்மொழிந்து, அதுவரை நிகழ்ந்ததை உள்ளவாறுரைத்துக் "கருதரும் தெய்வம் இங் குன்னைத் தந்ததால், எமக்கு நீ துணைசெய்யத்தகும்"† எனப்,

> "பெருவலி படைத்த சுராசுரர் குழுமிப் பெறலருந் திறத்தினில் எளியேன்,
> ஒருவனே, வல்லேன், யாமெலாம் ஒருங்குற்று ததியைக் கடைதுமேல், தெய்வம்
> தருவது காண்டும்" எனநகைத் தியம்பித், "தானவர் கடவுள ரெல்லாம்
> வருகென" விளித்து, வாலி, மா சுணத்தின் வாற்புறம் பற்றிநின் றீர்த்தான்.†
>
> பருங்கொலைப் படத்தை அசுரரும் சுரரும் பற்றினர் தனித்தனி ஈர்த்தும்,
> ஒருங்குநின் றீர்த்தும் ஆற்றலா துடைந்து தன்புடை ஒதுங்குதல் காணா உக்
> கருங்கழல் வாலி, "விடுமின்நீர்" என்னாக் கட்செவி வாலமும் பணமும்
> இருங்கையிற் பற்றி, மறுகுற வாங்கி ஈர்த்தனன், கடைந்தனன் புணரி.†

என்றவாறு, அசுரர்கள் சுரர்களாகிய இருபெருங் குழுவினரும் ஒருங்கு முயன்றும் ஒருபாதியும் செய்யமுடியாத அமுதமதனமாகிய அரும் பெருங்காரியத்தைத் தானொருவனே தனியனாய்ச் செய்துமுடித்த வாலி இறந்தானாதலால், சடல்கடையவல்லார் எவரும் இலரே! யென்றிரங்குவான் "இக்கடல் கடைய வேண்டின், யார் இனிக் கடைவர் ஐயா!" என்றான்.

முன்போல, அமுதங் கடைந்தெடுத்தற்குப், பாற்கடலும், மந்தரம் வாசுகியாதிய உபகரணங்களும், யாதொரு குறைவின்றி, எல்லாமிருந்தும், வாலி ஒருவனில்லாத ஒரே ஒரு குறையினால், அந்த அமுத மதனம்

---

†காஞ்சிப்புராணம் மணிகண்டேச்சரப் படலம்.

நிரந்தரமாக அசாத்தியமாய்விட்டதென்பது மிகவும் தெளிவாக விளங்க, 'அலைகடல் கடைய வேண்டின், ஆர் இனிக் கடைவர்! ஐயா!' என்று மட்டுங் கூறாமல், 'மலையுடன் அரவும் மற்றும் மதியமும் பலவுந் தாங்கி, அலைகடல் கடைய வேண்டின், ஆர் இனிக் கடைவர்! ஐயா!' என்றானென்க.

வாலி ஒருவர் உதவியுமின்றித் தானொருவனே தனியனாய்க் கடல் கடைந்து அமுதமெடுத்த அரிய பெரிய கிரியை, அவன் வழிபடு கடவுளான மகாதேவன் சருவசங்கார காலத்தில் தன்னந்தனியனாய்ச் சகல புவனங்களையும் தகனம்புரிதல்போலு மெனலாம்.

**வாலியின் பரமசிவபத்தி, பரமன்னரைப் பணியாமை, பராக்கிரமம், பரமோதாரசீலம் இவைகளை எடுத்துக்கூறி இரங்கல்.**

489 "பஞ்சின்மெல் லடியாள் பாகன் பாதுக மலதி யாதும்
அஞ்சலித் தறியாச் செங்கை ஆணையாய்! அமரர் யாரும்,
எஞ்சலி ருந்தார், உன்னால். இன்னமு தீந்த நீபோ,
துஞ்சினை! வள்ளி யோர்கள் நின்னில்யார் சொல்லற் பாலார்!"

இ - ள். "உமாபதியின் பாதுகையை (க் கும்பிடுவதே) யன்றி (வேறு) எப்பொருளையும் கும்பிட்டறியாத (சிறப்புடைய) செங்கையில் ஆஞ்ஞாசக்கரமுடையவனே! உன்னால் (கொடுக்கப்பட்ட அமுதத்தை உண்டதனால்) தேவரெல்லாரும் செத்துவிடாமற் (சிரஞ்சீவியராய்ச்) சீவித்திருக்கின்றார்கள். (அவர்களைச்சாகாமற்காத்த) இனிய அமுதத்தை (அவர்களுக்கு) ஈந்த நீபோ, இறந்தாய்! (இத்தகைய) உன்னைப்போல உபகாரிகளாகச் சொல்லத்தக்கார் யாருளர்!" (எவருமிலரென்றபடி).

பஞ்சின் மெல் அடியாள் பாகன் - பஞ்சுபோல மென்மையான பாதங்களையுடையவளான பார்வதி (தேவிக்கு இருப்பிடமான இடப்) பாகத்தையுடைய பரமசிவன். பாதுகம், பாதுகை, பாதகுறடு என்பவை ஒருபொருட் பெயர்கள். ஆணை, ஆகுபெயராய் ஆஞ்ஞாசக்கரத்தை உணர்த்தியது; ஆணும் அதிகாரமுமாம் (தமிழ்ச்சொல்லகராதி). எஞ்சல் - இறத்தல். (ஷை). துஞ்சல் - இறத்தல். வள்ளியோர் - கொடையாளர் - வள்ளல்கள். மேலே எடுத்தாண்ட 'மத்து மந்தரம்' என்ற பாட்டில் 'வலிப்பவர்' என்பதன்பின் 'ஆக' தொக்கதுபோல, 'வள்ளியோர்' என்பதன்பின்னுந் தொக்கது. சொல் - புகழ். சொல்லல்,

கூறுதலன்றிப் புகழ்தலுமாம். அடியாள் பங்கன், பதயுகம், அலதி யாவும் என்பனவும் பாடம்.

வாலியினது இராச்சியாதிகார கவுரவம் விளக்கச், செங்கையாய் என்றுகூறினமையோடமையாமல், செங்கை யாணையாய் என்று கெம்பீரமாகக் கூறினான். இக்காலத்துமட்டுமன்றி, முன் எக்காலத்தும் அஞ்சலியாத செங்கை என்பான் அஞ்சலித்து அறியாச் செங்கை என்றான். வாலி, தன் வழிபடுகடவுளான மகாதேவனுக்கு எவ்வளவு மிக்க பணிவுடையனென்பது விளங்க, அந்தப் பரமனையன்று, அவன் அங்கம் அனைத்தையும் சுமந்து, கீழாய்த் தாழ்வாயிருக்கும் பாதத்தையுமன்று, அப் பாதத்துக்குங் கீழாய்த் தாழ்விலுந் தாழ்வான பாதுகையைப் பணிவதேயல்லாமல் (தேவர் அரசர் முதலிய வேறு உயர்ந்த பொருள்) எதனையும் பணியான் என்பானுய்ப் 'பாதுகமலதி யாதும் அஞ்சலித்தறியா' என்றான்.

ஆணையாய் என்பதுபற்றி மேலே கூறியதன்றி, வாலி, மறுமன்னரை வணங்காத மாட்சிமையோடு, அவரைத் தனது ஆணைக்கு அடங்கி வாழச்செய்த பராக்கிரம மாட்சிமையும் உடையானென்பது விளங்க, ஆணையாய் என்றானென்பதும் பொருந்தும்.

வாலி பத்தியும் பராக்கிரமும் செய்தலில், முறையே, அத்தியந்தமான தாழ்வுணர்ச்சியும் உயர்வுணர்ச்சியுமுடையானென, இரண்டு எதிரிடைப்பொருள்கள் ஒன்றையொன்று மேம்படுத்துமாறு இரண்டையும் இணைத்துக்கூறிய நயம் அளப்பருங் களிப்பை அளிப்பதாயுள்ளது.

தேவரை, வானவர் முதலிய பெயராற்கூறுது, சாவாதவர் என்று பொருள்படும் அமரர் என்று, இந்தச் சந்தர்ப்பத்துக் கியைந்தபெயராற் கூறியிருப்பது குறிக்கத்தக்கது.

புலப்படும் பொருள்களாய், இந்தச் சூரியப்பிரபஞ்சம்* என்னும் அண்டத்தை யுள்ளிட்ட அகிலகோடி அண்டங்களுக்கும் மூலமாய்ப் புலப்படாப்பொருளான பரம்பொருளொன்றே, என்றும் அழியாப் பொருளாயிருக்கத், தேவரை 'அமரர்' என்ற தென்னெனில், உயிரோடிருந்த வாலியை அவன் சிறிதுபொழுது கழியுமுன் செத்துவிடுவானென்பதுபற்றித் 'துஞ்சினை' என்றதுபோல, மனிதர்போலவேமாள்வாரெனினும், நெடிதுவாழ்வாரென்பதுபற்றி 'அமரர்' என உண்மையாக வன்றி உபசாரமாகக் கூறியதென்க.

* Solar Universe.

வாலி கொடுத்த அமுதத்தால் சாவாதவராக தேவர், ஒருவரன்று இருவர் மூவர் முதலிய சிறுதொகையினரன்று, மிக்க பெருந்தொகையினராய் முப்பத்து முக்கோடிய ராவர். அத்தனைபேருள், ஒருவரும் சாவவில்லை: எல்லாரும் சிரஞ்சீவியா யிருக்கின்றா ரென்பதுபற்றி 'அமரர் எஞ்சலர்' என்னாது 'அமரர் யாரும் எஞ்சலர்' என்றான்.

அமுதம் கொண்டவர் எண்ணிறந்தவருள் எவரும் இறவாராய் இன்புற்று வாழாநிற்க, அமுதம் கொடுத்த ஒருத்தன் துன்புற்றிறந்தான், இது அதிபரிதாபமானதென்பான், 'இன்னமிர்தீந்த உன்னால் அமரர் யாரும் எஞ்சலர் இருந்தார். நீயோ துஞ்சினை!' என்றான்.

எக்கொடையாளரும், தாம் கொடுக்கும் சாதாரணமான பொருளையும், தமக்கென ஒருபகுதியும்வைத்துக்கொள்ளாது முழுதுங் கொடார். வாலியோ, மிகவும் அபூர்வமும் அருமையுமானதாய்த் தன்னைக்கொண்டாரைச் சாவாதுபுரக்கும் தேவாமிருதத்தைத் தனக்கென ஒரு சிறிதும் வைத்துக்கொள்ளாமல் முழுதும் கொடுத்தவனும் இறந்தவனுதலால், அவன் 'தனக்கெனவாழாப் பிறர்க்குரியாளன்' ஆகவாழ்ந்து தன் உயரிய உதாரசீலத்தை உலகறியச்செய்தா னென்பான் 'அமரர் யாரும்—எஞ்சலர் இருந்தார் உன்னால் இன்னமிர்தீந்த நீயோ-துஞ்சினை' எனறுனெனனுமாம்..

இவ்வாறு, கொள்வோர் சிரஞ்சீவித்துவமும் கொடுப்போர் மரணமும் அடையும்படியாகக் கொடுக்குங் கொடையாளர் எக்காலத்தும் எத்தேசத்தும் இருந்ததில்லை யென்பது இனிது விளங்க, 'வள்ளியோர்கள் நின்னில் யார் சொல்லற் பாலார்' என்றான்.

அதிகமான் என்னும் வள்ளல் தனக்கு அரிது கிடைத்த அமிர்தத் தன்மையுடைய கருநெல்லிக்கனியைத் தான் உண்ணாது ஔவைக்குக் கொடுத்தானென்ற வரலாறு ஒன்று உளதாக, வள்ளியோர்கள் நின்னில் யார் சொல்லற் பாலார் என்றது பொருந்துமோவென்னில், பொருந்தும்; அது இராமாயணகாலத்துக்குப் பிற்பட்டதாதலாலென்க. விவகாரத்துக்காக, அது முற்பட்டதாக வைத்துக்கொண்டாலும், அதிகமான்கொடை, வாலி கொடைக்குப் பிற்பட்டதேயாம்; எதனாலெனில், கூறுதும்:—

அதிகமான் அடைந்த கருநெல்லிக்கனி, ஒருவருக்கே சாவைத் தடுக்கப் போதியதாய், அவன் தானுண்டால், ஔவைக்குக் கொடுக்க முடியாததாயிருந்தது. அப்படியன்றி, வாலி பெற்ற அமுதம், மிகப்

பெருந் தொகையினரான விண்ணவரனைவரும் விரும்புமளவு புசித்தபின் மிகவு மிகுதியாகமிஞ்சும் பேரளவினதாய்ப் பின்னர் இந்திரன் ஆளுகையி லுள்ளதாயிருந்தது. ஆயினும், வாலி, அப்படி மிஞ்சுவதாயிருந்த அமுதத்தில் ஒரு சிறிதும் தனக்கெனவைத்துக்கொள்ளாமல் முழுதுங் கொடுத்துவிட்டதனால், அவன்கொடை அதிகமான்கொடையினும் அதிகமானதென்பது தெளிவு.

வாலி இறக்குந் தருணத்தி லிருத்தல்கண்டு, அவன்மகன் வருந் திப் புலம்புதலாய், 'எந்தையே' என்பது முதலாகப் 'பஞ்சின்மெல் லடி யாள்' என்பது இறுதியாகவுள்ள இந்த நனியினிய நலமந்தமில்லாத நான்குபாட்டுக்களும், சுக்கிலபக்கத்தில் ஏற்று நாற்றிதிச் சந்திரன்கள் போல, எல்லாம் இனியனவாய்ச் சோபானக் கிரமமாக ஒன்றுக்கொன் றுயர்ந்த இன்பம் பயப்பனவாய்ப், படிக்குந்தோறும் படிக்குந்தோறும் புதுப்புதுப் பொருள்கள் புலப்படுப்பனவாய் எத்தனைமுறை படித்தா லும் இன்சுவை வளர்தலோடு தெவிட்டாமையுடையனவாய்ச் சிறந்த இன்கவிகளிற் சிறந்தவற்றிற் சிறந்தவற்றைச் சேர்ந்தனவாயிருத்தல், பலமுறை படித்துப்பார்த் தறிதற்பாலது.

### வாலி அங்கதனை "வருந்தவேண்டியதில்லை" யென்று மார்போடணைத்தல்.

[இவ்வாறாகவும், இன்னும் பலவாறாகவும், வாலியின் சிறந்த குணங் களை அங்கதன் எடுத்துக்கூறி யிரங்கி வருந்த, வாலி, அவனை "வருந்த வேண்டியதில்லை" யென்று தேறுதல்கூறி, மார்போடணைத்து "உயிர் களுக்குப் பிறப்பும் இறப்பும் தொன்றுதொட்டுள்ளவை. பிறப்புண்டா யின் இறப்புண்டாம். யான் என்றேனும் எப்படியேனும் இறக்கவேண் டியவன்தானே. எனது நல்வினைப்பயனாக இன்று எனக்கு இந்த நன் முடிவு கிடைத்தது. சருவசாட்சியான இறைவனே, என் தவத்துக்குத் தானே நேராகப் பலனளிப்பானாய், இராமனாகவந்து என் உடற்பாரத்தை யொழித்து முத்தியளித்தருளினான்" என்று பின்னும் கூறுகின்றான்.]

### அங்கதனுக்கு வாலி அறிவுறுத்தல்.

190 "பாலமை தவிர் நீ, என்சொல் பற்றுதி யாயில், நன்னின்
மேலொரு பொருளும் இல்லா மெய்ப்பொருள், வில்லுந் தாங்கிக்,
கால்தரை தோய நின்று கண்ணுக்கும் எளியன் ஆனான்!
மால்தரும் பிறவி நோய்க்கு மருந்தென வணங்கு மைந்த."

இ - ள். "மகனே, சிறுபிள்ளைத்தனத்தை விட்டுவிடு. என் சொல்லை (உறுதியாகப்) பின்பற்றுவாயானால், (கேள்.) தனக்கு மேலாக ஒருபொருளுமில்லாத (ஒரே) உண்மைப்பொருள் (ஆன பரம்பொருள்) வில்லை ஏந்திப் பாதங்கள் பூமியிலே படிய நின்று கண்ணுக்கும் (புலப் படும்படி) எளியனானான். (இந்தக் காட்சியைக் காணுதற்கு நாம் செய்த புண்ணியம் இருந்தவாறு என்னே!) மயக்கத்தை உண்டாக்குகின்ற பிறவி நோய்க்கு மருந்தென்று (இந்த ராமமூர்த்தியை) வணங்குவாயாக" (என்றான் வாலி).

பாலமை - பாலர் தன்மை - பால்யகுணம். பிள்ளைமையென வழங்குதலும் உண்டு. தவிர் - நீங்கு. இந்தப் பொருளில் தவிர் ஏவல். பாலமை தவிர் நீ என்பதற்கு "இளமைப்பருவத்தின் தன்மையைக் கடந்த நீ" என்றும் பொருள். இந்தப்பொருளில் 'தவிர் நீ' வினைத் தொகை. பற்றுதி - பற்றுவாய். மெய்ப்பொருள் - பரம்பொருள். கடவுளையுணர்த்தும் மெய்ப்பொருள், சொல்லால் அஃறிணையாய்ப், பொருளால் உயர்திணையாய் 'ஆனான்' என்னும் உயர்திணைமுடிவுகொண்டது. மால் - மயக்கம்; வேட்கை - அவா - ஆசை. மால்தரும் பிறவி— அவாவினால் உண்டாகும் பிறப்புக்களெனினுமாம். 'அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றும், தவாஅப் பிறப்பீனும் வித்து' என்றார் பிறரும்? தொடைநோக்கிக் 'கால்தரை' 'மால்தரும்' என்பவை 'காறரை' 'மாறரும்' எனச் சந்திசேர்க்கப்படவில்லையென்பது காண்க? பற்றுதி யென்னினைய, கட்புலக்குற்றதம்மா என்பனவும் பாடங்கள்.

'வில்லும்தாங்கி' என்பதில் உள்ள உம்மை, அரூபப்பொருள் உரூபப்பொருளானமையோடு வில்லையும் ஏந்தியதென்பதை உணர்த்தியது. 'கண்ணுக்கும்' என்பதில் உள்ள உம்மை, கருதரிய பொருள் காணுதற்கும் எளியதான தென்பதை யுணர்த்தியது.

அங்கதனுக்குச் சனகபிதாவான வாலி, இந்தச் சந்தர்ப்பத்தில் ஞானபிதாவாய்த், தான் அடைந்த ஞானச்செல்வத்தை அளிப்பானாய் 'யான் சொல்லப்போவது முக்கியமானது. அதனை அவதானித்துக் கேட்டற்கு விளையாட்டில் நோக்காய்க் கவலையில்லாமலிருக்கும் சிறுபிள்ளைத்தனத்தை விட்டுவிடவேண்டும்' என்பான் 'பாலமைதவிர் நீ' என்றான். கடவுளாகிய பொருளுக்கு மேலானபொருளில்லை;

மற்றெல்லாப்பொருள்களும் தோற்றப்பொருள்களன்றி உண்மைப் பொருள்களல்ல; கடவுட்பொருளொன்றே உண்மைப்பொருள் என்பான் 'தன்னின் மேலொருபொருளுமில்லா மெய்ப்பொருள்' என்றான். தன் அருள் சாராதார் எத்துணைப் பேறிவாளரெனினும் அவர்களறிவுக் கெட்டாத அருமையுடைய பரம்பொருள் சாதாரணமனிதர்கண்ணுக்கும் புலனும்படி எளிமையுடையதாய்க் கையில் வில்லேந்திக் கால் பூமி தோய மனிதவடிவமானது ஆச்சரியம்! என்பான் 'வில்லும் தாங்கிக் கால்தரை தோயநின்று கண்ணுக்கும் எளிய றானுவ்!' என்றான். 'வில்தாங்கி' எனவே, வில்லேந்தும் கை பெறப்பட்டுக், கைபெறப்படவே, காசாதி அவயவங்களுடைய வடிவம் பெறப்படுமாயினும் அவ்வடிவம் 'கால்நிலம் தோயாக் கடவுள்' வடிவமாகவேனும் கால் நிலம் தோயும் மனித வடிவமாகவேனு மிருக்கலாமென்ற ஐயம் நீங்கவும் ஒருவருங்காணுத அருபப்பொருள் உருபப்பொருளாக மாறுங்கால் சிலரே காணும் தேவ ருபமாகும் சௌலப்பியத்தைக் கடந்து அதனினும் அதிக சௌலப்பிய மாய் எல்லாரும் காணும் மனிதருபமாயினதென்பது விளங்கவும் 'கால் தரை தோய நின்று' என்றான். அப்படி நின்ற இராமமூர்த்தியை, வேறெவ்வாற்றானும் தீர்க்க முடியாத பிறவிநோயைத் தீர்க்கும் மருந் தென்று மனத்துட்கொண்டு வணங்குவாயாக என்பான் 'மால்தரும் பிறவி நோய்க்கு மருந்தென வணங்குமைந்த' என்றான்.

### அங்கதனை இராமனுக்கு அடைக்கலமாக ஒப்பித்து வாலி முத்தியடைதல்.

இராமனை வணங்கும்படி அங்கதனுக்குக் கூறிய வாலி, இராமனை நோக்கி "இவன் இராக்கதராகிய பஞ்சுக்கு அக்கினியானவன்; உத்தம குணமும் ஒழுக்கமும் உடையவன். உன் அடைக்கலம்" என அங்கதன் வணங்கத் தன் உடைவாளை நீட்டி, "நீ இதைக் கைக்கொள்வாயாக" என்று இராமன் கொடுக்கக் கண்டு, இனி இத் தேகத்தைக்காத்திருக்க வேண்டியதில்லை யென்றெண்ணி, உருவிப்போகவிடாது தடுத்துப் பிடித்திருந்த பாணத்தையும் தேகத்தையும் கைவிட்டுச், சீவன்முத்தி நிலை நீங்கி விதேகமுத்தனானான்.

வாலிவதைப்படலம் முற்றிற்று.

[தொடரும்.]

வை. மு. சுப்பிரமணியமுதலியார்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

(உஎஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி).

## தாரை புலம்புறு படலம்.

*இறந்த வாலியைக் கண்டு அவன்மனைவி தாரை புலம்புதலைக் கூறுவது.*

### இறந்த வாலிமீது அவன்மனைவி தாரை அழுதுவிழுதல்.

*[இராமன், சுக்கிரீவன்கையைப்பற்றி, அங்கதனைக் கூட்டிக் கொண்டு, வாலியிறந்த இடத்தினின் றகன்றுபோனான். வாலியின் மரணத்தைக் கேட்டு, அவன்மனைவி தாரை வந்து அவன்மேல் அலறி விழுந்து புரண்டெழுந்து புலம்பலுற்றாள்.]*

## தாரை புலம்பல்.

### இன்பமலைமேல் வாழ்ந்தேன்! துன்பக்கடலுள் வீழ்ந்தேன்! எனல்.

491 *"வரைசேர் தோளிடை நாளும் வைகுவேன்,*
*கரைசே ரா இடர் வேலை கண்டிலேன்;*
*உரைசேர் ஆருயி ரே! என் உள்ளமே!*
*அரைசே! யான் இது காண அஞ்சினேன்."*

இ. ள். *"(என் உயிருக்கு) உயிரானவனே! (என் உள்ளத்துக்கு) உள்ளமானவனே! (அடிமையான எனக்கு) ஆண்டவனானவனே! (யான் உன்னைமணந்த அந்நாள்தொட்டு இந்நாள்மட்டும்) எப்பொழுதும் உனது மலைபோன்ற தோள்மேலே (இனிதே) தங்கியிருந்தேன். (இது வரை) கரையில்லாத துன்பக்கடலைக் காணாதேன் (ஆன) யான், (அந்தக் கடலுள் ஆழச்செய்யும்) இந்தக் காட்சியைக் காணப் பயப்படுகின்றேன்!"*

*வரை-மலை. நாளும்-எந்நாளும்-எப்பொழுதும். வைகுதல்-தங்குதல். இடர்-துன்பம். வேலை-கடல். உரை-புகழ். ஆருயிர்-அருமையான உயிர். உள்ளம்-மனம். அரசு-அரசன்; எதுகை நோக்கி 'அரைசு' எனப் போலியாகநின்றது. இதுபோலக் கையடைப் படலத்தில் 'உரைசெய்யும்' என்ற பாட்டில் 'அரைசு' என வந்தது*

காண்க. எதுகையில் நிற்றல்பற்றிச் 'சேர்' ஒத்த என்றும், 'சேரா இல்லாத என்றும் பொருள்படுகின்றன. 'இது', (—'இந்தக் காட்சி'— உன்னை இந்நிலைமையிற் காணுதல்.) தாரை கரையற்ற துன்பக்கடலுள் அழுந்துதற்குக் காரணமான வாலிமரணத்தைக் குறிப்பாலுணர்த்தியது. காண்கிலேன், காண்கலேன் என்பனவும் பாடங்கள்.

தாரை வாலியினது தோள்மலைமேல் வாழ்ந்தேனென்றதனால், அவன் அவளை அம்மலைமேல் ஆடும் மயில்போலப் பாராட்டிவந்தானென்பது போதரும்.

வாலி இறக்குமுன், தாரை சிலசமயங்களில் அடைந்த துன்பங்கள் முடிவுடையனவாய் (எனவே, மறக்கக்கூடியனவாய்)க் கரையேறக்கூடிய கடல்போன்றிருந்தனவென்பதும், அவன் இறந்த துன்பம் முடிவில்லாததாய் (எனவே, என்றும் மறக்கமுடியாததாய்)க் கரையில்லாத கடல் (ஒன்று உளதாயின், அது) போன்றிருந்ததென்பதும் புலப்பட, இதன்முன் கரைசேர் இடர்வேலை கண்டேனன்றிக் 'கரைசேரா இடர்வேலை கண்டிலேன்' என்றாள்.

துன்பத்தைக் கரையேற முடியாத கடலென்பதனினும் (இல்பொருளுவமையாகக்) கரையில்லாத கடலென்பது துன்பத்தின் கடுமையைச் சிறப்பாகக் கூறுவதாயிருக்கும் நயம் கூர்ந்து நோக்குதற் குரியது.

வாலிதோளாகிய இன்பமலைமீது மகிழ்ந்து வாழ்ந்த தாரையாகிய மயில் அவன் இறத்தலாகிய துன்பக்கடலுள் வீழ்ந்தது அதி பரிதாபமானதென்னுங் கருத்துக்கிடமாய் முதலிரண்டடிகள் அமைந்திருக்கும் நயம் கண்டுகளிக்கத்தக்கது.

'நீ இறந்தது' என்ற எண்ணத்தை வாயினாற் கூறமாட்டாளாய், 'இது' என்றாள். இவ்வாறு குறிப்பாகக் கூறியது, தசரதன் கைகேயியைநோக்கி 'இராமன் காட்டுக்குப் போவதாகிய வரத்தை மற' என்று கூறக்கருதி, இராமன் காட்டுக்குப்போவது என்பதை வாய்விட்டுரைக்க மனமொருப்படாதாய் 'மற்றையதொன்றும் மற' என்று கூறியதை நினைவுக்கு வரச்செய்கின்றது.

நீ இறந்தபின் யான் இருக்கின்றேன் :
சீவன்போனபின் தேகம் சீவித்திருக்குமோ? எனல்.

492 "துயரா லேதொலை யாத என்னையும்
பயிரா யோபகை யாத பண்பினோய்,
செயிர்தீ ராய்,விதி யான தெய்வமே!
உயிர்போ னால்,உட லாரும் உய்வரோ!"

இ. ள். "(எக்காலத்தும் யான்செய்த குற்றங்களைப் பொறுப்பதன்றி, அக்குற்றங்களுக்காக, என்னை வெறுத்து) விரோதியாத (மேன்மைக்) குணமுடையானே! (நீ இறந்த) துன்பத்தினாலே (இறந்து) தொலைந்தொழிந்துபோகாத (தனால் உன்வெறுப்புக்குரியளாய்க் கடைப்பட்ட) என்னையும் அருவாதிருப்பாயோ! விதியே! (இந்த நல்லோனை அகாலமரணமுறச்செய்த குற்றமுடையை நீ, ஒருகாலும் அந்தக்) குற்றம் நீங்கமாட்டாய்! (இது நிற்க. என் உயிர்—ஆன இவன்—இறந்த பின், யான் இறவாதிருக்கின்றேன். இது ஆச்சரியம்.) உயிர்போனால், உடம்பு வாழ்ந்திருக்குமோ? (உரைப்பாயாக, அனைத்துக்கும் காரணமாயுள்ள விதியே, நீ அறியாத தொன்றுமில்லையாதலால்.)"

துயர்—துன்பம். பயிர்த்தல்—அருவருத்தல் பயிர்தல்—அழைத்தல். உம்மை இழிவுசிறப்பு. பயிராய்—அருவராய்; அழையாய். செயிர்—குற்றம்; கோபம்; துன்பம். தீர்தல்—நீங்கல். தீர்த்தல்—நீக்கல். செயிர்தீராய்—(1) குற்றம் நீங்கமாட்டாய், (2) கோபம் நீங்குவாயாக; (3) துன்பத்தை நீக்குவாயாக (1) எதிர்மறைவினைமுற்று. (2) உடன்பாட்டுத் தன்வினை ஏவல்; (3) உடன்பாட்டுப் பிறவினை ஏவல். உய்தல்—சீவித்திருத்தல். 'அயராயே பகையோடு மண்பிறோய்', 'செயிர் தீராவிதி' என்பனவும் பாடங்கள்.

தன் கணவன் இறந்தபின் பயனற்றதாகிய உடலை வெறுத்து இழித்துக்கூறுவாள், 'உடலார்' எனப் பரிகாசமரியாதைப்பன்மையாக உயர்த்துக்கூறினாள்.

பயிராயோ என்பதற்கு அருவராயோ என்ற பொருள் மேலே கூறப்பட்டது. அதற்கு, அழையாயோ என்ற பொருள்கொண்டு 'நீ இறந்த துன்பத்தினால் செத்துத் தொலையாத குற்றமுடையேனாயினும்,

இதன்முன் மன்னித்ததுபோல் இப்போதும் மன்னித்து, இறந்த நீ யிருக்குமிடத்துக்கு என்னை வரும்படி அழையாயோ என்பாள் 'துயராலேதொலையாத என்னையும் பயிராயோ' என்றாளென்னலுமாம்.

செயிர்தீராய் என்பதை விதியைநோக்கிக் கூறியதாகக்கொண்டு, அதற்குக் குற்றம் நீங்கமாட்டாய் என்று பொருள் கூறப்பட்டது. அதை வாலியைநோக்கிக் கூறியதாகக்கொண்டு, 'நீ இறந்த துயராலே தொலையாதமைபற்றி என்மீது நீ கொண்ட கோபம் நீங்குவாயாக' என்றாளென்றும், 'என்னை அழையாது வாளா இருக்கின்ற நீ என்னை எப்போதும் போலத் 'தாரையே' என அழைத்து என் துன்பத்தை நீக்குவாயாக' என்றாளென்றும் பொருள்கூறலும் பொருத்தமாயிருத்தல் காண்க. தனக்கு விதியும் தெய்வமும் தன் கணவனே யென்பது பற்றி, அவனை 'விதியான தெய்வமே' என விளித்தாளென்றலும் ஒன்று.

உன்னைக் கொன்ற நமன் நன்றிகொன்றவ னெனல்.

493. "நறிதாம் நல்லமிழ் துண்ண நல்கலின்
பிறியா இன்னுயிர் பெற்ற பெற்றிதான்
அறியா ரோநம னார்! அ தன்றெனில்,
சிறியா ரோ!உப காரம் சிந்தியார்!"

இ-ள். "(நீ) அமிழ்தத்தை உண்ணும்படி அளித்ததனால் (தம் உடம்பினின்று) பிரியாத உயிரைப் பெற்றதன்மையை நமனார் அறியாதவர்போலும். அறியாதவரன்றெனில், (நீ செய்த) உபகாரத்தை நினைத்துப்பாராதவர் (ஆவர். அவர் அப்படி நன்றிமறக்கும்) அற்பரா? (ஆம்; அற்பரே: அதனால்தான் உன் உயிரைக் கவர்ந்தார்.)"

நறிது-நறுமையுடையது. நறுமை-நன்மணம். நல்கல்-கொடுத்தல். பிறியாத என்பது ஈறுகுறைந்த பெயரெச்சமாய்ப் பிறியா என நின்றது. பிறிதல், பிரிதல் இரண்டும் நீங்குதலென்னும் பொருளுடையன. பிரிதலெனவருதல் பெருவழக்கு. பெற்றி-தன்மை. சிறியர்-அற்பர். "நமனார் என்றவிடத்துப் பலர்பால் செறல் [—கோபம்] பற்றிவந்தது"

அமுது உண்ணநல்கலின் பிறியா உயிர்பெற்ற பெற்றி(யை) நமனார் அறியாரோ! அன்றெனில், உபகாரம் சிந்தியார் (ஆன) சிறியாரோ! என இயைக்க

இதன்முன் என்றும் இவ்வளவுநேரம்
சிவபூசை செய்யாதிராயே எனல்.

[இருந்த இடத்திலேதானேயிருந்து ஒருகாலமே பூசைபுரியும் ஏனைய பூசகர்போலாது, நீ எண்டிசையிறுதிகளினுஞ் சென்று ஒருகால மன்றித் திரிகாலமும் தினந்தவறாது சிவபூசைசெய்வாயே! இதன்முன் இவ்வளவுநேரம் பூசைக்குப் புறப்படாது தாழ்த்திருக்கமாட்டுவாயோ!

ஒருவார்த்தையும் உரைக்கின்றாயில்லையே எனல்.

என்றும் மென்மையான மலரணைமேல்வைகும் நீ, இன்று வன்மையான தரைமேற் கிடப்பதுகண்டு சகிக்கமாட்டாமல் நான் வருந்துவது கண்டும், நீ 'வருந்தாதே' யென்று ஒருவார்த்தைகூட உரைக்கின்றா யில்லையே! நான் செய்த குற்றந்தான் யாதோ?]

நான் மண்ணில் வருந்த, நீ விண்ணில் அடைந்தாய்:
நீ என்னை உன்னுயிரென்றது பொய்தானே எனல்.

494 "நையா நின்றனன்! நான்இங் கிங்ஙன் ;
மெய்வா னோர்திரு நாடு மேவினாய்!
ஐயா, நீஎன தாவி யென்றதும்
பொய்யோ? பொய்உரை யாத புண்ணியா!"

இ - ள். "பொய்புகலாத புண்ணியனே, நான் மண்ணிலிருந்து துன்பமுறுவேன் (ஆக, நீ, இன்பமுறுவாயாக) விண்ணடைந்தாய்! (நீ, என்னை நோக்கி) 'நீ என்னுயிர்' என்றது பொய்யோ? (பொய்யன் றெனில், உன்னுயிரென்ற நான் துன்புற, நீ இன்புறுவாயோ?)"

நைதல் - வருந்துதல். இங்ஙன் - இங்கே - இந்தப்பூமியிலே; இவ் வாறு என்றும் பொருள்கொள்ளலாம். மெய்யாக என்பது மெய் என்று சுருக்கிக்கூறப்பட்டது. ஐயன் - தலைவன்: ஐயா—(எனக்குத்) தலைவனே—(என்) நாயகனே.

நாம் ஒருவர்நெஞ்சுள் ஒருவர் இருப்பதாக
வீணெண்ணங்கொண்டிருந்தேமெனல்.

495 "செருவார் தோளநின் சிந்தை உளேனெனின்,
மருவார் வெஞ்சரம் எனையும் வௌவுமால்;

ஒருவே னுள்உளை யாகில், உய்தியால்:
இருவே முள்இரு வேம் இருந்திலேம்."

இ - ள். "(நாம் இருவரும், ஒருவரையொருவர் கண்ட அன்றே, உன் நெஞ்சுள் நானும் என் நெஞ்சுள் நீயும் மாறிப்புகுந்து வாழ்வேமாயி னேம். இந்த நிகழ்ச்சியின்படி) நான் உன் நெஞ்சுள் உள்ளேனென்றால், (உன்னை உருவிய) கொடிய அம்பு என்னையும் (உருவி உயிர்) கவர்ந்திருக் கும். (அப்படி நான் உருவப்படவில்லை) நீ என் நெஞ்சுள் உள்ளா யானால் (நான் உருவப்படாதிருப்பதனால், அந்த அம்பால் நீ உருவப்படா மல் தப்பிப்) பிழைத்திருப்பாய். (நான் உருவப்பட் டிறக்கவுமில்லை. நீ தப்பிப் பிழைக்கவுமில்லை. ஆதலால், நாம், காதற்பாவசத்தினால், ஒருவருள்ளே ஒருவர் இருப்பதாக, மனோராச்சியஞ் செய்தோமேயன்றி, உண்மையில்) இருவருள்ளத்தும் இருவரும் இருந்தேமில்லை."

செரு - போர். ஆர்தல் - தங்குதல்; பொருந்துதல்; நிறைதல். மருவார் - பகைவர்; இராமனைக்குறித்தது. முன், தாரை தன் கண வன் வாலியின் உயிர்கவர்ந்த நமனை வெறுப்பால் இகழ்ச்சிப்பண்மையாக 'நமனார்' என்றதுபோல, இப்போது வாலியைக்கொன்ற பகைவனை மரு வார் என்றாள். சரம் - அம்பு. வெளவுதல் - கவர்தல். உருவி உயிர் கவர்தலென்பது, சுருங்கச்சொல்லும் நயம்தோன்ற, வெளவலெனப் பட்டது. ஒருவேன் - ஒருத்தி (யாகிய என்னுடைய). உள் - மனம். உளை - உள்ளாய்: முன்னிலைக் குறிப்புவினைமுற்று. உய்தல் -(அம்புக் குத் தப்பிப்) பிழைத்திருத்தல். 'உள்' (-மனம்) என்பது ஏழாம்வேற் றுமைத் தொகையாய் மனத்தினுள்ளே என்று பொருள்படநின்றது. இருவேம் - இருவராகிய நாம். இருவேம் உள் - நம்மிருவருடைய நெஞ்சினுள்ளும். இருவேம் - நாமிருவரும்.

இப்பாட்டு இராமனும் சீதையும் 'இருவரும் மாறிப்புக் கிதய மெய் தினார்' என்றதை நினைவுறுத்துகின்றது.

உன்னை உபசரித்து வானவர் வரவேற்றிருப்பாரே யெனல்.

["நீ விண்ணுலகம் நண்ணியபோது எண்ணிறந்த விண்ணவரெல்லா ரும் எதிர்கொண்டுவந்து, பூமாரிபொழிந்து, மகிழ்வோடு வரவேற்று, "நீ தந்த அமிழ்தையுண்டு சாவினின்று தப்பினோம்" என்று நன்றிகூறி உபசரித்திருப்பாரே!

அமிழ்தத்தையே அளித்த நீ
செல்வத்தை அளிக்க மறுப்பையோ எனல்.

"இராமனென்பவன், உன்செல்வத்தைப் பெறத்தானே, உன்னை மறைந்துநின்று வாளியேவிக்கொன்றான்! அவன், உன் எதிரே வந்து, 'ஈவாய்' என்று ஒரு வார்த்தைகூறி அச்செல்வம் அனைத்தையும் பெற்றிருக்கலாமே. அமிழ்தத்தையே அளித்த நீ, செல்வத்தை அளிக்க மறுப்பையோ?"]

இங்கே யிறந்துகிடப்பவன் வேறொருவாலியோ எனல்.

496 "நீறும் மேருவும், நீ நெருக்கினால்:
மாறோர் வாளி,உன் மார்பை ஈர்வதோ!
தேறேன், யான்.இது, தேவர் மாயமோ!
வேறோர் வாலிகொ லாம்?வீ ளிந்துளான்"

இ-ள். "நீ (உன் நெஞ்சொடுசேர்த்து இறுக்கி) நெருக்குவாயானால், மகாமேருபர்வதமும் தூளாய்விடுமே! (அப்படிப்பட்ட வன்மையுடைய) உன் நெஞ்சை (அதற்கு) எதிரிடையாக ஓர் அம்பு பிளத்தலாவதோ? (நீ அம்புருவி யிறந்துகிடத்தல், உண்மையோ, தோற்றமோ என்று) தெளியமாட்டுகிலேன். (ஒருவாறு தோற்றமேயென ஊகிக்கின்றேன்.) இத்தோற்றத்துக்குக் காரணம் (மனிதர் மாயவித்தையாகாதாதலால்,) தேவர்மாயமோ? (அஃதன்றெனில்,) இறந்துகிடப்பவன் (உண்மையில் வாலியாயில்லாது தோற்றத்தில் வாலியாயுள்ள) வேறொருவாலியோ?"

மாறு—எதிரிடை(யாக). ஈர்தல்—பிளத்தல். தேறுதல்—தெளிதல். வாலியின் வன்மையின்திறத்தில் தாரைக்குள்ள உறுதியான நம்பிக்கையினால், அவள் அவன் இறந்துகிடத்தலைக் கண்ணாற்கண்டும் கருத்தாற்றுணமாட்டாளாய்க் 'கண்ணறிவோடு கருத்தறிவு மாறுபடுதற்குக் காரணம், கண்ணால் அவன் இறந்ததாகக் காணும் காட்சியும் உண்மையே, கருத்தால் அவன் உயிரோடிருப்பதாகக் காணும் காட்சியும் உண்மையே; ஒன்றற்கொன்று மாறான இரண்டு காட்சியும் உண்மையாக உணரப்படுதற்குக் காரணம், உண்மை வாலி இறவாமல் எங்கேயோ இருக்கவும், அவனை உருவத்தில் ஒத்த வேறொருவன் இறந்துகிடத்தலாயிருக்கலாமோ? என்று இயல்பாகக் [illegible]

வும் சொல்லும் 'வேறோர் வாலிகொலாம் விளிந்துளான்' என்ற, வியப்பும் சுபப்பும் ஒருமிக்க நிகழ்விக்கும் வாக்கியம் ஒருதரமே கேட்டவர் உள்ளத்தும் நிலையாய்நின்று, நிலவி என்றும் நினைக்குந்தொறும், நினைக்குந் தொறும், நிரம்ப இன்பம் பயக்கும் இயல்பினதாயிருத்தல் காண்க.

இறந்தவாலியைக்கண்டு அவன் மனைவி தாரை வருந்திப்பலம்பிய தைப்பற்றிய 'வரைசேர்' என்பது முதலாக 'தீரும்' என்ப தீறுக உள்ள இன்கவித்தொகுதி, கம்பராமாயணத்தில் பல இடங்களிற் றொடர்பாகக் காணப்படும் சிறந்த செய்யுட்டொகுதிகளுள் ஒன்றென்பது தெளிவாம்.

## அநுமான் தாரையைத் தாதியரால் இருப்பிடஞ்சேர்ப்பித்து வாலிக்கு ஈமக்கடன் இயற்றுவித்தல்.

[தாரை இவ்வாறு புலம்பித் துக்கமேலீட்டால் உணர்விழக்க, அநுமான், அவளை அவளது தாதியரால் அவளிருப்பிடஞ் சேர்ப்பித்து, இறந்த வாலிக்கு இயற்றக்கடவனவான ஈமக்கடன்களை இயற்றுவித்து, அந்த விவரத்தை இராமனிடம் தெரிவித்தான்.

இராமன் சீதை பிரிவாற்றாமையால் வருந்தாநிற்க, மாலைப்பொழுதும் இராக்காலமும் கழிந்தன.

சூரியன் தனது தோன்றலான சுக்கிரீவன் பொற்கிரீடம் பூணும் விழாவைக்காணும் அவாவால் உற்றவன்போல உதயம் ஆனான்.

தாரைபுலம்புறு படலம் முற்றிற்று.

[தொடரும்]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

உ

கடவுள் துணை.


# செந்தமிழ்.

தொகுதி-௩0] பிரஜோத்பத்தி௵ தைமீ [பகுதி-௩.

Vol. XXX. *January February-1932.* No. 3.


## கம்ப ராமாயண இன்கவித்திரட்டு.

[29-ம் தொகுதியின் ௪௧௮-ம் பக்கத் தொடர்ச்சி.]

### அரசியற் படலம்.

**சுக்கிரீவன் முடிசூடி அரசாண்டதைக் கூறுவது.**

சுக்கிரீவன் முடிசூடிவந்து வணங்க, இராமன் அவனுக்கு அரசநீதி போதித்தல்.

சூரியோதயமானபோது, இராமன் கட்டளைப்படி, இலக்குமணன் சுக்கிரீவனுக்கு முடிசூட்டினான். அரசனான சுக்கிரீவன், வந்து அடிபடிய, இராமன், அவனுக்கு ஆசிகூறி, அரசநீதி போதிப்பானாய்ச் "சுக்கிரீவ! நீ கிட்கிந்தைக்குச் சென்று, அங்கதனை இளவரசனாகக் கொண்டு அரசுபுரிவாயாக. யாரும், உன்னை நெருங்காமலும் நீங்காமலும், இருக்கவேண்டிய தூரத்தே யிருக்கச்செய்து, எல்லாரும் உன்னைத் தெய்வமென்று கருதும்படி உத்தமசீலமுடையனாய் ஒழுகுவாயாக. புகைதோன்றுமிடத்தே நெருப்புண்டென ஊகித்துணர்தல்போல, முகக்குறியால், அகப்பகையை அநுமானித்தறிந்து, நீ அறிந்ததைப் பகைஞர் அறியாவண்ணம் (உண்மை யன்பருக்குப்போல) அவருக்கும் அலர்ந்த முகமும் குளிர்ந்த மொழியும் உடையை யாகுக. தீமையான செயல்களைச் சிந்தித்தலுஞ் செய்யாமல், வாய்மையே பேசிக், கொடுக்கத் தக்கார்க்குக் கொடுத்தற்கேற்ற பொருள்களைக் கொடுத்து, அயலார் பொருளுக்கு அணுவளவும் ஆசைப்படாயாக.

எளியரேன இகழ்ந்து எவரையும் இமிசியாதிருக்க எனல்.

497 "சிறியரென் றிகழ்ந்து நோவு செய்வன செய்யல். மற்றிந்
நெறியிகந் தியானூர் தீமை இழைத்தலால், உணர்ச்சி நீண்டு
குறியதாம் மேனி ஆய கூனியால், குவவுத் தோளாய்,
வெறியன எய்தி, நொய்தின் வெந்துயர்க் கடலில் வீழ்ந்தேன்'

இ-ள். "(ஆரையும்) அற்பரெனக் கருதி அலட்சியஞ்செய்து (அவருக்குத்) துன்பஞ்செய்வனவான காரியங்களைச் செய்யாதே. இந் (அகிம்சை) நெறியை நான் கடந்து (என் பாலப்பருவத்தில் விளையாட்டாகத் தன் கூனல் முதுகில் வில்லுண்டை எய்து) துன்பஞ் செய்தத னால், (என்மீது கறுவுகொண்டு சலஞ்சாதிக்கத்தக்க சமயத்தை நெடுங் காலம் எதிர்பார்த்திருந்த) கூனி (செய்த சூழ்ச்சி)யினால் (எல்லாப் போகங்களையும் இனிது துய்க்கும் இராச்சியச் செல்வத்தை யிழந்து வெறுமையை யடைந்து (உண்ணச் சோறும் உடுக்கத் துணியும் ஒதுங் கக் குடிசையுங் கிடையாத காட்டிலே காலந்தள்ளும்படியான) கொடுந் துன்பக் கடலிலே விழுந்தேன்.

நோவு செய்வன—துன்பஞ்செய்வனவான செயல்கள். இகழ்தல்—அவமதித்தல். செய்யல்—செய்யாதே ; எதிர்மறையொருமை ஏவல் : செய்யா தொழிக என்றும் பொருள் கூறலாம். இப்பொருளில், எதிர்மறை வியங்கோள். இகத்தல்—கடத்தல். இழைத்தல்—செய்தல். 'உணர்ச்சி நீண்டு மேனி குறியதா(க) ஆ(கி)ய கூனி' என இயைக்க. குவவு—திரட்சி. வெறியன—வெறுமை (—இன்மை)யானவை—(கிரகம் இல்லாமை, வாகனமும் இல்லாமை முதலிய) இல்லாமைகள். இல்லாமை, உடைமையின் எதிர் மறை. எல்லா உடைமைகளையும் இழந்து எல்லா இல்லாமைகளையும் எய்தினமை கூ,

தோற்றத்தாற் சிறியரெல்லாம் உண்மையிற் சிறியரல்லர், 'உருவு கண் டெள்ளாமை வேண்டும்' என்ற கருத்துக்களை யுட்கொண்டு 'சிறிய ரென் றிகழ்ந்து நோவு செய்வன செய்யல்' என்றான், "உணர்ச்சி நீண்டு குறியதா மேனி ஆய கூனி" என்ற ஙனியினிய கூற்று, தன்மைநவிற்சி யணிக்குச் சிறந்தவோ ருதாரணமாயும் சமத்காரமாயு மிருப்பது சாலவும்

பாராட்டத்தக்கது. வலிய பேரரசர் பெரியசேனையோடு அரிய போர் செய்தாலும் அகற்றலாகாத அரசபதவியை எளிய பெண்ணொருத்தி வெகு லகுவாக விலக்கினாளென்பது கருதி 'நொய்தின்' என்றான்.

இப்பாட்டினோடு இதன்பின்வரும் (1) சிந்தாமணிப்பாட்டும் (2) நீதிநெறிவிளக்கப்பாட்டும் ஒருவாறு கருத்தொத்திருத்தல் காண்க :—

(1) அஞ்சனக் கோலி னாற்று நாகமோ ரருவிக் குன்றிற்
குஞ்சரம் புலம்பி வீழக் கூர்நுதி பெயிற்றிற் கொல்லும்
பஞ்சியின் மெல்லி தேனும் பகைசிறி தென்ன வேண்டா
அஞ்சித்தற் காத்தல் வேண்டு மரும்பொரு ளாக, வென்றான்.

கோலின் ஆற்று-கோலால் (அடித்தறத்தப்) பற்றாத (மிகச்சிறிய).

(2) சிறிய பகையெனினும் ஓம்புதல் தேற்றார்
பெரிதும் பிழைபா டுடையார்—நிறைகயத்
தாழ்நீர் மடுவில் தவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது.

## கார்காலம் கழிந்தபின் சேனையுடன் வருவாயாக வென்று இராமன் சுக்கிரீவனுக்குச் சொல்லுதல்.

"உன்னை உன் குடிகள் 'இவன் நம் அரசனல்லன், நம்மைப் பெற்று வளர்த்த தாய்' என் றெண்ணும்படி அவர்களை இனிது பேணிக் காப்பாயாக. அப்படி அன்போடு காக்குமிடத்தும் அவருள் எவரும் வரம்பு கடவாதிருக்கும்பொருட்டு எவர் தவறியற்றினும் அவரைத் தக்கவாறு தண்டிப்பாயாக" என்று கூறி "மாரிக்காலம் கழிந்தவுடன் உன் பெருஞ் சேனையோடு என்னிடம் வருவாயாக." என்றான்.

## இராமனைக் கிட்கிந்தையில் வசிக்கும்படி சுக்கிரீவன் வேண்டல்.

சுக்கிரீவன், "கிட்கிந்தைநகரம், குரங்குகள் உறையுமிடமென்ற குறையுடையதன்றி யாதொருகுறையும் இல்லாதது. அது, போகப் பொருள்கள் யாவற்றினையுமுடையதாய்ப் போகபூமி யென்னும் தேவலோகத்தினும் சிறந்து விளங்குவது. அங்கே, சிறிய அடியேங்கள் திருவடித்தொண்டுசெய்யச் சிறிதுகாலம் இனிது வீற்றிருத்தல் வேண்டும். உங்களை அடைந்து உங்களுக்குரியோமாகப்பெற்ற தமியேங்கள் உங்

களைப் பிரிந்துபோய் வாழும் வாழ்வு பெருவாழ்வானாலும் வெறுவாழ்வே யாகும். தேவியைத் தேடத்தக்க காலம் வருங்காறும் எங்களிருப்பிடம் சிறப்புறும்படி அங்கே எழுந்தருளி யிருந்தருளல்வேண்டும்" என்றான்.

## இராமன் மறுத்தலும், சுக்கிரீவன் கிட்கிந்தைக் கேகலும்.

இராமன், குறுஞ்சிரிப்புக்கொண்டு "வேந்தர் இருக்கை விரதிகளுக் காகாது, யாங்கள் வந்தால் எங்களைப் போற்றலிலேயே உங்கள் பொழு தெல்லாம் போய்விடும். நீங்கள் இராசகாரியங்களைச் செய்தற்கு யாங்கள் இடையூறாயிருப்பேம். யான் உங்களுடனுறைந்தால், தேவி சிறை யிருந்து வருந்தாநிற்க, இராமன் இட்டர்களோடு இன்புற்று வாழ்ந்தா னென்ற தீயபழி மூவுலகும் முடிவாங்காலத்தும் முடியாமல் நெடிதாகி நிலைத்துவிடும். நீ இப்போது அரசாட்சியை முறையாகச் செய்வாயாக. நாலுமாதமானபோது சேனையோடு நீ என்பால்வருதலே, யான் உன்பால் வேண்டுவது" என்றான். சுக்கிரீவன், ஆண்டார்குறிப்பறிந்தொழுகல் அடியார்கடனென்றெண்ணி, மறுமொழிகூறாமல் வணங்கிச்சென்றான்.

## சுக்கிரீவன்பின் அங்கதன் செல்லல்.

இராமன், அங்கதனைநோக்கி "உன் சிறியதந்தையின்பின் செல். அவனை உன் பிதாவெனக் கருதி அவன்கருத்துக்கிசைந் தொழுகுவா யாக" என, அவன் அடிபடிந்து சென்றான்.

## சுக்கிரீவன் அரசுசெய்தலுக்குத் துணைபுரிய, இராமன் அனுமானை அனுப்பல்.

பின்பு இராமன் அநுமானை நோக்கிச் "சுக்கிரீவன் அரசாட்சியை நன்கு நடத்துதற்கு வேண்டும் உதவியை உன் சிறந்த அறிவுகொண்டு செய்வாயாக" என, அவன், மெய்யன்புமிகுதியாற் பிரியமாட்டாதவ னாய், "அடியேன் இங்கிருந்து தொண்டுசெய்ய அநுமதி அளித்தருள்க" என, "அறிவு ஆண்மை முதலியன நிறைந்த ஒருவன் ஆண்ட அரசை மற்றொருவன் வலிதிற் பெற்றானானால், அவன் ஆளுகைக்குண்டாம் ஆபத்துகள் அனந்தமாம். அறிவும் ஆற்றலு மொருங்குடைய உன்

போல்வாரே அவ் ஆபத்துகள் நேராமல் காக்கவும் நேர்ந்தால் நீக்கவும் வல்லாராவர். ஆதலால், நீ, இப்போது, என் நண்பன் அரசைக் காக்கத் துணையாவாய். அப்பால், என் தேவியை மீட்க உதவுவாய். கிட்கிந்தைக்குச் செல்க" எனத், "திருவுள்ளப்படியே செய்வேன்" என்று போன்பொடு தொழுது பிரியாவிடை பெற்றுச் சென்றான். இராமன், அம்மலையினின் றகன்று ரிசியமுககிரியை அடைந்து அங்கே வாழ்வா றானான்.

## சுக்கிரீவன் அரசுபுரிதல்.

கிட்கிந்தைக்குச் சென்ற சுக்கிரீவன், தாரையை வணங்கி ஆசி பெற்று, மந்திரி முதலியோர் இட்ட கட்டளையியற்ற, அங்கதன் இளவரசுபுரியத், தன் ஆணை 'சுக்கிரீவாக்கினை' எனப் பிரசித்திபெற்று எங்குஞ் செல்ல, இனிதாக அரசாண்டிருந்தான்.

அரசியற்படலம் முற்றிற்று.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

# பரிசோதனத்தொடர்.

—⟨(o)⟩—

செந்தமிழ் 28-ம் தொகுதியின் 10-ம் பகுதியில் ௪௪௩-ம் பக்கம் முதல் ௪௪௮-ம் பக்கம் வரை பரிசோதனத்தோடர் என மகுடமிட்டுச் சேனாவரையத்திற்கண்ட சில தொடர்களிலுள்ள பிழைகளைத் திருத்திய

அத்தொடர்களின் றிருத்தங்களுள் பின்னுள்ளவற்றை யங்கீகரித்து முன்னுள்ள வொருதொடரின் திருத்தத்தை யங்கீகரியாது முன்னிருந்தபடியே யிருக்கலாமென யாழ்ப்பாணம் சி. கணேசையரவர்கள் செந்தமிழ் 28-ம் தொகுதியின் 11-ம் பகுதியில் ௪௮௯-ம் பக்கம் முதல் ௪௯0-ம் பக்கம் வரை ஓர் கட்டுரையெழுதிப் பரிசோதனத் தோடர் எனவே மகுடமிட்டு வெளிவரச்செய்துள்ளார்கள்.

யான் சில அசௌகரியத்தால் அவ்வமயத்தில் அப்பத்திரிகையைப் படிக்கவில்லை. இப்பொழுது படிக்கும்போது அக்கட்டுரையையும் படித்தறியலாயினன்.

அதனைப் படித்துவருங்கால் 'பகுப்பப் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான் அதனின் வேறாயினாற்போல' என இருத்தலே யமையுமென யான் திருத்திய திருத்தத்தில் 'பகுப்ப' என்பது நின்றுவற்றுவதாகக் கருதியே ஐயரவர்கள் அத்திருத்தத்தை யங்கீகரியாது, முன்னிருந்த தொடரையே பிழையற்றதெனத் தாபிக்கப்புகுந்தார்களென்பது தெரிகின்றது.

சேனாவரையத்திலுள்ள அத்தொடராவது:— "செயற்கென்னும் வினையெச்சம் உருபேற்ற தொழிற்பெயரோடு ஒப்புமையுடைத்தாயினும் உருபும் பெயரு மொன்றாகாது பகுப்பப் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான் அதனின் வேறாயினாற்போல" என்னு மிஃதே.

உருபும் பெயரும் ஒன்றாகாது பகுப்பப் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைப்பது, வினையெச்சமாமென்பது இத்தொடராற் புலப்படுகின்றது. உருபும் பெயரும் ஒன்றாகாமையும் ஒன்றுபடுதலும் ஒரு தன்மையின்க ணிராவாகலான் 'உருபும் பெயரு மொன்றாகாது' என்பது

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௰] ஆங்கீரஸ ௵ புரட்டாசி ௴ [பகுதி-௧௧.

Vol. XXX. *September-October-1932.* No. 11.

## கம்ப ராமாயண இன்கவித்திரட்டு.

ஸ்ரீமத். ராவ்ஸாஹிப்-வெ.ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள் எழுதுவது.

[௪௯-ம் பக்கத் தொடர்ச்சி.]

### கார்காலப் படலம்.

*[சீதை பிரிந்தபின் வந்த கார்காலத்தை இராமன் எவ்வாறு கழித்தானென்பதைக் கூறுவது. ஆறு பருவங்களும், வெயிற்காலம் மழைக்காலம் பனிக்காலம் என்று பகுக்கும்போது மூன்றுள் அடங்குதலால், வர்ஷருதுவும் (—ஆவணி புரட்டாசியாகிய கார்ப் பருவமும்) சரத்ருதுவும் (—ஐப்பசி கார்த்திகையாகிய கூதிர்ப் பருவமும்) ஆகிய நான்கு மாதங்களையுமே கார்காலமென்றுகொண்டு படலத்துக்குப்பெயரமைத்தனரென்றல் தகுதி; "மழைக்காலத்திற்கு வேண்டுபவற்றிற்காக மற்றை யெட்டுமாதங்களில் முயலவேண்டும்" என்னும் பொருளுள்ள வடமொழி மேற்கோள் இங்குக் கருதத்தக்கது. புத்தசந்நியாசிகள் கார்கால முழுதும் ஓரிடத்தில் தங்கியிருந்து, எஞ்சிய எட்டுமாதங்களிலும் ஜனங்களுக்குத் தர்மோபதேசஞ்செய்யும்பொருட்டுத் தேசசஞ்சாரம் செய்துவந்தனரென்பது பௌத்தசரித்திரங்களிற் கூறப்படுகின்றது. பொருள்தேடப் பிரிந்து அயல்நாடுசென்ற காதலன் வரவை முயற்சிக்கியையாத கார்காலத்துவக்கத்தில் காதலி எதிர்பார்த்திருப்பது, 'கார்முந்தித் தேர்முந்தல்' என்ற துறையில் வருணிக்கப்படுவது. இவ்வாறாகக் கார்காலம், முயற்சிக்கேற்ற காலமல்லவென்பது தெளிவாம். ஆதலால், சீதையைத் தேடும் முயற்சிசெய்தற்குக் கார்காலம் கழிந்தவுடன் சுக்கிரீவன் சேனையோடு வரவேண்டுமென்று இராமன் பணித்தது இங்கே நினைவுகூரத்தக்கது.*

### தட்சிணாயன ஆரம்பத்திற் கார்காலம் துவங்கல்.

*சீதையைத் தேடுதற்குத் தென்றிசைசென்ற அநுமானுக்கு முந்திச்செல்லுதல்போலச், சூரியன் தெற்குநோக்கிச்செல்லும் தட்சிணாயனம் ஆரம்பமானபோது, கார்காலம் துவங்கியது.*]

### கார்மேகக் காட்சி.

498 *பையணைப் பஃறலைப் பாந்த ளேந்திய*
*பொய்நிலத் தகளியின் முழங்கு நீர்நெயின்*
*வெய்யவன் விளக்கமா மேருப் பொன்றிரி*
*மையடுத் தொத்தது மழைத்த வானமே.*

*இ-ள். சூரியன், பூமியாகிய அகலில் (வார்த்த) சமுத்திரசலமாகிய நெய்யில் (இட்ட, மேருகிரி யென்னும் பொன்மலையாகிய திரியிலேற்றிய) தீபமாக, மேகத்தை (த் தன் அகத்தே) யுடைய ஆகாயம், (அந்த) மேருவாகிய பொன்றிரி (எரியும் புகை) யால் கறுப்படைந்தாற்போன்றது. (நீல நிறமுடைய ஆகாயம் கார்மேகத்தால் கரியநிறமானதென்றபடி.)*

*பை—படம். அணை—படுக்கை. பாந்தள்—பாம்பு. பை அணை பல் தலை பாந்தள்—(திருமால் படுக்கும்) பாயாகிய, படமுடைய பலதலைகளையுடைய பாம்பு (ஆகிய ஆதிசேடன்). பொய் நிலம் தகளி—வலிமையுடைய பூமியாகிய அகல். அகல், தகளி, தகழி, இடிஞ்சில் என்பவை ஒரு பொருட்சொற்கள். நீர்—கடல். நெய்யின் என்பது நெயின் எனத் தொக்கது. வெய்யவன்—சூரியன். விளக்கம்—விளக்கு—தீபம். மை—கருமை—கறுப்பு. மை அடுத்தல்—கறுப்புநிறம்பொருந்தல். மையடுத்தால் ஒத்தது அல்லது மை அடுத்தது ஒத்தது, என்பது மையடுத்தொத்தெனத் தொக்கது. மழை—மேகம். மழைத்த வானம்—மேகத்தையுடைய ஆகாயம். மழைத்தவானம் என்பதற்கு 'மழையையுட்கொண்ட மேகம்' என்பது முக்கிய உரை. மையெடுத்தொத்தது, மையகலாதது என்பனவும் பாடங்கள்.*

*மாதர் கண்ணுக்கிடும் மை கூட்டுதற்கு அடுப்புக்கட்டி மண் கலசத்தை மேலேவைத்து எண்ணெயும் திரியுமிட்ட அகல் அல்லது கைவிளக்கைக் கீழே வைத்து ஏற்றும் தீபம் எரியும்போதுண்டாம்*

---

** அநுமானுக்குக் கல்விகற்பித்த ஆசாரியனான சூரியன், அவனுக்குச் சீதையைத்தேட வழிகாட்டுபவன்போலத் தென்றிசைநோக்கிச் செல்வானானான் எனலாம்.*

புகையிலுள்ள கரித்தூளின் திரள்பற்றிக் கலசத்தூர் கறுப்புறல் 'மையடுத்து' என்பதனாற் குறிக்கப்பட்டதாகக் கொள்க.

அகல் பூமிக்கும் நெய் கடலுக்கும் திரி மேருவுக்கும் தீபச்சுடர் சூரியனுக்கும் (கலசத்தூர் வானத்துக்கும் அந்தக்தூரிற்பற்றிப்படர்ந்த) புகையிலுள்ளகரித்தூட்பரப்பு வானத்திற்பரந்தமேகப்பரப்புக்குமுவமை.

அங்கை யளவான அகல், சிறங்கை யளவான நெய், அங்கை மோதிர வளைய அளவான திரி, அங்கை விரலளவான தீபச்சுடர், மீண்டும் அங்கை அளவான கலசத்தூர், சுவ் அளவேயான கரித்தூட் பரப்பு ஆகிய செயற்கையாகத் தொடர்புபடுத்தப்பட்ட சின்னஞ்சிறிய பொருள் களை, முறையே அகண்டபூமண்டலம் பெரியசமுத்திரம் மகாமேரு சூரியன் வானம் மேகமாகிய இயற்கையாகத் தொடர்புடைய பென்னம் பெரிய பொருள்களுக்கு உவமையாக எடுத்தாண்ட கவித்திறம் கண்டு களிக்கத்தக்கது.

## வானம் இருண்டமை.

499 நஞ்சினின் களிர்நெடுங் கடலின் நங்கையர்
அஞ்சன நயனத்தின் அவிழ்ந்த கூந்தலின்
வஞ்சனை அரக்கர்தம் வடிவின் செய்கையின்
நெஞ்சினின் இருண்டது நீல வானமே.

இ-ள். நீல நிறமுடைய ஆகாயமானது, விஷம்போலவும் கடல் போலவும் மாதர்களது மை (தீட்டிய) விழிபோலவும் அவர்களது அவிழ்ந்த தலைமயிர்போலவும் இராக்கதருடைய தேகம்போலவும் அவர்கள் செய்கைபோலவும் அவர்கள் சித்தம்போலவும் இருண்டது.

நஞ்சுபோல நெஞ்சுபோல என்று பொருள்படும் நஞ்சினின் நெஞ்சி னின் என்பவைகளில் முதல் இன் சாரியை. இப்பாட்டில்வரும் மற் றெல்லா இன்னும் ஒப்புப்பொருள் உள்ள ஐந்தனுருபு. களிர்—குளிர்.

இயல்பாக நீலநிறமுள்ள வானம், கார்மேகம் பரவியதனால், கரிய நிறமானதென்பார், நீலவானம் இருண்டதென்றார். மாதர் கண்ணும் கூந்தலும் கருநிறத்தால் மேகத்துக்கு உவமை. கருமையை மிகுவித்துக்காட்ட அஞ்சனநயன மென்றும் மேகம் பரந்ததை விளக்க அவிழ்ந்த கூந்தலென்றும் அடைகொடுத்தார்.

'தீவினையைக் கருநிறமுடையதென்றல் கவிமரபு; ஆதலால், அரக்கர்தம்செய்கை, இருட்சிக்கு உவமையாயிற்று. அவர்களுடைய மனம் அஞ்ஞானமாகிய இருளினாலும் தீய சிந்தனைகளாலும் கறுத்

திருத்தலால் யுத்தினையும் உவமானமாக்கினார்; "அகங்குன்றி மூக்கிற் கரியார்" என்ற திருக்குறளும், "மங்கை பங்கன் சிற்றம்பலம் ஆதரியார், கூழின் பலிபலம் போன்றிரு ளாகின்ற கோகிலமே" என்ற திருக்கோவையாரும் நோக்கத்தக்கன.'

### மின்னலும், இடியும், வாடையும், மழையும்.

[விண்ணில் மேகங்கள் மின்னுதல், போர்க்களத்தில் வெட்டுண்ட யானைகளின் புண்கள் திறத்தல்போன்றது.

அம் மின்னல்கள் பல பக்கங்களிலிருந்தும் மின்னுதல், திசைகள் சிரித்தல் நிகர்த்தது.

கார்காலமாகிய கொல்லன் வானமாகிய உலையில் மேகமாகிய கரியைப் பெய்து வாடையாகிய துருத்திக்காற்றால் பெருக்கிய தீச்சுவாலைபோல, மின்னல்கள் வீசின. (உலையிலிருந்து சுவாலைகள் குப்புக்குப்பென வெளிப்படல்போல, வானத்தினின்று மின்னல்கள் அடுத்தடுத்து வெளிப்பட்டன என்றபடி.)

படைவீரர் வாள்வீச்சுப்போல மின்னல்கள் வீசுதலாலும் படைமுரசு முழங்குதல்போல இடி இடித்தலாலும் சரராசி எய்தல்போல மழைமாரி பெய்தலாலும் ஆகாயம் போர்க்களம் ஒத்தது.

'இராமன், சுக்கிரீவாதி வானரருடன் சேர்ந்துவிட்டான். இனி, இராவணாதி யிராக்கதர் இறவாதொழியார்.' என்ற உவகைமேலீட்டால் வானவர் *தூசு வீசுதல்போல, வானமானது, மின்னி, அவர்கள் ஆரவாரித்தல்போல இடித்து, அவர்கள் மலர்மாரிசொரிதல்போல மழைமாரி பெய்தது.

### மழைபெய்ததன் பயன்.

கார்காலம் வர, அதனோடு, பொருள்தேடப்பிரிந்த காதலர் வந்ததனால், பிரிவுக்காலத்து வாடிப் பொலிவற்றிருந்தமாதர் தழைத்து (—பூரித்துப்) பொலிவுறுதல்போல, மழையில்லாமல் வாடியிருந்த மரக்கொம்புகள் தளிர்த்துச் செழிப்புற்றன.

பூமி எங்கும் பசும்புல் முளைத்தது; வேனிற்காலமாகிய கொடுங்கோலரசு ஒழிந்து கார்காலமாகிய செங்கோலரசன் வந்ததனால் பூமிதேவி மயிர்க்கூச்செறிந்ததுபோல விளங்கியது.] (தொடரும்.)

---

*தூசு—வஸ்திரம், வெள்ளை வீசல், வேட்டி வீசல் எனல் உலகவழக்கு.

௨

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩0] ஆங்கீரஸ ஹு ஐப்பசி மீ [பகுதி-௧௨.

Vol. XXX. October-November-1932. No. 12.

## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௨௯௨-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

### கார்காலத்தால் இராமன் விரகவேதனை மிகுதல்.

500 தேரைக் கொண்டபே ரல்குலாள் திருமுகங் காணான்,
ஆரைக் கண்டுயி ராற்றுவான்? நல்லுணர் வழிந்தான்;
மாரற் கெண்ணில்பல் லாயிர மலர்க்கணை வகுத்த
காரைக் கண்டனன், வெந்துயர்க் கொருகரை காணான்.

இ - ள். சீதையின் முகத்தைக் காணாத இராமன், மன்மத னுக்குப் பல ஆயிர (க் கணக்கான) புஷ்பபாணங்களை உண்டாக்கி (உதவி)ய கார்காலத்தைக் கண்டு கொடிய (விரக) வேதனைக்கு ஒரு கரையுங் காணாதவனாய் அறிவழிந்தவனானான், (சீதையைக் கண்டு தன் பக்கலிலன்றிச் சீவனை யிழந்துவிடுவானாயிருந்த அவன் அவளை யன்றி வேறு) யாரைக்கண்டு உயிர்தரித்திருப்பான்?

ஆற்றுதல் - தாங்குதல் - தரித்தல் - சகித்தல். மாரன் - மன்மதன். ஆயிரம், அளவின்மைகுறித்தது. மேகம், மழைபெய்து பூஞ்செடிகள் கொடிகள் மரங்களை நிரம்பப் பூக்கும்படிசெய்தது, காமுகரை எய்து துன்புறுத்தற்குப் பூக்களாகிய அம்புகளை மன்மதனுக்குக் கொடுத்த தாக உருவகிக்கப்பட்டது. நான்குதிசைகளிலுமுள்ள நான்கு கரைக ளுள் யாதாயினும் ஒன்றையுங் கண்டிலனென்பார், கரைகாணானெனக் கூறாது ஒருகரை காணானென்றார். செய்யுளாதலால், ஒருகரையுங் காணானென்பது ஒருகரை காணானென உம்மை தொக்கது.

“காரைக் கண்டனன்; கரை காணான்” என்றவிடத்து ஒருவனைச் சொற்சமத்காரம் காண்க. கண்டனன் காணான் என மாறுபடச் சொற்கள் வந்தது தொடைமுரண்.'

### காமனால் தவசிகளும் கலங்குங் கார்காலத்தில் இராமன் கலங்குதல் வியப்பன்றெனல்.

[காமத்தை யெழுப்பி வளர்க்குங் கார்காலத்தில் முற்றத்துறந்த முனிவரும் மனவுறுதி தளருதல் சகசமாதலால், அந்தக்காலத்தில், எல்லாநலங்களும் இனிதமைந்த சீதாதேவியுடன் கூடியாடிக் குலாவி இன்புற்று வாழ்ந்திருந்த இராமன் விரகவேதனை மிகுதியாக வருந்தியது வியப்போ? அவ் வருத்தத்தால் மனங்கலங்கிச் சித்தப்பிரமையுற்றான்.

### இராமன் விரகவேதனைமிகுதியால் சித்தப்பிரமைகொண்டு மேக முதலியவைகளை நோக்கிப் புலம்பல்.

இராமன் மேகத்தை நோக்கி, மேகமே! சீதையைக் கவர்ந்து ஒளித்துவைத்திருக்கும் தீயோனது ஊருந் தெரியேனாய்ப் பெருந்தீங்கு செய்த அவனுக்குச் சிறுதீங்குஞ் செய்யமாட்டாமையால் செத்தொழியாது உயிர்சுமந்து உடலொடு திரியும் யான் அந்தப் பாவியாற் கலங்கியிருப்பது காணாதென, அதிகமாகக் கலங்கச்செய்கின்றாயே. சீதையின் மேனிபோலும் மின்னலை அடிக்கடி தோன்றி மறையச்செய்தலால், அவளைக் காட்டிக்காட்டி மறைக்கின்றாய்போல்கின்றாய். இவனுக்குச் சீதையைக் கொடுத்தல் செய்யவில்லையாயினும், காட்டவாவது செய்வோமென்று என்பால் இரக்கங்கொண்டாயோ? (சிறுவர்க்குத் தின்பண்டங் காட்டிக், கொடுக்காது மறைப்பார்போல, என்னை ஏமாற்றி விளையாடுகின்றாயோ?). இராக்கதரது கரிய பெரிய வடிவம்போலக் கறுத்துப் பெருத்த உருவமுடையாய். அவர்கள் அந்தரத்தில் சஞ்சரித்துக் கோரப்பல்லாலும் வெடிக்குங் குரலாலும் யாவரையும் அச்சமுறச்செய்தல்போல, நீயும் வானில் உலாவி மின்னலாலும் இடிக்குங் குரலாலும் எல்லாரையும் பயமடையச்செய்கின்றாய். அவரேபோல, உயிர்கொண்டாலன்றி யொழியாய்போலும் என்றும்—மயிலை நோக்கி, மயிலே! உன் சாயலால் சீதையை நினைப்பூட்டுகின்றாய். அவளைக் கொண்டுவந்து கொடுத்து மகிழச்செய்யாது வருந்தச்செய்கின்றாய். நீ கொடியாய்

என்றும்—பூங்கொடியைநோக்கிச், சீதையின் இடைபழகை நினைவுறுத்தி வருத்துங் கொடியே! என்னைத் தாக்கித் துன்புறுத்தும் மழைவாடை வீசலுக்கு இசைவாக ஆடி நீயும் வருத்துகின்றாயே என்றும்—மானை நோக்கிச் சீதை யிருக்குமிடத்தைச் சொல்லென்றும்—தன் உயிரை நோக்கி, உயிரே! பிராணனாகிய உனக்கும் பிராணநாயகியாகிய சீதைக்கும் உள்ள சம்பந்தத்தைத் தெரியாயோ, தெரிந்திருந்தால் அவளோடு பிரிந்திருப்பாய், பிரிந்திருந்தால் யான் இத்துன்பத்தை அறிந்திரே னென்றும் புலம்பினான்.]

இராமன் மழைவாடைக்கு வருந்திப் புலம்பல்.

501 ஓடைவாள் நுதலி னாளை ஒளிக்கலாம் உபாயம் உன்னி
நாடிமா ரீச னார்,ஓர் ஆடக நவ்வி ஆனார்;
வாடையாய்க் கூற்றி னாரும், உருவினை மாற்றி வந்தார்;
கேடுசூழ் வார்க்கு வேண்டும் உருக்கொளக் கிடைத்த வன்றே

இ-ள். (முன் என்னைத் துன்புறுத்தச்) சீதையை (இராவணன் கவர்ந்து) ஒளித்தற்கேற்ற உபாயத்தை ஆலோசித்துத் தேடி (பறித்து) மாரீசனார் பொன்மான் ஆனார்; (இப்போது என்னைத் துன்புறுத்த) எமனார் மழைவாடையாகத் தம் வடிவத்தை மாற்றி வந்தார்; (எனக்குத்) தீங்குசெய்பக்கருதுவார்க்கு (அவர்கள்கருத்தை நிறைவேற்றுதற்குத் தக்கனவாக அவர்கள்) வேண்டும்வடிவங்கள் (அவர்கள் இட்டப்படி) கொள்ளக் கிடைக்கின்றன. (இந்தக்கொடுமையை என் என்பேன்!).

ஓடை=நெற்றிப்பட்டம். ஆடகம்=பொன். நவ்வி=மான்.

'மாரீசனார், கூற்றினார் என்ற பன்மைகள், கோபம்பற்றியன; இகழ்ச்சிக்குறிப்புமாம்.'

இராமன் மன்மதனைக்கண்டதாகக்கருதி அவனைநோக்கிக் கூறுதல்

[சித்தப்பிரமையுற்றிருந்த இராமன், மன்மதனைக்கண்டதாக எண்ணி 'ஏ மன்மதா! என்னெஞ்சு புண்ணாக, நீபல அம்புகளெய்தாய், இவ்வளவுபோதும், இனி என் எதிரே நில்லாதே, போ. என்னைக் காக்க இலக்குமணனிருக்கின்றான் நீ என்னைத் துன்புறுத்தலை அவன் கண்டால், தடுக்கமுடியாத அவன்கோபத்தால் அழிவாய்வி டுவாய்' என்று கூறிப் புலம்பினான்.

## தன்னைக் காக்க இலக்குமணனிருக்கிறானென்று புலப்பத்திற்கூறிய இராமனை இலக்குமணன் தேற்றுதல்.

இலக்குமணன், இராமனை அணுகிநோக்கிச் 'சீதையைத்தேடுதற்கு இடையூறாக உள்ள கார்காலம் நீண்டதாயிருக்கிறதென்றோ, இராக்கதர் வெலற்கரியரென்றோ, வானரசேனை வரவில்லையென்றோ, மற்றெது கருதியோ, மனந்தளர்கின்றாய்? வேதநெறி பேதமெய்தினாலும், மண்ணும் விண்ணும், மதியும் கதிரும், மற்றெவையும் மாறினாலும், ஒருசிறிது நிலைகுலைதலும் உன்பால் நிகழமாட்டாதே. கார்காலம் கழிந்துவிட்டது. அரக்கரை அழிக்கும் அறிவும் ஆற்றலுமுடைய அநுமனாதி வானரர்சேனை வந்துவிட்டது. சீதை திரும்பிவிட்டாள். துன்பம் தொலைவாயாக' என்று தேற்றிச் சித்தப்பிரமை தீரச்செய்தான்.

இராமன் தன்னுணர்வுவந்தபின்னும் தளர்தல்கண்டு, இலக்குமணன், 'நீ செயமடைதல் திண்ணம். இவ்வாறு தளர்தல் உன் வீரத்துக்கு ஏற்றதன்று. உடனே செயமடையவொண்ணாமற் கார்காலம், சிறிதுபாகம், கழியாதிருக்கின்றதென்பதொன்றுண்டு. அது பிறர்க்குத் தடையாமன்றி, உனக்குத் தடையாகமாட்டாது. காலங்கடந்த உனக்குக் காலத்தடை யேது. நீ இப்போதே செயிக்க உன்னினால் அதற்கு எத்தடையும் இல்லாததாய்விடும். உனக்கு நீயே நிருமித்துக் கொள்ளுந் தடையன்றி வேறுதடை யாதுமில்லை. ஆதலால் வருந்துதலொழிவாயாக' என்றான்.]

502 திரைசெய்அத் திண்கடல் அமிழ்தம் செங்கணான்
உரைசெயத் தரினும்அத் தொழில் உவந்திலன்:
வரைமுதற் கலப்பைகள் மாடு நாட்டித்தன்
குரைமலர்த் தடக்கையாற் கடைந்து கொண்டனன்.

இ - ள். 'திருமால் (அமிழ்தம் கொடு என்று) கட்டளையிட்டமாத்திரத்திலே, பாற்கடல் அமிழ்தத்தைக் கொடுக்கக்கடவதாயிருந்தும், (கட்டளையிடுவதான இலகுவான) அந்தச் செய(லால் உடனே அமிழ்தம் பெறுதலை விரும்பானாய், (அதனைக் கடைந்தெடுத்தற்குக் கருவிகளான மந்தர) மலை முதலிய உபகரணப்பொருள்களை (அவைகளிருந்த தூரமான இடங்களிலிருந்து கொண்டுவந்து ஒன்றுசேர்த்து அந்த)க் கடலிலே

நாட்டித் தன் கைகளினால் (சிரமப்பட்டுக்) கடைதல்செய்தே (அமிழ்தத்தை எடுத்துக்) கொண்டான். (கேவலம் நினைத்தலாலேயே நினைத்தகாரியத்தை நீ நிறைவேற்றவல்லையாயினும், அவ்வாறு செய்யாமல் தக்ககாலத்தில் தக்கதுணைவரைக்கொண்டு செய்தற்குரியவற்றைப் பலமுறை சிந்தித்துத் தெளிந்து செய்து செயமடைவாயாக' என்று இலக்குமணன் சொன்னான்.)

திரைசெய்-அலைகளை உண்டாக்குகின்ற-அலைவீசுகின்ற. 'அகரச் சுட்டு பிரசித்திபற்றியது'. திண்-வலிமையுடைய. செங்க(ண்)ணன் இங்கே திருமாலைக்குறித்தது. உரைசெய-சொல்ல. கலப்பைகள்-உபகரணப்பொருள்கள். மாடு-இடம், இங்கே கடலினிடத்து எனப் பொருள் கொள்ளநின்றது. குரை மலர் தடம் கை-(ஆபரணங்கள்) ஒலிக்கின்ற (தாமரைப்) பூப்போன்ற விசாலமான கைகள்.

## கார்கால முடிவில், கார்மேகம் வெண்மேகமாகுதல்.

[இப்போது காலை, இப்போது நடுப்பகல், இப்போது மாலை யென நேரந்தெரியாதவாறு எப்போதும் சூரியனை மூடியிருந்த நீர் நிறைந்த கார்மேகம், நீர் முழுவதையும் பொழிந்து மேற்கொண்டு பெய்ய நீரின்றி வெண்மேகமானபோது, உள்ளபொருள்களையெல்லாம் கொடுத்துவிட்டு உதவிப் பொருளற்றபோது எதிர்பார்க்கு மவர்க்கு ஈய இயலாமையால் வெள்கி வெளிறும் வள்ளலை ஒத்தது.]

## மேகம் நீங்கச் சந்திரன் விளங்கினது, மறைத்த திரை நீக்கப்பெற்ற மாதர் முகம் போன்றது.

503 கடம்திறந் தெழுகளி றனைய கார்முகில்
இடந்திறந் தெழிற் பொலிந்த திங்களும்,
நடந்திறன் நவில்வுறு நங்கை மார்முகம்
படந்திறந் தொருவழிப் பொலியும் பான்மைபோல்.

இ-ள். (மதிய) யானைபோன்ற கார்மேகம் (தான் தங்கியிருந்த வானத்தின்) இடத்தை (வெளியாம்படி நீங்கி)த் திறந்து செல்லவிட்டதனால் (அம் மேகத்தால் மறைக்கப்பட்டிருந்த) சந்திரன், (மறைந்திருந்த) திரைச் சீலை திறக்கும்படி உருவப்பட்டதனால் (மறைக்கப் பட்டிருந்த), நாட்டியமாதர்முகம் விளங்குதல்போல விளங்கலுற்றது.

கடம்—யானைக்கதுப்பு—யானையின்கன்னம். கடம் திறந்த எழு களிறு அனைய—கன்னம் (அதன்கணுள்ள மதநீர்வெளிப்படும் துளை) திறக்கப்பட்டு (மதம் பொழிந்து கொண்டு) புறப்படுகின்ற (கரிய) யானை போன்ற. கார் முகில்-கருமை (நிறமுடைய) மேகம்; கார்காலத்துமேக மெனலுமாம். யானை, மேகத்துக்கும், மதநீர்பொழிதல், மழைநீர்பொழிதலுக்கும் உவமை. கருநிறமும் கதியும் முழக்கமும் யானைக்கும் மேகத்துக்கும் பொதுக்குணங்கள். இந்து-சந்திரன். நடம் திறம் நவில்-நடனத்தைச் சாமர்த்தியமாகச்செய்கின்ற. படம்-திரைச்சீலை. பான்மை-குணம்-தன்மை. படம் திறக்க என்பதில் திறக்க, திறந்து எனத் திரிந்து நின்றது. 'சொல்திரியினும்பொருள் திரியா வினைக்குறை'. (வினைக்குறை-வினையெச்சம்).

இப்பாட்டிலுள்ள ஒப்புமைநயம் ஊன்றிநோக்கி உவக்கத்தக்கது.

கார்காலம் கழிந்தபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகள்.

[(இருள் நீங்க இராக்காலம் நீங்குதல்போல) கார்மேகம் ஒழியக், கார்காலம் கழிந்தது. அப்போது, எல்லாரும் ஒன்றாகச்சேர்ந்து பாடம்படிக்கும் பள்ளிப்பிள்ளைகள்போல, எல்லாம் ஒருமித்துக் கத்திக் கொண்டிருந்த தவளைகள் வாயடங்கின. சிறைவிரித் தாடிக் களித்த மயில்கள், சிறைகளை ஒடுக்கிச், சிறையில் ஒடுங்கியிருந்த சீதைபோலச் சோர்ந்திருந்தன. மழைக்கொதுங்கிப் பதுங்கியிருந்த பறவைகள் சீதையைத் தேடுங்காலம்வந்ததென்று எங்கும் தேடிச்செல்வனபோலப் பலதிசைகளிலும் பறந்துசென்றன]

கார்காலப்படலம் முற்றிற்று.

(தொடரும்.)

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்

---

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௧] ஸ்ரீமுகஹு கார்த்திகைமீ [பகுதி-௧.
Vol. XXXI. November-December-1933. No. 1.

## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௩௦-ஆம் தொகுதியின் ௨௭௦-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

### கிட்கிந்தைப் படலம்.

*கிட்கிந்தைநகரில் நிகழ்ந்த செய்திகளைக் கூறுவது.*

சுக்கிரீவனிடம், அவன் குறித்தகாலத்தில் வராதகாரணம் தெரிந்துவர, இராமன் இலக்குமணனை அனுப்புதல்.

[இராமன், இலக்குமணனைநோக்கி 'சுக்கிரீவன், சொன்ன தவணை கழிந்தும் வந்தானில்லை. அவன் பகைமையொழித்துச் செல்வத்தை அளித்த நமது உதவியை மறந்து தருமநெறி தவறினன். அவன், நம் அன்பை நினையானாயினும், அவனை அவன் அரசவாழ்வோடும் அழிக்க வல்ல நமது ஆற்றலையும் நினைத்தானில்லை. செய்ந்நன்றிகொன்று சினேகத்தைச் சிதைத்து மெய்யைவிட்டுப் பொய்யைப்பற்றிய புல்லனைக் கொல்லுதல் குற்றமாகாது. நீ போய் அவன் மனநிலை அறிந்து வா. பொல்லாரை மாய்த்து நல்லாரைக் காத்தற்கு நான் எடுத்த கோதண்டமும் அம்பும் உண்டு; கூற்றுவனும் உண்டென்று கூறு. சொன்ன சொற்படி வாரானாகில், அவன் நாடழியும், நகரழியும், உற்றாரழிவர், அவனும் அழிவன் என்னும் உண்மையை உறுதியாக உரை. அவன் சாற்றும் விடை ஏற்றதாயில்லையானால், அதற்காக அவனை அழித்துவிடாமல், அவன் சொன்னதை என்னிடம் வந்துசொல்லு.' என்றான்.

## இலக்குமணன் ருசியமுக பருவதத்தை நீங்கிக் கிட்கிந்தகிரியை அடைதல்.

இலக்குமணன், வில்லும் அம்பறாத்தூணியும் பூண்டு, இராமனை வணங்கிப் பிரியாவிடை* பெற்றுச் சென்றான். அவன் வழியிலுள்ள மரங்களடர்ந்த வனங்களூடு வேகமாகச் சென்றது, இராமனம்பு மராமரங்களை உருவிச்சென்றதை ஒத்தது. அவன் ருசியமுகமலையினின்று கிட்கிந்தைமலையை அடைந்தது, சூரியன் உதயகிரியினின்று அத்தமனகிரியை அடைந்ததுபோன்றது; அன்றி, ஒருசிங்கம் ஒரு மலையினின்று மற்றொருமலையை உற்றதும் ஒத்தது.

## இலக்குமணன் வருதலைக்கண்ட வானரர் அங்கதனுக்குணர்த்த அவன் சுக்கிரீவனுக்குணர்த்தமுயன்று முடியாமல் அநுமனாதியரோடு சென்று தாரைக்குணர்த்தியசமயத்தில் வானரர் நகரவாயிலைத் தாளிட்டுப் பத்திரப்படுத்தல்.

இலக்குமணனைக்கண்ட வானரர், இயமனைக் கண்டவர்போல அஞ்சி, அங்கதனிடம் ஓடி 'இலக்குமணன் வெகு வேகமாய் மிகு கோபமாய் வருகிறான்' என்றனர். அவன், அவனைத் தூரத்தில் நின்று நோக்கி, அக்கருத்தை முகக்குறிப்பால் அறிந்து சுக்கிரீவனை அடைந்தான். அப்போது, அவன், மென்மலர்மெத்தைமீது, பள்ளிகொண்டு, மாதர் பதம் வருட, மந்தமாருதம் வந்துலாவ, இனிதாகத் துயில்வானாயிருந்தான். அங்கதன், அவன் தூக்கத்தை நீக்கற்குச் 'சேவிக்கின்றேன்' என்று செப்பித் தெண்டனிட்டு 'ஐய! இலக்குமணன், கோபாவேசனாய் வந்திருக்கிறான்; உன் சித்தம் யாது?' என்றான். இவ்வாறு கூறியதைப் பெருஞ்செல்வக் கள்ளும் பெண்ணின்பக் கள்ளும் ஒருங்குசேர்ந்து உறுத்திய மயக்க வயத்தனாயிருந்த அவன் ஒருசிறிதும் உணராமை கண்டு, அங்கதன், அங்கிருந்து ஆவது யாவதுமில்லையென்று அகன்று, அநுமனை அடைந்து, அவனையும் அவனைச் சூழ்ந்திருந்த வானரவீரரையும் கூட்டிக்கொண்டு சென்று, தன் தாய் தாரையை அடுத்து, இலக்குமணன்வரவைத் தெரிவித்து 'இப்போது யாது செய்வது?' என வினவ, அவள், 'நீங்கள் தீயசெயல்களைச் செய்வீர்கள்,

*உன்னம்பிரியாது உடல்பிரியப் பெறும் அநுமதி.

செய்துவிட்டு அதனால் நேரும் தீங்கு நீங்கும் வழி தேடியீர்கள். உதவி கொன்ற உங்களுக்கு உய்தி உண்டோ? நீங்கள் செய்த தீவினைப்பயனை நீங்கள் அடையுங்காலம் நெருங்கியது. இலக்குமணனை எதிர்ப்பீரேல், இறப்பீர்' என்று கண்டித்துக் கூறிக்கொண்டிருக்கும் சமயத்தில், குரங்குக் கூட்டங்கள், இலக்குமணனைத் தடுத்தற்கு நகர வாசற்கதவைத் தாளிட்டு, அது தள்ளுண்ணாதபடி மலைகளையும் மரங்களையும் அடர்த்தியாக அடுக்கிச் சார்த்தி உறுதியாகப் பத்திரப்படுத்தின. அன்றி, அவ்வளவு தடைகளையும் அப்புறப்படுத்துவானாகில், அடித்துத் தடுத்தற்கு ஆயத்தமாய் மரங்களைச் சேகரித்துவைத்துக்கொண்டு மதிற்பக்கத்திலே கூட்டமாய்க் கூடியிருந்தன.

### இலக்குமணன் நகருட் புகுதல்.

கதவின் நிலைமையைக் கண்ட இலக்குமணன், நம்மைத் தடுக்கும் உபாயமோ இது, என்று நகைத்து, அதனை அலட்சியமாக அடியினால் தள்ள, அது, அதன்மேற் சார்த்தியிருந்த மலைகளோடும் மரங்களோடும் பல சுக்கல்களாய்ப் பல யோசனை தூரம் பறந்தோடினது. அது கண்ட குரங்குக் கூட்டம், அச்சம் பிடரிபிடித்துத் தள்ளக் காடேறி ஓடி ஒளித்தது. வானரம் நீங்கின மாநகரம், நட்சத்திரம் இல்லாத வானம் போலப் பொலிவிழந்தது. இலக்குமணன் நகருள்ளே புகுந்தான்.

### அவனைத் தாரை தடுத்தல்.

தன் இனத்தாரைக் கண்டித்துக் கொண்டிருந்த தாரையை அங்கதன் 'அம்மா! இலக்குமணன் அரண்மனையை அடுக்க வந்துவிட்டானே; என் செய்வேம்?' என வினவியபோது, அநுமான், 'தாயே, நீயே சென்று வாயிலினின்று வழிமறித்தால், விலகி ஏகுவான். இதுவே இப்போது செய்யத்தக்க தந்திரம்' என்றான். எனவே, அவள், 'நீங்க ளெல்லீரும் நீங்குமின்கள். யான் சென்று இலக்குமணன் மனவருத்தத்தை மாற்றுவேன்' என்று, சூழ்ந்துநின்ற தோழியரோடு அந்தப்புரத்தை அகன்று, அரண்மனைவாசலையடைந்து, அதனுள்ளே புகுவானாய இலக்குமணனை வழிமறித்து நின்றாள்.

காற்சிலம்பொலி போர்ப்பறைமுழக்கமாகக் கடிதடம்* தேராக, அதன் மேலுள்ள இடையும் இடையிலணிந்த சேலையும், கொடியும் கொடிச்சீலையு

---

*அல்குல் நிதம்பம் கடிதடம் (கடி-அரை; தடம்-இடம்) அரை: ஒரு பொருட் பன்மொழிகள்.

மாகத், தனம் யானையாக, புருவமும் கண்ணும், வில்லும் அம்புமாக, மாதர்கூட்டமாகிய சேனை எதிர்ந்தபோது, இலக்குமணன், கொண்டிருந்த கோபம் விண்டொழிந்துபோக, முகம் அவன் முயற்சியின்றித் தானே மாறித் திரும்ப, அந்தச் சேனையை எதிர்த்தல் கிடக்க, பார்க்கவேயும் பயந்தவனாய்த் தலையைச் சாய்த்து வில்லைத் தரையிலூன்றி மாமிமார் மத்தியில் வந்த மருமகன்போல நின்றான். அவனைநோக்கித் தாரை கூறுகின்றாள்.]

## இலக்குமணனை நோக்கித் தாரை கூறுதல்.

504. 'அந்தமில் காலம் நோற்ற ஆற்றல்உண் டாயி னன்றி,
இந்திரன் முதலி னோரால் எய்தலாம் இயல்பிற் றன்றே:
மைந்த! நின் பாதம் கொண்டெம் மனைவரப் பெற்று வாழ்ந்தேம் ;
உய்ந்தனம்; வினையும் தீர்ந்தேம்; உறுதிவே றிதனின் உண்டோ!'

இ-ள். 'வீரனே! (நீ இந்திரன்முதலோர்மனைக்கு வருதலான அரிய பேறு, அவர்கள், முன்பு) முடிவிலாத (நெடிய) காலம் (வருந்தி) நோற்ற (தபோ) பலம் (உடையராக) இருந்தாலன்றி, (அந்த) இந்திரன்முதலா னோராலும் பெறக்கூடியதன்று. (அப்படியிருக்க, நீ) திருவடிகளால் (நடந்து) எங்கள் கிருகத்துக்கு எழுந்தருளப்பெற்று (மிகவும் உயர்ந்த இகலோக) வாழ்வடைந்தேம். (யாங்கள் செய்திருந்த தீ) வினை (ப் பயன்) தீரப்பெற்று ஈடேறி (ப் பரலோக வாழ்வுக்குப் பாத்திரரா) னேம். (இம்மை மறுமை நலங்க ளிரண்டும் ஒருங்கெய்திய) இதனைக் காட்டிலும் (சிறப்பானதாக யாங்கள் அடையக்கூடிய) நன்மை வேறுண்டோ!' (என்று இலக்குமணனைநோக்கித் தாரை கூறினாள்.)

அந்தம் - முடிவு. நோற்றல் - தவம்செய்தல். ஆற்றல் - பலம். எய்தல் - அடைதல். இயல்பு - தன்மை. இயல்பிற்று - தன்மை யுடையது. ஏ, தேற்றப்பொருளில்வந்த இடைச்சொல். மைந்து - வீரம். மைந்தன் - வீரன். உய்தல் - ஈடேறல். இங்கே, உயர்ந்த மோட்சகதி அடைவேமென்னும் பொருளுடைய 'உய்வேம்' என்பது துணிவுபற்றி 'உய்ந்தேம்' என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது. உறுதி - நன்மை. 'உறுதி பயப்ப கடைபோகா வேனும்'. 'இயல்பிற்றன்றே' என்பதைக்

கொண்டு முடியும் வாக்கியத்துக்கு 'மனைவரப்பெறல்' என்ற எழுவாய் அடுத்த வாக்கியத்தில் 'மனைவரப்பெற்று' என்பதிலிருந்து பெறற்பாலதாயிருத்தல் கவனிக்கத்தக்கது. 'இயல்பிற்றன்றால்' என்னும் பாடத்தில் ஆல் என்பது ஆதலால் என்னும் பொருளுடையது.

யாங்கள் மாதவமுடைமையின், எங்கள் இல்லம் உன் திருவடி தீண்டப்பெற்றது என்பது கருத்து.

இந்திரன் உன் வரவை எய்தப்பெறுவானாயின், அது, அவன் இந்திரபதவியுடைமையினால்மட்டுமன்று, அப்பதவியோடு அவன் முன் அளவற்றகாலம் வருந்திப் புரிந்த தபோபலமுடைமையினாலுமென்பாள் 'அந்தமில் காலம் நோற்ற ஆற்றல் உண்டாயி னன்றி, இந்திரன் முதலி னோரால் எய்தலாம் இயல்பிற் றன்றே' என்றாள்.

மாசனம் சூழ வாகனமேறி வாழ்பாலனான நீ, தன்னந்தனியனாய்த் தாள்வருந்தத் தரையில் நடந்துவந்தாயென்பாள் 'பாதங்கொண்டுவர' என்றாள்.

சக்கரவர்த்திகுமாரனான நீ வரப்பெற்றமையால், எங்கள்வாழ்வு மேன்மை அடைந்ததென்பாள் 'வாழ்ந்தேம்' என்றாள்.

நீ மகாவிட்டுணுவின் அமிசாவதாரனாய்க் கடவுட்டன்மையுடையவனாதலால், உன்வரவு, யாங்கள் நரகத்தை யடையாமல் எங்கள் தீவினை யனைத்தையும் தீர்த்ததல்லாமல், எங்களைப் பரமபதமடையும் பாக்கியமுடையராகச்செய்ததென்பாள் 'உய்ந்தனம் வினையும் தீர்ந்தேம் உறுதிவே றிதனி னுண்டோ' என்றாள்.

இலக்குமணனது கடவுட்டன்மைபோல, அவனுடைய இராசத்தன்மையும், அவன் வரவு இந்திரனுக்குப் பெறவரிதாயிருந்ததற் கேதுவாம்; எவ்வாறெனில், இலக்குமணன், சம்பராசுரன் கவர்ந்துகொண்ட தேவலோக ராச்சியத்தை இந்திரனுக்கு மீட்டுக்கொடுத்த தசரத சக்கரவர்த்தி குமாரனாதலா லென்க.

## தாரை இலக்குமணனை வந்த காரியம் யாதென வினவல்.

[தாரை, இலக்குமணனை நோக்கி, 'வானரசேனை, நீ வேகமாக வந்தது கண்டு, அதன் காரணம் அறியாது கலங்கி அஞ்சாநின்றது. இன்னும்,

இராமனை இணைபிரியாத நீ இன்று தனியாய் இங்கே எய்திய காரியம் யாதோ' எனக் கேட்டாள். கேட்டது யாரென்று தெரியக் கருதித் தலையை நிமிர்த்துப் பார்த்து, அமங்கலியான தாரையைக் கண்டு, அவள்போல அமங்கலியான தன் அன்னையரை நினைந்து வருந்தினான். பூண்கள் பூணாமல் பூமாலை சூடாமல் சந்தனம் பூசாமல் வெள்ளைப்புடவையால், மார்போடு, மங்கலியம் கழித்த கழுத்தையும் சேர்த்துப் போர்த்துக் கண்டவர் இரங்கும் கைம்மைக்கோலத்தோடு நின்ற தாரையை நோக்கிய இலக்குமணன், அவளது அதிபரிதாபநிலையும் தனது தாயர்நினைவும் சேர்ந்து துன்புறுத்த, கண்கள் நீர்துளிக்க நின்றான். தன் தாயர் தாரையின் தன்மையராயிருப்பரென்ற நினைவு தோன்ற, வேறொன்றுந் தோன்றாது நின்று சிறிதுநேரம் சென்றபின்பு, தன்னை வினவினாட்குத் தான் உத்தரமாக ஓர் உரையும் உரையாதிருத்தல் உசிதமன்றென்ற உணர்வு உதிக்கத் தான் வந்த காரணத்தைச் சாற்றுவானானான்.

### இலக்குமணன், சுக்கிரீவன் சொன்ன தவணையில் வராதகாரணம் அறிய வந்தேனெனல்.

'சுக்கிரீவன், தானும் தன் சேனையுமாகச் சீதாதேவியைத் தேடிக் கொணர்ந்து செய்வதாக வாக்களித்ததை மறந்துவிட்டான். அவன் நிலைமையை அறிந்துவா, என்று எங்கோன் இட்ட கட்டளைப்படி வந்தேன். சுக்கிரீவன் செய்தது யாதென்று சொல்வாயாக' என்றான்.

### தாரை கூறுதல்.

'சினங்கொள்ளாதே. சிறியோர் தீமை செய்தால், தாயே போலும் தயையுடைய நீயே பொறாயானால், யாரே பொறுப்பார். சுக்கிரீவன், சொன்ன சொல்லை மறந்தானல்லன். சேனைகள் திரட்டிவரத் திசைகளனைத்திலும் செல்லும்படி திரள்திரளாகத் தூதரைச்செல்லவிட்டுப் பல பக்கங்களிலிருந்தும் படைகள் வருதலை எதிர்பார்த்திருக்கின்றான். இதுவே, தாமத காரணம். படைகள் வருங்காலமும் வந்துவிட்டது. சரணடைந்தார்க்குத் தாயினும் தயையிருந்த நீங்கள் சற்றுத் தாமதமாவதைச் சகித்தல்வேண்டும்.

நீங்கள் அளித்த செல்வம், அதனை அடைந்தாரை மனக்களிப்பு மிகப்பெருகி மதோன்மத்தராக்கி உங்கள் கட்டளைகடக்கச்செய்தால்,

அதற்கு முதற்காரணம் நீங்களாயிருத்தல், நீங்கள் பொறுத்தல் வேண்டு மென்பதை வலியுறுத்துகின்றது. உபகாரிகளான உங்களை உபேட் சித்து உங்கள் உத்தரவை உல்லங்கனஞ் செய்வாராறுல், அவர்கள் இழிசனராதலன்றி இம்மையில் ஏழைகளாய் மறுமையில் நரகத்தில் அழுந்துவரன்றே. தேவிபொருட்டு நேரும் போரில், பகைவரைக் கொல்வாராகவும் கொல்லமுடியாவிட்டால் கொல்லுண்பவராகவும் ஆகாமற்போனால், அவர்கள் சினேகமும் சினேகமாமோ. வாளி ஒன்றால் வாலியை மாய்த்த உங்களுக்குத் துணையும் வேண்டுமோ. எந்தத் துணை யும் உங்கள் வில்லினும் மிக்க துணையாமோ. சீதையைக் கவர்ந்தவனைச் செயித்தற்கன்றிச் சீதையைத் தேடிக் கண்டுபிடிக்கும் தக்காரைத் தேடுகின்றீர்கள். அந்தத் தேடும் தொழிலைச் செவ்வையாய்ச் செய்தற்குக் கடன்பூண்டவர் உம்மால் பகை ஒழிந்து பாக்கியமடைந்த சுக்கிரீவாதி யர்' என்றாள்.

## அநுமான், இலக்குமணன் கோபம்நீங்கிய குறிப்பறிந்துவந்து கும்பிடல்.

இவ்வாறு தாரை கூறியதை இலக்குமணன் இனிதாகக்கேட்டு இன்னருள்கூர்ந்து நின்றான். அதனைக் கண்டு, கோபந்தணிந்தானென்று கொண்டு, அநுமான், அருகில்வந்து, அடிபணிந்து நின்றான். இலக்கு மணன், அவனைநோக்கிக் 'கார்காலங் கழிந்தவுடன் சேனையுடன் திரும்ப வும் வரவேண்டுமென்று செப்பியதை நீயும் மறந்தாயன்றோ' என அநுமான் கூறுகின்றான்.]

## அநுமான், மற்றைப் பாவங்கள் ஒவ்வொன்றுக்கும் பல பரிகாரங்களுண்டு, செய்ந்நன்றிகொன்றபாவத்துக்கு ஒருபரிகாரமும் இல்லை யெனல்

505 'சிதைவகல் காதற் றாயைத் தந்தையைக் குருவைத் தெய்வப்
பதவிஅந் தணரை ஆவைப் பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கும் உண்டாம், மாற்றலாம் ஆற்றல் மாயா
உதவிகொன் றார்க்கொன் றானும் ஒழிக்கலாம் உபாயம் உண்டோ!'

இ-ள். 'தாயையும் தந்தையையும் குருவினையும் அந்தணரை யும் பசுக்களையும் சிசுக்களையும் பெண்களையும் கொலைசெய்தவர்களுக்கும் (அவர்கள் கொடிய பாவத்தை) மாற்றக்கூடிய (பல பரிகாரங்) உளவாகு

### அநுமான் இலக்குமணனுக்குச் சாந்தமுண்டாகும்படிபேசி அரண்மனைக்குள் வரும்படி அழைத்தல்.

['உங்களுக்கும் சுக்கிரீவனுக்கும் இட்டம் ஏற்படுதற்கு ஏதுவாயிருந்தது என்செயலன்றோ? என்னாலேற்பட்ட இட்டம் கெட்டதானால், என் அறிவு கெட்டதாமன்றோ? நாங்கள் உங்கள் அன்புக்குப் பாத்திராய், என்றும் தொண்டுசெய்யத் தவறேம். எங்கள் தவமும் நீங்களே, தருமமும் நீங்களே, பெற்றோர் முதலிய யாவரும் நீங்களே, தேவரும் நீங்களே யென்பது என் உள்ளத்துள் ஊன்றியுள்ள உண்மைக் கொள்கை. எங்கள் பத்திகாரணமாகவன்றி, உங்கள் சத்திகாரணமாகவும் உங்கள் கட்டளைகளைச் செய்தே தீரக்கடவேமாயுள்ளேம். நீங்கள் எங்கள்மேற் கோபங்கொண்டீர்களானால், நாங்கள் தப்பிப் பிழைக்கும் சார்பு உங்கள் இரக்கமன்றி எதுவுமில்லை.

சுக்கிரீவன், இராமன்கட்டளையை இலட்சியஞ்செய்யாதிருக்கவில்லை. படைதிரட்டுவாரைப் பல பக்கங்களுக்கும் அனுப்பிப் படைவரவு பார்த்திருக்கிறான். அவன் யாதோருதவியும் செய்யாதிருக்கவேயும், அவனுக்குப் பிறரெவராலும் செய்யமுடியாத பேருதவிசெய்த உங்களுக்கு உண்மையற்றவனானால், அவன் பிறந்ததனாலாய பயனைப் பெறாதவனாவதன்றி, இறந்தபின் எரிவாய்நரகம் எய்துவானுமாவனென்பது நிச்சயம்.

நீ முற்றத்தில் நிற்றல் முறையன்று. இதனை எதிரிகள் அறிகுவரானால், உங்களுக்கும் எங்களுக்கும் உள்ள உறவு ஒழிந்ததென இகழ்தற் கிடமாம். நீங்கள் அளித்த செல்வச்சிறப்பை அரண்மனைக்குள்ளே வந்து உன்தமையன் சுக்கிரீவனோடு சுற்றிப்பார்ப்பாயாக' என்றான்.

### இலக்குமணன் கோபந்தீர்ந்து கூறுதல்.

அநுமான் கூறியதைக்கேட்ட இலக்குமணன், 'நீங்கள் உதவிய செல்வத்தால் சுக்கிரீவன் பரவசனாய் உங்கள் ஆணைகடந்தால், அதன் ஆதிகாரணம் நீங்கள்தானே' என்று தாரை கூறியதைக்கொண்டும் அவளும் அநுமானும் சொன்ன மனப்பூர்வமான மதிப்பையும் வணக்கத்தையும் வெளிப்படுத்திய மெய்மொழிகளையும் நன்றியறிவசனங்களையும் கொண்டும் சுக்கிரீவன் இராமன் ஆணையை அலட்சியஞ்செய்தானல்லன்; நெடுங்காலம் வாலிகொடுமையால் மனையைவிட்டு மனைவியைவிட்டு வறுமையுற்று வனமே கதியாய் வருந்தியிருந்தவன் திடீரென இராச்சியப்

பெருஞ்செல்வமெய்தி இராசபோகத்தி லழுந்தி மதிமயங்கி வசமிழந்தத னால் வாக்குத்தத்தத்தை மறந்தானென வூகித்துணர்ந்து கோபத்தை விட்டு அநுமானைநோக்கிக் கூறுகின்றான்.

‘இராவணன் சீதையைக் கவர்ந்தது காரணமாக எழுந்த கோபத் தீயும் மானத்தீயும் ஒன்றுசேர்ந்து உயிரைத்தாக்க உயிரோடு உணர்வு மொடுங்கிய இராமன்தன்மை கண்டு, யான் சுகியேனாகித் தருமநெறி சற்றுந் தவறாதவன் அடையும் பயன் இதுவோவென்று தருமத்தை வெறுத்துப் பகையெனத் தள்ளவும், கொடுமையை விரும்பி உறவெனக் கொள்ளவும், பழிபாராது பாவிகட்குரிய பாதகத்தொழிலைப் பற்றவும் நெஞ்சுள் நினைத்தேன். ஆயினும், என் கோபத்தை யானாகவே தணித் துக்கொண்டு, இராமனைக் கோபமாற்றித் தேற்றிக்கொண்டிருந்தேன். அதனால், நாள்கள் பல கழிந்தன. அன்றி, எங்கள் கோபம் மாறாதிருந் தால், நெடுநாட்குமுன்னமே உலகம் ஊழிக்காலநிலைமை உற்றிருக்கும். இராமன், சுக்கிரீவனை அன்புகூர்ந்து தம்பியாகக்கொண்டு, சீதையைத் தேடுங் காரியத்தை அவனாற் செய்வித்து, அதனால் அவனுக்கு சிறப் பளிக்கக் கருதியே இதுகாறும் தாழ்த்திருந்தான். அன்றேல், காக ரூபமாகச் சீதையைத் தொந்தரித்த இந்திரகுமாரன், எல்லா உலகங்களி லும் ஓடிச்சென்று தேடிக், காக்கவல்லா ரொருவருமில்லாமைகண்டு, மீண்டு வந்து நீயே தஞ்சமென இராமனைச் சரணமடைந்து மன்னிக்கப்படும் வரையும் கொல்லல் குறித்துத் தப்பவிடாது தொடர்ந்த ராத்திய இராமபாணம் இராவணனைத் தேடிக் கொன்று சீதையை மீட்பதை யாவர் விலக்குவர்? நீங்கள் குறித்த கால எல்லையில் சேனை சேராத் தாமதஞ் செய்ததனால், அதருமத்துக்கு அநுகூலமும் தருமத்துக்குப் பிரதிகூலமும் செய்தீர்கள்’ என்று கூறி இலக்குமணன் பின்னும் கூறு கின்றான்.]

இலக்குமணன், வானரர் தாமதத்தால் தீயோர்க்கு இன்பமும், நல்லோர்க்குத் துன்பமும் பெருகியதெனல்.

506 ‘தாழ்வித்தீ ரல்லீர்; பன்னாள், தருக்கிய அரக்கர் தம்மை
வாழ்வித்தீர்; இமையோர்க் கின்னல் வருவித்தீர்; மாயில் தீராக்
கேள்வித்தீ யாளர் துன்பம் கிளர்வித்தீர்; பாவம் தன்னை
மூள்வித்தீர்; முனியாதானை முனிவித்தீர்; முடிதீர்’ என்றான்.

இ-ள். "(நீங்கள் தாமதஞ்செய்தீர்களென்றேன். உண்மையில்,) தாமதஞ்செய்திரல்லீர்: மற்றென்செய்தீரெனில், குறித்த தவணையில் சேனை கொண்டுவரப்பட்டிருந்தால், உடனே அரக்கரிருப்பிடந்தேடிக் கண்டு பிடிக்கப்பட்டு அவர்கள் கொல்லப்பட்டிருப்பார்கள். அரக்கர் கொல்லப் பட்டொழிபவே, தேவர் துன்பம் தீர்ந்திருக்கும், பிராமணர் துன்பம் நீடித்திராது, சாந்தமூர்த்தியான இராமன் கோபங்கொண்டிருக்கமாட்டான். இத்தனைக்கும் விரோதமாக, நீங்கள் எத்தனை பலநாள் சேனை கொண்டுவராது தாமதஞ்செய்தீர்களோ, அத்தனை) பலநாள் (அந்த) அரக்கரை (ச் சாதலினின்று தப்பி) வாழச்செய்தீர்கள்; அவரை வாழவிட்டதனால் அவரால் (அத்தனை பலநாள்) தேவர்க்குத் துன்பம் வளரச் செய்தீர்கள்; (அத்தனை பலநாள்) முனிவர் துன்பமும் அதிகப்படச் செய்தீர்கள்; (அத்தனை பலநாள்) பாவம் (ஆகிய தீமை) மூளச்செய்தீர்கள்; (இயல்பாகக்) கோபியாத (குணமுடைய) இராமனை (அத்தனை பலநாள்) கோபிக்கச்செய்தீர்கள்: (இந்தப் பல கேடுகளுக்கும் காரணராகிய ீர்கள்" என்றான் (இலக்குமணன்).

'தாழ்வித்திரல்லீர்' என்பதற்கு 'நீங்கள் காலதாமதஞ் செய்தவர்கள்மாத்திரமல்லீர்' என்பது முந்திய உரை. தாழ்தல் தாழ்த்தல் தாழ்க்குதல் தாழ்வித்தல் நீட்டித்தல் பாணித்தல் விளம்பனஞ்செய்தல் மந்தித்தல் ஆலசியஞ்செய்தல் தாமதித்தல் என்பவை ஒருபொருள் குறித்தவை. பல் நாள்—பலநாள்கள். தருக்குதல்—அகங்கரித்தல்; வருத்தல் (தமிழகராதி). தருக்கிய அரக்கர்—(தேவர் முதலிய நல்லோரைத்) துன்புறுத்திக்கொண்டிருந்த இராக்கதர். 'பன்னாள்' என்பதை 'வாழ்வித்தீர்,' 'வருவித்தீர்' முதலியவற்றோடு இயைத்தலல்லாமல், 'தருக்கிய' என்பதனோடும் இயைக்கலாம். இமையோர்—தேவர். இன்னல்—துன்பம். வருதல்—வளர்தல் (தமிழ்ச் சொல்லகராதி). 'மரபில் தீராக் கேள்வி தீ ஆளர்'—'வரன்முறையினின்று நீங்காத நூற்கேள்விகளையும் ஓமாக்கினிகளையுமுடைய முனிவர்'. கிளர்தல்—மேன்மேல் வளர்தல்; மிகுதல் (தமிழகராதி). தீ மூளல் தீ மூட்டல் என்ற வழக்குப்பற்றிப் 'பாவம் தன்னை மூள்வித்தல்,' பாவந்தீமை மூளச்செய்தலெனப் பொருள் எழுதப்பட்டது காண்க. முனிதல்—கோபித்தல். முடிதல்—கெடுதல்; சாதல்.

தாழ்வித்தல் என்பதற்குத் தாமதித்தலன்றித் தாழ்வுறச்செய்தலும் பொருளாம்: இப்பொருள்கொண்டால், இக்கவிப்பொருள்,—அரக்கரைத் தாழ்வுறச்செய்யவேண்டிய நீங்கள் வாழ்வுறச்செய்தீர்கள்; தேவர்

முனிவர் துன்பங்களைக் குறைத்திருக்கவேண்டிய நீங்கள், அதிகப் படுத்தினீர்கள்; இவ்வாறாகப் பாவத்தைத் தணிக்காது வளர்த்ததனால், இராமன்மனத்தைக் குளிரச்செய்யாமல் வெதும்பச்செய்தீர்கள்; ஆதலால் அழிவீர்கள் என்பதாம்.

## அநுமான்கூறல்.

[இவ்வாறு இலக்குமணன் கூற, அநுமான் 'கடந்ததைக் கருதலிற் காரியமில்லை. யாங்கள் செய்ததவறியதை இனிமேற் சித்தத்தில் வைத்தல்செய்யாது விடுக. யாங்கள் செய்வதாக ஏற்றுக் கொண்டதைச் செய்யாதுபோவேமானால், நீங்கள் எங்களைக் கொல்ல வேண்டியதில்லை. யாங்களே எங்களை மாய்த்துக்கொள்வேம். இது சத்தியம். இதற்குச் சாட்சி தருமதேவதையே. உள்ளேபோய் உன் தமயனைச் சேர்வாயாக' என்றான். எனவே, இலக்குமணன் 'அன்றும் நீ சொன்னபடி செய்தோம். இன்றும் உன் சொற்படி செய்வோம்' என்றுகூறி அரண்மனைக்குள்ளே போக ஆயத்தமானான். அதை அறிந்து, வாசலில் நின்ற தாரை வழிவிலகித் தோழியரோடு அந்தப் புரத்துக்குப் போனாள்.

அப்போது அநுமானல்லாத அமைச்சரோடு அங்கதன் வந்து இலக்குமணனை அடிபணிய, 'என்வரவை உன் தந்தைக்குத் தெரிவி' எனச் சென்று சுக்கிரீவன் பாதம் வருடித் தூக்கம் நீக்கி 'ஐய! இலக்குமணன் அளவற்ற கோபத்தோடு அரண்மனைவாயிலை அடைந்தான்' என, 'யாம் குற்றமொன்றும் செய்ததில்லையே; கோப காரணம் யாது?' என, நடந்த காரியங்களைக் கூற, 'ஏன் முன்னமே என்னிடம் சொன்னாயில்லை' என, 'இலக்குமணன் நமது நகர்நோக்கி வருதலை முன்னதாக உன்னிடம் வந்து தெரிவித்தேன். சிந்தை தெளிவின்றியிருந்தாயாதலால் தெரிந்தாயில்லை' எனச் சுக்கிரீவன் செப்புகின்றான்.

எனக்குப் போனபோது பேருதவிசெய்த இராமபிரான் திறத்தில் என் அன்பும் தொண்டும் இருந்தவாறென்னே! யான் அவனால் பெற்ற பேற்றினும் பெரும்பேறு பெற்றார் உண்டோ! என்னைக்கொண்டு அவன் நீக்கிக் கொள்ள நினைத்திருந்த துன்பமனைத்தையும் மதுவுண்டு மறந்த மடையனேன் இலக்குமணனை எவ்வாறு காண்பேன்! எனக் கூறுகின்றேன்.]

சுக்கிரீவன் மது உண்ணும் மடமை பற்றி வருந்தல்.

507 'ஏயின இதுவ லால்,மற் றேழைமைப் பால தென்னே!
தாய் இவள் மனைவி யென்னும் தெளிவின்றேல், தருமம் என்னாம்!
தீவினை வேறும் ஒன்றீ தன்றியும் தெரிக்க லாமோ!
மாயையின் மயங்கு கின்றாம்! மயக்கின்மேல் மயக்கும் வைத்தாம்!!'

இ - ள். '(ஒழித்தற்கரிய பகையை ஒழித்துப் பெறுதற்கரிய பெருவாழ்வளித்த பெருமான் அன்புறுதலை யான் மறக்கும்படி என்னிடம்) பொருந்திய (மதுவுண் மடமையே மடமை.) இதுவல்லாமல் (இதனைப்போலக் கேடுவிளைக்கும்) வேறு மடமை யாது உளது! (விலக்கியவற்றைச் செய்யாது விட்டு விதித்தவற்றைச் செய்வதன்றோ, தருமமாவது. காமசம்பந்தமாக விலக்கியவற்றுள் தாயிடத்துக் காமம்நுகர்தலும், விதித்தவற்றுள் மனைவியிடத்துக் காமம்நுகர்தலும் தலைமையானவை. கள்ளுண்ட மயக்கத்தில் காமம் நுகர்வானுக்கு) இவள் தாய் இவள் மனைவி யென்னும் (தெளிவில்லையாம். அவ்வாறு) தெளிவில்லையானால் (அவன்) தருமம் என்ன பயனுடையது! (கள்ளுண்ணும் தீவினையை நோக்க, ஏனைய தீவினை யாவையும் தீவினையாகா. கள்ளுண் தீவினையை ஒத்தது கள்ளுண் தீவினையே.) இஃதன்றி வேறேயும் ஒன்று (இதுபோன்ற) தீவினையாக இருப்பதைக் காட்ட முடியுமோ! (அந்தோ! மானுடரான நாமனைவரும், உண்மைப்பொருளான பரம்பொருளைத் தெரியாதபடி மறைக்கும் திரைபோலுள்ள தோற்றப்பொருளான பிரபஞ்ச) மாயையிலே (அகப்பட்டு) மயங்குகின்றோம்! (என்போன்ற பேதைகள், அந்த மாயை மயக்கத்தை நீக்க முயலாமையோ டொழியாமல், இயற்கையாயுள்ள அந்த மயக்கம் போதாதென்று செயற்கையாயுள்ள கள்மயக்கத்தையுங் கொண்டு, உள்ள) மயக்கத்துக்குமேல் (உபரி) மயக்கமுங்கொண்டோமானோம்!'

ஏயின, ஏய் (=பொருந்து) என்னும் பகுதியடியாகப்பிறந்த பெயரெச்சம், ஏய்ந்த என வருதல் பெரும்பான்மை ஏயின என அருகி வரும். உதாரணம் 'ஏயினவகையினாலே' (சிந்தாமணி 1453). ஏழைமை-பேதைமை - மடமை - அறியாமை. பால் - குணம் (பிங்கலம்) - தன்மை. ஏழைமைப்பாலது - அறியாமைத்தன்மையுடையது - அறியாமை. தெரித்தல் - தெரியச்செய்தல் - காட்டல். முதலடியில் உள்ள என்

யாதுளது என்ற பொருளும், இரண்டாமடி என் என்னபயனுடையது என்ற பொருளும் தருதல் காண்க.

இவள், முன் பின் வரும் தாய் மனைவி இரண்டுக்கும் இடையில் பொதுவாய்நின்று, பொருள்விளக்கம் குன்றாமல் சுருங்கச்சொல்லல் என்னும் வனப்புக்கு உதாரணமாயிருத்தலன்றி, அணிகளில் நடுநிலைத்தீவகத்துக்கும் பொருள்கோள்களில் தாப்பிசைப்பொருள்கோளுக்கும் சூத்திரநிலைகளில் சிங்கநோக்கு என்பது போலச் சொல்நிலையில் சிங்கநோக்குக்கும் உதாரணமாயிருத்தல் காண்க.

வயினிறவலால், தீவினை யைந்தினொன்று மன்றியுந் திருக்கு நீங்கா, மயங்குகின்றார், மயக்குவைப்பார் என்பனவும் பாடங்கள்.

மாணிக்கவாசகர் திருவாசகமே வாசகசிரோமணியாய் வாசகம் (எனத்தக்க சிறப்புடையது), வேறு (அதுபோல வாசகம் எனத்தக்க சிறப்புடையது) யாதுளது, ஒன்றுமில்லை யென்ற பொருள்பட 'வாசக மதுவே வாசகம்' எனச் சிவப்பிரகாசரும், நீர் எனத்தக்கது காவிரியே; வேந்தனெனத்தக்கவன் சோழனே; மண்ணெனத்தக்கது சோழ மண்டலமே; வேறில்லை யென்ற பொருள்படத் 'தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே - மண்ணாவதுஞ் சோழ மண்டலமே' என ஔவையாரும் கூறியவாறு கம்பர், மதுவுண்மடமையே மடமையென்றா னென்றார்.

கள்ளுண்ணுந்தீவினை, தன்னோடொழியாமல், மற்றைத்தீவினைகள் பலவற்றுக்குக் காரணமாமென்பதைக் காட்டும் கர்ணபரம்பரைக் கதை யொன்றுண்டு. அது யாதெனில்:—

வைதிகனான வழிப்பிரயாணி யொருவன், மரமடர்ந்த வனாந்தரத்தின் மத்தியில் வழிச்சென்றுகொண்டிருந்தான். அப்போது, அங்கே, அவனெதிராக, ஒக்கலில் பிள்ளையை இடுக்கிக்கொண்டிருந்த இடக்கையில் கள்ளுக் கலசமும் வலக்கையில் அரிவாளுமாக வந்த ஒருத்தி, வழிமறித்து 'இந்த அரிவாளால் இந்தப் பிள்ளையைக் கொல்லல், என்னைச் சேர்தல், இந்தக் கள்ளைக் குடித்தல் ஆகிய மூன்றில் உனக் கிட்டமான தொன்றைச் செய்: ஒன்றுஞ் செய்யாயெனில், உன்னை உயிரோடு விடேன்; வெட்டிவிடுவேன்' என்றாள். 'இந்தச் சண்டாளி சொற்படி செய்யாவிட்டால், நிராயுதனான என்னை எளிதிற் கொன்றுவிடுவாள்;

உயிர்தப்ப இவள் சொற்படி எதைச் செய்யலாம்! சிசுஹத்தி மஹா பாதகம்! ஸ்திரீ கமனம் நினைக்கவுமொண்ணாதது! இவ்விரண்டினும் மிகவும் குறைந்த தீமை, கள்ளுண்டல். இதைச் செய்வோம். ஆபத்துக்குப் பாபமில்லை' என்றெண்ணிக் கள்ளைக் குடித்தான். குடித்தவன், முன் குடியாதவனாதலால், உடனே குடிவெறி தலைக்கொண்டு காமாவேசமுற்று அவளைச் சேர்வானாயினன். அப்போது அழுத குழந்தையை இடையூறாய் நினைத்துத் தன் பக்கத்திற் கிடந்த அரிவாளால் வெட்டிக் கொன்றுவிட்டானென்பது.

கம்பர், காவிய காப்பியமும் நாடக நயமும் ஒருங்கு பொருந்தக் கதைநடத்திச் செல்வதோடு, தக்க சந்தர்ப்பங்களைப் பெட்டி அவ்வச் சந்தர்ப்பத்தால் வலியுறுத்தற்குரிய தத்துவஞானம் நீதிபுணர்வு இராச தந்திரம் உலகவறிவு முதலிய நல்லறிவுகளைக் கவிச்சுவையோடு கலந்தூட்டுதலைக் கம்பராமாயணத்தில் எத்தனையோ இடங்களிற் காணலாம். அப்படிப்பட்ட இடங்களில் இதுவொன்று. இங்கே, கள்ளுண்டிமையை வற்புறுத்துவாராய், அதற்குப் பூர்வாங்கமாகச் செய்ந்நன்றிமறத்தற் றீமையைச் 'சிதைவகல் காதற்றாயை' என்ற செய்யுளில் தெரிந்தவாறாக அநுமான் கூற்றாக வற்புறுத்திக்கூறி, அப்படிப்பட்ட செய்ந்நன்றிமறத்தலைச் செய்வித்த கள்ளுண்டிமையை தெரிவழிக் கள்ளுண்டு செய்ந்நன்றிமறந்த சுக்கிரீவன் கூற்றாய், இந்த 'மையின்' என்று தொடங்கும் செய்யுளில் வற்புறுத்திக்கூறிய பொருத்தம் கவனிக்கத்தக்கது.

இதுதான், நல்லோசையுடன் அதுதிர் முடிவுடையதாய், எந்த அடியை எங்கெடுத்தாலும் பொருத்தமுடையதாயிருத்தலால், அடிமறிமாற்றுப்பொருள்கோளுக்கு உதாரணமாக இச்செய்யுள் நல்லோரெல்லாம் அறிவும் ஆனந்தமும் ஒருங்கே பயப்பதாயுள்ளது. இதனில் அடி, தத்துவ ஞானத்தையும் நீதியையும் [illegible] [illegible] மாத்திரமாகக் கூறிக் கம்பராமாயணத்திற் காணப்படும் அருமையினும் அருமையும் இனிமையினும் இனிமையுமான அமுதகவிப் பகுதிகளுள் ஒன்றாயிருத்தல் சொல்லாமலே தெரியும்.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.

9. வள்ளலார் புகழுறுதை வடித்தபா
 வலரவ்ாசல் வரிசை பெற்றே
எள்ளலா வாழ்வுற்று ரென்பதிறும்
 பூதேயோ வின்று ளோரும்
விள்ளலா முறையவர்சிர் விளம்பலுறின்
 இசைவரிசை வேண்டி யாங்குக்
கொள்ளலா மென்பதைப் பாரிபாட்
 டாங்கேற்றங் குறித்த தன்றே.

10. பூதவுடம் பேயன்றிப் புகழுடம்பைப்
 பாடேர்க்கும் பொய்யா வள்ளல்
தீதகன்ற வேள்பாரி திருப்பாடல்
 அமைந்ததொரு திறமென் னென்பேம்
காதனனி நிறைந்துமனங் கரைவித்துக்
 கண்ணீர் காலச் செய்து
கோதகல என்புருகைத் துள்ளமுந்தன்
 வசங்கொள்ளை கொள்வ தாமால்.

11. இருந்துகூத் துகந்தபிரான் றில்லைபிற்பல்
 கலைமன்றந் திகழ வண்மை
பொருந்துகோப் பாரிபுகழ் போற்றியவெண்
 பாவினரங் கேற்ற நன்னாள்
நந்துகேட் டுளமுவந்த விளவரசோ
 டிதனுரிமை யேற்றெம் போல்வார்
 ]கூட்
மலையூழி வாழி மாதோ.

சுபம்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[கக-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

[அபாயம் அறுகலுற்று, அஞ்சும் நெஞ்சினராய் அடைந்தவரை அபயமளித்து ஆதரிப்பவரும் ஐம்பொறிகளை அடக்கிச் சுகதுக்கங்களை ஒருநிகராகக் கருதி விருப்பு வெறுப்பற்றவர்களும் நற்கதியடைதல் திண்ணமாதல்போலக், கள்ளுண்டார் தீக்கதியடைதலும் திண்ணமே.]

நஞ்சும், கள்ளைப்போலக் கோல்லுமேயன்றி, நரகத்திற்சேர்க்காதெனல்.

508. 'வஞ்சமும் களவும் பொய்யும் மயக்கமும் மரபில் கொட்பும்
தஞ்சமென் றோரை நீக்குந் தன்மையும் களிப்பும் தாக்கும்,
நஞ்சமேல் லனைத்தும் தீரும், கள்ளினால் அருந்தி னோரை:
நஞ்சமும், கொல்வ தல்லால் நரகினை நல்கா தன்றே.

இ—ள். 'வஞ்சனைபுரிதலும் களவுசெய்தலும் பொய்கூறலும் அறிவு மயங்குதலும் முறைதவறிய கொள்கைகளைக் கொள்ளலும் சரணடைந்தாரை(க்காவாமல்) தள்ளுதலும் கள்ளுண்பாரைச்சேர்ந்து வருத்துவனவாம். அவர்களை இலக்குமி விட்டகல்வாள் (அவர்கள் செல்வம் நீங்குமென்றபடி). நஞ்சும், (தன்னை உண்டாரைக் கள்ளைப்போலக்) கொல்லுவதல்லாமல், (அக்கள்ளைப்போலத் தன்னையுண்பார்க்கு) நரகத்தைத் தராது' (என்றான் சுக்கிரீவன்.)

கொல்லும் நஞ்சினும் கொடியது கள் என்பது கருத்து.

மரபு - முறைமை. கொட்பு - கொள்கை. களிப்பு - செருக்கு. தாக்குதல் மோ(திவருத்)துதல். தீர்தல் - நீங்குதல். அருந்தல் - உண்ணல். கள்ளினால் அருந்தினோரை - கள்ளை அருந்தியவரை: வேற்றுமை மயக்கம்.

சிறந்தபொருள் பொதிந்த இப்பாட்டின் இறுதியடி மிகவும் பாராட்டத்தக்கது.

[இவ்வாறு கூறிய சுக்கிரீவன், பின்னுங்கூறுவானுய்க் 'கள்ளினால் வருவது கேடேயென்று கேட்டிருந்தும் அதனை விலக்காது கெட்டேன். கள்ளை வாயால் மடுத்தல் கிடக்க, கையால் தீண்டுதல்மட்டுமோ,

கண்ணாற் காணலும் கருத்தாற் கருதலுமே தீயசெயலாம். இனிக் கொடிய கள்ளை விரும்புவேனானால், அக் கள்ளாலன்றி இராமபிரான் திருவடிகளாற் சிதைக்கப்படுவேனாக!' என்றான். பின்பு, இலக்குமணனை எதிர்கொண்டு வரவேற்குமாறு அங்கதனை ஏவித் தானும் தன் தேவிமாரும், உறவினர் சூழ அரண்மனையின் ஆசாரவாசலில் நின்றான்.

அங்கதன், இலக்குமணனை யடைந்து, திரும்பவும் தெண்டனிட்டுச் 'சுக்கிரீவமகாராசன் உன்னை வரவேற்கச் சித்தமாயிருக்கிறான்' என்றான். இலக்குமணன் சுக்கிரீவனிடம் சென்றபோது, அவன் இருமருங்கும் வெண்சாமரங்கள் துளங்க, மேலே வெண்கொற்றக் குடை விளங்க, எதிர்கொண்டுசென்று இலக்குமணனை வரவேற்றான். இலக்குமணன், சுக்கிரீவனைக் கண்டபோது, தன்மனத்திலுள்ளே சுவாலித்தெழுந்த கோபத்தீயைச் சாந்தநீரா லவித்துக்கொண்டு அரண்மனையுள்ளே சென்றான். அங்கே, சிங்காதனத்தின்மீது வீற்றிருக்கும்படி சுக்கிரீவன் வேண்டிக்கொண்டபோது, இலக்குமணன், 'இராமபிரான், நாட்டைத் துறந்து, காட்டை யடைந்து தரையாதனத்தி லிருக்க, நான் *அரியாதனத்தில் அமர்தல் ஆகுமோ?' என்று தரையிலிருந்தான்.

அதுகேட்டு வருந்திய சுக்கிரீவன், 'ஐய! போசனசமயமாகியது. நீராடி அமுதுசெய்க' எனத் 'துன்பமும் பழியும் நிறைந்த எங்களுக்கு இனிமையானது எதுவுமில்லை. "கருத்துவேறுற்றபின் அமிழ்தும் கைக்குமால்". அரக்கன் சீதையைக் கவர்ந்து மூட்டிய பழித்தீயால் தகிக்கப்பட்டுள்ளோம். அவனைக் காட்டினையானால், அத்தீயையவித்து எங்களைக் கங்கைநீராட்டினை யாவாய்; தேவாமிர்தம் ஊட்டினையுமாவாய். பச்சிலையோ கிழங்கோ, காயோ கனியோ, எதாயினும் எம்பிரான் உண்டுமிஞ்சிய மிச்சிலை உண்பேனன்றி வேறெதனையும் நாயின் எச்சிலெனக் கருதுவேன். நான் திரும்பிப்போய்க் கிளை முதலியவற்றைத் தேடிக் கொணர்ந்து எம்பிரானை உண்பிக்கவேண்டியிருத்தலால், இங்கே தாமதித்தல் சிறிதும் தகாது' என்றான்.

எனவே, சுக்கிரீவன், இராமனது நிலைமைக் கிரங்கி, வானரசேனையைத் திரட்டிவருமாறு அநுமானுக்குக் கட்டளையிட்டுவிட்டு இராமனிடம் செல்வானானான். இலக்குமணன் வாகனம் ஏறாதாக, அவனுடன்

* சிங்காதனத்தில்.

சுக்கிரீவன், தானும் பாதசாரியாய்த் தன் சிவிகை பின்வரச் சேனை சூழச் சென்று, இராமனிருந்த இடத்தைச் சமீபித்தபோது சேனையைப் பின்னே நிறுத்திச் சென்று, இராமனைக் கண்டு வணங்கினான். அவன், கோபம் மாறி அன்பு மீதூர, வணக்கினவனை யெடுத்து மார்புறத் தழுவிப் பக்கத்தில் இருக்கச்செய்து, 'உன் அரசும் ஆணையும் நன்கு நடக்கின்றனவே? உன் குடிகள் குறையின்றி இனிது வாழ்கின்றனரா?' என்று சேமவிசாரணை செய்தான். சுக்கிரீவன், 'உன் கிருபையால் எக்குறையுமின்றி எல்லாம் நன்றாயிருக்கின்றன' என்று விடையளித்து, 'நீ பேரருள்புரிந்து செய்த அரிய உதவியால் அரசச்செல்வமனைத் தும் அடைந்த அடியேன், உன் கட்டளையை நிறைவேற்றாமல் என் நாய்க்குணத்தைத் திரும்பக் காட்டிவிட்டேன். சீதாதேவியைத் திசைதோறுஞ் சென்று தேடிக்காணும் சேவையைச் செய்தேனில்லை. அவள்பிரிவால் நீ வருந்தியிருக்கவும், நான் மனைவியரோடு வாழ்ந்து மகிழ்ந்திருந்து பெரும்பிழைபுரிந்தேன்' என்றான்.

இராமன், 'நீ உன்னை நோதல்வேண்டா. இதுவரையும் எந்த முயற்சியும் செய்தற் கிடங்கொடாத கார்காலம் கழிந்திருந்தது. உன் இரங்கல்வார்த்தைகள், இனிச் செய்யற்பாலதைத் தீவிரமான சிந்தை யோடு செய்வாயென்பதைத் தெளிவாகத் தெரிவிக்கின்றன. இனி, நீ குற்றஞ்செய்ததாகக் கூறுதலொழிதி. அநுமான் எங்கேயிருக்கிறான்?' என, 'எண்ணிறந்த தூதர்கள், எல்லாத்திசைகளிலும் உள்ள சேனைகளைத் திரட்டிக்கொண்டுவரச் சென்றிருக்கிறார்கள். சேனைகள் வந்துசேரும் நாள் இன்றுதான். அவைகளோடு அநுமான் நாளை இங்கே வருவான். எல்லாச்சேனைகளும் வந்தவுடனே, நாம் செய்யவேண்டியதைச் சிந்தித்து முடிவுசெய்யலாம்' என்று சுக்கிரீவன் சொன்னான்.

இராமன், 'இப்போது பகற்பொழுது கழிந்தது. நீ ஊருக்குப் போய் நாளைத்தினம் சேனையுடன் திரும்பிவா' என, அவன் வணங்கிச் சென்றான். அவன் சென்றபின், இலக்குமணன், அவனிடம் தான் போனபோது நிகழ்ந்தவற்றை இராமனிடம் தெரிவித்தான்.]

கிட்கிந்தைப்படலம் முற்றிற்று.

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.


தொகுதி-௩௧] ஸ்ரீமுக௵ பங்குனிமீ [பகுதி-௫.

Vol. XXXI. March-April 1934. No. 5.


## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௧௬-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

### தானைகாண்படலம்.

இராமலக்குமணர் வானரசேனையைப் பார்வையிட்டதைக்கூறுவது.

வானரசேனாதிபதிகள்

தங்கள் தங்கள் சேனைகளுடன் வருதல்.

[மலைகள் எங்கும் உரோமம்முளைத்தனபோன்ற வடிவமும், தனித் தனியாகவே அரக்கரனைவரையும் அழிக்கத்தக்க ஆற்றலும், வீரமும் வெற்றியும் உருவெடுத்தாற்போன்ற தோற்றமும் உடைய நீலன் ஜாம் பவான் அநுமான் குமுதன் பதுமுகன் முதலிய வானரசேனாபதிகள் தங்கள் தங்கள் சேனைகளுடன் வந்தார்கள். அந்தச்சேனைகள் வேண்டு மென்றால் பெரிய மேருவை வேரோடுபிடுங்கவும் தெள்ளிய கடலைக் கலக்கிச் சேறாக்கவும் வல்லவை; கோபங்கொண்டால் சூரியனையும் வலி கெடத்தொலைக்கும் வலிமையுடையவை; அகங்காரமடைந்தால், தம் மைத்தாங்கும் பூமியையும் தனித்தனியே குத்தியழிக்கும் சக்தி படைத்தவை. அந்தச்சேனை, * தோய்ந்தால் சமுத்திரமும் வற்றிவிடும்; சாய்ந்தால் மேருவும் சாய்ந்துவிடும்; † காய்ந்தால் கனற்கடவுளும் கதிர்க்கடவுளும் கரியாய்விடுவர்; உண்ணுமானால், உலகமுழுதும் ஒரு

* குளித்தால். † கோபித்தால்.

கவளத்துக்கும் பற்றாது; குடிக்குமானால், எழுகடலும் ஒருகை அள்ளிக்குடிக்கப் போதா; ஒடிக்குமானால் மேருவையும் ஒடித்துவிடும்; இடிக்குமானால் வானமுகட்டையும் இடித்துவிடும்; பிடிக்குமானால் காற்றையும் கூற்றையும் பிடித்துவிடும்.

இப்படிப்பட்ட வலிய பெரிய சேனைத்திரள்களோடுவந்த சேனைத் தலைவர்கள், சுக்கிரீவனை வணங்கினார்கள். அவன் இராமனிடம்சென்று 'உன் சேனைகள் வந்திருக்கின்றன. கண்டருள்க' என, அவன், சீதையை வரப்பெற்றாற்போலச் சிந்தை களிகூர்ந்து இலக்குமணனுடன் சென்று அந்தச் சேனைப்பரப்பைச் செவ்வையாகப் பார்க்கத்தக்க ஓர் உயரிய மலைச்சிகரமேலேறினான். சுக்கிரீவன் திரும்பிச் சேனையினிடஞ் சென்று அதனை வடதிசைநின்று தென்திசைநோக்கிச் செல்லுமாறு பணித்துவிட்டுச் சேனைத்தலைவரையழைத்துக்கொண்டு இராமனை அடைந்தான். அவர்கள் அவனை வணங்க, அவர்கள் ஒவ்வொருவர் வரலாற்றையும் தெரிவித்துச் 'சேனையைக் காண்பாயாக' என, அவன் காணலுற்றான்.

அப்போது சேனை சென்றதனாலுண்டாகிய புழுதி, பூமியையும் வானத்தையும் போர்த்து எங்கும் இருளடையச்செய்தது. இராமலக்குமணரிருவரும் தங்கள் பார்வை எட்டுமட்டும் கூர்ந்துபார்த்தும் சேனையின் ஒரு பகுதியையே கண்டாரென்றால், அதன்மிகுதியைச் செப்பலாமோ!

மூவுலகத்திலும் உள்ள வீரருள் முதல்வனான இராமன், அந்தச் சேனையைக் கண்ணினாலும் கருத்தினாலும் கல்வியறிவினாலும் அளவிட்டுக் காண்பானாய், இலக்குமணனை நோக்கிக் கூறுகின்றான்:]

இந்தச்சேனையைக் கண்டோமென்பது
கடல்கண்டோமென்பதுபோலு மெனல்.

503 'அடல்கொண் டேந்திய சேனைக்கு நாமுநம் அறிவால்
உடல்கண் டோம்இனி முடிவது காணுமா றுளதோ!
மடல்கொண் டேந்திய அலங்கலாய், மண்ணிடை மாக்கள்
"கடல்கண் டோம்" என்பர்; யாவரே முடிவுறக் கண்டார்?'

இ-ள். '(மற்றவர்கள்போல், நாமிருவரும் (நம் கண்களை எட்டுமட்டும் செலுத்திப்பார்த்து) இந்தச் சேனைக்கு உடல் (ஆகிய நடுப்பகுதியில் ஒரு பகுதியைத்தான்) கண்டோம். (இதன் கால் தலையாக) உள்ள முடிவுகளைக் காணும்வகை உண்டோ? (கடலைக்கண்ட) மனிதர்கள் "கடலைக் கண்டோம்" என்பார். (ஆனால் அவருள்) எவர்தாம் (கடலை) முற்றும் கண்டவர்?'

கடலைக்கண்டோமென்பாரெல்லாரும் அதன் ஒரு சிறுபகுதியையே கண்டவர்கள். அவ்வாறே நாம் இந்தச் சேனையைக் கண்டோமென்பது இதன் ஒரு சிறுபாகத்தைக் கண்டோமென்பதேயாமென்பது கருத்து.

அடல் - வலிமை. உளமுடிவு-(இந்தச்சேனைக்கு) உள்ள முடிவெல்லை. மடல் - இதழ். அலங்கல் - மாலை. மாக்கள் - மனிதர். 'முடிவு உள' என்பதை 'உளமுடிவு' என மாற்றிப் பொருள்கொள்ளப்பட்டது. மாற்றாமல், முடிவாகவுள்ளவை (களாகிய பகுதி) களை யென்றும் உரை செய்யலாம்.

இப்பாட்டின் ஈற்றடி நனியினிய கவிப்பகுதிகளுள் ஒன்று. இதில் எடுத்தாளப்பட்டுள்ள உவமானம், ஊன்றிநோக்க, அதன் உவமேயத்தோடு எத்தனையோ பலவகைகளில் ஒற்றுமையுடையதாயிருத்தல் பாராட்டற்பாலது.

## சேனைப்பெருமையும் வலிமையும்.

[இவ்வாறு கூறிய இராமன் பின்னும் கூறுவானாய், 'எங்கும் நிறைந்த இறைவன் திருமேனியையும் வரையறுக்கமுடியாது பரவியிருக்கும் பத்துத்திக்குகளையும் அளவற்ற அண்டங்களனைத்திலும் நிரம்பிய ஐம்பெரும்பூதங்களையும் அறிவுடையார்பலர்பாற் காணப்படும் அறிவுவிகற்பங்களையும் பேச்சுக்குமேற் பேச்சாக வாக்குவல்லார்பேசும் பேச்சுப்பெருக்கத்தையும் உலகந்தோன்றியநாள்முதல் முடிவின்றித் தோன்றிக்கொண்டிருக்கும் சமயபேதவகைகளையும் போல, இந்தச்சேனையும் முடிவுகாண முடியாததாயிருக்கின்றது' என்றான்.

அப்போது, இலக்குமணன், 'இந்தக் குரங்குப்பெருஞ்சேனையின் பகுதிகள் இத்தனையென அளவிடுதற்கு உறையிடவுதவும்படி பிரமதேவன் மற்றைய உயிர்களைப் படைத்தான்போலும். இந்தச்சேனையை முழுதும் பார்த்தபின்பு நாம் செய்யவேண்டியதைச் செய்வோமென்றால், இதனைப் பார்த்தலிலேயே பலநாள் கழிந்துவிடும். ஆதலால் இதனைப் பார்த்தலை நிறுத்தி நாம்செய்தற்குரியதைச் சிந்திப்போமாக. எந்த உலகத்தில் எந்தக்காரியந்தான் இந்தச்சேனை செய்துமுடித்தற்கரிதாயுள்ளதென்று சொல்லத்தக்க திருக்கின்றது? யாதொன்றுமில்லை. இந்தச் சேனைக்குச் சீதாதேவியைத் தேடிக் காண்பது, அநாயாசமாய்ச்செய்து விடும் அற்பவேலையேயாம். இந்தப்படையினால், பாவம் தோற்று விடும்; தருமம் செயித்துவிடும். இனித் தாமதியாமல் சீதையைத் தேடத்தக்காரைத் திசைகளெங்கும் செல்லும்படி செய்தல்வேண்டும்' என, இராமன் சுக்கிரீவனைநோக்கிச் சொல்வானானான்.]

தானைகாண்படலம் முற்றிற்று.

(தொடரும்.)

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.



உ

கடவுள் துணை.


# செந்தமிழ்.

| தொகுதி-௩௧] | பவ௵ சித்திரை மீ | [பகுதி-௬. |
|---|---|---|
| Vol. XXXI. | April-May 1934. | No. 6. |


## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௧௧௯-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

### நாடவிட்டபடலம்.

*சுக்கிரீவன் சீதையைத் தேடும்படி வானரவீரரைப் பல திசைகளிலும் விடுத்ததைக் கூறுவது.*

#### சுக்கிரீவன் சீதையைத்தேடச் சேனைத்தலைவரை அனுப்புதல்.

[சுக்கிரீவன், அநுமானை நோக்கி, 'உன் தந்தை வாயுபகவான் போல, நீயும் உலகெங்கும் புகுந்து உலாவவல்லையல்லையோ, நீ, சீதாதேவி எங்கிருந்தாலும் சிறிதுந் தாமதஞ்செய்யாமல் தேடிக்காணல்வேண்டும். அவளைக் கவர்ந்துகொண்டுபோன இராவணன் தென்திசைநோக்கிச் சென்றுறைதலால், அவனது இராசதானியாகிய இலங்கைமாநகர் அத்திசையிலிருக்குமென்றெண்ணுகின்றேன். அங்கதன் சாம்பவான் முதலியோர் கூடவர, இரண்டுவெள்ளஞ்சேனையுடன் தென்திசைநோக்கிச் செல்வாயாக' என்று கற்பித்து, மற்றைப் படைத்தலைவரை மற்றைத் திசைகளில் இரண்டிரண்டுவெள்ளஞ் சேனையோடு சென்று தேடிவரும்படி பணித்தான்.

#### சுக்கிரீவன், தெற்கேசெல்வோரிடம் செப்புதல்.

அவன், தெற்கே செல்வாரை நோக்கி, 'ஆயிரங்கோடிமுடியுடைமையால் ஆயிரந்திருமுடியுடைய ஆதிநாராயணனென்று கண்டவர்

*

தெண்டனிடும்படி விளங்கும் விந்தமலையை மேவுவீர்கள். அப்பால், பெரு
வளமுடைய நருமதைநதியையும் ஏமகூடமாமலையையும் பெண்ணை
யென்னும் புண்ணியநதியையும் தண்டகவனத்தையும் முண்டகத்துறை
யையும் பாண்டுகிரியையும் கோதாவிரியையும் சுவணநதியையும் சூரிய
காந்தக சந்திரகாந்தக மலைகளையும் சேர்வீர்கள். பின்பு, வேறு ஆறு
களையும் பாலைவனம் சுனைகளையும் கடந்துபோய்க் காலாற் சென்று அடை
தற்கரியதாயினும் கண்ணாற் கண்டு களிக்கக் கூடிய அருந்ததிமலையை
யும் மரகதகிரியையும் கண்டு தெண்டனிடுங்கள்.

பிறகு, வடமொழி தென்மொழி நிலங்களுக்கு வரம்பாய், இரண்
டுக்கும் மத்தியாய், வேதாகம புராணேதிகாசங்கள் விதந்து கூறும் விசேட
முடையதாய் அறப்பயனளிப்பதாய் விளங்கும் வேங்கடமலையைக்
காண்குவீர்கள். பெருஞ்செல்வ வாழ்வையும் பிச்சைபுகுந் தாழ்வையும்
ஒருநிகராகக் கருதிடுவோராய்ப் பயன்கருதிச் செய்வது நல்வினையாயி
னும் பிறப்புக்குக் காரணமென் றுணர்ந்து தாம் செய்யும்வினைகளைப்
பலன்விரும்பாது செய்வோராய், இறைவனை வணங்கும்வினையையும்
முத்திவேண்டிச் செய்யாது பத்திதூண்டிச் செய்வோராய் விளங்கும்
மெய்ஞ்ஞானிகள் அந்த மலையிலே யிருக்கின்றார்கள். அவர்கள் இங்கிருந்
தேயும் இறைஞ்சிடற்பாலார். அந்தமலையை நெருங்கினீர்களானால் முத்தி
யடைந்திடுவீர்கள். அது சீதாதேவியைத் தேடும் இராமகாரியத்துக்கு
இடையூறாய்விடுமாதலால், அம்மலையை அணுகாமல் விலகிப்போய்த்
தொண்டைநாட்டை அடையுங்கள். அப்பால், இன்ப வளமுடைய சான்
றோர்மனம்போல நீர்வளமுடைய சோழநாட்டையும் அதன் மேல்பால்
சேரநாட்டையும் தென்பால் பாண்டியநாட்டையும் தாண்டி மகேந்திர
மலையைக் கடந்தீர்களானால் கடலைக் காண்பீர்கள். இவ்வாறு தென்திசை
முழுதும் தேடி ஒரு திங்கள் செல்லுமுன் திரும்புவீர்களாக' என்று
செல்லும் வழிவிவரமும் திரும்பும் அவதிமுடிவும் கூ[illegible]றன்.

## இராமன் சீதையின் அங்கலக்கணத்தை அனுமானுக்கு அறிவித்தல்.

அப்போது, இராமன், அனுமானை ஓர் ஏகாந்தமான இடத்துக்கு
அழைத்துப்போய்ச் சீதையை அறிதற்குரிய அடையாளங்களைக் கூறுவா

றாய் 'அவளைக் கால்நகந்தொட்டுத் தலைமயிர்மட்டும் (நக சிகை வருணனையாக) வருணிக்கப்புகுந்தோர் "ஏ, முருக்கம்பூவே! பாம்பு பரமசிவனுக்கு ஆபரணமாய்க் கருடனைக் கஞ்சாமல் ""கருடா, சுகமா? என்று"" பரிகசித்ததுபோல, நீ, மாதர்வாயாய் எனக்கு (கிளிக்குப்) பயப்படாமல் சீதையின் காலில் உள்ள நகத்துக்கு என் (கிளியின்) தலையில் உள்ள மூக்கு ஒப்பாகாதென்று பழித்தாயே, உன்னை ஒழித்து விடுகிறேன்" என்று சீறித் தாக்குதல்போலக் கிளி, பழிக்கப்பட்ட மூக்கைக் கொண்டே பழித்த முருக்கம்பூவைக் கொத்திக் கிழிக்குமென்றால், அந்தக் கிளிமூக்கைச் சீதைநகத்துக்கு உவமையாக எடுத்துக்கூறலாமோ" * என்றும், "பூக்களுட் சிறந்த தாமரை சீதையின் காலுக்கே உவமானமாகாதென்றால், முகம் கண் வாய் கை உந்தி யென்னும் உறுப்புக்களுக்கு உவமானமாமோ" † என்றும் கூறி, அவளுடைய அவயவமெதற்கும் ஏற்ற உவமான மில்லாமையை உணர்ந்து, மேற்கொண்டு வருணனைசெய்யமாட்டாதுபோயினர். மற்றைய மாதர் அவயவங்களுக்கு உவமானமாகும் சிறப்புடைய பொருள்களுக்குச் சீதையின் அவயவங்கள் உவமானமாகும் சிறப்புடையவை § யென்றால், அப்படிப்பட்ட அவயவங்களை வருணிக்குமாறு எவ்வாறு! உபர்வொப்பற்ற அழகுநிறைந்த அவளுக்கு அவளே உவமையாதல்போல, அவளுடைய சம்பூரண சௌந்தரியம்பொருந்திய அவயவங்களுக்கு அவைகளே உவமையாம். அவளுடைய கண்கள் காதுகள்போன்ற இணைப்பட்ட உறுப்புக்கள், ஒன்றுக்கொன்றுவமையாம் ‖. கூந்தல் முகம்போன்ற தனிப்பட்ட உறுப்புக்கள், தமக்குத்தாமே உவமையாம். இத்தகைய இலக்கணமுடையவள், மூன்றுலகத்திலும், வேறெவருமில்லை. மதிக்கு மறுவுண்டு; பூவிற்கும் புறவிதழுண்டு; மற்றைய அழகுடைப் பொருள்களனைத்துக்கும் குறை ஒன்றோ பலவோ உண்டு. சீதைக்கு மாத்திரம் எக்குறையும் இல்லை: எல்லா நலங்களும் இனிது நிரம்பியிருக்கின்றன. இவ்வாற்றால் நீ சீதையைப் பார்த்தமாத்திரத்தில் சீதையென்று தெரிந்துகொள்வாய்.

---

* 'வெள்ளிய முறுவல்' என்ற ௪௭-ம் பாட்டையும் † 'வலக்கொண்டு' என்ற ௪௯-ம் பாட்டையும் பார்க்க.

§ 'முன்கையே' என்னும் ௪௫-ம் பாட்டையும் ‖ 'கேகினாக்கின்' என்னும் ௫௰-ம் பாட்டையும் இப் பாட்டுக்களுக்கு ஸ்ரீ சடகோபராமாநுஜாசாரியார் முதலியோர் எழுதியிருக்கும் உரைகளையும் பார்க்க.

### அனுமான் இராமதூதனெனச் சீதை துணிவதற் கறிகுறியான செய்திகளை இராமன் கூறல்.

நீ சீதையைத் தெரிந்துகொண்டபின், அவளை அணுகி, நீ என் தூதனென அவள் ஐயமின்றி அறிந்துகொள்ளும்படி, நான் மிதிலா நகர்வீதிவழியே விசுவாமித்திரமுனிவனுடன் சென்றபோது கன்னியா மாடத்தில் அவளைக் கண்டதையும், கன்னியாசுல்கமாக* நான் சிவன் வில்லை முறித்ததை அவள் கேள்வியுற்றபோது "முறித்தவன் முனிவனுடன் வந்தவனல்லனாயின், உயிரைவிடுவேன்" என்று உரைத்த கற்புறுதியையும், அவள் என்னுடன் காட்டுக்குவருவேனென்றபோது "வருவாயானால் இதுவரையும் எனக்கு இன்பத்துக்கு ஏதுவாயிருந்த நீ துன்பத்துக்கு ஏதுவாவாய்" என்று நான் சொன்னதற்கு அவள் "காடு செல்லும் உனக்கு நான் ஒருத்தியொழிய எல்லாம் இனியனவோ" என்றுகூறிக் கண்ணீர்சொரிந்து, உடம்பைப் பிரியும் உயிர்போலத் தத்தளித்துத் துன்பம் தாங்கமாட்டாது சோர்ந்ததையும், நாங்கள் அயோத்திநகரினின்று காட்டுக்குப் புறப்பட்டபோது, மதில்வாயில் கடக்குமுன் அவள் "எங்கே காடு" என்றதையும் கூறு' என்று கூறித் தன் கணையாழியைக் 'கொடு' என்று கொடுத்துச் 'சுகமாகப்போய்வருக. நீ செல்லுங்காரியம் இடையூறின்றி இனிது முடிக' என்று வாழ்த்தி வழியனுப்பினான்.

### அனுமான் முதலியோர் சீதையைத்தேடத் தெற்கே செல்லுதல்.

அனுமானும் அங்கதனாதியோரும் இராம லக்குமண சுக்கிரீவரை வணங்கி வழியனுப்பிக்கொண்டு சீதையைத் தேடுதற்குத் தென்திசை நோக்கிச் செல்வாராயினர்.]

நாடவிட்டபடலம் முற்றிற்று.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

* 'ஒருவன் ஒருகன்னிகையை மணந்துகொள்வதற்கு நிபந்தனையாக ஏற்படுத்தும் வில்வளைக்கை ஏறுதழுவுகைபோன்ற செயல்'

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[கஙஉ-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

## பிலம் நீங்குபடலம்.

(பிலம்-குகைபோல நிலத்தின்கீழ் உள்ள அறை.)

*அனுமானாதியோர் வழிச்செல்கையில் ஒரு பாலைவனத்திலிருந்த பிலத்துட்புகுந்து வெளிவந்ததைக் கூறுவது.*

### அனுமான்முதலிய தலைவர்கள் சேனைகளுடன் செல்லுதல்.

*[அனுமான்முதலிய வானரவீரர்கள் சுக்கிரீவன் சொன்ன தானங்களிலே விந்தமலை முதலாக ஏமகூடமலை யிறுதியாக உள்ள இடங்களில் சீதையைத் தேடிக்கொண்டு சேனைகளுடன் சென்றார்கள்.*

### பல இடங்களில் சீதையைத்தேடி மகேந்திரமலைக்குவரும்படி சேனைகளை அனுப்பிவிட்டுத் தலைவர்கள் தனியே செல்லும்போது ஒரு பிலத்துட் புகுதல்.

*ஏமகூடமலையை நீங்கியபோது, சேனைகளைப் பல கூறுகளாகப் பகுத்துப் பல இடங்களிலும் சீதையைத்தேடி முடிவில் மகேந்திர மலைக்குவந்து தங்களைச் சந்திக்கும்படி அனுப்பிவிட்டு, அத்தலைவர்கள், வழிச்செல்கையில், நீரென்னும் பேருமில்லாமல் காய்ந்ததாயும் சூரியனும் அஞ்சும் சூடுள்ளதாயும் இருந்த ஒருபாலைவனத்தைச் சேர்ந்தார்கள். அதன் கொடிய சூட்டினால், தரையில் தாளூன்றமாட்டாது தாவிக்குதித்துச் சுட்ட சட்டியிலிருந் தெழுகின்ற நெற்பொரிகள் போலத் துள்ளித் துடித்து, ஒதுங்க நிழல்காணாது தவித்து, இனி உயிர் நிலையாதென் றெண்ணும் சமயத்தில் ஒரு பிலத்தைக்கண்டு, இதனுள் நுழைந்து இச்சூட்டிக்குத் தப்பிப் பிழைப்போமென்று அதனுள்ளே புகுந்தார்கள். புகுந்தவர்கள், அதன் உள்ளிடத்தை அடைந்தபோது, அங்குள்ள பேரிருள் மூடிக்கொள்ள, வந்தவழியும் போம்வழியும் தெரியமாட்டாது மயங்கித் தியங்கினார்கள். அங்கதன்*

முதலியோர், இனி இப்பிலத்தினின்று வெளியேறுமாறில்லை, இங்கேயே இறந்துவிடுவோமென்றேங்கி 'அநுமானே, நீ எங்களைக் காக்கவல்லையோ?' என, அவன் 'அஞ்சாதீர்கள், நான் உங்களைப் பிழைக்கச்செய்வேன். என் வாலைப்பற்றி, விடாது தொடர்ந்துவாருங்கள்' என்று, வழியைக் கையால் தடவிக் கண்டுகொண்டும் காலால் நடந்துகொண்டும் கடந்து சென்றான்.

### அவர்கள் அந்தப் பிலத்தினுள்ளே ஒரு நகரத்தைக் காணல்.

அவர்கள் இவ்வாறு நெடுந்தூரம் சென்றபோது, படிப்படியாக இருள் நீங்க, முடிவில், சூரியமண்டலம் பூமிக்குள்ளே ஒரு மறைவிடம் தேடி உறைவதுபோன்ற தேசோமயமான நகரமொன்று காணப்பட்டது. அது, சோலைகளும் தடாகங்களும் மலியப்பெற்றுப் பொன்னாலும் மணியாலும் புனைந்தியற்றப்பட்ட மாடவரிசைகளையுடையதாய்ச் சூரியப்பிரகாசம் வேண்டாது சுயம்பிரகாசமுள்ளதாய், இந்திரநகரும் இணையிலாததாய்க் குலோத்துங்க (?*) சோழனைப் பாடிப் பரிசுபெற்ற புலவர்மனைகள்போல எங்கும் பொற்குவியல்களும் விலைமிக்க ஆடையாபரணங்களும் அமிழ்தமனைய அன்னம் முதலிய அறுசுவையுண்டிகளும் இனிய கனிவகைகளும் கலவைச்சந்தனமும் பூமாலைகளும் நிறையப் பெற்றதாயிருந்தது.

### அவர்கள் அந்நகருட் புகுந்து, மற்றெல்லாமிருந்தும் மனிதரில்லாமைகண்டு மயங்கல்.

அவர்கள் அந்நகரத்துள்ளே புகுந்து, இந்நகர் இராவணனது இலங்கையாயிருக்குமென்றெண்ணிச் சீதையைக் காணலாமென்று மகிழ்ந்து தேடினார்கள். அங்கே, எங்கேயும் சித்திரங்களிலும் சிலைகளிலுமுள்ள செயற்கைமனுடரன்றி இயற்கைமனுடரெவரையுங் கண்டிலர். மனிதர் நுகர்பொருள்யாவும் மலிந்திருந்தும் மனிதரில்லாத மாயம் என்னேவென்று திகைத்து 'இந்நகர் பாதாளத்திருத்தல்பற்றி நாகமென்னலாகாது; விண்ணில் இராததாயினும் முழுதும் பொன்மயமாய்ச் சகல போக்கியப்பொருள்களும் நிறைந்திருத்தலால் சுவர்க்கமென்ன

* ஸ்ரீ சடகோபராமாநுஜாசாரியர் உரையைப் பார்க்க.

லாம்; என்றால், இறந்தவரன்றோ சுவர்க்கமடைவர், இதனை அடைந்திருக்கின்ற யாம் இறக்கவில்லையே; அன்றியும், சுவர்க்கவாசிகள் இமையாதவர்கள், நாமோ இமைக்கின்றோம்: ஆகவே, இந்நகர், நரகமாயிராதது போலச் சுவர்க்கமாயுமில்லை; இதன் உண்மைத்தன்மை இன்னதென்று தெரியவில்லை' என்று தம்முள்ளே கூறித் திகைத்துக்கொண்டிருந்தார்கள்.

அப்போது, சாம்பவான், 'இது வேறொன்றுமில்லை; சீதையைக் கவர்ந்தொளித்த கள்வன் அவளைத்தேடும் நாம் உள்ளே புகுந்து வெளியே வரவொட்டாதபடி வஞ்சகமாகச் செய்துவைத்த மாயப்பொறியே. யாம் இதனுள் அகப்பட்டுக்கொண்டோம். இனி யிங்கே இறந்தொழிவதே நமது தலைவிதி' என்றான். அநுமான், அவனைத் தேற்றுவானாய் 'இந்தப் பிலம் வெளியேறக் கூடாததாயிருந்தால், நாம், முன்னாளில் சமுத்திரத்தைத்தோண்டிய சகரரினும் அதிகமாக ஊக்கங்கொண்டு இப்பிலத்தைச் சூழ்ந்திருக்கும் பூமியைத் தோண்டிக்கொண்டு வெளியேறுவோம். இராக்கதர் எதிர்ந்தாரேல், அவர்களை அழித்துவிடுவோம்' என்றான். அது கேட்டு, எல்லாரும் சஞ்சலந்தவிர்ந்து தைரியமடைந்தார்கள்.

## அவர்கள் அந்நகரில் தவஞ்செய்துகொண்டிருந்த சுயம்பிரபையென்னும் தேவமாதைக் காணல்.

பின்பு, அவர்கள் அந்நகரத்தில் சீதையைத் தேடித்திரியும்போது, அதன் நடுவிலே, மாதவமே வடிவுகொண்டாற்போன்று பொலிவுபடைத்த பெண்ணொருத்தி, தலைமயிர் சடைமுடியாகித் தரைமீது தாழ்ந்து படிந்துகிடக்கக் கண்கள் பாதிமூடி அரைக்கண்பார்வையாக மூக்கு நுனியை நோக்கியவண்ணமாகவிருக்கச் சரீரம் சாயாது சலியாது தம்பம்போல நேராக நிமிர்ந்துநிற்கப் புறங்கைகள் தொடைகளில் பொருந்தியுற, அகங்கைகள் அலர்ந்த தாமரைபோல் மேல்நோக்கி விளங்கத் தவநிட்டையிலிருந்தவளைக் கண்டு தண்டம்பண்ணினார்கள்.

## சுயம்பிரபை வரலாறு.

அநுமானை மற்றவர்கள் 'இவள் சீதையோ? அல்லளோ? தெரிந்து சொல்லு' என வினவ, அவன், 'இவள் சீதையல்லள்: சந்திரமணிவடத்துக்கும் முத்துமாலைக்கும் உள்ள வித்தியாசம் இவளுக்கும் அவளுக்கும் உண்டு' என்றான். அப்போது, அந்தத் தவமாது நிட்டைகலைந்து,

அவர்களைக் கண்டு, தன் தவத்துக்குத் தடையாக அவர்கள்வந்தது தகாதசெயலென்று கோபங்கொண்டு 'இங்கே ஏன்வந்தீர்கள்?' என்றாள். அவர்கள் 'இராமபிரான்மனைவி சீதையை இராவணன் கவர்ந்து ஒளித்து வைத்திருக்கிறான். நாங்கள் அவளைத் தேடித் திரியும் இராமதூதர்கள்' என்றார்கள். எனவே, அவள், அடங்கா மகிழ்ச்சிகொண்டு, ஆனந்தக் கண்ணீர் சொரிந்து, எழுந்து, இன்பக்கூத்தாடி 'என் தவப்பேறனையீர்களே! உங்கள் வரவு நல்வரவாகுக' என்று கூறி 'எம்பெருமான் எங்கு எழுந்தருளியிருக்கின்றான்?' என, அனுமான் இராமன் வரலாறு முழுவதையும் கூற, அவள் 'என்தவம் இன்று பலித்தது. யான் சாபவிடுதலைபெற்றேன்' என்று மகிழ்ந்து கூறி, அவர்களை நீராடச்செய்து, அமுதுசெய்வித்து, சந்தனம் பூமாலை தரிப்பித்து, இன்சொற்கூறி உபசரித்தாள். அப்போது, அனுமான் 'இந்நகர்க்கு இறைவன் யாவன்? உன்பெயர் யாது?' என்று வினவ, அவள் 'இந்நகர் அசுரத்தச்சனாகிய மயனாற் படைக்கப்பட்டது. என்பெயர் சுயம்பிரபை. மயன், தேவமாதருள் ஏமை யென்பவளைக் காதலித்தான். அவள் என் உயிர்த்தோழி. அவளும் அவனைக் காதலித்ததனால், அவன் வேண்டுகோளின்படி, இங்கே, அவன்பின்னே அவளைக் கூட்டிக்கொண்டுவந்து சேர்த்தேன். அவர்கள் அன்றிற்பறவைகள்போல இணைபிரியாது இன்புற்று வாழ்ந்தார்கள். என் தோழியின்மேலுள்ள அன்புமிகுதியால் அவளைப் பிரியமாட்டாமல் யானும் இங்கே வாழ்ந்திருந்தேன்.

சிலகாலஞ்சென்றபின், ஏமையைத் தேடி இங்கே வந்த இந்திரன், மயனைக் கோபித்து "உன்னைக் கொல்லாது விடுகிறேன். உயிர் பிழைத்துப்போ" என்று போகவிட்டு, ஏமையையும் சினந்து "நீசெய்தது தவறு. நடந்தது முழுவதையும் ஒளியாமற்சொல்" என, அவள் சொல்ல, என்னை நோக்கி "என் நகரினின்று இவளை நடத்திய நீ, இந்நகரைக் காவல்செய்திருக்கக்கடவை" எனக் கோபமாகச் சாபமிட்டான். நான் வணங்கிச் "சாபவிமோசனம் செய்தருள்க" என்று இரந்தபோது "இராமதூதர் இங்கேவந்தபோது உன்சாபம் நிவிர்த்தியாம்" என்று சொல்லிவிட்டு ஏமையுடன் தேவலோகஞ் சென்றான். இங்கே உண்ணவும் உடுக்கவும் பூணவும் பூசவும் உரிய பொருள்கள் நிறைந்திருந்தும் யான் எதனையும் தீண்டுதலுஞ்செய்யேனாய், உங்களைக் காணவேண்டி நெடுங்காலம் தவங்கிடந்தேன்; உங்களைக் காணப்பெற்றதனால், என்சாபம்

திரும்பப்பெற்றேன். இனி, இப்பிலத்தினின்று வெளியேறும்விதங்கூறுவேன்' என்று கூறினாள். அநுமான் அவளை வணங்கி 'அன்னையே! உன்னைப் போன்றுதவிச் செய்வேன்' என்றான்.

### அநுமான் பேருருவங் கொண்டு பிலத்தைப் பிளத்தல்.

அப்போது, மற்றைய வானரவீரர் 'எங்களை இந்தப்பிலத்தில் இறந்தொழியாமற் காத்த பெரியோனே! இதனினின்று வெளியேறவேண்டிய வகையைப் புகல்வாயாக' என, அவன் 'நடுங்காதீர்கள்' என்று சொல்லிக் கொண்டு, கண்டோர் நடுங்கப் பேருருவங்கொண்டு, தலை பிலத்தின் உச்சிப்பாகத்தையும் கைகள் மற்றைப்பாகங்களையும் பிளந்து திறக்கச் செய்வனவாக, வானம்வரையும் வளர்ந்து நின்றான். திருமால் திரிவிக்கிரமாவதார மெடுத்தபோது அவன் திருவடிக்குள் அடங்கிய பூமியும் வானமும் அநுமானது வடிவத்துக்குள்ளும் அடங்கியதனால், இதன்முன் திருமாலின் (அவதாரமான இராமனது) திருவடித்தானமானதனால் திருவடியெனப் பேர்பெற்ற அவன், இப்போது திருமாலின் திருவடிக்கு உவமையானதனால் திருவடியென்னும் பெயரைத் திரும்பவும் பெறுதற் குரியவனானான்.

### சுயம்பிரபை சுவர்க்கஞ் செல்ல, வானரவீரர் வழிநடந்து ஒரு பொய்கைக்கரை அடைதல்.

பின்பு, அநுமான் அந்நகரத்தை வேரொடு பிடுங்கி மேற்றிசைக் கடலில் எறிந்துவிட்டுச் சுயம்பிரபையுடனும் அங்கதனோடு பிறருடனும் வெளிப்பட்டான். சுயம்பிரபை சுவர்க்கம்நோக்கிச் சென்றாள். வானரவீரர் எஞ்சியிருந்த பகற்பொழுது முழுதும் வழிநடந்து ஒரு பொய்கைக்கரையை அடைய, ஆதித்தன் அஸ்தமனமானான்.]

பிலநீங்குபடலம் முடிந்தது.

[தொடரும்.]

வே. ப. சுப்பிரமணிய முதலியார்.

# செழுங்கதிர்ச் செல்வம்.

[௧௭௧—ஆம் பக்கத் தொடர்ச்சி.]

27 உரிமை யாள ருளங்கலங்கி
யோட வதைத்தன் றோர்குடிலாற்
பெரிய மாகத் தனதுகுடில்
பெருக்கி வாழும் வாழ்வன்றித்
தெரியிற் பிறிதோர் வாழ்வில்லாத்
தீயே யுலகில் வாழ்வதெங்ஙன்?
அரிய பொருளே! செழுமறையி
னகத்தார் சோதிச் செழுங்கதிரே!

28 மண்ணோர் காணு வகையெழினி
மழைபான் மறைத்து வானத்தின்
கண்ணோ நீநின் குழுவுடனே
கந்துல் பகலாப் பயில்கூத்தை
அன்றால்! கோடைக் காலமுற்றும்
அவனிக் காடும் பொருள்தெளிப்பாய்;
விண்ணோர் தலைவா வேதமணி
விளக்குச் சுடரே செழுங்கதிரே!

29 காலை பற்றிப் பொழுதினிலே
கதிர்க்கை யாலே பலநிறத்தை
நீல வானத் திடைக்குழைத்து
நித்த நித்தந் தீட்டி வந்தும்
சாலப் பெறுவத் தனைகுறித்தோ
தவிர்த்துப் பின்னு மழிக்கின்றாய்;
பாலர் பள்ளி மணலெழுத்துப்
பயில்கின் றாயோ? செழுங்கதிரே!

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௧] பவ ௵ ஆனி ௴ [பகுதி-அ.
Vol. XXXI. June-July 1934. No. 8.

## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௧௬௩-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

### ஆறுசெல்படலம்.

*வானரத்தலைவர்கள் சுக்கிரீவன் சொல்லியவழியே சீதையைத் தேடிச்சென்றதைக் கூறுவது.*

பொய்கைக் கரையை ஆண்ட அசுரனை அங்கதன் கொல்லுதல்.

[பொய்கைக்கரையை அடைந்த அனுமானாதியோர், பொய்கையின் குளிர்ந்தநீரைக் குடித்துத் தாகந் தணிந்தபின், கரையிலும் அருகிலும் வளர்ந்த மரஞ் செடி கொடிகளின் காய்கனிகளைத் தின்று, அங்கே தொங்கிய தேன்கூடுகளின் தேனைப் பருகிப் பசி ஆறியபின், வழி நடந்த வருத்தத்தால் அயர்ந்து தூங்கலானார்கள். அப்போது, கடலோ மலையோ என்னும்படி கறுத்துப் பருத்த காத்திரமும் செம்பட்ட மயிரும் தீப்போலச் சிவந்த கண்ணும் பிறைமதிபோன்ற கோரப்பல்லும் கூற்றுவன்போலும் கொலைத்தொழிலும் உடையவனும் எல்லாக் கொடுமைகளுக்கும் இருப்பிடமானவனும் அந்தப் பொய்கைக்கரையை ஆள்பவனுமான அசுரன் அங்கே வந்தான். அவன், உறங்குபவர்களைக் கண்டு, 'இவர்கள் என்னிடத்துக்கு எப்படி வரலாம்?' என்று கோபங் கொண்டு பக்கத்தில் படுத்துக் கிடந்த அங்கதன்மார்பிலே அறைந்தான். அவன் எழுந்து எதிர் அறை அறைய, அசுரன் அலறிவிழுந்து

மரணமடைந்தான். இறந்தவன் அலறிய ஓசையாலும் வீழ்ந்த அதிர்ச்சியாலும் ஏனைய வானரரெல்லாரும் விழித்தெழுந்தார்கள். அநுமான் 'இவன் ஆர்?' என அங்கதனை வினவ, அவன் 'அறியேன்' என (த் திரிவிக்கிரமனான திருமாலின் பாதம் பாவிய பார்முழுதும் வலம்வந்த காலத்தில் பல இடங்களிலுமுள்ள பல விஷயங்களையும் தெரிந்தவனான) சாம்பவான் 'இவன் இப்பொய்கைக் கரையை அரசாண்ட துமிரன் என்னும் அசுரன்' என்றான்.

## வானரவீரர்கள் கோதாவிரியை அடைதல்.

அப்போது சூரியன் உதயமாக, அவர்கள், சீதையைத் தேடிக் கொண்டு வழிநடந்து, பெண்ணைநதியைக் கடந்து, தண்டகவனம் முண்டகத்துறை பாண்டுமலை ஆகியவைகளைத் தாண்டிக் கோதாவிரியை அடைந்தார்கள்.

## கோதாவிரி வருணனை.

அந்த ஆறு, இராவணனால் கவரப்பட்டு ஆகாயவழியே கொண்டு போகப்பட்ட சீதையின் கூந்தலினின்று நழுவி வீழ்ந்து மண்மேற்கிடந்த மலர்மாலை போல விளங்குவது. அன்றியும், அது, சில அளவையாளர் பூமிமீது போட்டு அளக்கும் அளவுநூல்போலவும் தோன்றியது. பின்னும், அது, பொன்னையும் மணியையும் இருகரைகளிலும் வீசி யெறிந்துகொண்டு செல்லுதலால், இராவணன்மார்பிலிருந்து சடாயு பறித்தெறிந்த இரத்தினமாலையையும் போன்று ஒளிர்ந்தது ]

510. எழுகின்ற திரையிற் றாகி இழிகின்ற மணிநீர் யாறு
தொழுகின்ற சனகன் வேள்வி தொடங்கிய சுருதி சொல்ல
உழுகின்ற பொழுதின் ஈன்ற ஒருமகட் கிரங்கி ஞாலம்
அழுகின்ற கலுழி வாரி யாமெனப் பொலிந்த தன்றே.

இ-ள். சனகன் வேள்வி தொடங்குதற்கு (வேள்விச்சாலை அமைக்கும் இடத்தைத் தூய்மைசெய்யும்பொருட்டு) வேத (மந்திர)த்தைச் சொல்லி உழுதபொழுது (பூமிதேவி தான்) பெற்ற (பிள்ளையாக உழுபடைச்சாலில் தோன்றும்படி வெளிப்படுத்திய தன், ஒரே மகளான சீதை (இலங்கையிற் சிறைப்பட்டிருந்ததற்)க்காக வருந்தி (அந்த)ப்பூமி

(தேவி) அழுத கண்ணீர்வெள்ளம்போலத் தோன்றச் சொல்லுமாறு (அந்தக் கோதாவிரியாறு) விளங்கியது.

திரையிற்று - அலைகளையுடையது. இழிகின்ற - இறங்குகின்ற - பள்ளம் நோக்கிச் செல்கின்ற. மணி - அழகு; முத்து; இரத்தினம். மணிநீர் - அழகிய நீர்; (உருகிய முத்துப்போன்ற (தெளிவான) நீர்; (அலைகளால் வீசப்படுகின்ற) இரத்தினங்களையுடைய நீர். தொழுகின்ற - (அரசனும் தத்துவஞானியுமாதலால் எல்லாராலும்) தொழப்படுகின்ற; செயப்பாட்டுப்பொருளில்வந்த செய்வினை; எழுதுகின்ற ஓலை என்பது போல்வது. தொடங்கிய - தொடங்கும்படி: 'செய்யிய' என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம். சுருதி - வேதம்: வேத மந்திரத்தைக் குறித்தது. சொல்லா - சொல்லி: 'செய்யா' என்னும் வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம். ஞாலம் - பூமி: பூமிதேவியை யுணர்த்தியது. கலுழி - கண்ணீர். வாரி - வெள்ளம். ஆம் - போலும். பொலிதல் - விளங்குதல். அன்று ஏ ஈற்றசைகள்.

'சுருதிச்சொல்லால்', 'உருகுஞாலம்', 'கலுழிமாரி' என்பவை பாடபேதங்கள்.

## திருவேங்கடமலை வருணனை.

[அவர்கள் அந்தக் கோதாவிரியாற்றைத் தாண்டிச்சென்று சுவணநதியையும் குலிந்ததேசத்தையும் அருந்ததிமலை மரகதமலைகளையும் கடந்து திருவேங்கடமலையைச் சேர்ந்து அங்கேயுள்ள புண்ணியதீர்த்தங்களில் மன்னவர்களேயன்றி விண்ணவர்களும் வந்து நீராடலையும் தவஞ்செய்தலையும் கண்டு அங்குள்ள பெரியோரை வணங்கினார்கள். ('வேங்கடவெற்பை மேவினீரேல், வீடுபெற்றுயர்திர்கள். அதனால் சீதையைத் தேடுதல் தடைப்பட்டுவிடும். ஆதலால், அம்மலையைவிட்டு விலகிச்செல்லுங்கள்' என்று சுக்கிரீவன் சொல்லியிருக்கவும், அவன் ஆக்கினையை அவர்கள் மீறிய காரணம், அவர்கள் அம்மலையின் மகத்துவத்தை அவன் மிகைப்படுத்தி அதிசயோக்தியாகக்கூறினனென்றறிந்தமைபோ, அம்மலையில் வாழும் மகான்களை வணங்குதல் சீதையைக் காணும் நற்பயனை நல்குமென்று நம்பினமைபோ, அவள் ஒருகால் அங்கிருந்தால் அங்கே அவளைத் தேடாது செல்லுதல் காரியக்கேடாமென்று

கருதினமையோ, அங்குள்ள பெரியோர்போலத் தாம் சீவன்முத்தராக* இருந்துகொண்டு, சீதையைத்தேடிக் கண்டு சீராமனுக்குத் தெரிவித்த பின்பு விதேகமுத்தராய்†விடுவோமென்று ஆலோசித்து அறுதி செய்துகொண்டமையோ, வேறு யாதோ அறியேம்.)

## தொண்டைநாட்டு வருணனை.

திருவேங்கடமலையினும் சீதையில்லாமையால், அவர்கள், அதனை அகன்றுசென்று தொண்டைநாட்டை அடைந்தார்கள். அந்தநாடு, குறிஞ்சி முல்லை மருதம் நெய்தலென்னும் நால்வகைநிலங்களும் நன்கமையப்பெற்றதாய், எல்லா வளங்களும் இனிது நிரம்பியதாயிருந்தது. அங்கே, மரக்கொம்புகளிலுள்ள மலர்களில் வண்டுகள் மொய்த்தல்போல, இளங்குரங்குகளின்கைகளிலுள்ள பலாச்சுளைகளில் ஈக்கள் மொய்த்துக்

511. தேரை வான்றலைத் தெங்கிளம் பாளையை
நாரை யென்று நடுங்குவ கெண்டைமீன்
தாரை வன்றலைத் தண்ணிள ஆம்பலைச்
சேரை யென்று புலம்புவ தேரையே.

இ-ள். தென்னைமரத்தின் இளம்பாளையை நாரையென்று கெண்டைமீன்கள் நடுங்குவனவாம். கூர்மையும் வன்மையுமுடைய தலை(யாகிய அரும்பினை) யுடைய அல்லியி(ன் தண்டி)னைச் சாரைப்பாம்பென்று (பயந்து) தவளைகள் கத்துவனவாம்.

தேர் ஐ வான் தலை தெங்கு - தெரிந்த அழகிய உயர்ந்த தலை (அலங்காரத்தை) யுடைய தென்னைமரம். தாரை - கூர்மை. தண் - குளிர்ச்சி. ஆம்பல் - அல்லி. சேரை - சாரைப்பாம்பு. தேரை - தவளை. 'தேரையென்றயர்', 'இளக்கெண்டை நடுங்குவ', 'ஆரைவன்றலையாம்பலரும்பினை' என்பனவும் பாடங்கள்.

தென்னம்பாளை - தென்னம்பூக்களைப் பொதிந்து மூடிய உறை. அது முதிர்ந்தால் பூக்கள் வெளிபடத் தெரியும்படி விரிந்த பாளையாய் நாரையை ஒவ்வாதாதலால் 'தெங்கம்பாளை' யென்னாது 'தெங்கிளம் பாளை' என்றார். பூவைநோக்க, அரும்பு கூர்மையும் வன்மையுமுடைய தாதலால், அதனைத் 'தாரைவன்றலை' என்றார்.

* † முத்தியடைந்தோருள் தேகம் நீங்காதவர் 'சீவன்முத்தர்' எனவும் நீங்கினவர் 'விதேகமுத்தர்' எனவும் பெறுவர்.

சற்றுத் தூரத்தே நின்றேனும் சந்தியாகாலத்தேனும் நோக்கு வோர்க்கு அரும்போடுகூடிய அல்லித்தண்டு கிடப்பது பாம்புபோலத் தோன்றுவது இங்கே கருதத்தக்கது.

## சோழநாட்டு வருணனை.

[அவர்கள் அப்படிப்பட்ட தொண்டைநாட்டை நீங்கிச் சோழ நாட்டை அடைந்தார்கள். அங்கே, எங்கும் நெல்லும் கரும்பும் கமுகுந் தென்னையும் மாவும் பலாவும் வளப்பட வளர்ந்திருத்தலைக் கண்டு மகிழ்ந்துகொண்டு, செல்லும்வழியெல்லாம் தெங்கம்பழங்களில் இடறி யும் தேனில் இழுக்கியும் சென்றார்கள்]

512. குழுவும் மீன்வளர் குட்டம் எனக்கொளா
எழுவு பாடல் இமிழ்கருப் பேந்திரத்
தொழுகு சாற்றகன் கூனையின் ஊழ்முறை
முழுகி நீர்க்கருங் காக்கை முளைக்குமே.

இ-ள். நீர்க்காக்கைகள், மீன்கள் வளர்கின்ற குட்டமென்று கருப் பஞ்சாறு நிறைந்த கூனையுள் முழுகி வெளிக்கிளம்பும்.

குழுவுதல் - கூட்டமாகக்கூடுதல். கொளா - கொண்டு. 'செய்யா' என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். எழுவுதல் - எழுப்புதல்; பிறவினை. இமிழ்த்தல் - ஒலித்தல். கருப்பேந்திரம் - கரும்பு யந்திரம் - கரும்பாலை. எழுவுபாடல் இமிழ்கரும்பு யந்திரம் - (கருதிகூட்டுதற்கு) எழுப்புகின்ற பாட்டிசை (போல ஆடும்போது) ஒலிக்கின்ற கரும்பாலை. சாறு அகன் கூனை - சாற்றையுடைய (வாய்) அகன்ற மிடா. ஊழ், முறை, கிரமம், வரிசையென்பவை ஒருபொருட் பன்மொழிகள். 'சாற கன்கூனை' 'முளைக்குமால்' என்பனவும் பாடங்கள்.

நீர்க்குள் முழுகி வெளிக்கிளம்புதலை 'முளைத்தல்' என வழங்குதல் இல்லை. அவ்வாறாகவும், 'வெளிக்கிளம்பும்' என்ற பொருள்பட 'முளைக் கும்' என்பதைப் புதுமையும் சிறப்பும் ஒருங்குபொருந்தப் பிர யோகித்து மோனையமைத்துக்கொண்ட கவித்திறம் கவனித்து நோக்கிப் பாராட்டத்தக்கது.

### அநுமானாதியோர் சேரபாண்டிய நாடுகளைக் கடந்து மகேந்திரமலையை அடைதல்.

[அவர்கள், சோழநாட்டை நீங்கி, மலைப்பிரதேசமான சேரநாட்டை யும் முத்துக்கும் முத்தமிழுக்கும் உற்பத்திஸ்தானமான பாண்டிநாட்டை யும் தாண்டி மகேந்திரமலையை அடைந்தார்கள்.]

ஆறுசெல்படலம் முற்றிற்று.

## சம்பாதிப் படலம்.

*சடாயுவின் தமயனான சம்பாதியின்சரித்திரத்தைக் கூறுவது.*

### வானரவீரர்கள் தென்கடலைக் காணுதல்.

513. *மழைத்தவிண் ணகமென முழங்கி வாய்நுரை*
*இழைத்தவெண் டிரைக்கரம் எடுத்தி லங்கையாள்*
*உழைத்தடங் கண்ணியென் றுரைத்திட் டூழின்வந்*
*தழைப்பதே கடுக்குமவ் வாழி நோக்கினார்.*

இ-ள். 'தூரத்தில் உள்ள வானரவீரர் கேட்கும்படி' ஆரவாரித் துச் சீதை இலங்கையிலிருக்கின்றாளென்று சொல்லி, (அவர்கள் காணும்படி) அலைகளாகிய கைகளை உயர எடுத்து (க்காட்டி வரும்படி சைக்கினை செய்து, விருந்தினரை எதிர்கொண்டு சென்று வரவேற்கும்) முறைப்படி (அவர்கள் இருக்கும் கரை நோக்கி) வந்து அழைப்பது போன்ற அந்தக் கடலை (அவர்கள்) கண்டார்கள்.

முழங்குதலால் சீதை இலங்கையில் இருக்கின்றாளென்று செப்புத லும் அலைக்கை எடுத்தலால் வரும்படி சைக்கினையும் (கரை நோக்கி) வருதலால் எதிர்கொண்டு செல்லுதலும் செய்து (தங்களை) அழைப் பதுபோலும் கடலை (வானரவீரர்கள்) நோக்கினார்களென இயைத்துப் பொருள்கொள்ளப்பட்டது.

மழைத்த - மழையையுடைய. விண்ணகம் - விண் - மேகம். நெஞ்சு, நெஞ்சம் நெஞ்சகமெனவும், கான், கானம் கானகமெனவும், வான், வானம் வானகமெனவும் வருதல்போல, விண், விண்ணம் விண்ணகமென வரும். 'மழைத்த விண்ணகமென முழங்கி - நீருண்ட மேகத்தை யுடைய ஆகாயத்தினிடம்போலச் சத்தித்து. இடத்துநிகழ்பொரு

ளின்தொழிலை இடத்திற்கேற்றிக் கூறிய உபசாரவழக்கு' என்பது முந்திய உரை. வால் - வெண்மை. இழைத்தல் - செய்தல், உண்டாக்குதல். அலையைக் கடலின் கையெனல் மரபு. புதிதாக வந்தவரை வரவேற்கும் அடையாளமாகக் கும்பிடும்வழக்கம் உண்மைபற்றிக் 'கரம் (-கை) எடுத்து' என்பதற்குக் 'கும்பிட்டு' என்றும் பொருள்கூறலாம். கையெடுத்தல், கும்பிடல் என்ற பொருளில் 'ஆரார் தலைவணங்கார், ஆரார்தாம் கையெடார்' என்ற கம்பர் தனிப்பாடலில் வருதல் காண்க. உழை - மான். தடம் - விசாலம். உழைத்தடம் கண்ணி - மருண்டு நோக்கும்) மான் (கண்) போன்ற விசாலமான கண்களையுடைய சீதை. ஊழ் - முறை. ஏ அசை. கழித்தல் - போக்குதல் 'வாளுற', 'உழைத் திட்டோடிவந்து', 'கண்ணியென்னுழைய னொன்று வந்து' என்பன பாடபேதங்கள்.

இந்தக் கவி இதன் அடியில்வரும் மிதிலைக்காட்சிப்படலத்து முதற்பாட்டை நினைப்பூட்டுகின்றது:—

"மையறு மலரின் நீங்கி யான்செய் மாதவத்தின் வந்து
செய்யவள் இருந்தா ளென்று செழுமணிக் கொடிக ளென்னும்
கைகளை நீட்டி அந்தக் கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை ஒல்லை வாவென் றழைப்பது போன்ற தம்மா!"

## தலைவர்களை ஏமகூடமலையிற் பிரிந்த வானரசேனைகள் மகேந்திரமலையில் வந்துசேர, எல்லாரும் சீதையைக் காணாமைபற்றி ஆலோசித்தல்.

[ஏமகூடமலையில் தலைவர்களைப் பிரிந்து பல இடங்களிலும் சீதையைத் தேடச்சென்ற வானரசேனைகள் மகேந்திரமலைக்கு வந்து அவர்களிடம் சேர்ந்தன. எல்லாரும் சீதையைக் காணாமையால் வருந்திச் 'சுக்கிரீவமகாராசன் விதித்த ஒருமாதத்தவணை கழிந்துவிட்டது. இராமபிரான் இறந்துவிடுவான்! என்செய்வோம்? கிட்கிந்தைக்குத் திரும்பாமல் இங்கேயிருந்து தவஞ்செய்வோமா? சாவோமா? எதற்கும் சாதலே நமது நிலைக்குத் தக்கது' என்று தமக்குள்ளே பேசிக்கொண்டார்கள். அப்போது அங்கதன் 'சீதையைக் காணமாட்டாமையால் நான் செத்த செய்தியை என் தந்தைக்கு* யாரேனும் தெரிவித்தல்கூடும். தெரிந்தவுடனே அவனும் என் அன்னையரும்†

* சுக்கிரீவன். † வாலி சுக்கிரீவர்களது மனைவிமார்.

சாவார்கள். இராம லக்குமணரும் இறந்துவிடுவார்கள். இவர்கள் இறந்தது தெரிந்தால், பரத சத்துருக்கரும் தாய்மாரும் மாளாது வாழ்வாரோ?' என்றான். சாம்பவான் 'நீ இறந்தால், உன் தந்தை சாவான். வானரராசவமிசத்தில் உன்னையன்றிச் சந்ததியில்லை. ஆதலால் வானரராச்சியம் ஆள்வாரில்லாது பாழாய்விடும். நீ இறத்தல் கூடாது. நாங்களெல்லோரும் இறந்துவிடுவோம். அந்தச்செய்தியை நீ போய் உன் தந்தைக்குச் சொல்லக்கடவை' என்றான். அப்போது, அனுமான் 'நாம், திரிலோகத்திலே ஒருபாகத்தையே தேடினோம். அவ்வளவிலே அலுத்துச் சலித்துவிடலாமோ! தவணை கழிந்தாலென்னை? சானகியைக் கண்டோமானால், சுக்கிரீவமகாராசன் மகிழாது வெகுள்வானோ? இப்போது இறத்தல் ஏற்றசெயலன்று. இன்னமும் சீதையைத் தேடுதலே சிறந்த செயல். தேடிக் காணாவிட்டாலும் தற்கொலைபுரிதல் தகாதசெயலே. அவள்பொருட்டுப் போர் புரிந்து இறந்த சடாயுவைப்போல நாமும் சமர்செய்து சாதலே தக்க செயலாம்' என்றான்.

## சம்பாதி வானரரிடம் வருதல்.

அந்த மலையில் வசித்துக்கொண்டிருந்த சடாயுவின் தமயன் சம்பாதி, 'சடாயு இறந்தான்' என்றது செவிப்பட்டவுடனே திடுக்கிட்டு, 'என்தம்பி யிறந்தவாறு என்னே?' என்று இரங்கித் துடிக்கும் நெஞ்சினனாய்க் கண்ணீர்வடிக்குங் கண்ணினனாய், இறகிழந்திருந்தமையால், இந்திரனது வச்சிராயுதத்தாற் சிறகிழந்த மலைபோலத் தவழ்ந்துவந்து வானரரிருந்த இடத்தை அணுக, அவர்கள் அஞ்சியோடினார்கள். அனுமான் கோபங்கொண்டு 'வஞ்சகவேடம்பூண்ட அரக்கனே! என்முன் வந்த நீ எப்படித் தப்பிப்பிழைப்பாய்?' என்று சொல்லிக்கொண்டு எதிர்ந்தான். எதிர்ந்தவன், அவன் கண்ணீர்வடிப்பதைக்கண்டவுடனே கோபம் மாறி இரக்கங்கொண்டான். சம்பாதி 'ஒருவராலும் எதிர்க்க முடியாத சடாயுவைக் கொன்றது யார்' என, அனுமான் 'உன் வரலாற்றை உள்ளபடி உரைத்தால், உன் கேள்விக்கு உத்தரம் அளிப்பேன்' என, 'யான் சடாயுவின் தமயன்' என, 'உன் தம்பி இராவணனால் இறந்தான்' என்றான்.

## சடாயு இறந்ததற்காகச் சம்பாதி வருந்தல்.

சம்பாதி, 'இறகிழந்த யான் இறந்திடுதல் இயைந்தது. யான் இருக்க, நீ இறந்தது, இயற்கையன்றே! இஃது என்ன மாயம்! மண்ணுலகம் [illegible]கம் இருக்கின்றது! தருமமும் இருக்கின்றது! நீ இல்லையானாய்! இராவணன் திரிலோகங்களையும் செயித்தவனாலும் உன்னை எதிர்க்கும் ஆற்றல் உடையவனோ! உன்னை எவ்வாறு துணிந்தெதிர்த்தான்! எங்ஙனம் கொல்லவும் வல்லனானான்!' என்று இரங்கி வருந்தினன். அனுமான், ஏற்ற தேறுதல்மொழிகள் கூறித் தேற்றத் தேறியபின், அவன், 'என் தம்பி, இராவணனோடு போர்செய்த காரணம் யாது?' என, 'இராவணன், இராமபிரான் தேவி சீதாபிராட்டியைத் திருடிக்கொண்டு தேர்மீது செல்லும்போது உன் தம்பி கண்டு, "அடா அவளை இங்கே வைத்துவிட்டு அப்பாற் செல்" என்று அதட்டிக் கூறி, அவனை எதிர்த்து மறித்து, அவன் தேரைச் சிதைத்து அவனையும் காயப்படுத்தியபோது, அவன் தேவதேவனிடம் பெற்ற தெய்வவாளால் வெட்ட, உன் தம்பி உயிர்துறந்தான்' என்றான்.

## சம்பாதி இழந்த சிறகுகளைத் திரும்பப் பெறுதல்.

அதுகேட்ட சம்பாதி, துன்பக்கண்ணீர்சொரிவது மாறி, இன்பக்கண்ணீர்பொழிபவனாகி 'ஆ! இராமகாரியமாகவா, என் தம்பி இறந்தான்! அது நன்று! மிகவும் நன்று! அவன் இறந்தானென்பது பொய், இறவாத புகழ்படைத்து என்றும் இருக்கின்றானென்பது மெய்; தருமமூர்த்தியான தசரதராமன்பொருட்டு உயிர்விடுத்தல் இழிவன்று. பெறுதற்கரிய பெரும்பேறே' என்று மகிழ்ந்து கூறி இறந்த தம்பிக்கு நீர்க்கடன் ஆற்றியபின் 'வானரவீரர்களே! நீங்கள் இங்குவந்து என்னை வாழ்வித்தீர்கள். என் துன்பத்தை மாள்வித்தீர்கள். இராமநாமத்தை எல்லீரும் சொல்வீரேல், யான் இழந்த இறகு திரும்ப வளரும்' என்றான். அவர்கள் 'இதனைத் தெரிவோம்' என்று ஒருமித்து 'ராம ராம' என்று எல்லாரும் சொல்லாநிற்க, உறைபற்றிருந்த வாள் உறைபெற்றொளிர்ந்தாற்போலச் சிறகற்றிருந்த அவன் சிறகுற்றுவிளங்கினான். அவர்கள், தாங்கள் கண்ட காட்சி கனவோ என மயங்கி நனவேயெனத் தெளிந்து, வியப்புவயத்தராகி, அவனை ராமநாமமகிமையை அறிவித்த பெரியோனென்று பத்தியுடன் பணிந்து 'உன் முந்தியவரலாறு முழுவதும் மொழிதி' என, அவன் மொழிவதானான்.

### சம்பாதி தன் வரலாற்றையும் சீதை இலங்கையிலிருத்தலையும் தெரிவித்தல்.

'சம்பாதி சடாயு என்னும் நாங்கள் கழுகரசர், சூரியசாரதியான அருணனுக்குக் குமாரர், நாங்கள் தேவலோகத்தைக்காண ஆசைகொண்டு விண்ணிலே மேல்நோக்கிப் பறந்து செருக்கோடு செல்லும்போது தீயையும் தீக்கும் செங்கதிரோனுடைய தேரைக் காணலுற்றோம். அக்கணமே அத்தேவன் சினந்து காய, என் முன்சென்ற என் தம்பி வெம்மை தாங்கமாட்டாமல் "அண்ணா, காப்பாய்" என யான் அவனுக்கு மேற் பறந்து மறைக்க, அவன் வெப்பினின்று தப்பிப் பிழைத்தான். யான் இறகெரிந்து தரையில் வீழ்ந்தேன், இறந்தொழிந்தேனில்லை. சூரியன், என் பரிதாபநிலைகண்டு, இரக்கங்கொண்டு "இராமன்மனைவியை இராவணன் திருடிச்செல்ல, அவளைத்தேடி வானரர் வருவார்கள். அவர்கள் இராமன்பேரைக் கூறக்கேட்டு இறகுபெற்று எழுவாய். அகங்காரமுடையார் அழிதலுறுவார். தாழ்மையுடையார் வாழ்வு பெறுவார்" என்றான். என் தம்பி, என் கட்டளைகடக்கமாட்டாமல், வேண்டாவெறுப்போடு கழுகரசனானான். எங்கள் வரலாறு ஈது. உங்கள் வரலாறு கூறுங்கள்' என, வானரர் கூறக் கேட்டு, 'வருந்தாதீர்கள். இராவணன் சீதையைக் கவர்ந்துகொண்டு இலங்கைக்குச்சென்றதைக் கண்டேன். அவள் அங்கேயிருக்கின்றாள். இலங்கை நூறுயோசனைக் கப்பாலுள்ளது. இலங்கேசன் கொடுங்கோபி; அவன் கோபம் நெருப்புக்கும் நெருப்பு. அவன் காவல் புரியும் இலங்கைமதில், காலனாலும் காலகாலனாலும் கடக்கலாகாதது. நீங்களெல்லீரும் அங்கே செல்லுதல் இயலாததென்பது தெளிவு. உங்களுள்ளே செல்லவல்லவருள் ஒருவர்சென்று சீதாதேவியைக் கண்டு தேற்றித் திரும்புக. செல்லவல்லவரெவரும் இல்லையெனில், யான் சொல்லியதை நம்பி இராமபிரானுக்குத் தெரிவியுங்கள். கழுகுக்கூட்டம் முழுவதும் காப்பாரில்லாமல் கலக்கமுற்றிருக்கும். அவைகளைக் காக்கச்செல்கின்றேன். விடைதருக' என்று விண்ணிற் பறந்துசென்றான்.]

சம்பாதிப்படலம் முற்றிற்று.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௧௭௮-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

## மகேந்திரப்படலம்.

*வானரவீரர் மகேந்திரமலையிலிருந்து கடல்கடத்தலைப்பற்றிப் பேசி முடிவுசெய்ததைக் கூறுவது.*

### வானரத்தலைவர் தம்முள் யார் கடல்கடக்கவல்லாரென ஆராய்தல்.

*[சம்பாதிகூறியதைக்கேட்ட வானரவீரர்கள் 'சீதாதேவி யிருக்குமிடம் தெரியாமையால் சாகவிருந்த நாம், சாவாது தப்பிப்பிழைத்தோம். அவன் சொன்னதைச் சுக்கிரீவமகாராசனிடம் சொல்வோமானால், நமது கடமையை ஒருவாறு செய்தோமாவோம். இலங்கைக்குச்சென்று சீதாதேவியை நேராகக் கண்டோமானாலோ, அது மேற்கூறியவாறுசெய்தலினும் சிறந்தசெயலாம். அதற்குக் கடலைக் கடக்கவேண்டுமே. நம்முள் கடல்கடக்கவல்லார் யார்?' என்று தம்முள் வினவினார்கள். நீலன் முதலியோர் 'கடல்கடத்தல் எங்களால் அடியோடு முடியாது' என்று தெளிவாக வெளியாகச் சொன்னார்கள். அங்கதன் 'சமுத்திரம் தாண்டும் சக்தியுடையேன். மீண்டுவரும் மீக்கில்லேன்' என்றான். பிரமதேவன்பெற்ற சாம்பவான் 'பிரமதேவனைப்பெற்ற திருமால் திரிவிக்கிரமனாகிப் பூமிமுழுதையும் ஓரடியாக அளந்து வீறுற்று விளங்கிய காலத்தில், அப் பெருமானது பிரதாபத்தை நான் பறைபறைந்து சாற்றிப் பிரசாரஞ்செய்துகொண்டு எட்டுத்திக்கினும் சுற்றிவருகையில் மேருமலை மோதினதனால் ஊனமுற்ற காலினனானேன். ஆதலால், கடலைத்தாண்டி, இலங்கைமதிலைக் கடந்து, சீதாதேவியைத் தெரிசித்துச் சீராமன் வந்து சிறைமீட்பானென்று கூறித் தீய அரக்கர் அஞ்சும் தீரச்செயல்கள்செய்து திரும்பும் திறமையில்லேன். இவ்வளவும் செய்ய வல்லவன் அனுமானே' என்று அங்கதனிடம் கூறிவிட்டு, அனுமானை நோக்கிக் கூறுகின்றான்.]*

சாம்பவான் அனுமானைப் புகழ்ந்து இலங்கைக்கு ஏகும்படி வேண்டல்.

514. 'மேலை விரிஞ்சன் வீயினும் வீயா மிகுநாளீர்;
நூலை நயந்து நுண்ணி துணர்ந்து நுவல்தக்கீர்;
காலனும் அஞ்சும் காய்சின மொய்ம்பின் கடைநின்றீர்;
ஆலம் நுகர்ந்தா னுமென வெம்போர் அடர்கிற்பீர்;

515. வெப்புறு செந்தீ நீர்வளி யாலும் விளியாதீர்;
செப்புறு தெய்வப் பல்படை யாலும் சிதையாதீர்;
ஒப்புறின் ஒப்பார் நும்மல தில்லீர்; ஒருகாலே
ருப்புறின், அண்டத் தப்புற மேயும் குதிகொள்வீர்;

516. நல்லவும் ஒன்றோ, தீயவும் நாடி நவைதீரச்
சொல்லவும் வல்லீர்; காரியம் நீரே துணிகிற்பீர்;
வெல்லவும் வல்லீர்; மீளவும் வல்லீர்; மிடல்உண்டேல்,
கொல்லவும் வல்லீர்; தோள்வலி யொன்றும் குறையாதீர்;

517. மேரு கிரிக்கும் மீதுற நிற்கும் பெருமெய்யீர்;
பாரி துளிக்கும் தாரை யிடிக்கும் வரவல்லீர்;
பாரை எடுக்கும் நோன்மை வலத்தீர்; பழிஅற்றீர்;
சூரிய னைச்சென் றெண்ணை அகத்தும் தொடவல்லீர்;

518. அறிந்து திறத்தா றெண்ணி அறத்தா றழியாமை
மறிந்தரு ளப்போர் வாலியை வெல்லும் மதிவல்லீர்;
பொறிந்திமை யாக்கோன் வச்சிர பாணம் புகமூழ்க
எறிந்துழி இற்றோர் புன்மயி ரேனும் இழவாதீர்;

519. போர்முன் எதிர்ந்தால் மூவுலகேனும் பொருளாக
ஓர்வில் வலங்கொண் டொல்கல்இல் வீரத் துயர்தோளீர்;
பார்உல கெங்கும் பேரிருள் சீக்கும் பகலோன் முன்
தேர்முன் நடந்தே ஆரிய நூலும் தெரிவுற்றீர்;

520. நீதியில் நின்றீர்; வாய்மை அமைந்தீர்; நினைவாலும்
மாதர் நலப்பே ணாது வளர்ந்தீர்; மறையெல்லாம்
ஓதி உணர்ந்தீர்; ஊழி கடந்தீர்; "உலகீனும்
ஆதி அயன்றா னேயெண" யாரும் அறைகின்றீர்;

521. அடங்கவும் வல்லீர், காலம தன்றேல்; அமர்வந்தால்,
மடங்கல் முனிந்தா லன்ன வலத்தீர்; மதிநாடித்
தொடங்கிய தொன்றோ, முற்று முடிக்கும் தொழில்வல்லீர்;
இடங்கெட வல்லே ஊறு கிடைத்தால் இடையாதீர்;

522. ஈண்டிய கொற்றத் திந்திர னென்பான் முதல்யாரும்
பூண்டு நடக்கும் நல்நெறி யானும் பொறையானும்
யாண்டினர் நீரே பார்த்தினி துய்க்கும் படிவல்லீர்;
வேண்டிய போதே வேண்டுவ எய்தும் வினைவல்லீர்;

523. ஏகுமின்: ஏகி, எம்முயிர் நல்கி, இசைகொள்வீர்;
ஓகை கொணர்ந்து மன்னையும் இன்னல் குறைவில்லாச்
சாகரம் முற்றும் தாவிடும்; நீர்இக் கடல்தாவும்
வேகம் அமைந்தீர்' என்று விரிஞ்சன் மகன்விட்டான்.

## பொழிப்புரை.

514. 'மலரோன் மாள்வானெனினும் மாள்வுறாத வரம்பற்ற வாழ்நாளுடையீர்; நூல்களை விரும்பி (க் கற்று) நுண்மையாக அறிந்திருக்கின்றீர்; அவைகளை (நன்கு விளங்க) எடுத்துரைக்கும் தகுதியுடையீர்; காலனும் அஞ்சும் கடுங்கோபமும் காயபலமும் மிகுதியாக உடையீர்; அரனேபோலக் கொடும்போர்புரியவல்லீர்;

515. நெருப்பாலும் நீராலும் காற்றாலும் (மற்றைப் பூதங்களாலும்) நிலைகெடாதீர்; தெய்வப்படைகள் பலவற்றாலும் சிதையாதீர்; (உம்மை எவரும் ஒப்புறார்: எவரேனும் ஒப்புற்றால், (அந்த) ஒப்புற்றார் உம்மையன்றி இல்லாதீர் (தமக்குத் தாமே சமமாவீர்); தாவுவீரானால், ஒருமுறை (தாவுகை) யிலேயே அண்டத்துக் கப்பாலேயும் தாவிவிடுவீர்;

516. (எந்தக்காரியத்தை ஆராய்வீரானாலும் அந்தக் காரியத்தின்) அநுகூலமான அம்சங்களைமட்டுமல்லாமல் பிரதிகூலமான அம்சங்களையும் (சேர்த்து) ஆராய்ந்து குற்றமில்லாமல் (அந்தக் காரியத்தைப்பற்றி முடிவு) சொல்லவல்லீர்; (குறித்த சில காரியங்கள் செய்யத்தக்கனவோ செய்யத்தகாதனவோவென்று தீர்மானிக்கவேண்டியிருந்தால், அந்தக்) காரியங்களை (வேறெவர் உதவியும் வேண்டாமலே இவை செய்யத்தக்கன, இவை செய்யத்தகாதனவென்று) நீர் தாமாகவே (வேறெவருதவியும் வேண்டாது) ஆராய்ந்து முடிவுசெய்யும் அறிவாற்றலுடையீர்; (உம்முடைய இட்டம்போல இராக்கதர்கூட்டத்தை) வெல்லலும் வல்லீர்; (அந்தக்கூட்டத்துட் சென்று அவர்கள் தடையைக்கடந்து) மீளுதலும் வல்லீர்; (அந்தக்கூட்டத்தைக் கொல்லுதற்குப் போதிய) வலிமையிருந்தால் (அந்தக் கூட்டத்துட்சென்று வெறுமனே மீள்வதோடமையா

மல்) கொல்லுதலும் வல்லீர்; (இவ் அரியசெயல்கள் யாவும் செய்தபின்னும்) தோள்வலி சிறிதும் குறைவுறாதீர்;

517. மகாமேருபருவதத்துக்கும் உயரமாக வளர்ந்துநிற்கும் பேருருவுடையீர்; (மேருவினும் பெருவடிவுகொள்ளல்போல அணுவினும் சிறுவடிவுகொண்டு, நுண்ணிய மழைத்தாரைகளின் இடுக்குகளினும் (நுழைந்து) வரும் வல்லமையுடையீர்; பூமியைப் பேர்த்தெடுக்கும் பெருவலியுள்ளீர்; (இத்தகைய பலத்தை எந்தத் தீய காரியத்திலும் செலுத்தாதீராதலால்) பழியென்பது (அணுவளவும்) இல்லாதீர்; (அளவற்ற தூரத்துள்ள ஆதித்தனிடம் சென்று (பெருவெப்பமுடைய) அவனைக் கைகளினால் தொட்டிடவல்லீர்;

518. (வேறெவ்வழியாலும் கொல்லமுடியாத வாலியை இராமன் அம்பாற் கொல்வித்தலாகிய) திறமான வழியைத்தெரிந்து (வாலியால் அழிந்துகொண்டிருந்த) அறநெறி (வாலிசாவால் அழிதலினின்று தப்பி) அழியாதிருத்தலை (ச்செய்ப) எண்ணி வாலியை (இராமபாணத்தால்) இறந்துவிழுந்து புரண்டுருளும்படி வென்ற மதிவலியுடையீர்; (அம்மதிவன்மையோடு) இந்திரன் வச்சிராயுதத்தால் தாக்கியபோது ஒரு சிறு மயிர்தானும் அறுபட்டு இழவா (த தேகவன்மையும் படைத்)தீர்;

519. போர்க்களத்தில் மூன்றுலகத்தோரும் எதிர்ப்பாரானால் (அவர்களை ஒரு) பொருளாகக் கருதாத (அலட்சியமாக வென்றுவிடக் கூடிய) வலிமைகொண்டு (போர்புரிதலில்) தளர்தலில்லாத வீரத்தால் மேம்பாடுற்ற தோளுடையீர்; (ஓயாது வேகமாக உலகைச் சுற்றிவரும்) சூரியனுக்குமுன்னே அவன்தேரின் எதிரே (அவனைநோக்கியவண்ணமாய்ப் பின்னுக்கு) நடந்துகொண்டு (அவன் கற்பிக்க) அரிய நூல்களைக் கற்றறிந்துகொண்டீர்;

520. நீதிநெறியில் நிற்கின்றீர்; உண்மையுடையீர்; பெண்ணின்பத்தை (உடம்பால் நுகரவிரும்பாமைகிடக்க,) உள்ளத்தா (ல் நுகர்த)லும் விரும்பாது வாழ்நாள்கழித்திருக்கின்றீர்; வேதமு-நூலும் ஓதியுணர்ந்துள்ளீர்; உலகமுடிவுகாலத்தும் முடியாதீர்; "இவர் உலகங்களை உண்டாக்கும் பிரதம சிருஷ்டிகர்த்தாவான பிரமதேவனே" யென்று எல்லாரும் (புகழ்ந்து) பேசப்படுகின்றீர்;

521. (அடங்காமைக் கேற்ற) காலமல்லாத காலத்தில்* அடங்கியிருக்கும் ஆண்மையுடையீர்; போர்நேர்ந்தால் சிங்கம் சினந்தாற்போலும் திறலுடையீர்; அறிவினால் ஆராய்ந்துபார்த்துச் செய்யத்தொடங்கிய காரியமல்லாமல் (அது சம்பந்தமாகச் செய்யவேண்டிய பிறகாரியங்கள்) எல்லாவற்றையும் செய்துமுடிக்கும் தொழிற்றிறமையுடையீர்; (குறித்த காரியத்தைச் சாதித்தற்கு) ஏற்றசமயம் (வாய்த்தது பயன்படாமல்) பழுதுபடும்படி (தடுக்கமுடியாதவிதமாக) விரைவாக இடையூறு நேருமானால், (திரும்பவும் ஏற்றசமயம் வருமென்னும் நம்பிக்கையுடையீராய்) மனந்தளரா தீர்;

522. (உம்மைப்போல ஒழுகுதலே உத்தமமுறையென்று) இந்திரன் முதலிய எல்லாரும் மேற்கொண்டொழுகும் (பொதுவான) நல்லொழுக்கமுடைமையாலும் (சிறப்பான) பொறுமையுடைமையாலும் (நல்லொழுக்கத்தின் கரைகண்ட) பண்டிதர் (எனத்தக்க) நீர் (நல்வழிகளெல்லாவற்றையும்) ஆராய்ந்தறிந்து (அவ்வழிகளில் எல்லாரையும்) இனிதாகச் செலுத்தும்படியான திறமையுடையீர்; விரும்பியவற்றை விரும்பியபோதே அடையும் வினைத்திறமையுடையீர்;

523. (இலங்கைக்கு) ஏகுவீராக. ஏகி (நீ "சீதாதேவியை யேன் பாராது திரும்பினீர்கள்" என்று கோபித்துச் சுக்கிரீவ மகாராசன் எங்களைக் கொல்லுதலினின்று நாங்கள் தப்பிப்பிழைக்கும்படி) எங்களுயிரை யெங்களுக்குக் கொடுத்து (அதன் பலனாக) நல்ல கீர்த்தியை நீர் கைக்கொள்வீராக. (சீதாதேவி சுகமாயிருக்கின்றாளென்று சந்தோஷ சமாசாரத்தைக் கொண்டுவந்து (நீர் இந்தக்கடலைக் கடந்ததுபோல) இராமபிரானைத் துன்பக்கடலைக் கடக்கச்செய்வீராக. (அவன் துன்பக்கடலைக்கடத்தற்கு ஏதுவாக) நீர் இந்தக் கடலைக்கடக்கும் கடுமைவாய்ந்திருக்கின்றீர்;' என்று பிரமதேவ குமாரனான சாம்பவான் சொன்னான்.

குறிப்புரை.

514 'மேலை' என்பதில் ஐ சாரியை. மேலை விரிஞ்சன் - மேலான (-மேன்மையையுடைய) பிரமன். வீதல் - சாதல். நயத்தல் - விரும்புதல். நுண்ணிது - நுட்பமாக. நுவலல் - சொல்லுதல். காய்தல் - கோபித்தல். மொய்ம்பு - வலிமை. மொய்ம்பின் கடை நின்றீர் - வலிமையின்

* அடங்கியிருக்கவேண்டியகாலத்தில்.

முடிவில் நின்றீர் - இதனினும் மிக்கது இல்லையென்னும்படியான வலிமையுடையீர் - அத்தியந்த பலமுடையீர். ஆலம் நுகர்ந்தான் - விடம் உண்டவன் - சிவன். 'மிகை நாள்' என்பதும் பாடம்.

515. வளி - காற்று. விளிதல் - சாதல். குப்புறல் - பாய்தல்.

516. நவை - குற்றம். மிடல் - வலி. 'வலியென்றுங் குறையாதீர்' என்பதும் பாடம்.

517. நோன்மை - வலி. வலம் - வலி. நோன்மை வலம் என ஒரு பொருளுடைய இரண்டுமொழிகள் மிக்க வலிமை உணர்த்திநின்றன. 'தோன்மைவலத்தீர்' என்பதும் பாடம்.

518. திறத்தாறு அறிந்து, அறத்தாறழியாமை எண்ணி, போர் வாலியை மறிந்தருளவெல்லும் எனக் கூட்டுக. மறிதல் - விழுதல் (சீவக. 2201), பொறிந்து என்பதன்முன் 'கண்கள்' என்பதை வருவித்துப் பொருள் கொள்க. (கண்கள்) பொறிந்து - கண்கள் தீப்பொறி சிதறி - கோபித்து. கும்பகர்ணப்படலத்தில் 'பொறிந்திடுகண்ணினன் புகையும் வாயினன்' என்பது கோபமுடையானென்பதைக் குறித்தல் காண்க. இமையார் - தேவர். இமையாக்கோன் - இமையாத அரசன் - தேவராசன். வச்சிரபாணம் - வச்சிராயுதம். புக மூழ்க - (உடம்புள்) புகவும் அழுந்தவும் (கருதி).

519. ஓர்தல் - கருதுதல். வலம் - வலிமை. ஒல்கல் - தளர்தல். சிந்தல் - நீக்குதல். பகலோன் - சூரியன். நாலும், உம்மை இசைநிறை. 'பொருளாக' என்பதும் பாடம்.

520. வாய்மை - உண்மை. நலம் - இன்பம். பேணுதல் - விரும்புதல். அறைகின்றீர் - சொல்லப்படுகின்றீர்: செய்வினை செயப்பாட்டு வினைப்பொருள் தந்துநின்றது.

521. 'காலமது' என்பதில், 'அது' பகுதிப்பொருள்விகுதி. அமர் - யுத்தம். மடங்கல் - சிங்கம். முனிந்தாலன்ன - கோபித்தாற் போன்ற. வலம் - வலிமை. மதி (யால்) நாடி - அறிவினால் ஆராய்ந்து பார்த்து. இடம் - ஏற்ற சமயம் (தமிழகராதி). வல்லை - விரைவாக. ஊறு - இடையூறு. கிடைத்தல் - நேர்தல். இடைதல் - சோர்தல்; பின்வாங்குதல். 'தொழிலல்லால்' என்பதும் 'இடங்கெட வெவ்வாய்' என்பதும் பாடம்.

522. ஈண்டுதல் - கூடுதல்; மிகுதல்; நிறைதல். கொற்றம் - வெற்றி. பொறை - பொறுமை. பாண்டிதர், பண்டிதர் என்பதன் விகாரம்: எதுகைநோக்கி முதல் நீண்டது. உய்த்தல் - செலுத்துதல். 'வேண்டுருவெய்தும்' என்பதும் பாடம்.

523. இசை - கீர்த்தி. உவகை - உவகை - சந்தோஷம்: சந்தோஷமானசெய்தியைக் குறிப்பாக உணர்த்தியது. கொணர்தல் - கொண்டுவரல். மன் - அரசன். இன்னல் - துன்பம். குறைவில்லா இன்னற்சாகரம் எனக் கூட்டுக. தாவிடும் - தாவிடச்செய்யும்: தன்வினை பிறவினையாக வந்தது. கம்பராமாயணத்தில் தன்வினை பிறவினையாக வருதல் பல இடங்களிற் காணலாம். நட்புக்கோட்படலம் எஉ ம் பாட்டில் 'விலக்கும்' என்ற பொருளில் 'விலகும்' என்பது வருதல் காண்க. விட்டான் - சொன்னான். 'நினை' என்ற வினைப்பகுதியிலிருந்து முறையே மெல்லோசை வல்லோசையுடைய 'நினைந்தான்' 'நினைத்தான்' என்ற வினைமுற்றுக்கள் பெறப்படுதல்போல, 'விள்' (-சொல்) என்ற வினைப்பகுதியிலிருந்து 'விண்டான்' 'விட்டான்' என்ற வினைமுற்றுக்கள் பெறப்படலாம். 'விள்' என்ற பகுதியிலிருந்து 'விட்டான்' என்ற முற்றைப் பெறுதல், 'நள்' (-நட்புச்செய்) 'கள்' (-களைபிடுங்கு) 'பெள்' (-விரும்பு) என்ற பகுதிகளிலிருந்து 'நட்டான்' 'கட்டான்' 'பெட்டான்' என்ற முற்றுக்களைப் பெறுதல்போலும்.

'எருமினோ', 'கொணர்ந்தும் மன்னையும்', 'கொணர்ந்து மன்னனும்', 'தாவிட', 'வேகமும்வல்லீர்', 'என்று புகழ்ந்தான் விதிதந்தான்', 'விரிஞ்சன் மகன் சொன்னான்' என்பனவும் பாடங்கள்.

'மன்னையும்' என்பது இராமனைக்குறித்ததாகக் கூறியதுபோலச் சுக்கிரீவனைக் குறிப்பதாகவும் கூறலாம். அது சிறவாது, திருவடி தொழுதபடலத்தில் அனுமான் சீதையைக் கண்ட 'உவகை' யை (-சந்தோஷசமாசாரத்தை)ச் சுக்கிரீவனிடம் சொல்லாது இராமனிடம் சொல்லுதலால்.

'உவகை கொணர்ந்து மன்னையும் இன்னற் குறைவில்லாச் சாகரமுற்றுந் தாவிடும்' என்ற வாக்கியத்தில் 'கொணர்ந்து மன்னை' என்பதைக் 'கொணர்ந்து உம் அன்னை' எனச் சந்திபிரித்துக்கொண்டால், அந்த வாக்கியத்துக்கு ('இராமலக்குமணர் வந்து சிறைமீட்பார்கள்

என்று சந்தோஷசமாசாரத்தைக் கொண்டுபோய் உமது தாயை (சீதையை)க் குறைவற்ற துன்பக்கடலைக்கடந்து கரையேறச்செய்யும்' என்றபொருள் போதரும்.

## அனுமான் இலங்கைசெல்லத் தொடங்கல்.

[தன்னைப் புகழ்ந்து இலங்கைக் கேகும்படி சாம்பவான் சொல்லக் கேட்ட அநுமான், மகிழ்ந்த தலையினனும் குவிந்த கையினனுமாய் 'மனவேகத்தினும் மிகுவேகத்துடன் ஏழுகடலையும் தாவி எல்லா உலகத்தோரையும் எளிதாக வெல்லவல்லீராய்ச் சீதாதேவியை மீட்கும் திறமுடையீரான தேவரீரே! அறிவற்ற அற்பனாகிய அடியேனைப் பொருட்படுத்தி 'இக்காரியத்தை நீ போய்ச் செய்' என்று ஏவப்பெற்றேனென்றால், என்னினும் தன்னியர் யார் இருக்கின்றார்கள்! 'தடுத்தவரையெல்லாம் சங்காரஞ்செய்து சானகி அன்னையைத் தருக' என்றாலும், 'இலங்கையை வேரொடு பேர்த்தெடுத்து வருக' என்றாலும், எதையும், உமது ஏவல் மகிமையால் யான் எளிது செய்துமுடிப்பதைக் காண்பீர். முன்பு இராமபிரான் எனக்குக் கட்டளையிட்டிருப்பதும் அந்தக் கட்டளைப்படியே செய்யும்படி கூறி இப்போது நீங்கள் என்மீது அன்பு வைத்திருப்பதும் 'எனக்கு இருபெருந்துணையாய் இரண்டு இறகுகளாக யான் கருடபகவானைப்போலக் கடலைக்கடத்தலைக் காணுங்கள். யான் இலங்கைக் கேகி மீளும்வரையும் விடையளித்து நீங்கள் இங்கே இனிது தங்கியிருங்கள்' என்று விநயமாகக் கூறி, வானரரெல்லாரும் வாழ்த்த, வானவர் மலர்மாரி தூற்ற, மகேந்திரமலையுச்சியையடைந்தான்.

பூவுலகத்தை ஒரு திருவடிவைப்புள் அடங்க அளந்த திரிவிக்கிரமனான திருமால் வானுலகத்தை அளத்தற்கு உயர எடுத்த மறுதிருவடிபோல, *மாருதி, †வாரிதிகடத்தற்கு வானம் அளாவ வளர்ந்துநின்றான். திருமாலான இராமபிரானது திருவடிதாங்கிச்செல்லும் வாகனமாய்த் திருவடித்தானமாயுற்றதனால், 'திருவடி' எனப்பெற்ற அநுமான், திருமாலின் திருவடித்தோற்றமாயுற்றதனாலும் 'திருவடி' என விளங்கினன்.]

மகேந்திரப் படலம் முற்றிற்று.

கிஷ்கிந்தாகாண்டம் முற்றுப்பெற்றது.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

*அநுமான். †கடல்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

இராவணனைக்குறித்துச் சீதாதேவி சொல்லியவை.

55. *'பெற்றுடை வாளும் நாளும் பிறந்துடை உரனும் பின்னும்
மற்றுடை எவையும் தந்த மலர்அயன் முதலோர் வார்த்தை
விற்றொடை இராமன் கோத்து விடுதலும் விலக்குண் டெல்லாம்
இற்றுடைந் திறுதல் மெய்யே; விளக்கின்முன் இருள்உண் டாமோ?'

இ. ள். '(நீ சிவனிடம்) பெற்றுடைய (சந்திர) வாளும், (மூன்றரைக் கோடி ஆண்டு அளவான ஆயுள்) நாளும், (உன்னோடு கருவில் உதித்து நீ பிறக்கும்போது உன்னோடு கூடப்) பிறந்து (உனக்கு) உடையதான (அபூர்வ தேக) பலமும், (ஆகிய இவைகளும் இவைகள்) அல்லாமல் (இவைகளினின்றும்) வேறாக (நீ தவத்தால் பெற்று) உடைய (பேறுகள்) யாவையும் (உனக்கு) அருளிய (பரமன்) பிரமன் முதலோர் வார்த்தை (யான வரங்கள்) இராமன் வில்லில் அம்பைத் தொடுத்துவிட்டவுடனே (அவைகளுக் கேற்படுத்தப்பட்ட முடிவு காலம்) மாற்றப்பட்டுக் கெட்டு அழிந்து ஒழிந்துவிடுதல் நிச்சயமாகச் சத்தியம்; விளக்குக் கெதிரே இருள் நிற்குமோ? (நின்றால், இராமன் அம்பின்முன் மேற்கூறிய வரங்கள் முதலியவைகள் அழிவுறாமல் நிற்கும்.)'

பெற்றுஉடை பிறந்துஉடை மற்றுடை என்பவைகளில் 'உடைய', 'உடை' என ஈறுதொக்குநின்றது. உரம் என்பதன் விகாரமாகிய உரன், பெலம் என்னும்பொருட்டு. பின்னும் - அன்றியும். பின்னும் இன்னும் அன்றியும் அல்லதூஉம் மற்றும் வேறும் என்பவை ஒருபொருட் பன்மொழிகள் (விராட்டகாசப்படலம் ௩௪—௩௫—ம் பாட்டுக்களைப் பார்க்க). மலர் அயன் - தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமன். வார்த்தை, வார்த்தையால் வழங்கிய வரங்களைக் குறிக்கும். மலர் அயன் முதலியோர் வார்த்தை (யால்) தந்த எவையும் என்று கூட்டிப் பொருள்கூறலாம். இது கவிக் கொண்டுகூட்டு.

*சுந்தரகாண்டத்தில் இதற்குமுந்திய இன்கவிகளும் உரையும் கதைத் தொடர்ச்சியும், 'தமிழர் நேசன்' 'பஞ்சாமிர்தம்' என்ற பத்திரிகைகளில் வெளியாயிருக்கின்றன.

தொடை — அம்பு. வில் தொடை கோத்து — வில்லில் அம்பைத் தொடுத்து. விலக்குதல் - மாற்றுதல் (பிங்கலம்). உடைதல் - அழிதல்; தகர்தல். இறுதல் - கெடுதல்; அறுதல்; முடிதல். இற்று உடைந்து இறுதல் என்ற ஒத்தபொருளுடைய சொற்களின் தொகுதி அழிதலை வற்புறுத்தியதாம். பெற்றுடைவாளும் இற்றிடைந் திறுதல் என்பனவும் பாடங்கள்.

இதன்பின் 60-ம் பாட்டில் இராவணனைநோக்கிச் 'செங்கண்மால் நான்முகன் சிவனென் றே கொலோ - எங்கள் நாயகனையும் நினைந்த தென்னை நீ, என்று இராமன் மும்மூர்த்திகளுக்கு மேலானவனென்பாள், (கீழதிகாரிகள் தீர்ப்புக்களை மேலதிகாரிகள் மாற்றவல்லராயிருத்தல் போல,) பிரமன்முதலியோர் வரங்களை இராமன் மாற்றவல்லனாயிருத்தலால் 'அயன்முதலோர்வார்த்தை விற்றொடை இராமன் கோத்துவிடுதலும் விலக்குண் டெல்லாம், இற்றுடைந் திறுதல் மெய்யே' என்றாள்.

56\. 'குன்றநீ எடுத்த நாள் தன் சேவடிக் கொழுந்தால் உன்னை
வென்றவன் புரங்கள் வேவத் தனிச்சரம் துரந்த மேரு
என்றனைக் கணவன் ஆற்றற் குரன்இலா திற்று வீழ்ந்த
அன்றெழுந் துயர்ந்த ஓசை கேட்டிலை போலும் அம்மா.' 45

இ. ள். 'நீ கயிலாயமலையை (வேரோடுபேர்த்து) எடுத்தகாலத்தில், தனது காற்பெருவிரலினால் உன்னை (அழுத்தி) வென்ற சிவன், திரிபுரங்கள் எரிந்துபோம்படி, அம்பு (தொடுத்து) விட்ட மேருமலையாகிய வில், என் (உயிர்த்) துணையான என்நாயகனது வலிமைக்கு (எதிராகத்தாங்கும்) வலிமையில்லாமல் ஒடிந்துவிழுந்த தற்சமயத்தில் உண்டாகிய (உலகமெல்லாம் கேட்ட) பேரொலியை நீ (மாத்திரம்) கேட்கவில்லைபோலும்.'

நாள் — காலம். சே அடி - சிவந்த பாதம். துரந்த - செலுத்திய தனி சரம் - ஒப்பில்லாத அம்பு. துணை - ஆதரவு; உயிர்த்துணை உற்ற துணை யெனக்கொள்ளநின்றது. ஆற்றல் - வலிமை. உரன் - வலிமை; உரம் உரன் என விகாரப்பட்டுநின்றது. இற்று - ஒடிந்து. கேட்டிலை - கேட்டாயில்லை. போலும் அம்மா அசைச்சொற்கள். போலும் ஒப்பில் போலி. அம்மா அதிசயக்குறிப்பு.

'திரிபுரசங்காரகாலத்தில் மேருமலை சிவபெருமானுக்கு வில்லாக அமைந்ததனால், சீதாவிவாககாலத்தில் கன்யாசுல்கமாக ஏற்பட்ட சிவதனுசையும் அபேதமாக அம்மேருவாகவே கூறினாள்.'

அற்பமான ஒரு புழுவை நசுக்குதல்போல, ஒரு விரலால் உன்னை நசுக்கிய பரமசிவனுடைய பாரமான வில் என் நாயகன் வளைக்கப் பொறாக்காமல், ஒடிந்தபோது உண்டாகிய உரத்த ஓசை, உலகமெங்கும் ஒலித்தது. நீயும் கேட்டிருப்பாய். அவன் ஆற்றல் எங்கே! உன் ஆற்றல் எங்கே! அப்படியிருக்கவும், இப்போது உன்வீரத்தை நீயே மெச்சிய நெடுமொழியை நோக்கினால் அந்தப் பேரொலி உன் காதுக்கு மட்டும் எட்டவில்லைபோலும் என்பது கருத்து.

இப் பாட்டில் 'சேவடிக்கொழுந்து' என்ற அருமையான பிரயோகம் ஆராயத்தக்கது. கால்விரலை ஆனந்தபரவசமடையும்படி புலப்படுத்துகின்ற, கம்பசிருட்டியாகிய, 'சேவடிக்கொழுந்து' என்ற, யாம் முன்னூல்களுள் எந்நூலுளும்கண்டிராத, புத்தம்புதிய, கனியினிய சொற்றொடர், கம்பரது அரிய பாவனைவன்மையையும் இன்சொற்றொடுக்கும் திறத்தையும் ஏககாலத்தில் இனிது விளக்குகின்றது. 'குன்ற' என்று ஆரம்பித்த அடிக்கு மோனை அமைக்க முயன்ற முயற்சியின் பயனாக, இந்த விழுமிய தொடர்மொழி, கம்பர்கருத்தில், உதித்ததென்பது, இதன் இறுதிச்சொல்லாகிய 'கொழுந்து' மோனைத்தானத்தில் நிற்றலால் விளக்குகின்றது. கொழுந்து, கொம்பு கொடிகளின் முடியில் தோன்றும் இளந்தளிர். அதுபோலப் பாதத்தின் முடியில் விரல் இருத்தலைப் பாவனையிற்கொண்டு செந்தீயொத்த சிவந்த திருமேனியுடைய சிவபரஞ்சோதியின் சிவந்த பாதத்தின்முடியில் செந்தீக்கொழுந்துபோலத்திகழும் செவ்விரலைச் சீதை 'சேவடிக்கொழுந்து' எனச்செப்பினளென்ற நயம் பாராட்டற்பாலது. வேதமுடியில் உள்ளவனென்பது குறிக்கும் 'மறைக்கொழுந்து' என்ற பெயர், சிவ நாமங்களுள் ஒன்றாயிருத்தல், இங்கே நினைவுகூரத்தக்கது.

57. 'மலையெடுத் தெண்டிசை காக்கும் மாக்களை
நிலைகெடுத் தேனெனும் மாற்றம் நேருநீ,
சிலையெடுத் திளையவன் நிற்கச் சேர்ந்திலை;
தலையெடுத் தின்னமும் மகளிற் றாழ்தியோ? '

இ-ள். '(கயிலாய) மலையைப் (பெயர்த்து) எடுத் (தேன், அஃதல்லா)து (இந்திரன் முதலிய) அட்டதிக்குப் பாலகரை நிலை கெடச் செய்தேனென்னும் (வீர) வார்த்தைகளை (இறுமாப்போடு ஆடம்பரமாக)

வழங்குகின்ற நீ, இலக்குமணன் வில்லேந்தி (என்னைக் காத்து) நிற்க, (யான் இருந்தபோது, என்னைக் கவர) வந்தாயில்லை; (ஆண்மையின்றிப் பேடிபோல வஞ்சனைசெய்து என்னைக் கவர்ந்தாய். இவ்வாறாக இழிவடைந்த) நீ, இன்னமும் (வீரன்போலத் தலைநிமிர்த்துவாயானால், அதிக இழிவடைவாயென்பதை யறியாமல்) தலை நிமிர்த்து 'ஆண் மகனான நீ) பெண் மகளினும் (கேவலமாகத்) தாழ்வாயோ ?'

மாற்றம் - வார்த்தை. நேர்தல் - தருதல். சிலை - வில். மகளின் தாழ்தியோ - பெண்ணினும் கீழாவாயோ. 'எண்திசைகாக்கும் மாக்களை' என்பதற்கு அஷ்ட திக்கஜங்களை என்றும் பொருள் கூறுவர்.

'தலையெடுத்து' என்ற வினையெச்சத்தைத் 'தாழ்தியோ' என்ற வினைமுற்றைக்கொண்டுமுடிவதாகக்கொண்டு இவ்வுரை கூறப்பட்டது. அவ்வாறுகொள்ளாமல், அந்த வினையெச்சம் 'சேர்ந்திலை' யென்ற வினைமுற்றைக்கொண்டு முடிவதாகக்கொண்டால், தலையெடுத்துச் சேர்ந்திலை யென மாற்றிக்கொண்டு, இலக்குமணனை யெதிர்க்கத் தலைநிமிர்த்து வந்தாயில்லை (அதனால் ஆண்மை யிழந்து பெண் போன்றாய்) இன்னமும் (அதிக இழிவாக நடந்து) பெண்களினும் கீழாவாயோ என்று பொருள் கூறலாம்.

மகளிர்த்தாழ்தியோ என்பதும் பாடம். இப்பாடம் கொண்டார் "பெண்கள் காலினும் வீழக்கடவாயோ" என்று பொருள்கூறினர்.

58. 'வழைநின் ஒளித்துறை இன்ன தாமென,
வாழிஎம் கோமகன் அறிய வந்தநாள்,
ஆழியும் இலங்கையும் அழியத் தாழுமோ?
ஊழியும் திரியும்: உன் உயிரொ டோயுமோ ?' 47

இ. ள். 'அறிவில்லாய் (நீ ஒளித்துக்கொண்டிருக்கும்) மறைவிடம் இதுவாமென்று எங்கள் கோமான் (ஆண இராமன்) தெரியவந்த காலத்தில் (உன்னை அழித்தற்கு உண்டாகும் அவன் கோபம், உனக்கு அரணான இந்த) இலங்கையும் (இதற்கு அரணாக இதனைச் சூழ்ந்துள்ள) கடலும் அழிய (ச் செய்து அம்மட்டோடு) தணியுமோ? (தணியாது; இலங்கையையும் இலங்கையைவளைந்த கடலையும் அழிப்பது உன்னை அழித்தற்பொருட்டாதலால் அவைகளை அழித்துப் பின்பு உன்னை அழித்து) உன்உயிர் போனதோடு (ஆயினும்) தீருமோ ? (தீராது: அக் கோபத்தால்) ஊழிபெயராதலுற்று (உலகமுழுதுமே முடிந்து) விடும்.'

ஏழை - அறிவிலான். ஒளித்துறை - ஒளித்து உறையும் இடம் - மறைவிடம். வாழி அசை (சிந்தாமணி). கோமகன் - தலைவன். ஆழி - கடல். தாழ்தல் - தணிதல். ஊழி - உகமுடிவுகாலம். திரிதல் - மாறுதல். தாழும் ஒயும் என்ற வினைமுற்றுக்களுக்கு இராமன்கோபம் தோன்று எழுவாய். அதுவே அடுத்தபாட்டில் வீயும் என்ற வினைமுற்றுக்கும் எழுவாய்.

'ஊழியும் திரியும்' என்றது, நெடுங்காலம் கழித்துவரற்பாலதாகிய ஊழி (தான் வரவேண்டிய காலம்) மாறி (முன்னதாகவே வந்து) விடும்; வந்துவிடவே, இலங்கையும் இலங்கை சூழ்ந்த கடலுமல்லாத ஏனைய நிலங்களும் கடல்களும் உள்பட உலகமுழுவதும் அக்கோபத்தால் அழிந்துவிடுமென்றபடி. இப்பாட்டில் இக்கருத்து இருப்பது இதற்கடுத்தபாட்டினால் விளங்குதல் காண்க.

'ஒளித்துறை இன்னிடத்தென' 'அறிந்து வந்த நாள்' 'ஊழியுந்தீயும்' என்பன பாடபேதங்கள்.

59. 'வெஞ்சின அரக்கரை விளித்து வீயுமோ ?
வஞ்சனை நீசெய வள்ளல் சீற்றத்தால்
எஞ்சல்இல் உலகெலாம் எஞ்சும்! எஞ்சும்! என்
றஞ்சுகின் றேன்! இதற் கறனும் சான்றரோ! '

இ. ள். '(அந்தக் கோபம், உன்னைக் கொல்வதனோடு தீராமல் உன்னைச் சார்ந்த) இராக்கதரைக் கொன்று (அம்மட்டோடு) தீருமோ? (தீராது.) நீ (ஒருத்தன்) வஞ்சனைசெய்துவிட (-கபடஞ்செய்து என்னைத் திருடிவிட, - அதனால் உண்டாகிய) இராமபிரான் கோபத்தால் (இப்போது) குறைவில்லாதிருக்கின்ற உலகம் முழுதும் அழிந்துவிடுமே யென்று அஞ்சுகின்றேன்! யான் இவ்வாறு அஞ்சு (தல் உண்மை யென்ப)தற்கு (என் நெஞ்சன்றி)த் தருமதேவதையும் சாட்சியாகும்'

வெம் சின அரக்கர் - கொடிய கோபத்தையுடைய இராக்கதர். விளித்து - கொன்று. வீயும் - நீங்கும், "வீநீக்கம் பூப்புள்சாவாம்" எஞ்சல் - குறைதல். எஞ்சும் - இறக்கும் - அழியும். எஞ்சும் எஞ்சும் என்ற அடுக்கு அழிவது திண்ணமெனத் துணிவுகுறித்தது. அறன் என்றது அறக்கடவுளை. சான்று - சாட்சி. அரோ அசை.

60. 'அங்கண்மா ஞாலமும் விசும்பும் அஞ்சவாழ்
வெங்கணாய் புன்தொழில் விலக்க மேற்கொளாய்,
செங்கண்மால் நான்முகன் சிவனென் றேகொலோ
எங்கள்நா யகனையும் நினைந்த தேழைநீ.'

இ. ள். 'மண்ணுலகிலுள்ளோரும் விண்ணுலகிலுள்ளோரும் அஞ்சும்படி (யாக அவர்களுக்குத் துன்பம் செய்துகொண்டு வாழ்)கின்றகொடியோனே! (நீசெய்கின்ற) இழிதொழிலை நீக்குதலைத் தொடங்குகின்றாயில்லை. (உன் அக்கிரமங்களை அடக்க இயலாமலிருக்கின்ற திருமால் பிரமன் சிவன் (போன்ற சாமானியன்) என்றோ எங்கள் தலைவ (ன்ன இராம)னையும் எண்ணினாய்! நீ அறிவில்லாதவன் (ஆதலால் அவ்வாறு எண்ணினாய். திரிமூர்த்திகளுக்கும் மேலானவன் இராமனென்று தெரிந்துகொள்வாயாக)'

அம் கண் மாஞாலம் - அழகிய இடமுடைய பெரிய பூமி. விசும்பு - விண்; விண்ணுலகத்தைக் குறித்தது. ஞாலமும் விசும்பும் ஆகுபெயராய் அவ்விடங்களில் வாழ்வாரை உணர்த்தின. வெங்கண் - கொடுமை. புன்மை - ஈனம். புன்தொழில் - ஈனமான செய்கை. மேற்கொள்ளல்- தலைப்படல் - தொடங்கல். மேற்கொளாய் என்பதற்கு மேற்கொள்வாயாக வென்றும் மேற்கொள்கின்றாயில்லையென்றும் பொருள் கூறலாம்.

இராமன், பரம்பொருளின் கூறுகள் சிலவேயுடைய மூத் தேவர் போலன்றி அவர்களிடத்துள்ள கூறுகளனைத்தும் ஒருசேர உள்ளவன் என்பது பின்னிரண்டடிக் கருத்து. இராமனுக்கு மும்மூர்த்திகளும் 'அளவி ஒப்பாவரேயன்றி ...... தனித்தனி கிடைப்ப ரோதனை' என வருதல் காண்க.

61. 'இருவரென் றிகழ்ந்தனை யென்னின், யாண்டெல்லை
ஒருவனன் றேஉல கழிக்கும் ஊழியான்?
செருவரும் காலைஎன் மெய்ம்மை தேர்தியால்,
பொருவரும் திருஇழந் தாயம் பொன்றுவாய்'

இ-ள். '(யானோ அளவற்ற படைத்துணை யுடையேன். இராமனுக்குத் துணை இலக்குமணன் ஒருத்தனே. ஆக, இவர்கள்) இருவர்தானே யென்று அலட்சியஞ்செய்வாயானால், (யான் சொல்வதைக்கேள். பிரமன் முதலிய தேவர்கள் அளவற்றோருடன் கூடிய) உலகத்தை உகமுடிவில்

சங்காரஞ்செய்யும் ஊழிமுதல்வன் ஒருவனேயன்றோ? (இனிப்) போர் நிகழும்போது நான் உண்மையே உரைத்தேனென்பதை நீ தெளிவாகத் தெரிவாய். (போரில் தோல்வியடைந்து உனது) ஒப்பில்லாத செல்வத்தை யிழந்து (போவதல்லாமல், அருமையான) உயிரையும் அநியாயமாக இழந்துவிடுவாய்'

யாண்டு எல்லை - ஆண்டுகளின் எல்லை - (யுகங்களின்) ஆண்டுகளின் (முடிவாகிய) எல்லை - யுகாந்தகாலம். ஊழி - யுகமுடிவு. ஊழியான் - ஊழி (யில் நிகழும் சர்வசங்காரத்து)க்கு உரியவன் - சங்கார கர்த்தா - சங்கரன். பொரு அரும் ஒப்பில்லாத. திரு - செல்வம். அநாயமாக என்பது அநாயம் எனச் சுருக்கிக் கூறப்பட்டது. நாயம் அநாயம் என்பவை நியாயம் அநியாயம் என்பவற்றின் விகாரம். பொன்றுதல் - சாதல். 'விலக்கி' 'ஆவி பொன்றுவாய்' என்பன பாடபேதங்கள்

இங்கே அநியாயமாகச் சாவாய் என்றது, நெறிவழுவாதிருந்தால் நெடுங்காலம் வாழ்தற்குரிய நீ நெறிவழுவி அகாலமரணம் அடையப் போகின்றாயே என்ற பரிதாபத்தாற் கூறியது; அக்கிரமஞ்செய்வதனாற் சாபவனது சாவு நியாயமன்றென்று கூறியதன்று. தீய வழியிற் செல்வானை 'அநியாயமாகக் கெட்டுப்போகிறானே' என்று பரிதபித்துக் கூறும் உலகவழக்கு இங்கே கருதத்தக்கது.

இறுதியடிக்கு உன் அநியாயத்தால் உன் செல்வத்தையும் உயிரையும் இழப்பாய் என்று பொருள்கூறுதலும் உண்டு. இப்பொருளுக்கு அநாயத்தால் என்பது அநாயம் என உருபுதொக்கதாகக் கொளல் வேண்டும்.

வேறு.

62. 'பூவிலோ னாதி யாகப் புலன்கள்போம் நெறியிற் போகாத்
தேவரோ, அவுணர் தாமோ நிலைநின்று வினையின் தீர்ந்தார்?
ஏவலால் உலகும் செய்யச் செல்வம்நீ நிசைந்த தென்றால்,
பாவமோ, முன்னீ செய்த தருமமோ, தெரியப் பாராய்'

இ-ள். 'பாவங்களின்று நீங்கி (அழியாமல்) நிலைத்திருப்பவர்கள், (மனத்தை அடக்கி) ஐம்புலவழியிலே செல்லாத தேவர்களோ, (அவ்வழியிலே சென்ற) அசுரர்களோ? (என்று நான் கேட்பதற்கு மறுமொழியாக, நீ "நான் மனத்தை அடக்காமல் என் இட்டப்படியேநடக்கின்றேன். நீ "தீவினை" என்னும் வினையினின்றும் நீங்கிலேன்,

ஆயினும் நான் மூன்றுலகத்தையும் ஆளும் பாக்கியமுடையேனு யிருக்கிறேன்" என்று கூறலாம். (நீ கூறுமாறு) எல்லா உலகத்தோரும் நீ இட்டகட்டளையைச் செய்யும்படியாகச் செல்வம் உன்னை அடைந் திருக்கின்றதென்றால், (அப்படி அடைந்திருப்பது,) நீ பிரமன் முதலிய பெருந்தேவரைக்குறித்து அருந்தவஞ்செய்த) நல்வினையினுலோ, (நீ இப்போது மேற்கொண்டிருப்பதுபோன்ற) தீவினையினுலோ? (எதனுலென்று) தெரியும்படி ஆலோசித்துப்பார்ப்பாயாக? ('ஆலோசித் துப் பார்த்தால், நல்வினையால் ஐசுவரியம் அடைந்து இன்புறுகின்ரு யென்றும், தீவினையால் செல்வமிழந்து துன்புறுவாயென்றும் தெரிந்து கொள்வாய். யான் ஏன் இதன்முன் "வெங்கணுய், புன்றொழில்விலக்க மேற்கொளாய்" என்றேன் என்பது நன்கு விளங்கும்' என்றவாறு.)

பூ இ(ல்) லோன் - தாமரைப் பூவை வீடாக (-இருப்பிடமாக) உடையவன் - பிரமன். புலன்கள், சுவை ஒளி ஊறு (பரிசம்) ஓசை நாற்றம் (மணம்) என்ற ஐம்புலன்கள். அவுணர் - அசுரர். தீர்தல் - நீங்கு தல். ஏவல் - கட்டளை - ஆணை. நிற்கு - நினக்கு - உனக்கு. 'நிலை நின்று வினையிற்றீர்ந்தார்' என்பதை 'வினையிற்றீர்ந்து நிலைநின்ருர்'எனப் பொருளுக்குப் பொருத்தமாக விகுதிபிரித்துக்கூட்டியிருக்கிறது காண்க.

இரணியன் முதலிய அசுரர்கள் தீவினையுடைமையால் நிலைத்திரா மல் இறந்தொழிந்தனர். அவ் அசுரர்கள் வாழ்ந்தபோது அவர்களுக்கு அடிமைகளாயிருந்த தேவர்களோ, தீவினையின்மையால் நிலைத்திருக் கின்றனர். தம்மை அடிமைப்படுத்திய அசுரர் இறந்தபின்னும் வாழ் வாராயுள்ள தேவர்கள் அவர்களை அடிமைகளாக உடைய நீ இறந்த பின்னும் நிலைத்திருப்பாரென முற்பாதிக் கவிக்குப் பொருள் விரித் துரைக்கலாம்.

['அகத்தியனுதி முனிவர்கள் எம்பெருமானிடம் வந்து "யாங்கள் இராக்கதர் இயற்றும் கொடுமைகளைத் தாங்கமாட்டாமல் வருந்தித் தவஞ் செய்யமுடியாமலிருந்து வருகின்றோம். அவர்களைக் கொன்று எங்களைக் காத்தருள்வாயாக. உன்னுல் அவர்கள் ஒழிந்துபோவது உறுதியாக உண்மையே". என்று கூறியதை நான் நேரே கேட்டேன். அதற்கிசை வாக நீ என்னைக் கவர்ந்து அவனுக்கே கொடுமைசெய்தாய். அம் முனிவர்கள் கூற, உன் வரலாறுமுழுவதுங் கேட்டு, உன்வலிமை

நெடிய ஆயுள் பெரிய சேனை முதலிய எல்லாவற்றையும் நன்கு தெரிந்து கொண்டபின்பே, எங்கோன், உன் தங்கைமூக்கு முதலிய உறுப்புக்களையும் உன் தம்பியர் கரதூஷணாதி அவயவங்களையும் சின்னபின்னங்களாகச் சேதித்திருக்கின்றான்.' என்று கூறிச் சீதை பின்னும் கூறுகின்றாள்.]

63. 'ஆயிரந் தடக்கை யால்நின் ஐந்நான்கு காமும் பற்றி
வாய்வழி குருதி சோரக் குத்திவான் சிறையில் வைத்த
தூயவன் வயிரத் தோள்கள் துணித்தவன் தொலைந்த மாற்றம்
நீ அறிந் திலையோ! ஏகும் நெறி அறிந் திலாத நீசா.'

இ-ள். '("உன் நாயகன் பெண்பாலான என் தங்கையையும் சிறவரான என் தம்பியரையும் வலிதொலைத்ததுபோல என்னையும் வலி தொலைக்க வல்லானோ?" என்பாயேல், கூறுகின்றேன். கேள்.) தனது ஆயிரங்கைகளால் உனது இருபதுகைகளையும் (இறுகப்) பிடித்து உன் வாய்வழியே இரத்தம்வழியக் குத்திச் சிறையிலிட்ட கார்த்தவீரியார்ச்சுனனுடைய (ஆயிரம்) தோள்களை வெட்டியெறிந்த பரசுராமன் (என் நாயகனால் வலி அழிந்து) தொலைந்த செய்தியை (உலகமெல்லாம் அறியுமே); நீ (ஒருவன்மட்டும்) அறியவில்லையோ!' (இராவணனை வென்றவனை வென்றவனை வென்ற இராமன் இராவணனை வெல்வது மிகவும் எளிதினு மெளிதென்றபடி).

தடக்கை - விசாலமான கை - பெரிய கை. காம் - கை. குருதி - இரத்தம். சோர - வடிய. வான் சிறை - பெரிய சிறைச்சாலை. தூயவன் - சுத்தன் - களங்கமற்றவன். வயிரத்தோள் - வயிரம்போல வன்மையுடைய தோள்கள். துணித்தவன் - வெட்டியெறிந்தவன். மாற்றம் - சொல். சொற்களால் தெரிவிக்கப்படும் செய்தியை உணர்த்தியது. ஏகும் நெறி அறிந்திலாத நீசா - செல்லுதற்குரிய நல்வழியைத் தெரிந்து கொள்ளாத இழிந்தோனே. 'அன்று ஐந்நான்கு'' நீதிநெறியறிந்திலாத' என்பன பாடபேதங்கள்.

64. 'கடிக்கும்வல் அரவும் கேட்கும், மந்திரம் களிக்கின்றோயை
அடிக்கும்ஈ தடாதென் றுன்ற அறிவினால் எதுக்காட்டி
இடிக்குநர் இல்லை: உள்ளார், எண்ணிய தெண்ணி உன்னை
முடிக்குந ரென்றபோது, முடிவன்றி முடிவ துண்டோ?'

இ-ள். 'கடிக்கப்புகுந்த பாம்பும் மந்திரம் (கூறினால்) கேட்டு (க்கடியாமல்) அடங்கும். (நீயும் தக்க மந்திரம் - ஆலோசனை - கூறுவாரிருந்தால், கேட்டுச் செய்யப்புகுந்த தீச்செயலைச் செய்யாமல் அடங்குவாய்.) இது தக்கது இது தகாது என்று (தமது) நிறைந்த அறிவினால் (அறிந்து எந்தக் காரணத்தினால் எதனையும் தக்கதென்றோ தகாததென்றோ தாம் கண்டார்களோ அந்தக்) காரணத்தைக் (குறைந்த அறிவுடைய நீயும் தெரிந்து கொள்ளும்படி) காட்டி உறுதிகூறுவார் (ஒருவரும்) இல்லை. இருக்கிறவர்களோ (தாங்கள் நன்மை தீமைகளை ஆராய்ந்து தெளிந்து உனக்கு நற்புத்தி புகட்டாராய், நீ) நினைப்பதை (த்தாங்களும்) நினைந்து உன்னை முடிவு (—சாவு) அடையச் செய்பவரென்றால், உனக்கு இறுதியாக நேர்வது மரணமன்றி (வேறு) உண்டோ? (இல்லை)' (என்று சீதை தான் சொல்லவேண்டியதைச் சொல்லி முடித்தாள்.)

மந்திரம் - (செபிக்கும்) மந்திரம்; ஆலோசனை. சரிக்கின்றோயை - மதர்த்துத் திரிகின்ற உன்னை. ஈது - இது. ஈது அடுக்கும், (ஈது) அடாதெனப்பொருத்திப் பொருள்கொள்க. 'உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண - அண்ணாத்தல் செய்யா தளறு' என்ற குறளில் 'ஊன்' போல 'ஈது' 'மத்திமதீபம்' என்னும் தாப்பிசைப்பொருள்கோளுக்கு உதாரணமாம். ஏது - காரணம். இடித்தல் - உறுதிகூறல். முடித்தல் - சாகச்செய்தல். முடிக்குநர் - சாகச்செய்கிறவர். என்றபோது - என்றால்; குகப்படலத்தில் 'தாயுரை' என்ற பாட்டில் 'என்றபோது' 'என்றால்' என்று பொருள்பட வருதல் காண்க. 'முடிவது (-இறுதியாக நேர்வது) முடிவன்றி (-சாவல்லாமல்) உண்டோ' என இயைக்க. 'அடாததீதென் றறிவினால் ஏது' 'ஏதுவோடறிவு' 'இல்லை நீயே' என்பனவும் பாடங்கள்.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

## இராவணன் காமத்தினும் கோபம் மிகுதல்.

65 *என்ற றத்துறை கேட்டலும் இருபது நயனம்*
*மின்றி றப்பன ஒத்தன; வெயில்விடு பகுவாய்*
*குன்றி றத்தெழித் துரப்பினன்: குறிப்பதென்! காமன்*
*தன்றி றத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை!*

இ-ள். என்று (சீதை கூறிய) நீதிநெறி (வாசகங்)களை (இராவணன்) கேட்டவுடனே (கடுங்கோபமுண்டானதனால், அவனுடைய) இருபது கண்களும் மின்னல்களை வெளிப்படுத்துவன போல்வன (வாய்க் கோபத் தீயைக் கொட்டுவன) வாயின; (பற்கள் வெள்) ஒளி வீசுகின்ற (பத்து) வாய்களாலும் மலைகளும் தகர்ந்துவிடும்படி (அதிர்ச்சியுண்டாக) அதட்டி ஆரவாரித்தான்: (அவன் கோபத்தின் உக்கிரத்தைச்) கூறுவானேன்! (அந்தக்) கோபத்தின் தன்மை, மன்மதன் வல்லமையையும் மீறிவிட்டது!

அறத்துறை-தருமமார்க்கம். (துறைதிறம் பாயற் காக்கத் தோன்றினன். வாலிவதைப்படலம். ௭௪). வெயில் - ஒளி. பகு வாய் - பிளந்த வாய் - (திறக்கப்பட்டு) அகன்ற வாய். இறுதல் - ஒடிதல். தெழித்தல் - அதட்டல். உரப்பல் - உரத்தொலித்தல். குறித்தல் - சொல்லுதல். ('கொண்டு போகநின் இவுளியென் றற்றதுங் குறித்தான்' அகலிகைப்படலம். ௪௧). தகைமை - தன்மை. 'என்றறத்துறை' என்பது என்ற அறத்துறை என்பதன் தொகுத்தலெனலுமாம்.

கரிய இராவணன் கார்மேகமாகவும், அவன்கண்ணினின்று கோபத்தீச்சுவாலை புறப்படல் மேகத்தின்கண்ணின்று மின்னல் வெளிப்படலாகவும் அவன் அதட்டி ஆரவாரித்தல் மேகம் குமுறி யிடித்தலாகவும் கொள்ளும்படி கவி இராவணகோபவருணனை செய்திருப்பது பாராட்டத்தக்கது.

இராவணனது வாய் அதட்டுமுன், அவனுடைய கண் கோபத்திச் சுவாலை வீசியதென்றது, மேகத்தின் இடியோசை கேட்கப்படுமுன், அதன் மின்னொளி காணப்படும் இயற்கைநிகழ்ச்சியோடொத்திருக்கும் பொருத்தம் கவனிக்கத்தக்கது.

இராவணனுக்குச் சீதையைப்பற்றியுண்டாகிய காமவுணர்ச்சியி னும் மிக்கதாக எவ்வகை யுணர்ச்சியும் தோன்றுமென எவரும் எண் ணியிரார். ஆதலால், இது எதிர்பாராத அதிசயமென்னும்படி 'காமன் தன்தி றத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை!' என்ற காம்பீரிய கவியும் பாராட்டத்தக்கது.

இராவணன் கோபமும் காமமும் சமமாதல்.

66 வளர்ந்த நாணினன், மாதிரம் அனைத்தையும் மறைவித்
தளந்த தோளினன், அனல்சொரி கண்ணினன், 'இவளைப்
பிளந்து தின்பன்' என் றுடன்றனன், பெயர்ந்தனன், பெயரான்,
கிளர்ந்த சீற்றமும் காதலும் எதிரெதிர் கிடைப்ப.

இ-ள். (இராவணன் தன் குறைகளைச் சீதை கூறியதனால்) மிகு கின்ற நாணமுடையவனாய் (இப்படி நாணச்செய்தாளேயென்று கொண்ட கோபத்தினால் வீராவேச முண்டானதனால்) திசைகளெல்லா வற்றையும் மூடி அளக்கின்ற (னபோலப் பூரித்த)தோள்களுடைய வனாய்(க் கோப)த் தீயைக் கொட்டுகின்ற கண்களுடையவனாய் 'இவளைப் பிளந்து தின்பேன்' என்று சொல்லிக் கோபித்தான். (சொல்லியபடி செய்தற்கு அவளைநோக்கிச்செல்ல ஓர் அடி) பெயர்ந்தான், (இரண்டாம் அடி) பெயரானானான், (ஏனெனில், அவன்மனத்துள், அப்போது, திடீ ரென) எழுந்த கோப (மொருபக்க)மும் (நெடுநாளாக உள்ள) காம (மொரு பக்க) மும் (ஒன்றுக்கொன்று பின்வாங்காமல்) எதிர்த்துப் போராடிய தனால் (என்பது).

மாதிரம் - திசை. மறைவித்து - மறையச்செய்து - மூடி. உடலல் - கோபித்தல். பெயர்தல் - (அடி) பெயர்தல் - காலெடுத்து வைத்தல். கிடைத்தல் - எதிர்த்தல். கிடைப்ப: கிடைத்தலால் எனப் பொருள்படும் காரணப்பொருளதாகிய செயவெனெச்சம்.

'தின்பனென்று' என்பதில் 'என்று' என்பது, என்றெண்ணி யென்றும் என்றுகூறி என்றும் பொருள்படுமாயினும், என்றுகூறி என்பதே கவிகருதிய பொருளென்பது, அடுத்தபாட்டில் 'சொன்ன நீசன்' எனவருவதனால் தெளிவாம்.

முந்திய பாட்டில் தொடங்கிய இராவணகோபவருணனை இப் பாட்டில் தொடுத்துக் கூறி முடிக்கப்பெற்றது.

முன், கோபம் மிகுந்து காமத்தை வென்றதாகக் கூறினர். இப்போது, அது குறைந்து காமத்தோடு சமமாயினதென்றார். இனி, அது அதிகமாக் குறைந்து தோற்றதென்பதை 'ஆண்டவாள்' என்ற கவியில், கோபாக்கினி காமவெள்ளத்தால் அவிந்ததென நயம்படக் கூறுவதனால் அறியலாம்.

இராவணன் சீதைமீது நெடுங்காலமாகக்கொண்டிருந்த காமத்துக்கும் அவன் அவள்மீது திடீரெனக்கொண்ட கோபத்துக்கும் நிகழ்ந்த போராட்டத்தின் இறுதியில் காமமே வென்றதென்றதனால், காமம் கோபத்தினும் மிக்க பலமுடையதா யிருந்ததென்பது பெறப்பட்டது. முந்திய கவியில் 'காமன்—தன்றி றத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை'யென்றதனாலும் இந்தக்கவியில்'பெயர்ந்தனன்' என்றதனாலும் எதிர்பாராது கோபத்தால் திடீரென எதிர்க்கப்பட்ட காமம் சிறிது பின்னிடைந்து கோபத்துக் கிடங்கொடுத்ததும், சடுதியில் தாக்கப்பட்டதனால் ஏற்பட்ட தடுமாற்றம் தவிர்ந்த தற்சமயத்தில் காமம் மேற்கொண்டு பின்னுக்குத் தள்ளப்படாமல் சமாளித்துக்கொண்டு தாவரித்து நிலை நின்றதும், அதன்பின்பு பிந்திய 'ஆண்டவாள்' என்னும் கவியில் 'மூண்ட காலவெந் தீயென முற்றிய சீற்றம்—நீண்ட காதல்நீர் நீத்தத்தின் வீவுறு நிலையில்-மீண்டு நின்று' என்றதனால் காமம் தன் அதிக பலத்தை உபயோகித்துக் கோபத்தைப் பின்னிடையச்செய்து தான் முன் இருந்த இடத்தை மீட்டுத் தன் பூர்வநிலையடைந்ததும், இயற்கைநிகழ்ச்சிகளாய்த் தன்மைநவிற்சியணிக்கு இனிய உதாரணமாயிருத்தல் நோக்கி நுகரத்தக்கது.

அப்போது அநுமான் ஆலோசித்தல்.

மரத்தின்மேல் மறைந்திருந்த அநுமான் 'இவளைப் பிளந்து தின்பன்' என்று இராவணன் கோபித்துக்கூறியதைக் கேட்டு, ஒருகால் சொல்லியபடி செய்து விடுவானோவென்று அஞ்சி, அவ்வாறு செய்யப் புகுவானானால், அவன்மேற் குதித்து மிதித்துக்கொன்றுவிடுவேனென்று எண்ணினன்.

இராவணன் கோபம் தணிந்தபின் கூறுதல்.

ஊழித்தீப்போலக் கதித்தெழுந்த கோபம் உகாந்தவெள்ளம் போலப் பெருகிய காமத்தால் அவியாநிற்க, இராவணன், குறித்தகாரியம்

கோபத்தால் கெட்டுப்போமேயன்றிச் சித்தியாகா தென்று கருதிச் சீதை கூறியவைகளுக்குச் சமாதானம் கூறுகின்றான்.

### இராவணன் சீதைக்கு எதிர்மொழி கூறல்.

(தன் வெற்றிதோல்விகள், வீர வெற்றிதோல்விகளல்ல, விளையாட்டு வெற்றிதோல்விகளெனல்)

67 'கொல்வெனென் றுடன்றேன்; உன்னைக் கொன்றிலேன்;
    குறித்துச் சொன்ன
சொல்லுள; அவற்றுக் கெல்லாம் காரணம்
    தெரியச் சொல்லின்,
ஒல்வதி தொல்லா திதென் றெனக்குமொன்
    றுலகத் துண்டே;
வெல்வதும் தோற்றல் தானும் விளையாட்டின்
    விளைந்த மேனாள்.'

இ-ள். '(நீ என்னைப் பழித்ததனால்) "உன்னைக்கொன்றிடுவேன்" என்று கோபங்கொண்டேன்; (ஆயினும்) கொன்றேனில்லை: (பழிமொழி கூறிய உனக்கு எதிர்மொழி கூறவேண்டியிருத்தலால்.) (நீ என்னைக்) குறித்துச் சொன்ன (பழிச்) சொற்கள் (தோற்றத்தில் மெய்யாக) இருக்கின்றன: (உண்மையில் அப்படியில்லை.) (அச்சொற்கள் மெய்யானவையல்லவென உறுதிக்கும்) காரணத்தை விளங்கச் சொன்னால், (என்னாலாகாத காரியமொன்றுமில்லையாதலால்,) எனக்கு இந்தக்காரியம் செய்ய முடியுமானது இந்தக்காரியம் செய்ய முடியாதது என (எடுத்துக்கூறக்கூடிய) ஒருகாரியம் உலகத்தில் இல்லை ("ஏன் சிலருக்குத் தோற்றாய்?" என்பாயேல், கேள்,) முன்னாளில் வெற்றிகள் பெற்றதும் தோல்விகள் உற்றதும் விளையாட்டிலே நிகழ்ந்தவைகள். ("விளையாட்டுக் கருத்தோடு உன் பலத்தை வேண்டுமென்றே உபயோகிக்காமல் நீ தோற்றிருக்கலாம். "வெல்வதும் விளையாட்டின் விளைந்தது"" என்றதேபோ. அஃது என்னை' யெனில், யான் கோபங்கொண்டு எதிர்த்தற்குரிய பலமுடையார் எவரும் எங்கும் இலாதலால், (புலி புலியை எதிர்த்தல்போலன்றிப் பூனையை எதிர்த்தல்போல) என் பகைவரை வீரமாக எதிர்க்காது விளையாட்டாக எதிர்த்து வென்றேன் என்பது.'

உடலல் - கோபித்தல். ஒல்வது - இயல்வது. உண்டே என்பதில் ஏகாரம் எதிர்மறை; 'உன்னைக் கொல்கிலேன்' 'உலகத்துண்டோ' என்பனவும் பாடங்கள்.

இராவணன் தான் எல்லாம்வல்லானென்றும் தன்வெற்றிதோல்விகள் விளையாட்டில் விளைந்தனவென்றுங் கூறியது, உள்ளீடு ஒன்றுமில்லாத பகட்டுரையாகக் கருதற்கிடமாயுள்ளது. அது ஆடம்பரமான வெற்றுரையன்றென உருபித்தற்குரியதாகத் தான் கருதிய நியாயத்தை உடனே கூறாமல் மனத்துள் வைத்துக்கொண்டு வேறுசில சொல்லிவிட்டுப் பின்பு 'வென்றோரும்' என்ற கவியிற் கூறுகின்றான். அவன் அவனுடைய தற்புகழ்ச்சியுரையை ஒப்புக்கொள்ளச்செய்யத் தக்க நியாயமில்லாததனால் அந்த நியாயத்தைக் கூறவில்லையெனச் சீதையை முடிவுசெய்யச்செய்து அதன்பின்பு அந்த நியாயத்தைக் கூறுவது, ஆதியிலேயே கூறுவதினும் விசேட நயம் பயப்பதாகவும் சிறந்த அதிசயம் விளைப்பதாகவும் இருத்தல் குறிக்கத்தக்கது.

(சீதையை வஞ்சித்துக் கவர்ந்ததற்கு நியாயம் கூறல்)

68 'ஒன்றுகேள், உரைக்க; நிற்கோர் உயிரென உரியோன் தன்னைக்
கொன்றுகோள் இழைத்தால், நீநின் உயிர்விடில், கூற்றம் கூடும்;
என்றன்னாருயிரும் நீங்கும், என்பதை இயைய எண்ணி,
அன்றுநான் வஞ்சம் செய்தது; ஆர்எனக் கமரில் நேர்வார்?'

இ-ள். '(உன்னை வஞ்சகத்தாற் கவர்ந்தேனென்றாய். ஏன் அவ்வாறு செய்தேனெனில்,) உண்மையை (நான்) சொல்ல (நீ) கேட்பாயாக. அந்நாளில், உன்னைக்கவர நான் வஞ்சகஞ்செய்தது, உனக்கு ஒப்பற்ற உயிர்போல உரியோனான இராமனைக் கொன்று (உனக்குத்) தீமைசெய்தேனானால், (நீ உயிர்விடுவாய்,) நீ உன் உயிரைவிடுவாயானால், (அத்துன்பந் தாங்கமாட்டாத என்பால்) யமன் வந்து சேர்வான், என் அருமையான உயிரும் நீங்கிவிடும் என்பதை யெண்ணியே (யன்றி, இராமலக்குமணரோடு போர்செய்தற்கஞ்சி யன்று): என்னைப் போரில் எதிர்ப்பார் யார் (உளர்)? (ஒருவருமில்லை.)'

ஒன்று - உண்மை (தமிழகராதி). கோள் - தீமை. இழைத்தல் - செய்தல். கூற்றம் - யமன். கூடும் -(வந்து) சேர்வான். இயைய-பொருந்த. அமர் - போர். நேர்தல் - எதிர்த்தல்.

'கொன்றுகோள் இழைத்தால்' என்பதற்கும் 'நீ நின் உயிர்விடில்' என்பதற்கும் இடையே 'நீ உயிர்விடுவாய்' என்பதைக் கூறுமற்கூறிய நயம் நோக்கத்தக்கது. இது, நூலழகுகள் பத்துள் முதன்மையான 'சுருங்கச் சொல்லல்' 'விளங்கவைத்தல்' என்னும் இரண்டு வனப்புக்களை ஒருசேர உடையதாகவுள்ளது.

(தேவர்களே, அவர்கள் தேவியரை யான் கொண்டுவந்தால், மீட்க நினையாரே, இராமலக்குமணரான மனிதரோ உன்னை மீட்க வருவாரெனல்)

69 'மானென்ப தறிந்து போன மானுட ராவார் மீண்டு
யானென்ப தறிந்தால் வாரார்; ஏழைமை எண்ணி நோக்கல்;
தேனென்ப தறிந்த சொல்லாய், தேவர்தாம் யாவ ரே"எங்
கோன்"என்ப தறிந்த பின்னைத் திறம்புவர், குறையி னல்லால்.'

இ-ள். 'தேன்போலும் (இனிய) மொழியினுய், ("யான் இருக்குமிடந் தெரிந்தவுடனே, இராமலக்குமணர் வந்து என்னை அதஞ்செய்து உன்னை மீட்டுவிடுவார்கள்" என்று உண்மையறியாது கூறினுய். மாரீச மாயமானை உண்மை) மானென்று (பின்தொடர்ந்து) போன (கேவலம்) மனிதர் (ஆன இராமலக்குமணர்கள்,) (உன்னைக்கவர்ந்துகொண்டு போனவன்) யான் என்று தெரிந்தால், ("ராசா கையைப்பிடித்தால் விதிவசம்" என்ற பழமொழியை நினைவுகூர்ந்து) திரும்பி (உன்னை மீட்க) வாமாட்டார்கள். (உன்) அறியாமையால் (அவர்கள் வருவார்களென்று) எண்ணி (அவர்கள் வரவை) எதிர்பாராதே. (தேவர்களே, அவர்கள் தேவியர்களை யான் கொண்டுவந்தால், கொண்டுபோனவன்) "எங்கோன்" (என்று அவர்கள் ராசபத்தியோடு கூறிக்கொள்ளும் யான்) என்று (தெரியுமுன் மீட்க எண்ணுவார்களேயன்றித்) தெரிந்த பின்பு (அவர்களுக்கு முடிவு காலம் நெருங்கி ஆயுள்நாள்) சுருங்கினாலல்லாமல் (மீட்க எண்ணும் தவறு செய்யார். அப்படித்) தவறு செய்வார் தேவருள் யாவரே (உளர்)? (ஒருவருமேயிலர்)'

ஏழைமை (யால்) - அறியாமை (யால்), நோக்கல் - எதிர்பாராதே; அல்லீற்று எதிர்மறை ஏவல்வினைமுற்று. 'வருவிருந்து பார்த்திருப்பான்' (குறள் 87) என்பதில் 'பார்த்தல்' எதிர்பார்த்தலை யுணர்த்தியது போல, இங்கே 'நோக்கல்' எதிர்பார்த்தலை யுணர்த்தியது. 'ஏழைமை

எண்ணி நோக்கல்' என்பதற்கு (வருவார்களென்று) எண்ணி எதிர் பார்த்தல் அறியாமையாம் என்றும் பொருள் கொள்ளலாம். திறம்பு தல் - தவறுதல். தாம் சாரியை. ஏ, வினா அல்லது பிரிநிலை.

சிறிது ஊன்றி நோக்கினால் தெரிந்துகொள்ளக்கூடிய சொற் களும் சொற்றொடர்களும் சொல்லப்படாது விடப்பட்டிருத்தலைக் கம்பராமாயணத்திற் பலகவிகளில் காணலாம். இந்தக் கவியில் 'குறை யினல்லால்' என்பதன்முன் 'வாழ்நாள்' என்பது கூறாது விடப் பட்டிருக்கிறது. 'வாழ்நாள்'தான் கூறப்படவில்லையென்பது, பின் வரும் 'பள்ள நீர்' என்ற கவியில், குறைந்த வாழ்நாளுடையவனே என்று பொருள்படும் 'குறைந்த நாளோய்' என்பதனால் தெளிவாம்.

(உண்மையில், ஒருவரும் என்னை வெல்லவில்லையென்பது, யானே திரிலோகாதிபதியாக விருத்தலால் தெளிவாமெனல்).

70 'வென்றோரும் இருப்ப, யார்க்கும் மேலவர் விளிவி லாதோர்
என்றோரும் இருப்ப, அன்றே, இந்திரன் ஏவல் செய்ய,
ஒன்றாத உலகம் மூன்றும் ஆள்கின்ற ஒருவன் யானே:
மென்றோளாய், இதற்கு வேறோர் காரணம் விரிப்ப துண்டோ?'

இ-ள். 'மென்மையான தோள்களையுடையாளே, (யான் "இதன் முன் வெல்வதும் தோற்றல் தானும் விளையாட்டில் விளைந்த மேனள்" என்றதை நீ ஒப்புக்கொண்டிராவிட்டால், இப்போது சொல்வதைக் கேள். வென்றவரன்றித் தோற்றவர் அரசாள்வரோ?) வென்றவர் (களென்று நீ சொல்லியவர்) களிருக்கவேயும், (அவர்களல்லாமல்) "எல் லாருக்கும் மேலானவர்கள் சாவில்லாதவர்கள்" என்று சொல்லப்பட்டவர் (களான, நீ என்னை வென்றவனென்ற சிவனை யுள்ளிட்ட திரிமூர்த்தி) களிருக்கவேயும், இந்திரன் பணிவிடை செய்யாநிற்க, மூன்றுலகத்தை யும் ஆள்கின்ற ஏகாதிபதி (யாக இருக்கின்றவன்) யானல்லவா? இப்படி (யான் திரிலோகாதிபதியாக) இருப்பதற்கு (உண்மையில் என்னை வென் றவனொருவரு மில்லாதிருப்பதன்றி) வேறொரு காரணம் சொல்ல வேண்டி யதுண்டோ?'

விளிவு - சாவு. ஒன்றுதல் - நெருங்குதல். ஒன்றாத உலகம் மூன்றும் - (ஒன்றுக்கொன்று தூரமாய்) நெருங்கியிராத மூன்று உலகங்

களையும். ஒருவன் என்ற சொல், உலகங்களைப் பொதுநீக்கித் தானொருவனே தனியாக ஆள்பவன் என்ற பொருளை உணர்த்தி நின்றது. விரித்தல் - சொல்லல் (நாமதீப நிகண்டு 652).

'அன்றே' என்பதை 'யானே அன்றே' என இயைத்துப் பொருள் கூறப்பட்டது. அப்படி இயைக்காமல் 'இருப்ப அன்றே' என்றிருக்கிறபடியே வைத்து 'வென்றோரும்............விளிவிலாதோரென்றோரும்' இருக்கவுமல்லவா, உலக மூன்றும் ஆள்கின்ற ஒருவன் யான் (ஆக உள்ளேன்) என்று பொருள் கூறலுமாம்.

'யார்க்கும் மேலவர் விளிவிலாதோர் என்றோரும் என்பதற்கு - த்ரிமூர்த்திகளினும் உயர்ந்தவராய் (ப் பகைவர்களால்) அழிவில்லாதவரென்று நீ கருதுகின்ற ராமலக்ஷ்மணரு மென்று கூறினுமாம்'

'மூன்றும் உணர்கின்ற' என்பதும் பாடம்.

சீதை, இராவணனை நோக்கி 'உன்னைக் கால்விரலொன்றாலழுத்திக் கதறச்செய்த சிவன் வில்லை முறித்தவனும் உன்னை வென்ற கார்த்தவீரியனைக் கொன்ற பரசுராமனைப் பங்கப்படுத்தியவனுமான வீராதிவீரன் இராமன்' என்று கூறியதை இராவணன் எவ்வாறாகவும் மறுக்க முடியாதென யாரும் இயல்பாக எண்ணியிருப்பார். அவர்களையெல்லாம் இந்தக்கவி பரமாச்சரியபரவசராக்கும் பான்மையதாயிருத்தல் பெரிதும் பாராட்டத்தக்கது.

இந்தப் படலத்தில் இராவணனும் சீதையும் நிகழ்த்திய இனிமையான வாதப்பிரதிவாதங்களடங்கிய கவிகளின் முடிவாகவும் *முடியாகவுமுள்ள இந்தக்கவி கம்பரது வழக்குத்திறத்தை விளக்குங் கவிகளுள்ளே சிறந்த ஒன்றாயிருத்தல் சிந்திக்கத்தக்கது.

(இராமலக்குமணரை ஏவல்கொள்வே னெனல்)

['இன்றே சென்று என் இருபதுகைகளிலே ஒரு கையாலேயே இராமலக்குமண ரிருவரையும் ஒருசேரப்பிடித்துக் கொண்டுவந்து உன் கண்ணெதிரே ஏவல்கொள்வேன், காண்பாயாக.']

(உன்னவரொருவரையும் விடாமற் கொன்று உன்னையும் கொல்வேனெனல்)

---

*முடி - மகுடம் - கிரீடம்.

71 'பள்ளநீர் அயோத்தி நண்ணிப் பரதனை முதலி னோராண்
டுள்ளவர் தம்மை யெல்லாம் உயிர்குடித், தூழித் தீயின்
வெள்ளநீர் மிதிலை யோரை வேரறுத், தெளிதின் எய்திக்
கொள்வன்நின் உயிரும்: என்னை அறிந்திலை குறைந்த நாளோய்.'

இ-ள். '(சாம்நாள் நெருங்கி) வாழ்நாள் சுருங்கியவளே, (என் கருத்துக்கு இசையாயாயின், இராமலக்ஷ்மணரைக் கொன்றிடுவேன். அவர்களைக் கொன்றமையோடு நின்றுவிடாமல், அவர்கள் பிறந்த ஊராகிய) அயோத்திமா நகரத்தை அடைந்து, அங்குள்ளவரான பரதன் முதலியோரெல்லாரையும் கொன்று, உகாந்தகாலாக்கினிபோல (அங்கு நின்று சென்று நீ பிறந்த ஊராகிய) மிதிலாபுரி(யில் உள்ள உன்தந்தை சனகன் முதலி)யோரை (க்குடியோடு அடியோடு ஒழித்து) நிர்மூலமாக்கி இங்கே வந்து உன்னுயிரையும் வாங்கிவிடுவேன். (இவ்வளவும் செய்யும் வன்மையுடையவனென) என்னை அறிந்தாயில்லை.'

பள்ள நீர் - ஆழமுடைய நீர். ஆண்டு - அங்கு. உயிர்குடித்தல் - கொல்லல். தீயின் - தீப்போல. வெள்ளநீர் - பெருக்குநீர். நாள் - வாழ்நாள் - ஆயுள் (தமிழ்ச்சாதி). எளிதின் - எளிதாக. எய்தி - அடைந்து - வந்து சேர்ந்து.

பள்ளநீர் வெள்ளநீர் என்பவை முறையே அயோத்திக்கும் மிதிலைக்கும் அருகே செல்லும் ஆற்றுநீர்களையேனும் அந்நகரங்களைச் சூழ்ந்துள்ள அகழிநீர்களையேனும் குறிப்பனவாம்.

'குறைந்த நாள்' என்றது அப்பொருளுடைய 'அற்பாயுசு' என்னும் வடமொழித்தொடரை நினைவுறுத்துகின்றது. 'குறைந்த நாளோய்' என்றது, கோபத்திற் கூறியதாயினும், அது, கோப உணர்ச்சியல்லாமல் 'இளமையும் அழகும் பாழ்படும்படி அகாலமரணம் அடையப்போகின்றாயே' என்னும் பரிதாப உணர்ச்சியையும் பலப்படுத்தும் நயம் நோக்கி நுகரத்தக்கது.

இரண்டுமாதம் கழியுமுன் இணங்காயாயின், இறப்பாயெனல்.

[இராவணன், இவ்வாறு கூறி மிகவும் கோபித்துத் தன் வாளைப் பார்த்து (இதற்கு இரையாக்குவேனெனச் சைகையாற் குறிப்பித்து) 'நீ இணங்குவாயல்லையானால், உன்னைக் கொல்லக் குறித்த காலம், இன்னும் இரண்டு மாதங் கழிந்தவுடனே வந்துவிடும். அப்போது நேரிடுகின்றதை ஆலோசித்துப் பார்' என்று கூறிவிட்டு அப்புறம் போனான்.]

## இராவணன், சீதையைக் காக்கும் அரக்கியரை அவளைவசப்படுத்தும்படி வற்புறுத்தல்.

போனவன், சீதையின் காவலாளரான அரக்கிமாரை நோக்கிச் 'சீதையைப் பயமாகவாவது நயமாகவாவது வசப்படுத்தி அதனை என்னிடம் வந்து சொல்லுங்கள். அவளை வசப்படுத்தீராயின், உங்களைக் கொன்றிடுவேன்' என்று கூறித் தன் இருப்பிடம்நோக்கிச் சென்றான்.

## இராவணன் போனபின், இராட்சசிகள் சீதையைத் துன்புறுத்தல்.

இராவணன் துன்புறுத்திவிட்டுப்போகப்பெற்ற சீதை, இராகு விழுங்கி உமிழ்ந்த சந்திரன் போன்றாள். அவன் போனபின், அரக்கியர்கள், அவளை அச்சுறுத்துவாராய்க், கண்களினின்று நெருப்புப்பொறி பறக்கப் பார்த்து, வாள்களையும் வேல்களையும் உயரத்தூக்கிக்கொண்டு 'கொல்லுங்கள், தின்னுங்கள்' என்று கூறினார்கள். பின்பு, 'கொடிய பெண்களெவரினுங் கொடியவளே, பிரமதேவனுக்குப் பேரன் மகனும் வேதவிற்பன்னனும் மாதவஞ்செய்து தீவினை தீர்ந்தவனுமான இராவணேசுரன் உன்பால் மெய்யன்பு வைத்ததன்றி வேறு பிழையில்லாதவன். அப்படிப்பட்டவன் மனம்வருந்தும்படி புண்ணிற் கோலிட்டாற் போன்ற பொல்லாதவார்த்தைகளைச் சொல்லி நீ பிறந்த குடியும் புகுந்த குடியும் ஒழிந்து கெடும்படி செய்தாய். நீ இணங்காயாயின், இப்போதேகொன்றிடுவோம்: இனி வாழாய்.' என்று அதட்டி வற்புறுத்திக் கூறினார்கள்.

## திரிசடை சீதையைத் தேற்றல்.

சீதை, இராவணனும் இராட்சசிகளும் கொல்லப்புகுந்ததனால் ஒரு சிறிதும் மனவுறுதி குறைவுறாதவளாய்த் துன்பக் கண்ணீர் சொரிந்து துன்பச் சிரிப்புச் சிரித்தாள். அதுகண்ட திரிசடை, 'அம்மா, நான் கண்ட கனவின் நற்பயன்கள் இன்னவையென யான் முன்னம் சொன்னதை நினைந்து வருந்தாதிருப்பாயாக. உன் மனத்தைக் கலங்கவிடுதல் உன் அறிவுக்கு அடுத்ததன்று' என்று தேறுதல் வார்த்தை கூறினாள். திரிசடை கூறிய கனவிவரத்தை அரக்கியர் விசாரித்துத் தெரிந்து நல்லுணர்வுற்றுக் கோபம் நீங்கிச் சீதையை அச்சுறுத்துவதை நிறுத்தினார்கள். அவள் சிறிது துன்பம் நீங்கி உயிர்தரித்திருந்தாள்.

நிந்தனைப்படலம் முற்றும்.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[கஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

## உருக்காட்டு படலம்.

*அனுமான் சீதையைக் கண்டு இராமனைத் தான் அறிந்ததைத் தெரிவித்து ராமமுத்திரைமோதிரத்தைக் கொடுத்துத் தன் இயற்கையுருவத்தைக் காட்டுவதைக் கூறுவது.*

### அனுமான் அரக்கியர் தூங்கும்படி மந்திரித்தல்.

*அனுமான், 'சீதையிடம் சென்று பேசுதற்கு இதுவே சமயம். அதற்கு இடையூறாயிருக்கும் இராட்சசிகள், சீதையை வயப்படுத்தும்படி சற்றமுன்தான், இராவணனால் பயப்படுத்தப்பட்டவர்களாதலால், தாமாகத் தூங்கார். இச்சமயம் இதுவே செய்யத்தக்கது' என்று ஒருமந்திர வித்தைசெய்தான். அவர்கள் செத்தாரொத்தாராய்த் தூங்கலானார்கள்.*

### சீதை, இருத்தலோ, இறத்தலோ, நன்றேன்று வாதித்து இறக்கத்துணிதல்.

*சீதை, இராவணனும் இராட்சசிகளும் தன்னைக் கொன்றேவிடுவார் போன்று அச்சுறுத்தியதனால் அடைந்த அத்தியந்த மனவேதனையைப் பொறுக்கமுடியாமல், வாய்விட்டரற்றுதற்கும் அவ்வேதனையினின்று விடுதலையுறத் தன்னை மாய்த்துக்கொள்ளுதற்கும் தடையாயிருந்த இராட்சசிக ளெல்லாரும் தூங்கக்கண்டு ('இப்போது யாரும் என்சொற்களைக் கேட்கவேனும் என்செயல்களைக் காணவேனும் செய்யார்' என்று நெஞ்சுள்நினைந்து வாழ்தலில் வெறுப்பும் மாய்தலில் விருப்பும் உடையவளாய்த் தன்னைக் கண்டு பேச முயன்றுகொண்டிருக்கும் அனுமான் அருகே மரக்கிளைமேலிருப்ப தறியாதவளாய்) வாய்விட்டுப் புலம்புகின்றாள்:—*

*'கார்மேகமும் கருங்கடலும் கரியஇருளும் உருவுகொண்டாலொத்த திருமேனியையுடைய என் நாயகனைப் பிரிந்ததனால் வருந்தி யிறந்து*

போகிற என் உயிரை நிலைபெறச்செய்ய, அவன் இலங்கைக்கு வருவானோ? வந்தவுடனே, பகைவர் திடுக்கிடும்படி பேரிடிபோலமுழங்கும் அவன் கோதண்டடங்காணொலியைக் கேட்பேனோ? விதியே விளம்புவாயாக'.

'சந்திரனே, சந்திரிகையே, இரவே, இருளே, உங்களில் ஒருவர் போதாதோ, என் உயிரை யொழித்தற்கு? நீங்களெல்லீரும் சேர்ந்து என்னை ஒருத்தியையே வருத்துகிறீர்கள். என்னை நினையாத அவனை வருத்தியிருந்தால், அவன் என்னைத் தேடிவந்திருப்பானே'.

'நாத! நீ வந்தேதீருவாயென்ற உறுதியான நம்பிக்கையினால் அளவற்ற துன்பங்களைப் பொறுத்துக்கொண்டு இறவாதிருந்தேன். அவ்வாறிருந்தது, ஆசைமிகுதியால் உன் பழைய கொடுமையை நினைவுகூராமையாலேயே. "காட்டுக்குவந்தால், வருந்துவாய்; வீட்டில் இரு: சில நாளில் திரும்பிவிடுவேன்." என்று பதினாலு வருடம் பிரிய ஒருப்பட்ட பொருளாளனன்றோ நீ! உன் அருள் இருந்தவாறு இஃதாதலால், இப்பொழுது என்னை மீட்கவாராமல் கொன்றுவிடுவாய்போலும்.'

72. 'பேணும்உணர் வே,உயி ரே,பெருநாள்
நாண் இன்று உழல் வீர்;தனி நாயகனைக்
காணுந் துணை யும்கழி வீரலிர்;நான்
பூணும்பழி யோடு பொருந்துவதோ?'

இ-ள், '(என் நாயகனைப் பிரியுமுன் என்னால்) பாதுகாக்கப்பட்டிருந்த என் உணர்வே, என் உயிரே, (அவனை யான் பிரிந்தவுடனே என் தேகத்தைவிட்டு நீங்கியிருக்கக் கடவீரான நீங்கள், பிரிந்தபின்) நெடுங் காலம் (நீங்கியொழியாமல் என் தேகத்தினுள்ளே) வெட்கமில்லாமல் சுழன்றுகொண்டிருக்கின்றீர்கள். என் நாயகனை யான் காணும்வரையும் நீங்கள் ஒழிவீரல்லீர். (நீங்கள் ஒழியாதவரை) நான் (இறவாமல்) பழியோடு பொருந்தி (யிருக்கவேண்டியிருக்கிறது. அப்படி) யிருப்பதோ (உங்கள் விருப்பு. நன்று, நன்று. நீங்கள் இன்பத்தோடு வாழ்தற்காக, நான் துன்பத்தோடு சாவாதிருக்கவேண்டும்போலும்.)'

பேணுதல் - பாதுகாத்தல். பேணும் என்பது, உணர்வுக்கேயன்றி உயிருக்கும் அடையாகக் கொள்ளும்படிநின்றது. நாண் - வெட்கம். இன்று, இல்லாமல் என்னும் பொருளுடைய இன்றி என்னும் எதிர்

மறைக் குறிப்புவினையெச்சத்தின் விகாரம். உழலல் - சுழலல்.
நாயகன் - ஒப்பற்ற தலைவன். துணை - அளவு. கழிதல் - நீங்குதல்.

'நான்காமடிக்கு - நான் அடையும் பழியை நீங்களும் அடையப் போகிறீர்களோ? என்றும் கருத்துக் கொள்வர்'

இப்போது வாழ்வைவெறுக்கும்நிலையிலுள்ள சீதை, முன் வாழ்வை விரும்பும்நிலையிலிருந்த தன்னைப் பழிப்பதாக இக் கவிக்கருத்தைக் கொள்ளல்வேண்டும்.

இப்பாட்டில், சீதை, தான் வேறு, தன் உணர்வும் உயிரும் வேறு போலக் கூறும் விசேடம் ஆழ்ந்து ஆராய்தற்குரியது. கம்பர், துன்பு இன்பு அன்பு முதலிய உணர்ச்சிகள் அசாதாரணமாக அதிகப்பட்டால் அவைகளை நன்கு புலப்படுத்தற்கு ஒருவரை இருவராகவும் இருவரை ஒருவராகவும் அவ்வவ்வமயத்துக்குப் பொருத்தமாகப் புனைந்துரைப்பர்:—

கழிபெருந் துன்பத்தை விளக்க, ஒருவரை இருவராகக்கூறியதை இந்தப்பாட்டிலும், இறப்பவும் விஞ்சிய இன்பத்தைப் புலப்படுத்த ஒருவரை இருவராகக்கூறியதை இராமன் அயோத்திக்குத் திரும்பிவருவதைத் தெரிந்த பரதன்மெய்ப்பாட்டையுணர்த்தும்,—

வேதியர் தமைத்தொழும்; வேந்த ரைத்தொழும்;
தாதியர் தமைத்தொழும்; தன்னைத் தான்தொழும்;
ஏதுமொன் றுணர்குறா திருக்கும்; நிற்குமால்:
காதலென் றதுவுமோர் கள்ளின் தோற்றமே!

என்ற மீட்சிப்படலப் பாட்டிலும், உச்ச அன்பை உணர்த்த இருவரை ஒருவராகக் கூறியதை,—

* உருத்தெரி தன்மைய உயிரும் ஒன்றுதம்
அருத்தியும் அத்துணை ஆய நின்றார்,
ஒருத்தியும் ஒருத்தனும் உடம்பும் ஒன்றெனப்
பொருத்தின ராமெனப் புல்லி னாரரோ.

என்ற உண்டாட்டுப்படலச் செய்யுளிலும் காணலாம்.

---

* இதன் பொருளைச் 'செந்தமிழ்' தொகுதி 22, ௩௬௧—௭௧- பக்கங்களில் பார்க்க.

இந்தப் பாட்டிலும் இதனைத் தொடர்ந்துவரும் பாட்டுக்களிலும் சீதையின் வாழ்வை விரும்பும் எண்ணங்களோடு வாழ்வை வெறுக்கும் எண்ணங்கள் வாதாடி வென்றதன் பயனாகச் சீதை தன்னை மாய்க்கத் துணிதல் இயல்பான முடிவாயிருத்தல் காண்க.

73. 'முடியாமுடி மன்னன் முடிந்திடவும்,
படியேழும் நெடுந்துயர் பாவிடவும்,
மடியாநெறி வந்து வனம்புகுதும்
கொடியான்வரு மென்று குலாவுவதோ?' ரு

இ-ள். '(தன் பிரிவாலன்றி வேறெந்தக் காரணத்தாலும்) சாவாத தசரதசக்கரவர்த்தி சாகும்படியாகவும் ஏழுலகங்களிலும் மிகுந்த துன்பம் பரவும்படியாகவும் (இரக்கமின்றி) வனத்துக்கு வந்துவிட்ட கொடியோன் (யான் ஒருத்தி துன்புறுதற் கிரங்கி என்னைச் சிறைமீட்க) வருவானென்று யான் மகிழ்(ந்துவாழ்)வது தகுதியோ? (வாரானென்று நிச்சயித்துச் சாவதே தகுதி.)'

படி - உலகம். பாவுதல் - பரவுதல். மடியா நெறி - (போகப் போகத்) தொலையாத (நெடி) வழி. புகுதுதல் - பிரவேசித்தல். வரும் - வருவான். குலாவல் - மகிழ்தல்.

'கொடியார் வரும்' என்ற பாடங்கொண்டார், ' "கொடியார்" என்றது நிஷ்டூரவார்த்தை; கோபத்தினால் ஆண்பால் பலர்பாலாகக் கூறப்பட்ட பால்வழுவமைதி; இச் சொல், சொல்லாற் பலர்பாலாயினும் பொருளால் ஆண்பாலாதலால், "வரும்" என்னும் செய்யுமென்முற்றைக் கொண்ட வழாநிலையேயாம்' என்பர்.

['உயிர் உண்டெனில் துயரும் உண்டு. உயிரொழிந்தாலன்றித் துயரொழியாது. உயிரைப் போக்கலால் துயரைப் போக்கலேயன்றிக் கற்பைக் காக்க உயிரை நீக்கினாளென்னும் புகழைப் பூண்டேனுமாவேன்']

74. 'பொறையிருந் தாற்றிஎன் உயிரும் போற்றினேன்
அறையிருங் கழலவற் காணும் ஆசையால்
நிறையிரும் பல்பகல் நிருதர் நீள்நகர்
சிறையிருந் தேனைஅப் புனிதன் தீண்டுமோ?' ௬

இ-ள். 'என் நாயகனைக் காணவிரும்பியதனால் (அவனைப் பிரிந்த பின் நெடுங்காலம்) பொறுமையோடிருந்து (எல்லாத் துன்பங்களையும்) சகித்து(ப் பலமுறை போகத் துணிந்த) என் உயிரைப் (போகவொட்டாது தடுத்துப்) பாதுகாத்துவைத்துக்கொண்டிருந்தேன். மிகவும் நீண்டகாலம் இராக்கதர் ஊரிலே சிறையிருந்த(தனால் அசுத்தையாய்த் தீண்டத்தகாதவளாய்விட்ட) என்னை அந்தப் பரிசுத்தமூர்த்தி தீண்டுவானோ? (தீண்டான் - ஏற்றுக்கொள்ளமாட்டான்.)'

பொறை இருந்து - பொறுமை (யோடு) இருந்து; மூன்றும்வேற்றுமைத் தொகை. ஆற்றுதல் - சகித்தல் - பொறுத்தல். கழல் - வீரர் காலில் அணியும் ஆபரணம். அறை இருங் கழலவன் - ஒலிக்கின்ற பெரிய வீரகண்டையை யுடையவன் (ஆன இராமன்). பல் பகல் - பல நாள் - நெடுங்காலம். நிருதர் - இராக்கதர்.

75. 'உன்னினர் பிறரென உணர்ந்தும், உய்ந்தவர்
சொன்னன சொன்னன செவியில் தூங்கவும்,
மன்னுயிர் காத்திருங் காலம் வைகினேன்;
என்னின்வே றரக்கியர் யாண்டை யார்கொலோ!'

இ-ள். 'அன்னியர் (என்னைப்பற்றிக் காமாதுரமான) எண்ணங் கொண்டாரென்றுதெரிந்தபின்பு (உயிரைவிடாமல்) பிழைத்திருந்ததோடமையாமல் அவர்கள் (காதலாகச்) சொன்னவைகளெல்லாம் (காதிலே விழுந்து நெடிது) தங்கிநிற்கவும் (அவர்களது கெட்ட எண்ணந் தெரிந்தவுடனே விட்டுவிடாமல்) நிலைத்திருந்த உயிரை (அவர்கள் சொன்னவைகளைக் கேட்டவுடனேயாவது விட்டுவிடாமல்) பாதுகாத்து நெடுங்காலம் வாழ்ந்தேன். (ஆதலால் யானே இராட்சசி.) என்னைத் தவிர வேறு இராட்சசிகள் எங்கே உள்ளார்! (எங்கும் இலர்.)'

உன்னுதல் - எண்ணுதல். உய்தல் - சீவித்தல் - உயிர்வாழ்தல். சொன்னன - சொன்னவை. 'சொன்னன சொன்னன' என்ற அடுக்கு, சொன்னவைகளெல்லாம் என்றும் திரும்பத்திரும்பப் பலமுறை சொன்னவைக ளென்றும் பொருள்கொள்ளநின்றது. தூங்குதல் - இடையறாதுவிழுதல்; ஒலித்தல் (தமிழகாதி). மன் - நிலைத்த. இருமை - பெருமை; இங்கே நெடுமைகுறித்தது. இரும் காலம் - நெடுங்காலம்.

அரக்கியர், வன்னெஞ்சுடையார் என்ற பொருளையுணர்த்திநின்றது. யாண்டை - எவ்விடம்: யாண்டு, யாண்டை யென ஐகாரச்சாரியைபெற்று வந்தது.

சீதைபாற் காமுற்றுக் காதல்வார்த்தைகள் கூறினவன் இராவணனொருவனேயாதலால், 'உன்னினர் பிறர்' 'அவர்' என்பவை சொல்லாற் பன்மையாயினும் பொருளால் ஒருமையேயாம். பின்வரும் 'பிறர்மனை' என்ற பாட்டில் உள்ள 'பிறர்' என்பதும் அது.

76. 'சொற்பிரி யாப்பழி சுமந்து தூங்குவேன்
நற்பிறப் புடைமையும் நாணும் நன்றரோ.
கற்புடை மடந்தையர் கதையு ளோர்கள்தாம்
இற்பிரிந் துய்ந்தவர் யாவர் யானலால்?' 13

இ-ள். 'பழியை (நீக்கித் தள்ளிவிடாமல்) ஏற்றுக்கொண்டு (அதை நீக்கமுயலாது) சோம்பியிருக்கின்றேன். என் உயர்குடிப்பிறப்புடைமையும் நாணுடைமையும் மிக நன்றாயிருக்கின்றன! யானொருத்தியல்லாமல் (இக்காலத்துக் கற்புடையார் எவரும் கணவனைப் பிரிந்தபின் வாழ்ந்தவரில்லை.) கதைகளிற் கூறப்பட்ட முற்காலத்துக் கற்புடையோர் தாம் கணவனைப் பிரிந்தபின் பிழைத்திருந்தவர் யாவர் உளர்? (எவரும் இலர்.)'

சொல் - பேச்சு (தமிழுகாரி) சொல் பிரியாப் பழி - ('சீதை கணவனைப் பிரிந்தபின் செத்தாளில்லை' யென்று சனங்கள் கூடிக்கூடிப்) பேசும் பேச்சினின்று பிரியாத நிந்தை. நல் பிறப்பு - நல்ல (குடிப்) பிறப்பு. 'நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தாரானாலும்' என்பதிற்போல 'நல்' என்பது உயர்ந்த என்ற பொருள்பட நின்றது. நன்று, இகழ்ச்சி குறித்தது. வழக்கமாக இல்லாளையுணர்த்தும் "இல்" என்பது, இங்கே, இல்லாளனை யுணர்த்தியது. உய்தல் - உயிர்வாழ்தல்.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[ககஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

77. 'பிறர்மனை எய்திய பெண்ணைப் பேணுதல்
திறனல தென்றுயிர்க் கிறைவன் தீர்ந்தனன்.
பறன்அலர் அவன்உறப் போது போக்கி, யான்
அறனல தியற்றினேன்: என்கொண் டாற்றுகேன்?'

இ-ள். 'அன்னியன்வீட்டையடைந்த பெண்ணை (த் திரும்ப வீட்டுக்குக் கொண்டுவந்து) ஆதரித்தல் தகாதென்று என் பிராண நாயகன் (என்னை மீட்குதலை) விட்டுவிட்டான். (அப்படி அவன் விட்ட பின்பு, 'அவன்மனைவி அயலான்மனையிலிருக்கின்றாள்' என்று) பக்கத்துள்ளார் (தூற்றும்) பழிச்சொல்லை அவன் அடையாநிற்க, (யான் இறந்து அப் பழிச்சொல்லுக்கு ஆதாரமில்லாததாகச்செய்யாமல், எனக்கு நன்மையின்றி அவனுக்குத் தீங்குசெய்கின்றவளாய் அவப்) பொழுதுபோக்கி (அயல்மனைவாழ்க்கையாகிய) அதர்மத்தைச்செய்து கொண்டிருந்தேன். (நான் உயிர்விடுதலன்றி வேறு) எதனால் (அவன் பழியடைதலை) நீக்குவேன்? (அவன் பழியடைதல் நீங்காச் சாவேனாக என்றவாறு.)'

பேணுதல் - பாதுகாத்தல். திறன் - திறம் (என்பதன் போலி) - தகுதி. உயிர்க்கு இறைவன் - பிராணநாயகன் - கணவன். தீர்தல் - விடுதல்; நீங்குதல். புறன் - பக்கம், பக்கத்துள்ளாரை யுணர்த்தியது. அறன் - அறம் (என்பதன் போலி) - தருமம். அறன் அலது - தருமம் அல்லாதது - அதர்மம். என் - எது. ஆற்றுதல் - தணித்தல்; நீக்கல். 'அறனலதியற்றிவே' றென்பதும் பாடம்.

78. 'எப்பொழு திப்பெரும் பழியின் எய்தினேன்,
அப்பொழு தேஉயிர் துறக்கும் ஆணையேன்.
ஒப்பரும் பெருமறு உலகம் ஓதயான்
இப்பழிக் குய்வது துறக்கம் துன்னவோ?'

இ-ள். 'எப்பொழுது (பிறன்மனைவாழும்) பெரும்பழியை அடைந்தேனோ, அப்பொழுதே உயிரைவிடவேண்டிய கடமையுடையேனானேன். உலகத்தார் (என்னைக் குறித்துக்) குற்றங்கூறுநிற்க, நான் மரியாதைகெட்டு உயிர்வாழ்தல், நற்கதியடைதற்கோ? (நரகம் அடைதற்கேயாம்.)'

ஆணை - ஆன்றோர்மரபு; கடமை; நியதி; மரியாதை. மரியாதையற்றவனைத் 'தப்புக்கெட்டவன்' என்பது உலகவழக்கு. உய்தல் - உயிர் வாழ்தல். துறக்கம் - சுவர்க்கம். துன்னுதல் - அடைதல்.

79. 'அன்பழி சிந்தையர் ஆய ஆடவர்
வன்பழி சுமக்கினும் சுமக்க, மற்றுயான்
துன்பழி பெரும்புகழ்க் குலத்துள் தோன்றினேன்;
என்பழி துடைப்பவர் என்னின் யாவரே?' ௭

இ-ள். '(யான் புகுந்த குடியினரான) இராமலக்குமணர் (அவர்களது க்ஷத்திரிய குலப்பெருமை கெட, அவர்கள் வீட்டுக்கு வந்த பெண்ணைக் கவர்ந்தவனைக் கொன்று அவளை மீட்காத) கொடும்பழியை ஏற்றுக்கொண்டாலும் கொள்ளட்டும். (அது, அவர்கள் காரியம்; அதற்கு நான் பொறுப்பாளியன்று.) மிக்ககீர்த்தியையுடைய (சனக மகாராசனது) குலத்திலே தோன்றிய யான், என் (பிறந்தகுலத்துப் பெருமைகெடப் பிறன்மனைவாழும்) பழியை (ஒழிக்கும் கடமையுடையேன். அப் பழியை) யானல்லாமல் யாவர் நீக்குவார்? (இராமலக்குமணர் என்னைச் சிறைமீட்டாலும், அப்பழி யொழியாது. அது யான் செத்தால்தான் ஒழியும். ஆதலால் சாதலே தக்கது.)'

அன்பழி சிந்தையர் - அன்பற்ற நெஞ்சினர், இராமலக்குமணர் தன்னைச் சிறைமீட்காமையால் கோபத்தால் தன்பக்கல் 'அன்பழி சிந்தையர்' என்றாள். துன்பு அழி - (துன்ப காரணங்களை விலக்கியதனால்) துன்பம் நாசமான - துன்பத்தை யறியாத. துடைத்தல் - நீக்குதல். 'சுமக்க வானுயர்' என்பதும் பாடம்.

80. 'வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கி,என்
மஞ்சனை வைது,பின் வழிக்கொள் வாயென
நஞ்சனை யான்அகம் புகுந்த நங்கையான்,
உய்ஞ்சனென் இருத்தலும் உலகம் கொள்ளுமோ?' ௮

இ-ள். 'கபடமுடைய (மாரீசனுன மாய) மான்பின்னே என் நாயகனைப் போகச்செய்து, என் பிள்ளைபோன்ற (என் அன்புக்குப்பாத்திரமான) இலக்குமணனைக் கடுஞ்சொற் கூறி (என் நாயகனை)ப் பின்பற்றிப் போவாயாக (என்று சொல்லி அனுப்பி என்னைக் காப்பவரை அகற்றியானே எனக்குச் செய்த தீங்கினால்) நஞ்சுபோலும் கொடியான் (ஆன இராவணனால் கவரப்பட்டு அவன்) வீட்டுக்குவந்த பெண்ணாகிய நான் (செத்தொழியாது) உயிர்வாழ்தலை உலகத்தார் (இழிவாகக்கருதுவாரே யன்றி) ஏற்றுக்கொள்வார்களோ? (கொள்ளார். ஆதலால் நான் உயிர் விடக்கடவேன்.)'

மன் - கணவன் (தமிழகராதி). மஞ்சன், மைந்தன் (-மகன்) என்பதன் போலி. நங்கை - பெண்ணிற்சிறந்தாள்; இங்கே பெண்ணிற் கடைப்பட்டாளென்ற எதிரிடைப்பொருள் பயந்து இகழ்ச்சிகுறித்தது. உய்ஞ்சனென், உய்ந்தனென் (-பிழைத்திருந்தேன்) என்பதன் போலி. 'கொள்ளுமோ,' ஏற்றுக்கொள்ளுமோ? ஒப்புக்கொள்ளுமோ? பொறுத்துக்கொள்ளுமோ? என விரித்துக்கூறிப் பொருள்கொள்ள நின்றது.

81. 'வருந்தல்இல் மானமா அனைய மாட்சியார்
பெருந்தவ மடந்தையர் முன்பு, பேதையேன்
"கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வர்ஊர்
இருந்தவள் இவள்"என ஏச நிற்பனே?'

இ-ள். '(தன் திரண்ட மயிர்க்கற்றையில் ஒரு மயிர்போனாலும் உயிரைவிடுகின்ற) கவரிமான்போன்ற (உத்தம மானமுடைய) வரும் (குற்றம் நேர்ந்தால், இறத்தலன்றி உயிரோடிருந்து) வருந்துதலில்லாதவரும் (வேறேயும் சிறந்த) மேம்பாடுடையவருமான (கற்புப்) பெருந்தவம் படைத்த (அயோத்திமாநகர) மாதர் முன்னே, அறிவிலியான நான் (சிறைமீட்கப்பெற்றுச் சென்றேனானால், அவர்கள், என்னைச் சுட்டி) "ஒப்பற்ற காளமேகம்போன்ற இராமபிரானைப் பிரிந்து கள்ள அரக்கரூரிலே வாழ்ந்தவள் இவள்" என்று (தங்களுள்ளே பேசி என்னை ஏசுவார்களே, அவ்வாறு அவர்கள்) ஏச(க் கேட்டபோது இறந்துவிடுவேனேயன்றி, உயிர்தாங்கி) நிற்பேனோ! (அப்போது சாதலினும் இப்போது சாதல் நன்று.)'

மானமா - கவரிமான். 'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் - உயிர்நீப்பர் மானம் வரின்' என்ற குறட்கருத்து இங்கே யெடுத்தாளப் பட்டது. மாட்சி - பெருமை - மேன்மை. பேதை - அறிவிலி. தனி - ஒப்பற்ற. முகில் - மேகம்.

தன்னைக் காக்கும் இராமலக்குமணரைத் தன்னைவிட்டுப் பிரியச் செய்து காப்பிழந்து கவரப்பட்டுச் சிறைப்பட்டதுகருதித் தன்னைப் 'பேதையேன்' என்றாள்.

82. 'அற்புதன் அரக்கர்தம் வருக்கம் ஆசற
விற்பணி கொண்டரும் சிறையின் மீட்டநாள்,
"இற்புகத் தக்கலை" என்னின், யான்உடைக்
கற்பினை எப்பரி சிழைத்துக் காட்டுகேன்?' 20

இ-ள். '(இங்கேயே சாகநேருவதை யெண்ணிப்பாராமல், அயோத்திக்குப்போனபோது சாகநேருமென்றேன்.) அதிசய (வீர)ன் (ஆன என் நாயகன் இங்கேவந்து) இராக்கதவமிசம் சிறிதுமில்லாமல் (அடியோடு) அற்றுப்போம்படி வில்லின்தொழிலை மேற்கொண்டு, மீட்டற்கரிய சிறையினின்று என்னை மீட்டபோது, "என் வீட்டுக்குள்ளே புகுதற்குத் தகுதியுடையையல்லை" என்றால் என்னுடைய கற்புடைமையை எவ்வாறு (நிரூபணஞ்) செய்து காட்டுவேன்? (காட்டுமாறு இல்லையாதலால், அப்போது விடக்கடவதாகிய உயிரை இப்போது விட்டு விடுதல் நல்லது)'

வருக்கம் - வமிசம். ஆசு - அற்பம். விற்பணி - விற்றொழில். எப் பரிசு - எவ்விதம். இழைத்தல் - செய்தல். 'இழைத்தல்' என்பது, இங்கே, நிற்கும் இடத்தின் ஆற்றலால், நிரூபணஞ்செய்த லென்ற பொருள்கொள நின்றது. நிரூபணஞ்செய்தல் - உருசுப்படுத்தல் - மெய்ப்பித்தல்.

சீதை தற்கொலைசெய்யப்புக்க இடத்தில் 'ராமதூதன்'
என்று சொல்லித் தொழுது அனுமான் தோன்றல்.

[சீதாதேவி இவ்வாறு புலம்பிச் சாகமுடிவுசெய்து, இதுவே இறத்தற்கேற்ற இடமென்று ஒரு குருக்கத்திமரச்செறிவை அடைந்தாள். (அவள் புலம்பியதைக் கேட்டுக்கொண்டிருந்த) அனுமான் அவள்கருத்தை ஊகித்துணர்ந்து அவள் தற்கொலைசெய்யத்தொடங்கி யிட்டால், தொட்டுத் தடுக்கவேண்டிவருமென்று அஞ்சித் தற்கொலை

தொடங்குமுன்னேயே தடுத்தற்கு உபாயம், தான் ராமதூதனெனத் தெரிவித்தலேயென்று கருதி 'அடியேன் ராமதூதன்' என்றுசொல்லிக் கும்பிட்டுக்கொண்டு அவளெதிரேபோய்நின்றான்.]

[இங்கே, சற்றுநின்று, கம்பர் இந்தச் சுந்தரகாண்டத்தில், இதுவரை, நாம் ஊகித்துணரும்படி, குறிப்பித்திருப்பவை எவையெவை என ஆராய்தல், தகுதியாயிருக்கின்றது:—

ஊர்தேடுபடலத்தில், அநுமான் சீதையைத் தேடும்போது, இராவணனைத் தம் உயிருக்குயிராகக்கொண்ட அவனுடைய பலசாதி மனைவிமார் அவன் தம்பால் வருதற்கு அளவற்ற விருப்புடனிருக்க, அவன் அவர்களோ டிணங்கி அவர்களையும் தன்னையும் களிப்புறச்செய்யும் அறநெறியகன்று மறநெறிபுகுந்து தன்னைத் துரும்பென மதித்த பிறன்மனைவியை விரும்பும் பெரும்பேதைமையை அநுமான் கண்கூடாகக் காண்பதையும், - காட்சிப்படலத்தில், கல்லிடுக்கில் முளைத்து மழைத்துளிகண்டறியாத * அருமந்த சஞ்சீவி † மூலி போல வாடி, 'மென்மருங்குல்போல் வேறுள அங்கமும் மெலிந்து,' இராமனைப் பிரிந்ததை நினைந்து வருந்தி, அவனோடு கூடிவாழ்ந்த காலத்து நிகழ்ந்தவைகளையெல்லாம் நினைந்து, கெடிது பிரலாபித்து அத்தியந்த துக்கத்தையடைந்து கொடும்புலிக்கூட்டத்தின் நடுவே யகப்பட்ட மான்போலக் கரிய பெரிய விகாரவடிவமும் கடிய கொடிய கோரகிரியையு முடைய இராட்சசிகளிடையேயுள்ள சீதையைக் கறுத்த மேகபடலத்தைக் கிழித்து வெளிப்படும் மின்னைப்போல அநுமான் கண்ட தற்சமயத்தில் இராவணன் வருதலையும், - நிந்தனைப் படலத்தில், அவன் பலவாறு நயமொழி புகன்றும் பயமொழி பகர்ந்தும் அவளை இணங்கும்படி வேண்ட, அவள் வெறுத்து மறுக்க, அவன் கொடுங்கோபங்கொண்டு 'இணங்காயேல் இறப்பாய்' என அவளையும் 'இணக்கீரேல் இறப்பீர்' என அவளைக் காக்கும் அரக்கியரையும் பயமுறுத்திவிட்டுப் புறப்பட்டுப்போதலையும், - இந்த உருக்காட்டுபடலத்தில், முன்னமே உயிர்விடுமெண்ணம் உதிக்குமளவுக்கு ஒருபடியே குறைந்த உச்சத்துன்பத்தை உற்றிருந்த சீதைக்கு, இராவணனும் அவனுக்குப் பின்பு இராட்சசிகளும் உறுத்திய வருத்தத்தினால் உயிரை விடுமெண்ணம் உண்டாயிருந்தசமயத்தில் அநுமானது மந்திரத்தி

*அருமருந்தன்ன. †மூலி - மூலிகை - செடி.

ஞல் அரக்கியர் உறக்கமுற, அவள் கண்டு, சாகச் சமயம்வாய்த்ததை அறிந்து, இருந்தலினும் இறத்தலே நன்றென்று, அவன்காதுகேட்கப் பலபடப் புலம்பி அவன் கண்காணச் சாகப்போவதையும் கம்பர் இனிது புனைந்துரைத்திருப்பது, — இரவில் நெடுநேரம் இலங்கைமாநகரமெங்கும் *இலைப்புரைகிளைத்துப்பார்த்துச் சடைந்து இறுதியில் அசோகவனத்தை அடைந்து சீதையைக் கண்ட அநுமான் சிறிது நேரம் தாழ்த்து அங்கே வந்திருப்பானாகில், ஆங்கு நிகழ்ந்த அதிமுக்கியமான செய்திகளைத் தெரிந்திருக்கமாட்டான், அச் செய்திகளின் இயற்கைமுடிவும் அத்தியந்த முக்கியமுமான சீதை தற்கொலையைத் தடுத்திருக்கவுமாட்டானென்ற எண்ணத்தை நம் மனத்துள் எழுப்பி, அநுமான் நேராகக் கண்ணாலும் காதாலும் தெரிந்துகொள்ளும்படி முன்னமே சித்தஞ்செய்து வைக்கப்பட்ட நனியினிய நாடகக்காட்சிகளை நாம் மனக்கண்கொண்டுகாண நடித்துக்காட்டுவதுபோன்றிருக்கின்றது.)

இராமன் வராமை எதனாலெனல்.

83. 'ஈண்டுநீ இருந்ததை இடரின் வைகுறும்
ஆண்டகை அறிந்திலன்; அதற்குக் காரணம்
வேண்டுமே; அரக்கர்தம் வருக்கம் வேரொடும்
மாண்டில. ஈதலால், மற்றும் வேண்டுமோ?'

இ-ள். 'நீ இங்கே யிருப்பதை இராமன் அறிந்தானில்லை. (எதற்கும் காரணம் வேண்டியிருப்பதுபோல) அதற்குக் காரணம் வேண்டுமன்றோ. (அது நீ அறிந்ததே. ஆயினும் கூறுகின்றேன். அக்காரணம்,) அரக்க வம்சங்கள் (அனைத்தும்) அடியோடும் அழியவில்லை யென்பதே. (இதுவே போதிய காரணம்.) வேறேயும் (காரணம்) வேண்டுமோ?' (வேண்டியதில்லை யென்றபடி)

ஈண்டு - இங்கே. இடர் - (சீதையைப்பிரிந்த) துன்பம். வைகுதல் - தங்குதல். ஆண்டகை - ஆண்தகை - ஆண்தன்மை - ஆண்மை - வீரம்: வீரமுடையானை இராமனைக்குறித்தது. மற்றும் - வேறு (காரணமு)ம். 'காரணம் வேண்டுமோ', 'ஈதலால் மாறு வேறுண்டோ' என்பனவும் பாடங்கள்.

சீதை இலங்கையிலிருப்பதை இராமன் அறிதலாகிய காரணத்துக்கும் அவன் அரக்கரனைவரையும் அழித்தலாகிய காரியத்துக்கும்

*நுட்பமாகத் தேடி.

இடையே யுள்ள காலம் மிகவும் குறைவானதாமென்பதை உறுதியாக உணர்த்தற்கு அந்தக் காரணகாரியங்களை முன்பின்னாக மாற்றி வியப்பும் நயப்பும் விளையக் கூறினான். இது, காளிதாசமகாகவி சாகுந்தல நாடகத்தில் ஒரு சந்தர்ப்பத்தில் காரணம் காரியத்துக்குப் பிந்தியதாகச் சமத்காரமாகக்கூறியதை நினைப்பூட்டுகின்றது. அது வருமாறு:—

'துஷ்யந்தன் (மாரீசமுனிவனைநோக்கிக் கூறுவது), "பெருமானே! முதலிற் குறித்தது நிறைவேறியதும், பிறகு தங்கள் தரிசனமும் கிடைத்தமையால் தங்கள் அனுக்கிரகம் ஒப்பில்லாததாயிருக்கின்றது. என்னை? முதலில் மலர் தோன்றுகின்றது, அதன்பின் கனி உண்டாகின்றது; முதலில் கார் எழுகின்றது, அதன்பின் மழைபொழிகின்றது. இது தான் காரண காரிய முறை. மற்று இங்கோ, தங்கள் அனுக்கிரகம்பெறுதற்குமுன்னரே செல்வம் வரலாயிற்று."'

## அனுமான், தான் உண்மையாக இராமதூதனெனச் சீதை நம்புமாறு கூறுதல்.

[அனுமான், சீதையின் முகக்குறியால், அவள் தன்னைச் சந்தேகிக்கின்றாளென்று உணர்ந்து 'சந்தேகிக்காதே, என்னிடத்தில் இராமபிரான் கொடுத்தருளிய அடையாளப்பொருள் இருக்கின்றது. அன்றி, உனக்கும் அவனுக்குமே தெரிந்த சில நிகழ்ச்சிகள் அவன் என்னிடம் கூறியருளினவும் உள்ளன' என்று சொல்லிக் கீழே விழுந்து வணங்கி எழுந்து கைகூப்பிநின்றான். அவள், அவன் வார்த்தையும் தோற்றமும் அன்பைக் காட்டுவனவாகக் கருதியதனால் அருளும், ஒருகால் அகத்தே வஞ்சகமுடையனாய்ப் புறத்தே அன்புடையான்போல நடிக்கின்றானோ எனக் கருதியதனால் கோபமும் கொண்டு, பின்பு அவனைக் கூர்ந்துநோக்கி, இவன் உள்ளத்துள்ள நல்லெண்ணங்கள் இவன் முகத்திற் பிரதிபலித்தலால், இவன் தேவனாகவாவது முற்றத்துறந்த முனிவனாகவாவது இருக்கவேண்டுமென் றெண்ணினாள்.]

## வந்தவன் எவனாயினும் என்? ராமநாமத்தைச் சொன்னான் உயிரை உதவினான் எனச் சீதை நினைதல்.

84. 'அரக்கனே ஆக, வேறோர் அமரனே ஆக, அன்றிக்,
குரக்கினத் தொருவனேதான் ஆகுக; கொடுமை ஆக,
இரக்கமே ஆக: வந்திங் கெம்பிரான் நாமம் சொல்லி
உருக்கினன் உணர்வைத் தந்தான் உயிர்: இதின் உதவி உண்டோ?'

இ-ள். '(நான் சந்தேகித்தபடி இவன் குரங்குபோல வஞ்சகமாக வேடம்பூண்ட கொடுமையுடைய) இராக்கதனேயானாலு மாகட்டும், (அன்றி, எனக்கு நன்மைசெய்ய இரங்கிக் குரங்குவேடங்கொண்டு வந்த) தேவனேயானாலு மாகட்டும், (வேடதாரிகளான இவ்விருவரும்) அல்லாமல் (தோற்றப்படியே உண்மையிலேயும்) குரங்குக்கூட்டத்தைச் சேர்ந்த ஒருவனேயானாலு மாகட்டும்; (இவன் இராக்கதனாயிருந்தால், இவன் செய்யக்கருதியது கொடுமையாம். அப்படிக்) கொடுமையானாலும் ஆகட்டும்; (இவன் தேவனாயிருந்தால், இவன் வந்த காரணம் என் மீது கொண்ட இரக்கமாம், அப்படி) இரக்கமானாலும் ஆகட்டும்: (இவன் அரக்கனாயினும் அமரனாயினும், இவன் செய்தது *நன்மையே. இவன், தான் இருக்குமிடத்திலிருந்து எவ்வளவோ தூரம் கடந்து நானிருக்கும்) இவ்விடத்துக்கு வந்து எம்பிரானுடைய திருநாமத்தை உச்சரித்து என் உணர்வை உருக்கினான். (அதனால் என்) உயிரை(ச் சாவாமல் காத்து) உதவினான். (எல்லா உதவிகளினும் உயர்ந்த உயிருதவியாகிய) இந்த உதவிக்கு மேலான உதவியுண்டோ? (இல்லை).' (என்று சீதை யெண்ணினாள்.)

உணர்வை உருக்கினன், உயிர்தந்தான் என மாற்றுக. 'இதின்' என்பது அடுத்துவரும் 'உதவி' என்பதனால் 'இந்த உதவியினும்' என்று பொருள்படநின்றது. தேவர், அரக்கருக்கு மாறானவராதலால் 'அரக்கனே ஆக' என்றபின் 'வேறோர் அமரனே ஆக' என்றாள். 'அரக்கனே ஆக' 'அமரனே ஆக' எனக் கூறியிருக்கும் வரிசைக் கியைய, 'அவர்கள் தன்மைகளைக் 'கொடுமை ஆக' 'இரக்கமே ஆக' என நிரல் படக்கூறியிருப்பது கவனிக்கத்தக்கது.

'இச் செய்யுளினால், சீதை இராமபிரானிடத்துக் கொண்டுள்ள பேரன்பு நன்குவிளங்கும்.'

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

*நன்மை, ராமநாமோச்சாரணத்தைக் குறித்தது.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[கசச-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

## அநுமான் தன் வரலாற்றைச் சீதைக்குத் தெரிவித்தல்.

[சீதை, மேலே கூறியவாறு கருதி, 'இவன் பேச்சு வஞ்சகமற்றது. இவன் உள்ளத்தே உள்ளதை உள்ளவாறே உரைக்கின்றான். இவன் யாவன் என விசாரித்தற்குரியன்' என்றெண்ணி 'வீரா, நீ யார்?' என வினவ, அவ் வினாவைக் கூப்பிய கையோடு தலைமேற்கொண்டு விடை கூறுவானாய்த் 'தாயே! இராமபிரான் உன்னைப் பிரிந்தபின்பு தெரிந்தெடுத்துக்கொண்ட சிநேகன், சூரிய குமாரனும் வானரராசனுமான சுக்கிரீவனென்பவன். அவன் தமயன், இராவணனைத் தன் வாலிற் கட்டித் தூக்கிக்கொண்டு அநாயாசமாக அட்டதிக்குகளினும் பாய்ந்த அசகாயசூரன். அவன் தேவர்கள்வேண்டிக்கொள்ள, மந்தரமலை மத்தாக வாசுகிப்பாம்பு கடைகயிறாகத் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதமெடுத்துத் தேவர்களுக்குக் கொடுத்த அபாரமான தோள்வலிபடைத்தவன். அப்படிப்பட்ட வாலியை உன் நாயகன், ஒரே அம்பினால் உயிர்வாங்கி, அவன் இராச்சியத்தை அவன் தம்பி சுக்கிரீவனுக்கு அளித்து, அவனைத் துணையாகச் சேர்த்துக்கொண்டான். அந்தச் சுக்கிரீவமகாராசனுடைய மந்திரிகளுள் அடியேன் ஒருவேன். அநுமனென்னும் பெயரினேன். எங்கள் அரசன் சேனை எழுபதுவெள்ளமென்னும் பெருந்தொகை கொண்டது. அந்தச் சேனை வீரர் ஒவ்வொருவரும் கடல்கடக்கவல்லவர். அவர்களெல்லாரும் எந்தக்காரியத்தையும் உன் நாயகன்குறிப்புப்படி செய்துமுடிக்க மனமொருப்பட்டவராய் அவன்கட்டளைப்படி உன்னைத் தேடுதற்கு எல்லாத்திசைகளினும் சென்றிருக்கின்றனர். அவர்கள் உன்னை இவ் அண்டத்துள்ளே காணாவிட்டால், வெளியே உள்ள அண்டங்களனைத்தினுஞ் சென்று தேடப்போயிருக்கிறார்கள்.

உன்னை இராவணன் வான்வழியாகக் கொண்டுபோனபோது, நீ ஆடையிற்பொதிந்து பூமியில் எறிந்த நகைமுடிப்பு எங்கள் மலைமேல் நாங்களிருந்த இடத்தில் விழுந்திருந்ததை இராமபிரானுக்குக் காட்டி, இராவணன் தென்முகமாகச்சென்றானென்றதை அப்பெருமான் மனத்துட்கொண்டு அடியேனைத் தனியாக ஓர் ஏகாந்தமான இடத்துக்கு அழைத்துப்போய்ச் சொல்லவேண்டியவைகளைச் சொல்லி "நீ தென்றிசை சென்று தேடிக்காண்பாயாக" என்று செப்பியருளினான். அவன் அருள் பழுதுபடாதாகையால், உன்னைத் தேடச்சென்ற எத்தனையோ கோடியருள் ஒருவனான எளியேன் உன்திருவடி தெரிசிக்கும்பேறு பெற்றேன்.'*]

நீ கவுரவித்து அணிந்துகொண்டிருக்கும் மங்கலியத்தை அந்த நகை காத்ததில்லை, நீ அவமதித்துக் கழற்றியெறிந்த மற்றைநகைகளே காத்தன எனல்.

85 'கொற்றவற் காண்டுக் காட்டிக் கொடுத்தபோ தடுத்த தன்மை,
பெற்றியின் உணர்தற் பாற்றே! உயிர்நிலை பிறிதும் உண்டோ!
இற்றைநா ளளவும் அன்று! அன்றுநீ இழித்து நீத்த
மற்றைநல் அணிகள் காண், உன் மங்கலம் காத்த மன்னோ'

*குறிப்பு:—சீதை, 'நீ யார்?' என வினவிய வினாவுக்கு விடையளிக்கும் இடையில், அனுமான், இராவணனைத் தோள்வலியாலன்றி வால்வலியாலேயே வென்ற வாலியைப் பல அம்புகளாலன்றி ஓரம்பாலேயே இராமன் கொன்றானென்ற, இடைப்பிறவரலாகக்கூறிய மெய்ம்மைக்கூற்றும், சுக்கிரீவனது சேனைவீரருள் தான் ஒருவனே கடல்கடக்க வல்லவனாயிருக்க, ஒவ்வொருவீரரும் அத்தகையரென்றும் அவர்கள் சீதையை இந்த அண்டத்திற் காணவிடில் பகிரண்டங்களினும் தேடச்சென்றிருக்கின்றாரென்றும் கூறிய பொய்ம்மைக்கூற்றும், முறையே மற்றொன்றுவிரித்தல் பொய்யுரைத்தல் என்னுங் குற்றங்களாகத் தோன்றினும், உண்மையில் அவ் இருவகைக்கூற்றுக்களும், உயிர்விடுமளவுக்கு அதைரியமடைந்திருந்த சீதைக்குத் தைரியமுண்டாக்குவதாகிய 'புரைதீர்ந்த நன்மைபயக்கும்'பொருட்டுக் கூறியனவாதலால் நிர்த்தோஷமானவை யென்னலாம்.

இ-ள். 'தாயே, உன் நாயகனுக்கு அவ்விடத்தில் - நாங்களிருந்த மலையிலே - (அந்த நகைகளைக் கொண்டுவந்து) காட்டிக் (கையிலே) கொடுத்தபோது, (உன் நாயகன்பால்) நிகழ்ந்த (மெய்ப்பாட்டுத்) தன்மை (நான்சொல்லும்) விதத்தினுல் (நீ) தெரியும் இயல்பினதன்று. (அது கண்டோர் அறியக்கூடியதாயிருந்ததன்றிக் கேட்டோர் அறியக்கூடியதாயிருக்கவில்லை). (உன் பிரிவாற்றாமையால் இறக்குந்தருவாயிலிருந்த உன் நாயனுக்கு அந்த நகைகள் உயிர்போய்விடாமல் நிலைக்கச்செய்தன. அவைகளைக் கண்டிரானேல், இறந்திருப்பான். ஆதலால், அந்த நகைகளே அவன் உயிர்நிலையாயிருக்கின்றன. அவனுக்கு அந்த நகைகளன்றி) வேறு உயிர்நிலை இல்லை, (அவைகளைப் பார்த்தும் பரிசித்தும் இன்றளவும் இறவாதிருக்கிறான்.), (உன்னை இராவணன் கொண்டுபோன நாள் எந்த நாளோ,) அந்த நாளிலே, நீ (நாயகனைப் பிரிந்திருக்கின்ற நமக்கு மங்கலியமல்லாத மற்றநகைகள் தகாதனவென வெறுத்து) அவமதித்து (உன் திருமேனியினின்று) நீக்கியெறிந்த மற்ற நகைகளே இன்றைத்தினம்வரையும் உன் மங்கலியத்தை (எனவே உன் நாயகன் உயிரை)க் காப்பாற்றின.' (நீ சுமங்கலியாயிருப்பது - உன் நாயகன் உயிரோடிருப்பது - நீ கட்டியிருக்கும் மங்கலியத்தாலன்று, கழற்றியெறிந்த மற்ற நகைகளால் என்பதை அறிவாயாக என்றபடி.)

கொற்றம் - வெற்றி. கொற்றவன் - வெற்றியுடையவன் - இராமன். ஆண்டு - அவ்விடத்தில் - சுக்கிரீவன் அநுமான் முதலியோர் இருந்த ரிசியமூகமலையில். பெற்றி-விதம், தன்மை. இழித்தல்-தாழ்த்தல், அவமதித்தல். நீத்தல் - துறத்தல் - நீக்குதல். இற்றைநாள் - இன்றைத்தினம். அன்னு - அன்னையே - தாயே. 'ஐஇறு பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும் உருபாம்' என்றபடி அன்னை விளியேற்கும்போது அன்னு என்றாயது. அட்டிமையை அம்மா என அழைக்கும் உலகவழக்கு இங்கே கருதத்தக்கது. காண், முன்னிலையில்வரும் ஓர் உரையசை. மங்கலம் என்பது இரட்டுறமொழிதலாய், மங்கலியத்தையும் மங்கலியம் என்னும் அறிகுறியோடு, அதுவாகிய சுமங்கலித்துவத்தையும் (அதாவது ஒருத்தி கட்டுக்கழுத்தியாய்—கணவன் உயிரோடிருக்கப்பெற்றவளாய்—

இருக்குந்தன்மையையும் உணர்த்திநின்றது. காத்தல் - (தீங்குறாமல்) தடுத்தல். மங்கலங் காத்த - மங்கலியத்துக்குக் (கழுத்தினின்று களையப்படும்) கேடுறாமல் தடுத்த. மன் ஓ அசைநிலைகள்.

நான்காம்வேற்றுமைத்தொகையாகிய 'கொற்றவற்கொண்டு' என்ற பாடத்துக்குக் கொற்றவனுக்கு (அந்த நகைகளைக்) கொண்டு(வந்து) எனப் பொருள்கொள்க.

ஏனைய ஆபரணங்களுக்கில்லாத திரு என்ற அடையுடன் திருமங்கலியம் என வழங்கப்பெற்ற மங்கலத்துக்கு அடைகொடாது வெறுமனே 'மங்கலம் காத்த' எனக் கூறி, மற்ற அணிகளை 'மற்றை நல் அணிகள்' என விசேடித்துக்கூறியது, இராமன் உயிரை முன்னையது காவாமலிருக்கப் பின்னையவை காத்தனவென்பது குறிக்க என்னலாம்.

'உன் நாயகன் சாவாமற் காத்தன' என்றது, 'உன்மங்கலங் காத்த' என்றது மங்கலவழக்கு.

'இராமன் இறந்துபடுவனென்பதை வாயினாற் சொல்லக் கூசி "உன் மங்கலங் காத்த" என வேறுவகையாற் கூறினது—பிறிதினவிற்சியணி'

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[கசுசு-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

## அநுமான், தான் இலங்கைக்கு வந்தவாறு கூறுதல்.

[‘உன் ஆபரணங்களால் இராமபிரான் உயிர்தரித்திருக்கின்றான். அவன் ஆணையைச் சிரமேற்கொண்டு உன்னைத் தேடும்பணிசெய்யப் புறப்பட்ட வானர சேனாபதிகளுள்ளே வாலிகுமாரனும் இளவரசனுமான அங்கதன், இரண்டுவெள்ளம் சேனையுடன் தென்றிசைக்கு வந்திருக்கின்றான். அந்தச் சேனையைச் சேர்ந்த யான் இலங்கைக்கு வந்தேன்’ என்று அநுமான் கூறினான்.

## சீதைகேட்க, அநுமான் இராமனை வருணித்தல்.

அது கேட்ட சீதை, ‘எம்பெருமான் திருமேனியிலக்கணத்தை நீ தெரிந்தவாறு செப்புவாயாக’ என, அநுமான் கூறுவானானான்:—

## இராமன் அங்கவருணனை எளியதன்றெனல்.

‘அழகிற்சிறந்த மற்றைய ஆடவர்களுடைய அங்கங்களுக்கு உயர்ந்த உவமானங்களாகத் தெரிந்தெடுத்துக் கூறும் பொருள்கள் யாவையும் இராமபிரான் அங்கங்களுக்குத் தாழ்ந்தவைகளாயிருக்கின்றன. அவன் திருமேனியைச் செவ்வையாகத் தெரிந்த நீ, என் வருணனையை அடையாளமாகக்கொண்டு தொடர்ந்து, உன் ஞாபகமும் மனோபாவனையும் துணையாக, அவன் அங்கலக்கணங்களனைத்தையும் அறிந்துகொள்வாயாக’ என்று இராமன்மேனியை அடிமுதல் முடியிறுதியாக அநுமான் வருணிப்பானானான்:—

## இராமனது பாதாதிகேச வருணனை.

(பாதம், விரல், நகம், புறவடி, தொடைகளின் வருணனை)

‘அணியிலக்கணம்வல்லார், பாதத்துக்குத் தாமரைமலர் உவமானமென்பர். அம்மலர் உவமானமாகவொண்ணாத உயர்வுடையது இராம

பிரான் ஸ்ரீபாதம். அந்தப் பாதத்தின் செந்நிறத்தை நோக்கச் செம்பவளம், கருங்குவளை யென்னும்படி கரியதாய்விடும். விரல்களுக்குக் கேவலம் கற்பகதருவின் அரும்பையும் பவளக்கொடியையும் உவமையாகக் கூறலாமோ? உதயசூரியனது சிவந்த கிரணங்கள் ஒப்பென்று கூறலாமேயன்றி வேறு கூறலாகாது. பதினைந்து திதிகளில் பதினைந்து வடிவமாகத்தோன்றும் சந்திரன், சிறியனவும் பெரியனவுமாக விளங்கும் நகங்களுக்கு உபமானமாகவேண்டுமானால், (அந்நகங்கள்போலச்) சிறுத்தும் பருத்தும் பளபளத்தும் தோன்றுதல்மட்டும் போதாது, பதினைந்து வடிவமின்றிப் பத்து வடிவமுடையதாதலும் வேண்டும்; அன்றியும், மறுவின்றியும் இருத்தல்வேண்டும். திரிவிக்கிரமாவதாரத்தில் *உலகமெல்லாம் பரவிய புறவடிக்கு அப்பெருமையில்லாத புத்தகம் ஒத்ததெனலாமோ? தொடைகளுக்கு உவமானமாகவொண்ணாமையினால், எட்டுத்திக்குயானைகளின் துதிக்கைகளும் நாணமடைந்தனவாதலால், அத்தொடைகளுக்கு இவ்வுலகத்தில் உவமையில்லை. மேலுலகத்திலுள்ள தருமசொரூபியாகிய ருஷபகவானது பிடரியே உவமானமாதற்குரியது.]

(மார்புவருணனை)

96 'பொருவரு மரகதப் பொலம்கொள் மால்வரை
வெருவுற விரிந்துயர் விலங்கல் ஆகத்தைப்
பிரிவற நோற்றில ளென்னில், பின்னை, அத்
திருவினில் திருஇலார் யாவர்? தெய்வமே!'

இ-ள். 'ஒப்பற்ற அழகுடைய பெரிய மரகதமலை அஞ்சும்படி அகன்று மேன்மையுற்ற (தும் இப்போது இலக்குமி) பிரிந்திருக்கின்ற (துமான இராமபிரானுடைய) மார்பை (அந்த) இலக்குமி (எப்போதும்) பிரிதலில்லாதிருக்கும்படி தவஞ்செய்திலளென்றால், தெய்வமே! (அந்த இலக்குமியான) செல்வியினும் செல்வமில்லாதவர் யாவர் (உளர்)!'

'பொருவு அரு பொலம்கொள் மால் மரகதவரை' என இயைக்க. உயர்தல் - மேன்மையுறுதல். விலங்கல் - விலகுதல். ஆகம் - மார்பு. விலங்கல் ஆகம் - (திருமால் இராமனாக அவதரிக்கும்போது இலக்குமி)

---

* எல்லா உலகங்களிலும் வியாபித்த; எல்லா உலகோரும் வணங்கிய.

விலகினமையையுடைய மார்பு - (இலக்குமி) பிரிந்த மார்பு. பின்னை - இலக்குமி. 'பின்னை பிரிவற நோற்றிலளென்னில்' என மாற்றுக. முதல் திரு செல்வத்துக்கு அதிதேவதையாய்ச் செல்வியெனப்பெற்ற இலக்குமியையும் இரண்டாம் திரு செல்வமென்னும் பாக்கியத்தையும் உணர்த்திநின்றன. மனநிறைவும் குறைவுமே உண்மைச்செல்வமும் வறுமையுமாதலால், 'திரு இலார்' என்பதன் உள்ளுறைபொருள் 'மன நிறைவு இல்லார்' அல்லது 'மனக்குறைவுடையார்' என்பதாமென்பது காண்க. 'தெய்வமே!' என்றது, தாம் துன்புறுவாரும் பிறர் துயரங் கண்டு இரங்குவாரும் 'தெய்வமே! இந்தக்கதி நேரலாமோ?' என்று கூறும் உலகவழக்கை அநுசரித்துக் கூறியதென்க: 'தெய்வம்போல்வாளே' எனச் சீதையை விளித்ததெனலுமாம். 'பிரிவற நோற்றனள்' 'திருவினிற்றிருவுளார்' என்பனவும் பாடம். இந்தப் பாடங்கள் கொண்டார் 'விலங்கல் ஆகத்தை' என்பதற்கு 'மலைபோன்ற [எதற்கும் சலியாத] இராமபிரானுடைய திருமார்பை' என்றும் 'தெய்வமே' என்பதற்குக் 'குலதெய்வம்போன்றவளே' என்றும் பொருள்கூறியிருத்தல் காண்க.

பிறவிக்குருடர் துன்பத்தினும் பிறவிதொட்டுக் கண் உடையராயிருந்தவர் கண் இழக்கநேர்ந்தபோது அடையும் துன்பம் மிகவும் அதிகமாயிருத்தல்போலத் தான் (இலக்குமி) திருப்பாற்கடலிலே பிறந்தது தொட்டுத் திருமால்மார்பில் வீற்றிருக்கும் பிறவிச்செல்வமுடையவளான இலக்குமி, திருமால் இராமனாக அவதரிக்கும் அவதாரத்தில் அவன்மார்பைவிட்டு விலகிப் பிரிந்திருக்கும்படி நேர்ந்ததனால் அந்தச் செல்வத்தை இழந்தது, அவன்மார்பை அடைய ஆசைப்படும் அந்நியமாதர் அடையுந்துன்பத்தினும் மிக்க துன்புவிளைக்கும் நிர்ப்பாக்கியமாமென்பதை வற்புறுத்த (உண்மையில், பாக்கியமே தானான) இலக்குமியினும் நிர்ப்பாக்கியரெவருமில்லையென்பார் 'திருவினிற் றிருவிலார் யாவர்? தெய்வமே!' என்றார். இவ்வாறு, எல்லாருக்கும் பாக்கியமளிக்கும் பாக்கியலக்குமியைப் பரமதரித்திரிபோலச் சமத்காரமாகக் கூறியது, 'தீயினும் குளிர்ச்சிமிக்க பொருள் யாது?, பனிக்கட்டியினும் வெப்புடையது எப்பொருள்?' என்றாற்போல, அதிசயம் பயப்பதாயிருத்தல் நோக்கி நுகரத்தக்கது.

(கை கழுத்து முகம் வாய் பல் மூக்கு இவைகளின் வருணனை)

[* ' "ஆசானுபாகு" வென முழந்தாள்வரை நீண்ட கைகளுக்கு ஐராவதமென்னும் யானையின் துதிக்கை ஒருசிறிது ஒப்பாகுமெனலாம். கழுத்துக்குத் திருமாலின் செங்கையில் தங்கும் சங்கையன்றி மற்றைச் சங்குகளையேனும் கமுகையேனும் உவமைகூறுதல் ஒண்ணாது. முகம் செந்தாமரைமலர்போலுமென்றால், அம் மலரே உவமானமாங் கண்ணுக்கு வேறு உவமை யாது உளது? பூரணசந்திரன், தேய்தலுறுதலால், அது, என்றும் பூரணமான பொலிவோடு கூடிய முகத்துக்கு எதிராகமாட்டான். அமிழ்தம்போல இனிய மொழிகளைக் கூறுதேபோனாலும் புன்னகை பூத்தலேனும் புரியாத பவளத்தை எவ்வாறு செவ்வாய்க்கு உவமையாகக் கூறலாம்? முத்துக்களோ, அமிழ்தத் திரள்களோ, † தருமவித்துக்களின் முளைகளோ, ‡ சத்தியவிருட்சத்தின் அரும்புகளோ, இத் தொகுதிகளுள் எத்தொகுதி பல்வரிசைக்கு ஏற்ற உவமையென்று பகர்வேன்? நீலரத்தினத்தின் ஒளிக்கொழுந்தும் மரகதமணியின் கிரணத்திரளும் போன்ற நிறமுடையதாகிச் சிவந்த அதரத்தை அடுத்து விளங்கும் மூக்குக்குத் தம்பலப்பூச்சியைக் கௌவச்சார்ந்த பச்சோந்தி உவமையாதற்குப் போதாதெனில், வேறே உவமானங் கூறலொண்ணுமோ?']

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

## பிழை திருத்தம்

| தொகுதி | பகுதி | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| XXXII | 5 | க௩அ | ௯ | நியதி; மரியாதை. | நியதி. துப்பு - மரியாதை. |

---

* ஆசானுபாகு—முழந்தாளளவும் நீண்ட கையுடையோன்.

† ‡ தருமமும் சத்தியமும் வெண்ணிறமுடையனவையெனல் மரபு.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[கசுஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

(புருவவருணனை)

87 'பணிக்கச் சரத்துக் கான்முதலோர் கவந்தப் படையும், பல்பேயும்,
தனிக்கைச் சிலையும், வானவரும், முனிவர் குழுவும், தனி அறனும்
இனிக்கட் டழிந்த தரக்கர்குலம் என்னும் சுருதி ஈரிரண்டும்
குனிக்கக் குனித்த புருவத்துக் குவமம் நீயே கோடியால்'.

இ-ள்.'(போர்க்களமான) தண்டகாரணியத்திலே கான் முதலிய இராக்கதர்கள் (அச்சத்தினால்) நடுங்க, (அவர்களது) தலையறுபட்ட உடல்களும் (அந்த உடல்களை உண்ணவந்த) பேய்களும் (இராமனது கோதண்டமென்னும்) வில்லும் இனி இராக்கதகுலம் (அடியோடு) முழு தும் அழிந்தது என்று (களிப்போடு) எண்ணுகின்ற தேவர் முனிவர் தருமதேவதை வேதபுருடன் ஆகியவர்களும் குனிக்கும் (கூத்தாடும்) படி (இராமன் கோபத்தால்) குனித்த (வளைத்த) புருவத்துக்கு உவமை யை நீயே தேடிக்கொள்வாயாக' (என்றுற் கூறமுடியா தென்றபடி).

பணித்தல் - நடுங்குதல். 'சரத்துக் கான்முதலோர் பணிக்க' என மாற்றுக. கவந்தம் - தலையற்ற உடல். 'சேனையில் மிகப் பெருந்தொகை யிறந்தபொழுது கவந்தம் எழுந்து கூத்தாடுமென்றல் மரபு.' படை - திரள் - கூட்டம். தனி - ஒப்பின்மை. சிலை - வில். குழு - கூட்டம். அறன் - அறம் என்பதன் போலி - தருமம். கட்டழிதல் - முழுதும் அழிதல். சுருதி - வேதம். தருமமும் வேதமும் இங்கே அவற்றின் அதிதேவதைக ளான தருமதேவதையையும் வேதபுருடனையும் குறித்தன. குனித்தல் - கூத்தாடல்; வளைத்தல். உவமம் - உவமை. கோடி - கொள் (ஞதி) - கொள்வாய். 'குனிந்த புருவம்' என்பதும் பாடம்.

'"இனிக்கட்டழிந்த தாக்கருல மென்னும்" என்ற விசேடணத்தை வானவர் முதலிய மூன்றுக்குங் கூட்டுக.' இராமன் கோபத்தால் புருவத்தைக்குனித்தல் காரணமாகவும் கவந்தமும் பேயும் வில்லும் தேவரும் முனிவரும் தருமமும் வேதமும் குனித்தல் காரியமாகவும் இருத்தல் காண்க. புருவமாகிய ஒருபொருட்குனிப்பால் அடுக்கிய பல் பொருட்குனிப்பு நிகழ்ந்ததாகக் கூறிய நயம் பாராட்டத்தக்கது.

(நெற்றிவருணனை)

88 'வருநாள் தோன்றும் தனிமறுவும் வளர்வும் தேய்வும் வாளரவப்
ஒருநாள் கௌவும் உறுகோளும் இறப்பும் பிறப்பும் ஒழிவுற்றால்
இருநால் பகலில் இலங்குமதி, அலங்கல் இருளின் எழில்நிழற்கீழ்ப்
பெருநாள் நிற்பின், அவன்நெற்றிப் பெற்றித் தாகப் பெறுமன்றே'.

இ-ள். '(அர்த்தசந்திரனை) அட்டமிச்சந்திரன், உதயமாகுங் காலத்திலேயே உடன்தோன்றுவதொரு களங்கமும் (சிலகாலங்களில்) வளர்தலுஞ் (சிலகாலங்களில்) மெலிதலும் சிலகாலங்களில் கொலைத்தொழிலையுடைய (இராகுவென்னும்) பாம்பினாற் கௌவப்படுங் (கிராச்) சம்பவமும் (உதயமாகிய) பிறப்பும் (அஸ்தமனமாகிய) இறப்பும் நீங்கப் பெற்று (அதனோடு) இருளின்கீழ் நெடுங்காலம் நிற்குமானால் இராமனது நெற்றியின் தன்மையைப் பெறுவதாகும்.'

நாள் - காலம் (தமிழகராதி). 'வருநாள்' என்பதற்கு (அமாவாசையன்று இறந்தானென மறைந்த சந்திரன் அந்த அமாவாசையை அடுத்து) வருநாள் ஆன (சுக்கிலபட்சத்துப் பிரதமையும், அந்த மறைந்த சந்திரன் முதல்முதல் தோன்றும்நாளுமாகிய,) பிறந்த நாளிலேயே என்றும் பொருள்கூறலாம். ஒரு நாள், கிரகணம் நேரும் காலத்தைக் குறித்தது. மறு - களங்கம். வாள் - கொலைத்தொழில் (கழகத் தொகை). வாள் அரவம் - கொலைத்தொழிலையுடைய பாம்பு: வாள் போலக் கொடிய பாம்பு என்றும் பொருள்கூறுவர். உறுகோள் - சம்பவம் (தமிழகராதி) - நிகழ்ச்சி (இலக்கியச் சொல்லகராதி). பகல் - நாள். இரு நால் பகல் - எட்டாம்நாள் - அட்டமித்திதி. அலங்கல் - அசைதல்; மாலை. 'அலங்கல் இருள்' என்பதற்கு அசையும் இருளென உவமானத்துக்குப் பொருத்தமாகவும் மாலையையுடைய இருள்போலச்

கறுத்த தலைமயிரென உவமேயத்துக்குப் பொருத்தமாகவும் பொருள் கொள்க. எழில் - அழகு. பெற்றி - தன்மை. பெற்றித்து - தன்மையுடையது.

இராமன் நெற்றி, எப்போதும் ஒரு தன்மையதாயுள்ளது: உலகோர் நெற்றிக்கு உவமானமாகக்கூறும் சந்திரனோ, சிலகாலம் வளர்தல் சில காலம் தேய்தல் ஓரோர்காலம் பாம்பு கௌவப்படுதல் தோன்றல் மறைதல் ஆகப் பல காலங்களில் பல தன்மைகள் அடைதலுடையது: ஆகலால், அதற்கு இது ஒப்பாகாது. அது இருள்போன்ற தலைமயிரை அடுத்திருக்கின்றது: இதுவோ, தான் தோன்றினால் மறைந்தொழிவதாகிய இருளை அடுத்திருத்தல் இயலாததாயுள்ளது: ஆகலாலும் அதற்கு இது உவமையாகாது என்பது கருத்து.

(தலைமயிர்வருணனை)

89 'நீண்டு கருண்டு நெய்த்திருண்டு நெறிந்து செறிந்து நெடுநீலம்
பூண்டு புரிந்து சரிந்துகடை குழன்று புகையும் நறும்பூவும்
வேண்டு மல்ல வெனத்தெய்வ வெறியே கமழும் நறுங்குஞ்சி
ஈண்டுசடையாயினதென்றால், மழைஎன் றுரைத்தல் இழிபன்றோ?'

இ-ள். 'நீண்டு கருண்டு மினுமினுத்துக் கறுத்து நெளிந்து நெருங்கி (க்கருமைக்கு அனுகுணமான) நீலநிற(மு)ம் பொருந்தி முறுக்குற்றுத் (தலைக்குப் பின்புறம்) தாழ்ந்து நுனி (மற்றைப்பாகத்திலும் அதிகச்) சுருளுற்று (அகிற்) புகையும் வாசனைப்பூக்களும் வேண்டப்படுவனவல்ல (அநாவசியகம்) என்னும்படி (தெய்வீகமான இயற்கை) மணம் கமழுகின்ற (இராமனது) தலைமயிர் (வனவாசகாலமாகிய) இப்போது சடையாயிருக்கின்றதென்றாலும், (அதனை) மேகமென்று கூறுதல், (புகழ்ச்சியாகாமல்) இகழ்ச்சியாமன்றோ?'

நெய்த்தல் - (நெய்பூசினாற்போல) மினுமினுத்தல். நெறிதல் - நெளிதல். செறிதல் - நெருங்கல். நெடும் நீலம் - மிக்க நீலநிறம். புரிதல் - முறுக்குறல். முதல் 'நறுமை' வாசனையையும் இரண்டாம் 'நறுமை' நன்மை

யையும் உணர்த்திநின்றன. குஞ்சி - ஆண்மக்கள் தலைமயிர். ஈண்டு - (வன வாசம்செய்யும்) இக்காலத்தில். 'என்றால்' என்பதன்பின் உம்மை தொக்கது. இழிபு - இகழ்ச்சி. 'நீண்டுகுழன்று', 'கடைசுருண்டு,' 'புகையு நறும்பூ வேண்டியவும்,' 'இழிவாமால்' என்பனவும் பாடம்.

இராமன் தலைமயிர் சடையானால், என்? சடையான நிலைமையினும், அதனை மேகமெனல் இழிவுபடுத்தியதாமென்பது கருத்து. இயல்பான நிலைமை மாறிச் சடையான இராமன் தலைமயிரை மேகமெனலே இகழ்தலா மெனின், அவனது இயற்கைமாறாத தலைமயிரை மேகமெனல் அதனை இகழ்தலினும் எத்துணையோ அதிகமாகக் குறைவுபடுத்துவதாமென்பது குறிப்பு.

இராமன் கேசத்தின் பலவகை அழகுகளும் ஒருசேர நன்குவிளங்க, 'நீண்டு' முதலாகக் 'குழன்று' இறுதியாகப் பத்து விசேடண வினையெச்சங்களை இனிது அடுக்கிக் கூறி, அவ்விசேடணங்களின் மகுடமாகப் 'புகையும் நறும்பூவும் வேண்டுமல்லவெனத் தெய்வவெறியேகமழும் நறுங்குஞ்சி' என முடித்த கவிசாதுரியம் பாராட்டத்தக்கது.

### இராமன் சொன்ன அடையாளச்செய்திகளை அனுமான் சீதைக்குக் கூறுதல்.

[மேற்கூறியவாறாக, இராமனது அடிமுதல் முடியிறுதியான அவயவங்களின் இலக்கணங்களை இனிதெடுத்துக்கூறிய அநுமான், 'இராமனது நடை, தசரதசக்கரவர்த்தி "நாடாள்வாயாக" என்றபோதும் கைகேயிதேவி "காடேகுவாயாக" என்றபோதும் ஒரே தன்மையதாய், (எய்தும் இன்ப துன்பங்களுக் கேற்றபடி மாற்றமடையும்) இடபநடை யானைநடை யிரண்டும் இணையாகாததான ஏற்றமுடையது' என்று கூறக் கேட்டு, வெந்தீயிலிட்டமெழுகுப்பாவைபோல உருகித் தன்வசமிழந்து, பரவசமடைந்து, தன்னைமறந்து செயலற்றிருந்த சீதையை நோக்கி 'நீ என்னை ஐயப்படாமல் அறிந்துகொள்ளுமாறு இராமபிரான் என்னிடம் கூறிய அடையாளச்செய்திக ளிருக்கின்றன. அவைகளைச் செவியேற்பாயாக' என்று செப்புகின்றான்:—]

90 "நடத்தலரி தாகும்நெறி; நாள்கள்சில; தாயர்க்
கடுத்தபணி செய்திவண் இருத்திஎன, அச்சொற்
குடுத்ததுகி லோடும்உயிர் உக்கஉட லோடும்
எடுத்தமுனி வோடும், அயல் நின்றதும் இசைப்பாய்."

இ-ள். '"(நான் போகும் காட்டு) வழி (உன் மெல்லிய பாதங்கள்) நடத்தற் கரிய (கடினமுடைய) தாகும். (நான் காட்டிற் கழிக்கவேண்டிய) நாள்கள் சிலவே. (அந்த நாள்களில் நீ என்) தாய்மார்க்குச் செய்யத்தக்க பணிவிடைகளைச்செய்துகொண்டு இங்கே (அயோத்தியிலே) இருப்பாயாக என்று சொல்ல, அந்தச்சொல்லுக்கு (த் தான் சொல்லும் மறுசொல் இதுதான் என்பாள்போல, மாளிகையினுள்ளே சென்று வனத்துக்குப்போவதற்கென) உடுத்தின (மரவுரிச்) சேலையோடும் (எங்கே தடுத்துவிடுவேனோ என்று அச்சத்தினால்) உயிர்போனது போன்ற உடம்பினோடும் (என்னை எப்படி விட்டுப்போக எண்ணினாய்? என) என்மேற்கொண்ட கோபத்தோடும் (என் பின்னே வந்து என் கையைப் பிடித்துக்கொண்டு) அருகே நின்றதைக் கூறுவாயாக" (என்று இராமபிரான் என்னிடம் சொன்னான்.)'

உகுதல் - இறத்தல் (தமிழகராதி). உக்க - இறந்த - இறந்தாற் போன்ற. உம்மை, அசைநிலை; பின்வரும் இரண்டுபாட்டுக்களுடன் இணைத்தால், எதிரது தழீஇய எச்ச உம்மையாம்.

நகர்நீங்குபடலத்தில்,

கல்லரக்கும் கடுமைய அல்லநின்
சில்லரக்குண்ட சேவடிப் போதென்றான் (உஉ௫)

என்பதும்,

அனைய வேலை அகல்மனை எய்தினள்,
புனையும் சீரம் துணிந்து புனைந்தனள்,
நினைவில் வள்ளல்பின் வந்தயல் நின்றனள்,
பனையின் நீள்கரம் பற்றிய கையினாள். (உஉஅ)

என்பதும் இங்கே நினைவுகூரத்தக்கவை. (நினைவில் - நினையுமளவில்).

[' "அவள் என்னுடன் காட்டுக்குப் புறப்பட்டு அயோத்திநகரத்துக் கோட்டைவாயிலைக் கடந்தவுடனே, (நகரை அடுத்துக் காடு இருக்குமென அவள் எண்ணியிருந்தபடி இல்லாமைகண்டு) "“எங்கே காடு?”" என்று கேட்டதையும், எங்களைத் தேரிலேற்றிக் காட்டுக்குக் கொண்டுவந்துசேர்த்த சுமந்திரன் அயோத்திக்குத் திரும்பிப்போக விடைபெற்றபோது, "“என் தங்கையர்க்கு யான் வளர்த்த கிளிகளையும் நாகணவாய்ப் பறவைகளையும் வளர்த்துப் பாதுகாக்கச்சொல்”" என்று (நாடுவிட்டுக் காடுசெல்லும்வருத்தமறியாது) பிள்ளைத்தனமாகச்சொன்னதையும் தெரிவிப்பாயாக" என்றான்' என்று அநுமான்கூறிப் பின்னும் கூறுகின்றான்.]

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

# மதிப்புரை.

ஈழகேசரி ஆண்டுமடல்:— இஃது ஈழகேசரி என்னும் வாரப் பத்திரிகையின் அங்கமாக வெளியிடப்பெற்றது; யுவ ஆண்டிற்குரியது. தமிழறிஞர்பலர் எழுதிய கட்டுரைகளும் பாக்களும் இதில் அடங்கியுள்ளன. ஆறுமுகநாவலர், சி. வை. தாமோதரம்பிள்ளை, அ. குமாரசாமிப் புலவர் முதலிய பல பெரியாரின் நிழலுருவப்படங்களும் பிற பல சித்திரங்களும் இம் மடலினை அலங்கரிக்கின்றன. ஈழநாட்டின் பழங்காலப் பெருமையும், இக்காலம் அஃது அடைதற்குரிய முன்னேற்றத்தின் தன்மையும் இப்புத்தகத்தால் நன்கு விளங்குவனவாம். பொதுவாக அறிவுவளர்ச்சிக்குரிய பலதுறைப்பட்ட விஷயங்களும் இதன்கண் மலிந்து காணப்படுவதால், இஃது யாவரும் வாங்கி வாசித்தற்குரியதே. மிகவும் அகலமானவடிவில் வழுவழுப்பான தடித்த காகிதத்தில் நூறு பக்கமுடையதாய்க் கண்ணைக்கவரும்வண்ணம் அச்சிடப்பட்ட இப்புத்தகத்தின் விலை சதம் 50. வேண்டுவோர், 'ஈழகேசரிநிலையம், சுன்னாகம், யாழ்ப்பாணம்' என்ற விலாசத்திற் பெறலாம்.

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௨.] யுவஹு ஆவணிமீ [பகுதி-௧௦.

Vol. XXXII. August-September 1935. No. 10.

## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

(௨௫௮-ஆம் பக்கத்தொடர்ச்சி.)

### இராமன் மோதிரத்தை அனுமான் காட்டச் சீதை காணல்.

91 ' "மீட்டும்உரை வேண்டுவன இல்லை" என, "மெய்ப்பேர்
தீட்டியது, தீட்டரிய செய்கையது, செவ்வே
நீட்டி"தென, நேர்ந்தனன்;' எனநெடிய கையால்
காட்டினன்ஓர் ஆழி. அது வாணுதலி கண்டாள்.

இ-ள். ' "இன்னமும் சொல்லல்வேண்டியவைகள் (ஆன அடையாளவார்த்தைகள்) இல்லை" என்று சொல்லி, "எனது மெய்யான பேர் எழுதியது; சொல்லுதற்கரிய வேலைப்பாடமைந்தது; (ஆகிய) இதை (ச் சீதைகையில்) நேராகக் கொடு" என்று கொடுத்தான்' என்று சொல்லி (அனுமான்) தனது நீண்ட கையினால் ஒரு மோதிரத்தை (எடுத்து)க் காட்டினான். அதைச் சீதை கண்டாள்.

மீட்டும் - மீளவும்; மேலும் அல்லது இன்னமும் என்ற பொருள்படநின்றது. உரை - உரைத்தல் - சொல்லல் (முதனிலைத்தொழிற்பெயர்). தீட்டுதல் - சித்திரித்தல்; சொல்லல் (தமிழகராதி). செய்கை - வேலைப்பாடு. தீட்டரிய செய்கையது - சித்திரித்தற்கரிய வேலைப்பாடுடையது (இந்த மோதிரம்போலச் சித்திரமெழுதுவதே யரியதென்றால் உருப்படிசெய்வது அதிகமாக அரியதென்றபடி); சொல்லுதற்கரிய வேலைப்பாடுடையது (காட்டியறிவிக்கக்கூடியதன்றிச் சொல்லியறிவிக்கக்கூடாத வேலைப்

பாடுடையதென்றபடி). செவ்வே - நேராக. நீட்டுதல் - கொடுத்தல். நேர்தல் - கொடுத்தல். ஆழி - மோதிரம். வாள் நுதலி - ஒளிபொருந்திய நெற்றியையுடையவள். இப்பாட்டில் 'மீட்டும் உரைவேண்டுவன இல்லை' என்பதும் 'மெய்ப்பேர் தீட்டியது தீட்டரிய செய்கையது செவ்வே நீட்டிது' என்பதும் இராமன்கூற்றாக அனுமான்கூறியவை; 'என' இரண்டும் அனுமான்கூற்று; எஞ்சியது கவிக்கூற்று.

## இராமன்மோதிரத்தைக் கண்ட சீதைதன்மை.

92 இறந்தவர் பிறந்தபயன் எய்தினர்கொல் என்கோ!
மறந்தவர் அறிந்துணர்வு வந்தனர்கொல் என்கோ!
துறந்தஉயிர் வந்திடை தொடர்ந்ததுகொல் என்கோ!
திறந்தெரிவ தென்னைகொல்!இந் நன்னுதலி செய்கை.

இ-ள். (இராமன்மோதிரத்தைக் கண்ட) சீதையின்மகிழ்ச்சியை (இம்மை மறுமை யின்பங்களாகிய பிறந்ததனாலாம் பயன்களை அடையமுயலாமல் வீணே காலங்கழித்து) இறந்துபோனவர்கள் (அந்தப்)பிறந்த பயன்களை (க் கிட்டுமென் றெதிர்பாராதிருக்க) அடையப்பெற்றார் (ஆயின், அவர்கள் அடையும் மகிழ்ச்சியைப் போலும்) என்பேனோ! (அறிதற்கரியதொருபொருளை) அறிந்து(பின்பு) மறந்தவர் (திரும்ப அப்பொருளைப்பற்றிய) அறிவுவரப்பெற்றார் (ஆயின், அவர் அடையும் ஆனந்தத்தை நேரும்) என்பேனோ! (உடலைவிட்டு) நீங்கிப்போன உயிர் (திரும்ப அந்த) உடலினிடத்தே வந்து தொடர்புற்றது (ஆயின், அதன் உவகையை ஒக்கும்) என்பேனோ! அந்த மகிழ்ச்சியின்தன்மையைத் தெரிந்துசொல்வது எவ்வாறோ? (அறியேன்).

கொல் நான்கும் அசைநிலை. உவமேயத்தில் 'நன்னுதலி செய்கை' என்பதற் கியைய, உவமானங்களில் எய்தினர்செய்கை வந்தனர்செய்கை தொடர்ந்ததுவின்செய்கை என மூன்று செய்கைகள் வருவித்துக் கொள்க. மகிழும் செய்கை, 'செய்கை' யெனச் சுருக்கிக் கூறப்பட்டது. பயன் என்பது, இம்மை மறுமைப் பயன்களைக் குறித்தலால், சாதியொருமைப் பெயர். 'துறந்த' 'இடை' என்பவைகளின் முன் 'உடல்', அவாய்நிலையால்வந்த சொல். பின்வரும் 'பிறந்தபயன் எய்தினர்' என்பதனால், 'இறந்த

வர்' என்பதற்குப் பிறந்தபயன் எய்த முயலாமல் இறந்தவர் என்று பொருள் கூறப்பட்டது. பொருள்செய்தற்குப் பொருத்தமாக, 'மறந்தவர் அறிந்து' என்பது, அறிந்து மறந்தவர் எனப் பின் முன்னாக மாற்றப்பட்டது. துறத்தல் - நீங்குதல். இடை - இடம். நன்மை - நலம் - அழகு (தமிழுகராதி). நுதல் - நெற்றி. நல் நுதலி - அழகிய நெற்றியை உடையவள். செய்கை - (மகிழும்) செயல். 'இறந்தனர்' 'மறந்தனர்' பிரதிபேதங்கள்.

முதலடிக்குப் 'போன உயிர் திரும்பவும் வரப்பெற்றவர்' என்ற பொருள் பொருந்தாது, அதே பொருளுடைய மூன்றும் அடி கூறியதுகூறலாமாதலால்.

93 இழந்தமணி புற்றரவெதிர்ந்ததெனலானாள்;
பழந்தனம் இழந்தன படைத்தவரை யொத்தாள்;
குழந்தையை உயிர்த்தமல டிக்குவமை கொண்டாள்;
உழந்துவிழி பெற்றதொர் உயிர்ப்பொறையும் ஒத்தாள்.

இ-ள். (சீதை, மகிழ்ச்சியடைந்த தன்மையில்,) காணாமற் போன நாகரத்தினத்தைக் காணப்பெற்றதான நாகம் (உவமை) என்று சொல்லத்தக்கவளானாள்: இழந்தனவான பழைய செல்வங்களை (த் திரும்ப)ப்பெற்றவரைப் போன்றாள்: குழந்தையைப்பெற்ற பிள்ளையில்லாதிருந்தவளை ஒத்தாள்: (கண்ணிழந்து) வருந்தி (த் திரும்ப)க் கண்ணைப்பெற்ற உடலை (உடையவரை) நேர்ந்தாள்.

உயிர்த்தல் - ஈனுதல். உழத்தல் - வருந்தல். உயிர்ப்பொறை - உடம்பு.

'குழந்தையைப்பெற்றபிறகு மலடித் தன்மை நீங்கியதாயினும், 'மலடி' என்று கூறினது, முன்னிருந்த தன்மையைநோக்கி; இது, பூத பூர்வ வ்யவஹார மெனப்படும்.'

இதற்கு முந்தியபாட்டிலும் இதனிலும் இராமன்மோதிரத்தைக்கண்ட சீதை அடைந்த கழிபெருங் களிப்பு மிகவும் நன்றாகப் புலப்படுமாறு, கவி, தொடுத்து ஏழு உவமானங்களை இனிதெடுத்தாண்டிருக்கின்றார்.

இராமனைப் பிரிந்து வருந்தி, இனி அவனை அடைதல் கூடுமோவென்று ஏங்கியிருந்த சீதை, அவன் மோதிரத்தைக் கண்டவுடனே, அவனைத் திரும்பவும் அடைந்ததாகக் கருதி மகிழ்ந்தாள்.

ஆதலால், அவள் அடைந்த மகிழ்ச்சி, முன் எய்தியிருந்ததோர் இனியபொருளை இடையே இழந்து நெடிது வருந்தித் திரும்பப்பெற்றார் அடையும் மகிழ்ச்சியாம். மேற்குறித்த ஏழு உவமானங்களுள் முதலாவதாகிய இறந்தவர் பிறந்தபயன் எய்திய மகிழ்ச்சியும் ஆறாவதாகிய மலடி குழந்தையை உயிர்த்த மகிழ்ச்சியும், முன் அடையாதிருந்த இனிய பொருளை அடையும் மகிழ்ச்சியாதலால், சீதையின் மகிழ்ச்சிக்கு முழுதும் ஒவ்வாது ஒருபகுதியே ஒத்திருத்தலும் ஏனைய ஐந்து உவமானங்களிற் குறித்த மகிழ்ச்சிகள்யாவும் முழுதும் ஒத்திருத்தலும் கவனிக்கத்தக்கவை. உவமான உவமேயங்கள் முழுதும் ஒத்திருப்பது முற்றுவமை அல்லது பூரண உவமை யென்றும் சிலபாகமட்டும் ஒத்திருப்பது ஒருபுடையுவமை அல்லது ஏகதேசஉவமை யென்றும் கூறப்படும்.

இராமன்மோதிரத்தை வாங்கிய சீதைசெய்கை.

94 வாங்கினள்; முலைக்குவையில் வைத்தனள்; சிரத்தால்
தாங்கினள்; மலர்க்கண்மிசை ஒற்றினள்; தடந்தோள்
வீங்கினள்; மெலிந்தனள்; குளிர்ந்தனள்; வெதுப்போ
டேங்கினள்; உயிர்த்தனள்: இதென்னதென லாமே.

இ-ள். (தன் குழந்தையைக் கையில் வாங்கும் தாய்போல, இராமன்மோதிரத்தைச் சீதை கையில்) வாங்கினாள்; (வாங்கினவள், அதைத்) தன் தனமுகட்டிலே வைத்துக்கொண்டாள்; (பின்பு) தலைமேலே ஏந்திக்கொண்டாள்; (அதன்பின்) கண்களிலே ஒற்றிக்கொண்டாள்; (அதனைத் தான் அடைந்தது இராமனையே அடைந்ததாகக் கருதி மகிழ்ந்து உடம்பு பூரித்ததனால், இயல்பாகப்) பெருத்த தோள்கள் அதிகமாகப் பெருத்தாள்; (உண்மையில், இராமனை அடையாமைகருதி உடம்பு) மெலிந்தாள்; (திரும்பவும் அவனை எய்தியதாக எண்ணி உடம்பு) குளிர்ந்தாள்; (அவனை மெய்யாகப் பெறாமையை மீண்டும் நினைந்து உடல்) வெதும்பி ஏக்கமுற்றுப் பெருமூச்செறிந்தாள்: (அவள் அடைந்த) இந்த நிலைமை (எப்படிப்பட்டதென்னலாம்?) இப்படிப்பட்டதென்று (மனத்தினால் உணரலாமேயன்றி வாயினால்) சொல்லலாகாததாயிருந்தது.

குவை - மேடு. உயிர்த்தல் - மூச்செறிதல். ஏகாரம் எதிர்மறை. வீங்கல் மெலிதலும், குளிர்தல் வெதும்பலும் முரண்தொடைகள். 'என்னதெனலாமே' பாடபேதம்.

இதற்கு முந்திய இரண்டு பாட்டுக்களில் இராமன் மோதிரத்தைக் கண்ணிற்கண்ட சீதைதன்மை வருணிக்கப்பட்டது. இந்தப்பாட்டிலும் அடுத்தபாட்டிலும் அதைக் கையில் வாங்கிய அவள் செய்கை விதந்துரைக்கப்படுகின்றது.

சீதை இராமனைப் பிரிந்ததை நினைந்து வருந்தியபோது வெதுப்பும் அவனை அடைந்ததாகக் கருதியபோது குளிர்ச்சியும் எய்தினதாக இங்கே கவிக்கூற்முகக் கூறிய கம்பர் இக்கருத்தையே விசேட நயம்பட அனுமான்கூற்முகத் திருவடி தொழுதபடலத்திற் கூறுவது அறிந்து ஆனந்திக்கத்தக்கது. அது வருமாறு:—

ஒருகணத் திரண்டு கண்டேன்: ஒளிமணி ஆழி ஆன்ற
திருமுலைத் தடத்து வைத்தாள்; வைத்தலும், செல்வ! நின்பால்
விரகமென் பதனின் வந்த வெங்கொழுந் தீயி னுல்வெந்
துருகிய துடனே ஆறி வலித்தது; குளிர்ப்புள் ளூற:

சில அலைகள் தொடுத்து அடித்து அமர்வதற்கும் திரும்பச் சில அலைகள் விடாது வீசி ஓய்வதற்கும் இடையே தோன்றும் * நித்தரங்க சமுத்திரத் தோற்றம்போல, 'முலைக்குவடுவைத்தல்' முதல் 'உயிர்த்தல்' ஈருக நிகழ்ந்த செயல்களுக்கும் 'மோத்தல்' ஆதியாக 'விழுங்கல்' அந்தமாக நிகழ்ந்த செயல்களுக்கும் இடையே காணப்பட்ட, சீதை மகிழ்ச்சிமேலீட்டால் தம்பித்துச் செயலற்றிருந்த ஆனந்தநிலைமையை 'இது' என்பதனுல் உய்த்துணரவைத்தார்.

இங்கே சீதை உற்ற செயலற்ற ஆனந்தநிலைமையை 'இது' என்றதுபோல, உரைத்தற்கரிய பொருளைதனையும் இது எனச் சுட்டிப் போதல் கம்பர்கவிமுறை என்பதற்கு உதாரணமாக, இராமனதுநலங்களை வாலிவாயிலாகக் கூறுங்கால்,

'குலம்இது; கல்வி ஈது; கொற்றம் ஈ துற்று நின்ற
நலம் இது; புவனம் மூன்றும் நாயகம் உன்ன தன்றே?
வலம் இதிவ் வுலகம் தாங்கும் வண்மை ஈது;'

என்றதனைக் காண்க. பின்வரும் 'பாழிய' என்ற 100—ஆம் பாட்டுரையில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிற 'அறிவும் ஈர்த' என்ற பாட்டையும பாாகக.

* நித்தரங்க சமுத்திரம் - அலையில்லாக் கடல்.

கண்குளிரப் பார்த்துக் களிக்கற்குத் தடையாக ஆனந்தக்கண்ணீர் பெருக, அதனைத் துடைக்க, அது மீண்டும் பெருகாநிற்க, நெடுநேரம் தன் குழந்தையை இன்புற நோக்கி, அதனோடு பேச விரும்ப, உவகைமிகுதியால் ஒன்றும் பேசவொட்டாதபடி கண்டம் விம்மித் தொண்டையடைப்புண்டாக, அத்தொண்டையடைப்பைக் கீழேதள்ளுவாள்போல மீண்டும் மீண்டும் விழுங்காநிற்பாளன்றே? அந்தத் தாய்செயல்போல, இராமன்மோதிரத்தை அநுமான்கொடுக்கக் கையில் வாங்கிய சீதைசெயல்களிருந்தனவென, மேலை உரையில் 'தன் குழந்தையைக் கையில்வாங்கும் தாய்போல்' எனச் சுருக்கக் கூறியதன் விரித்த பொருளைத் தெரிந்துகொள்க.

96 நீண்டவிழி நேரிழைதன் மின்னினிற மெல்லாம்,
பூண்டதொளிர் பொன் அனைய பொம்மல்நிறம்; மெய்யே,
ஆண்டகைதன் மோதிரம் அடுத்தபொரு ளெல்லாம்
தீண்டளவில் வேதிகைசெய் தெய்வமணி கொல்லோ!

இ-ள். (இராமன்மோதிரம் பட்டதனால்) சீதையின் தேக முழுதும் பொன்போன்ற பொலிவுடைய நிறத்தை அடைந்தது. இராமனுடைய மோதிரம் தன்னைச் சேர்ந்த எல்லாப்பொருள்களையும் தான் பட்டமாத்திரத்தில் (மாற்றுயர்ந்த பொன்னாக) மாற்றுகின்ற தெய்வீக ரசமணிதானோ?

நேர்மை - நன்மை; திருத்தம். இழை - ஆபரணம். நேரிழை - நன்மையான வேலைப்பாடமைந்த ஆபரணம் (பூண்டவள்); திருத்தமான வேலைப்பாடமைந்த ஆபரணம் (பூண்டவள்). மின் - ஒளி. நிறம் - தேகம். மின்னின் நிறம் - ஒளியையுடைய தேகம். முந்திய 'எல்லாம்' முழுதும் என்ற பொருளினும் பிந்திய 'எல்லாம்' யாவையும் என்ற பொருளினும் வந்தன. பொம்மல் - பொலிவு. மெய்யே - மெய்யாகவே. 'மெய்யே' என்பதைத் *தாப்பிசையாகப் 'பூண்டது' என்பதனோடும் 'வேதிகைசெய்' என்பதனோடும் பொருத்திப் பொருள்கொள்ளலாம். வேதிகை - வேறுபடுத்தல். தெய்வமணி - பரிசவேதியென்னும் இரசமணி. இது இரசகுளிகையெனவும் படும்.

* தாப்பிசைப்பொருள்கோள் - பாட்டில் இடையில் நின்ற சொல் முன்னும் பின்னும் சென்று கூடும் பொருள்கோள்.

சீதையின் தேகம் இராமனுடைய மோதிரத்தாற் பொன்னிறம் பூண்டது, அந்த மோதிரத்தின் பொன்னொளி பரவியதனாலென்றும், அம் மோதிரத்தால், சீதை இராமன்பிரிவைநினைவுகூரப் பசலைபூத்ததனாலென்றும் கூறலாம். (பசலை - பசப்பு - பொன்னிறம். அது மாதர்க்குப் பிரிவாற்றாமையால் உண்டாகும் நிறவேறுபாடு.)

97 இருந்துபசி யால்இடர் உழந்தவர்கள் எய்தும்
அருந்தும்அமு தாகிய தறத்தவரை அண்மும்
விருந்துமென லாகியது; வீயும்உயிர் மீளும்
மருந்துமென லாகியது: வாழிமணி ஆழி.

இ-ள். (சீதைக்கு அந்த) மோதிரம், பசியினால் துன்பம் அனுபவித்துக்கொண்டிருந்தவர்கள் பெற்ற அமுதுபோன்றது; (இல்லறம் நடத்தும்) தருமவான்களை அடுத்த விருந்தினனையும் ஒத்தது; சாகப்போகும் உயிரை (ச் சாகாமல்) மீளச்செய்யும் (மிருதசஞ்சீவினி) மருந்தையும் நேர்ந்தது.

இடர் - துன்பம். உழத்தல் - அனுபவித்தல். எய்தல் - அடைதல். அருந்தல் - உண்ணுதல். அமுது - உணவு; அமிர்தம்; பால்: இம்மூன்றுபொருளும் பொருந்துதல் காண்க. இங்கே, 'அறத்தவர்' என்றது கிருகஸ்தாச்சிரமதருமிகளென்னும் இல்லறத்தாரை. அண்முதல் - அண்ணுதல் - அடுத்தல். விருந்து - விருந்தினன் - விருந்தாளி. வீதல் - சாதல். வாழி - வாழ்த்து (இலக்கியச் சொல்லகராதி). மணி - அழகு; இரத்தினம். வாழி மணி ஆழி - வாழ்த்துக்குரிய அழகிய (அல்லது இரத்தினம் பதித்த)மோதிரம். 'வாழி' என்பதற்கு (அந்த மோதிரம்) 'வாழ்வதாக' எனப் பொருள்கூறுவதும் உண்டு. 'இருந்து பசியால் இடருழந்தவர்கள்' என்பதை விகுதி பிரித்துப் பொருத்திப் 'பசியால் இடருழந்து இருந்தவர்கள்' எனவும் 'பசியால் (நடக்கமாட்டாமல் - வேறிடத்துக்கு உணவு தேடிச் செல்லச் சக்தியில்லாமல் இருந்தஇடத்தே) இருந்து இடருழந்தவர்' எனவும் இயைக்கலாம்.

இராமன்மோதிரம் சீதைக்குப் பெறலரும்பொருளாய்ப் பேருவகைவிளைத்ததற்கு 'அமுது' 'விருந்து' 'மருந்து' ஆகிய மூன்றும் உவமையாதலும், அது அவளுக்குப் பிராணாபாயத்தைத் தவிர்த்ததற்கு 'அமுதும்' 'மருந்தும்' உவமையாதலும் காண்க.

**சீதை அநுமானை அருமையாக விளித்துப் பேசுவாளாதல்.**

98 *இத்தகையள் ஆகி, உயிர் ஏமுற விளங்கும்*
*முத்தநகை யாள்விழியின் ஆலிமுலை முன்றில்*
*தத்திஉக, மென்குதலை தள்ள, 'உயிர் தந்தாய்!*
*உத்தம!' என, இனைய வாசகம் உரைத்தாள்.*

இ-ள். இப்படிப்பட்ட தன்மையுடையவளாகி, (அளவற்ற துன்பம் அடைந்திருந்த தனது) உயிர் (அளவற்ற) இன்பம் அடையாநிற்க, (உண்டாகிய மகிழ்ச்சி காரணமாகப் புன்னகைபூத்தலால் சிறிது வெளிப்பட்டு) விளங்கிய முத்துக்களை ஒத்த பற்களையுடைய சீதை, (ஆனந்தக்)கண்ணீர்த்துளிகள் தனமுகட்டில் (முத்துக்கள்போல) உதிராநிற்க, (முன் உற்றிருந்த பேச்சுத்தடை ஒருவாறு நீங்கப்பெற்றுப் பேசத்தொடங்கிக் குழந்தைகளது மழலைமொழிகள் போல) இனியமொழிகள் குழறாநிற்கப் 'பிராணோபகாரியே! புருஷோத்தமனே!' என்று (அநுமானை விளித்துப்) பின்வரும் வசனங்களைச் சொன்னாள்.

ஏமம் - மகிழ்ச்சி. ஏமுறுதல் - மகிழ்வுறுதல். காமம் உறுதல் காமுறல் என வருதல்போல, ஏமம் உறுதல் ஏமுறலென வந்தது. நகை - பல். ஆலி - துளி - திவலை. முன்றில் - முன்னிடம். தத்தல் - ததும்புதல். உகுதல் - உதிர்தல். குதலை - இனியமொழி (தமிழகராதி). தள்ளல் - தடுமாறுதல். உயிர்தந்தாய்-உயிரைக் கொடுத்தாய் என்றும் உயிர் கொடுத்தோனே என்றும் இருபொருள்படநின்றது. வாசகம் - வசனம்.

'ஒன்றும் நுவல்கில்லாள்' ஆக இருந்தவள் பேசத்தொடங்கிய போது சொற்கள் குழறுதல் இயல்பாதலால், 'மென்குதலை தள்ள உரைத்தாள்' என்றது **தன்மைநவிற்சியணி**. நாற்காலிக்குக் கால் நான்கு, முக்காலிக்கு மூன்றுகால் என்பவை போன்ற தன்மை நவில்வனவெல்லாம், வெறுந் தன்மைநவிற்சியாமேயன்றித் தன்மைநவிற்சியணி ஆகா. மேற்கூறிய 'மென்குதலை தள்ள உரைத்தாள்' என்பது போல, இனியபொருளுடையனவாய்த் தன்மைநவில்வனவே **தன்மைநவிற்சியணி** யெனற் குரியனவா மென்பது கவனிக்கத்தக்கது. தன்னைச் சாவாமற் காத்த சிறிய திருவடியென்னும் அநுமானைநோக்கிச் சீதை **'உயிர்தந்தாய்'** என்றது,

* 'ஆவியோ நிலையிற் கலங்கிய தியாக்கை யகத்ததோ புறத்ததோ' என்னும்படி நாகபாசத்தாற் கட்டுண்டு குற்றுயிராய்க்கிடந்த இலக்குமணாதியரை எழுந்திடச்செய்த பெரியதிருவடியென்னும் கருடனைநோக்கி இராமன் †'உண்டிலை யென்ன நின்ற உயிர்தந்த உதவியோனே' என உரைத்ததை நினைவுறுத்துகிறது.

## சீதை அனுமானுக்கு நன்றியறிவுகூறி முகமன் மொழிதல்.

99 'மும்மையாம் உலகம் தந்த முதல்வற்கு முதல்வன் தூதாய்ச்
செம்மையால் உயிர்தந் தாய்க்குச் செயல்என்னால் எளிய துண்டே?
அம்மையாய் அப்ப னாய அத்தனே! அருளின் வாழ்வே!
இம்மையே மறுமை தானும் நல்கினை! இசையோ' டென்றாள்.

இ-ள். '(சொர்க்க மத்திய பாதாளம் என்னும்) மூன்று லோகங்களையும் படைத்த தலைவ (னாகிய பிரமதேவ)னுக்குத் (தந்தையாம் திருமாலின் அவதாரமாகிய இராமபிரானை) தலைவனுடைய தூதுவனாகி நற்குணத்தினால் (எனக்கு) உயிரை உதவிய உனக்கு என்னால் எளிதிற்செய்யக்கூடியதான பிரதியுபகாரமும் உண்டோ? எனக்கு அம்மையாகி அப்பனுமான கடவுளே! கருணைக் கிருப்பிடமானவனே! (இறந்தேபோவேனாயிருந்த என்னை இறவாமற் காத்து என் நாதனை யான் திரும்ப அடைதற்குக் காரணனாகி) இகலோக இன்பங்களையும், (என் நாயகனைப் பிரிந்ததனால் இடையே தடைபட்டிருந்த இல்லறத்தை அவனைத் திரும்ப அடைந்து நடத்துதற்குத் துணைபுரிந்து) பரலோக இன்பங்களையும் (மாற்றாராற் சிறைப்பட்டு மீட்கப்பெறாமற் செத்தாளென்னும் வசையைநீக்கி அம் மாற்றார் ஒளித்துறையும் இருப்பிடத்தை எம்பிரானுக்குத் தெரிவித்து அவனால் அவர்கள் நாசமாதற்கு ஏதுவாகி ‡'என்னை §ஒறுத்தாரைக் குலத்தினோடும் வேரறுத்தேன்' என்னும்) கீர்த்தியையும் எனக்குக் கொடுத்தாய்' என்று (சீதை அனுமானை நோக்கிச்) சொன்னாள்.

'மும்மை,' மூன்றாயிருக்குந் தன்மை எனப் பொருள்படாது, மூன்று என, 'மும்மைத்தமிழ்' என்பதிற்போலப் பொருள்பட்டு நின்றது. தூது தூதுவனுக்கு ஆகுபெயர். செம்மை, செம்மைக்

---

* பாரதம் கன்னபருவம் உ௬௦. † நாகபாசப்படலம் உ௬௧.

‡ இப்படலம் ௧௧௨. § ஒறுத்தாரை - வருத்தப்படுத்திய இராக்கதரை.

குணங்களுக்கு ஆகுபெயர். 'செயல் என்றால் எளியதுண்டே?' என்பதை 'என்றாற் செ(ய்)யல் எளியது (ஆன கைம்மாறு) உண்டே?' என இயைக்க. அத்தன் - கடவுள். தெய்வம் மானுடரூபமாய் உதவிசெய்கிறதென்னும் ஐதிகம்பற்றிச் சீதை அநுமானைக் கடவுளே யென்றாள். வாழ்வு - வாழ்தற்குரிய இடம் (இலக்கியச்சொல்லகராதி). முறையே இகலோகம் பரலோகம் என்னும் பொருள்களையுடைய 'இம்மை' 'மறுமை' ஆகிய இரண்டு சொற்களும் ஆகுபெயர்களாய் இகலோக இன்பங்கள் பரலோக இன்பங்கள் என்ற பொருள்களைத் தருகின்றன. நல்குதல் - கொடுத்தல். இசை - கீர்த்தி. 'உண்டே' என்பதில் ஏகாரம் எதிர்மறைப் பொருள்படநின்ற வினா இடைச்சொல். 'அத்தனே' 'வாழ்வே' என்பவைகளில் ஏகாரம் விளி (க்கும்போது பிரயோகிக்கப்படும்) இடைச்சொல். 'இம்மையே' என்பதில் ஏகாரம் எண்ணிடைச் சொல். 'எளியதுண்டோ' 'அத்தனைய அப்பனே' பிரதிபேதங்கள்.

அநுமான் சீதைக்குச் செய்த உதவி, 'இறுதிவந்த எல்லைக் கண் ஒருவன்செய்த உபகாரம்' என்னும் 'காலத்தினாற்செய்த நன்றி'யாம்; அன்றித் 'தனக்கு முன் ஓர் உதவிசெய்யாதிருக்க ஒருவன் பிறனுக்குச்செய்த உதவி' என்னும் 'செய்யாமற் செய்த உதவி'யும் 'இவர்க்கு இதுசெய்தால் இன்னதுபயப்பரென்று ஆராய்தலிலராய்ச் செய்த உதவி' என்னும் 'பயன்தூக்கார்செய்த உதவி'யும் ஆம்.

அநுமான்செய்த நன்றியைச் சீதை இவ்வாறு உணர்ந்தாளென இந்த மிகவும் இனிமையான கவியிற் கூறியிருப்பதுபோல நயமாக, நன்றியறிவு வேறெங்கும் கூறப்பட்டிருப்பதைக் காண்பதரிது.

முந்திய பாட்டில், சீதை, அநுமானை, நன்றியறிவோடு பிராணோபகாரி!, புத்திரோத்தமா! என்ற பொருள் உள்ள 'உயிர்தந்தாய்!' 'உத்தம!' என்றும், இந்தப்பாட்டில், ஊனையும் உள்ளையும் உயிரையும் உணர்வையும் உருக்கி அந்நன்றியறிவு மீக்கூர விளைந்த பேரன்புப்பெருக்கால், அருளுக்காதாரனே! அம்மையாகவும் அப்பனாகவும் அருளுருக்கொண்டருளிய ஆதிபகவனே! என்ற கருத்துடைய 'அம்மையாய் அப்பனாய அத்தனே! அருளின் வாழ்வே!' என்றும் விளித்த அருமையினும் அருமையான விழுமிய விளிகள் மிகவும் பாராட்டத்தக்கவை.

ஒருவர் முதல்முதலாகத் தாயை அறிந்து வழிபட்டுத் தாய் அறிவிக்கத் தந்தையை அறிந்து வழிபட்டுத் தந்தை (வித்தியா குருவாய்க் கல்விகற்பித்து ஞானகுருவாய்க் - கற்றதனாலாய பயன் ஆன - கடவுளுண்மையறிவையும் வழிபாட்டையும்) அறிவிக்கக் கடவுளை அறிந்து வழிபடுதல் முறையென்ற கருத்துடைய 'அன்னையும் பிதாவும் முன்அறி தெய்வம்' என்னும் அறிவுரைப்படியே, முதல்தெய்வமான தாயையும் இரண்டாந்தெய்வமான தந்தையையும் மூன்றாவதாய் முடிவான தெய்வமான கடவுளையும் போல்வோனே என்ற பொருள்பட, அவ் அறிவுரை முறைவைப்பை அனுசரித்து 'அம்மையாய் அப்பனாய அத்தனே' என்று சொன்னலாம்.

'அத்தன்' என்பதற்குப் பிதா என்னும் பொருளும் உண்டு. ஆதலால், 'அம்மையாய் அப்பனான அத்தனே' என்பதற்கு 'அம்மையாய் அப்பனான அப்பனே' என்றும் பொருள்கொள்ளலாம். அப் பொருளின் பொருத்தம் விளங்குதற்குச் சீதை அனுமானுடைய அன்புமிகுதிபற்றி அவனைத் தாய் என்றுசொன்றும், அறிவு மிகுதிகுறித்துத் தந்தையென்று சொன்றும் அவன் ஆண்பாலாயிருத்தல்காரணமாகத் 'தாயும் தந்தையும் ஆன தாயே' என்னாது 'தாயும் தந்தையுமான தந்தையே' என்றுசொன்றும் கூறலாம்.

இப்போது, சீதை, தன்னைச் சாதலினின்று காத்த அனுமானை நனி சிறந்த நன்றியறிவுடையளாய் 'அம்மையாய் அப்பனாய அத்தனே' என்றது, பின்பு, அவன் இந்திரசித்தின் பிரமாத்திரத்தினால் இலக்குமணனுதியர் இறவாமலும் அவர்நிலைகண்டு துக்காக்கிராந்தனாகி மூர்ச்சையடைந்த இராமன் இறுதியுறாமலும் சஞ்சீவி மருந்து கொண்டுவந்து உயிர்ப்பித்தபோது, அவனை நோக்கி, இராமன், பரமகிருதஞ்ஞனாய், 'முன் தசரதன்வயிற்றிற் பிறந்து செத்துப்போனோம்; இப்போது உன்வயிற்றிற் பிறந்திருக்கின்றோம்' என்ற கருத்துப்பட, 'மன்னிற் றோன்றினம், முன்னம்; மாண்டுளோம்: நின்னிற் றோன்றினோம்.' எனத் துதித்ததை நினைப்புறுத்துகின்றது. (கிருதஞ்ஞன் - செய்ந்நன்றியறிபவன்)

## சீதை அனுமானை வாழ்த்தல்.

100 'பாழிய பணைத்தோள் வீர! துணையிலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ளலே! யான் மறுஇலா மனத்தே னென்னில்,

ஊழிஓர் பகலாய் ஓதும் யாண்டெலாம் உலகம் ஏழும்
ஏழும்வீ ழ்ந்த ஞான்றும் இன்றேன இருத்தி' என்றாள்.

இ-ள். 'வலிமையுடைய பருத்த தோள்கள் படைத்த வீரனே! (சிரஞ்சீவியாய்) ஒருதுணையுமில்லாதிருந்த என்னுடைய துன்பத்தை நீக்கிய வள்ளலே! நான் களங்கமில்லாத (கற்புடைய) மனமுடையேனென்றால், கற்பகாலம் ஒருபகலேயென்று சொல்லப்பெற்ற (பிரம) ஆண்டு (நூறுகொண்ட பிரமாயுசுகாலம்) எல்லாம் ஈரேழுலகங்களும் இறுதியுற்றகாலத்தும் இன்று (இருப்பது) போல, (சிரஞ்சீவியாக) இருப்பாயாக' என்று (சீதை அநுமானுக்கு வாழ்த்துக்) கூறினாள்.

பாழி - வலிமை. பணை - பருமை. பரிவு - துன்பம். வாழிய, முன்னிலைபசைச்சொல் (நன்னூல், இடையியல் உக). வள்ளல் - கொடையாளன். மறு - குற்றம்; களங்கம். ஊழி - (பிரமனுக்கு ஒரு பகலென்னும்) கற்பகாலம். (கற்பம் - ஊழிகாலம். தமிழ்ச்சொல் லகராதி). வீவு - அழிவு. ஞான்று - நாளில் - காலத்தில் (தமிழகராதி). 'பாழியாம்,' 'வாழியாய்' 'உற்ற அன்றும்' பிரதிபேதங்கள்.

அநுமான் இலங்கைநகரைச் சூழ்ந்த கடலரண் காட்டரண் அகழரண் மதிலரண்களைத் தாண்டி, அந்நகரின் புறத்தும் அகத்துமுள்ள அரக்கர்கள் காவல்களைக் கடந்து தன்னை அடைந்த சாகசசங்கதிக் தேககைதரியமும் மனோதைரியமும் ஒருசேர உடையானென்பதுகுறித்துச் சீதை அவனைப் 'பாழிய பணைத்தோள் வீர' என விளித்தாளெனலாம். 'பாழிய பணைத்தோள்' தேகபலத்தையும் 'வீரம்' மனோபலத்தையும் குறித்தல் தெளிவு.

'இன்றேன இருத்தி என்றாள்' என ஓர் அடியின் ஒருபாதியாக உரைக்கக்கூடியதை 'ஊழி ஓர் பகலாய் ஓதும் யாண்டெலாம் உலகம் ஏழும் - ஏழும்வீழ்ந்த ஞான்றும் இன்றென இருத்தி' என்றாள்' என முழுத்த இரண்டடியாக வளர்த்து நீட்டிக்கூறியது, வாழ்த்தினால் ஆயுளை நீண்டதாகச் செய்ததுபோல, வாழ்த்தைக் கூறும் வாசகத்தையும் நீண்டதாகச்செய்ததுபோன்றிருத்தல் நோக்கத்தக்கது.

அசுவத்தாமன் முதலிய சிரஞ்சீவியர் எழுவருள் அநுமான் ஒருவனென்றும், அவன் இப்போதுள்ள பிரமன் ஆயுசுக்குப்பின் அவனுடைய பதவியை அடைய வரம்பெற்றிருக்கின்றானென்றும்

யாதாயினு மொரு காரியசித்தியை அடையப் பொறுமையோடு காத்திருப்பாரொருவனை அனுமான் பிரமபட்டத்துக்குக் காத்திருத்தல்போலக் காத்திருக்கின்றானென்றும் சொல்லுவது சகசமானது. அதனால், 'ஆண்டு' என்றது, (ஊழிகாலமென்னும்) கற்பகாலம் ஒருநாளிற் பாதியான பகலேயாக, அதனோடு அதுபோல நீடித்த இரவும் சேர்ந்தான நாள் முந்நூற்றறுபது கொண்ட பிரம ஆண்டு என்றும், 'ஆண்டெலாம்' என்றது, பிரம ஆண்டு நூறும் அல்லது பிரமாயுசுகாலம் முழுதும் என்றும் பொருள்படுதல் காண்க. இது புராணக்கொள்கை. இதன் விவரம் அடியில்வரும் காஞ்சிப்புராணப்பாட்டினால் (காரோணப்படலம் ௩) அறியலாம்:

*ஈண்டுமோ ரிருபா னுயிரந் தலையிட் டியன்றநாற் பத்துமூன் றிலக்க*
*யாண்டெனப் படுவ, நான்குகத் தளவை. இம்முறை யாயிர மிறந்தாற்*
*காண்டகு மயனுக் கொருபகல். அதுவே கற்பமாம். இரவுமத் துணைத் தங்*
*ஆண்டகைக்கந்நாண் முப்பதோர் திங்கள் அஃதொருபன்னிரண்டாண்டே.*

ஒருவர், கூறுய் நொண்டியாய்க் குருடு செவி டுமையாய்க் குட்டம் க்ஷயம் குன்மம் முதலிய கொடியநோய்கள் பலவற்றின் வாய்ப்பட்டுத் தளர்ச்சிமிகுந்த முதிர்ச்சியடைந்து, பொறுக்க முடியாத வருத்தம் வளர, அதனால் ஒரு நாள் ஒரு யுகம்போல நீள, இருத்தலினும் இறத்தல் நன்றென்னும்படி வாழ்நாள்கள் தள்ளிக்கொண்டும் சிரஞ்சீவியாக வாழலாம். அப்படிப்பட்ட வாழ்விலுள்ள கேடுகளனைத்தையும் விலக்கவும், இப்போது அனுமானிடத்துள்ள நலங்களெல்லாம் நிலைக்கவும், அவனைச் சீதை, 'என்றும் இன்றேன இருத்தி' என்று வாழ்த்தினாளென, இன்றேன என்பதில் கவி வெகுசாதுரியமாகப் பொதிந்து வைத்திருக்கும் பொருளை விரித்து அறிந்துகொள்க. இந்த 'இன்றேன' என்பது, சொல்லால் வாமனனையும் பொருளால் திரிவிக்கிரமனையும் போலு மெனலாம்.

அனுமானுக்கு உள்ளனவான வாழ்நாளல்லாத மற்றெல்லா நலங்களும் அதிகப்படுத்தவொண்ணாதவாறு சிறப்பாக அமைந்திருந்தனவாதலின், சீதை, அந்நலங்கள் இருந்தபடியே நிலைக்கவும் ஆயுள்மட்டும் அதிகப்படவும் வாழ்த்தினாள். அந்நலங்களையும் அவற்றால் அவன் அடைந்திருந்த மேம்பாட்டையும் அவள் அவனை நோக்கியதிசயித்துக்கூறுதலால் அறியலாம். அக்கூற்று வருமாறு:-

அறிவும் ஈதே; உருஈதே; ஆற்றல் ஈதே; அரும்புலத்தின்
செறிவும் ஈதே; செயல்ஈதே; தேற்றம் ஈதே; தேற்றத்தின்
நெறியும் ஈதே; நினைவீதே; நீதி ஈதே நினக்கென்றால்:
வெறியரன்றோ? குணங்களான் விரிஞ்சன் முதலாம் மேலோரே.
(உருக்காட்டுபடலம் ககக)

வெறியர் - வெறுமையுடையவர். விரிஞ்சன் - பிரமன்.

இப்போது கொடுத்துப் பொருள்கூறப்பெற்ற 'இறந்தனர் பிறந்த' என்பது முதலிய ஒன்பதுகவிகளும் பலவகை ஒளிகளுடைய நவமணிகள்போலப் பலவகைச்சுவைகள் பொருந்தியவைகள். பிராணநாயகனைப் பிரிந்த பெருந்துன்பத்துக்குமேல் பெருந்துன்பமாக இராவணனும் இராட்சசிகளும் இயற்றிய அளவற்ற துன்பங்களை ஆற்றமாட்டாளாய் ஆவிதுறக்கும்நிலையிலிருந்த சீதை அநுமனால் இராமன்மோதிரத்தைப் பெற்று இராமனையே எய்தியதாக எண்ணி மகிழ்ந்த மகிழ்ச்சியை வியப்பும் நயப்பும் மிகுந்து விளைய விவரித்து வருணிக்கும் இக்கவிகள்போல உவமைமிகுதியை நயம்படத் தொடர்ந்துகூறும் வேறுகவிகள் தமிழ்நூல்களில் எங்குமில்லையென்னும்படியும் பிறமொழிநூல்களுள்ளும் இருக்குமோவென்பது ஐயப்பாடாமென்னும்படியும் முதலாறுகவிகள் இனிதமைந்திருப்பதும்,—'இற்றகையள்' என்ற ஏழாங்கவியில், உரைக்க உன்னியதை உவமைமேலிட்டால் உரைக்கமாட்டாதிருந்த சீதை ஒருசிறிது உரைக்குந்திறம் உற்ற உடனே உவகைக்கண்ணீர்த்துளிகள் ஒளிமிக்க முத்துக்கள்போல உதிரா நிற்கவும் இனியமொழிகள் இளங்குழந்தைகளின் குதலைச் சொற்கள்போலக் குழறிநிற்கவும் 'உயிர்தந்தாய்! உத்தம!' என அநுமனை அருமையாக அழைத்திருப்பதும்,—'மும்மையாம்' என்ற எட்டாங்கவியில், உள்ளன்பு சொல்லுருக்கொண்டு வெளிப்பட்டு விளங்கினாற்போன்ற நன்றியறிவுரையும் புகழ்மொழியும் நனி இனியனவாக நன்கு மொழியப்பட்டிருப்பதும், - 'பாழிய' என்ற ஒன்பதாங்கவியில், இந்த வாழ்த்துப்போல எந்த வாழ்த்தும் இல்லையென வாழ்த்துக்க ளெல்லாவற்றுக்கும் மகுடமான வாழ்த்து வாய்ந்திருப்பதும் பலமுறை படித்துப்பார்த்துப் பாராட்டற்பாலன வாயிருக்கின்றன.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

(உஎகூ-ஆம் பக்கத்தொடர்ச்சி.)

## சீதை, 'இராமலக்குமணரெங்குள்ளார்?' என, அனுமான் அவள்பிரிந்தபின் நிகழ்ந்த செய்திகளைக் கூறல்.

[சீதை, அனுமானுக்கு *ஆசிகூறியபின்பு, 'இருவீரரும் எங்கிருக்கின்றார்கள்'; எனக்கு நேர்ந்ததை யார்சொல்லத்தெரிந்தார்கள்?' என்று வினவ, அனுமான் கூறுகின்றான்:-

'மாயமானாக வந்தவன், மாரீசனென்னும் †மாயாவி. அந்த அரக்கன், இராமபாணத்தால் இறக்கும்போது, "ஆ! சீதா! ஆ! லட்சுமணா!" என்று இராமனகுரலை ‡அநுகரித்துக்கூவி யிறந்தான். "இக்குரல் மெய்க்குரலன்று, பொய்க்குரலையென்று விற்குரலால், சீதாலட்சுமணர் தெளியச்செய்வேன்" என நினைந்து, இராமபிரான், §கோதண்டநாணொலியெழுப்பிக்கொண்டு, நீயிருந்தபர்ணசாலையை நோக்கி வேகமாக வரும்போது, இளையபெருமாள் எதிரேவருகையைக் கண்டு, அவன் முகக்குறியால் உன்னைக் காப்பதாகிய தன் கட்டளையை உன் கட்டளையால் கடக்கநேர்ந்ததனால் அவன் கவலையுற்றிருந்ததை ஊகித்து, அவன் வந்தகாரணத்தைத் தெரிவித்தபோது, தான் ஊகித்தது உண்மையாயிருந்ததேயென்று வருந்தி, விரைந்துசென்று, நீ இருந்த இடத்தை அடைந்து உன்னைக் காணானபோது, அவனைக் கண்டோர் உயிர் இருக்கிறதோ, இல்லையோ என்று ஐயுறுநிலைமையனானான்' என்று அனுமான் கூறினான்.]

## அநுமான் கூறியதுகேட்டு ஏக்கமுற்ற சீதை தேற்றமடையும்படி அவன், 'இராமன் உயிர் (சீதை) இங்கே (இலங்கையிலே) இருக்கும்போது, அங்கே (வனத்திலே) விடுதற்கு வேறு உயிர் ஏது?' எனல்.

101 'தேண்டிநேர் கண்டேன்! வாழி! தீதிலன், எங்கோன்: ஆகம்
பூண்டமெய் உயிரே போகப், பொய்யுயிர் போல நின்ற
ஆண்டகை நெஞ்சி னின்றும் அகன்றிலை; அழிவுண் டாமோ?
ஈண்டுநீ இருந்தாய்; ஆண்டங் கெவ்வுயிர் விடும்இ ராமன்?'

* வாழ்த்து. † மாயாவி - மாயைசெய்பவன். ‡ அநுகரித்தல் - வேறொன்று செய்வதுபோலச் செய்தல். § கோதண்டம் - இராமன்வில்.

இ-ள். 'நான்தேடிவந்து (என் இருகண்களின்)எதிரே (இராம பிராணுயிராயிருக்கிற உன்னைப் பிரத்தியட்சமாகக்) கண்டுகொண் டேன்! (நீடு) வாழ்வாயாக! எம்பெருமான் (இன்னுயிரான நீ சேமமா யிருக்குமளவும், அவன்) சாவில்லாதவனே. அவனுடைய உடம்பை யிடமாகக்கொண்ட, அவனுடைய மெய்யுயிரான நீ (*புறப்பிரிவாகப்) பிரிந்துபோகப், பொய்யுயிருடையவன்போல உள்ள அவனுடைய நெஞ்சினின்றும் (நீ எப்போதும்) நீங்கினு யில்லை. (அவன் உயிரான நீ நீங்காதவரை அவனுக்குச்) சாவுண் டாமோ? நீ, (அவன் நெஞ்சில் இல்லையென்று வைத்துக்கொண் டாலும்,) இங்கே (இலங்கையிலே) இருக்கின்றாய் (அன்றோ? அப் படியிருக்க, உன்னையன்றி வேறுயிரில்லாத) அவன், அங்கே (வனத் திலே) எந்தஉயிரை விடுவான்?'

'தேண்டி', தேடி என்பதன் விகாரம். வாழி - வாழ்வாயாக. தீது - மரணம் (சீவகசிந்தாமணி). பொய் உயிர் - பொய்யுயிருடை யவன் (ஆகுபெயர்). அழிவு - சாவு (இலக்கியச்சொல்லகராதி). ஆண்டு—அசைச்சொல் (தமிழ்ச்சொல்லகராதி). 'ஆண்டு அங்கு' என்பதை ஒருபொருட்பன்மொழியாகவுங் கொள்ளலாம். விடும்- விடுவான் (ஆண்பாலில்வந்த செய்யும் என்னும் வாய்பாட்டு வினை முற்று). 'மெய் உயிரே நீயப் பொய்யுயிர் போயேநின்றான்' என்பது பிரதிபேதம். 'மெய் உயிரோ நீ' என்பதும் பாடம்.

சீதை, சற்றுமுன்தான், இராமன் சேமமாயிருப்பதை அனு மான் கூறத் தெரிந்தவளாயிருந்தும், அவன் 'உன்னை இராமன்காணு னபோது உயிருண்டோ இல்லையோவென்னும் நிலைமைய னுன்' என்றதைக் கேட்ட தக்கணத்தில் இராமன் உயிர் இல்லை யானதோ என்று இயல்பாக ஏக்கமுற்றதை அவள் முகத்தோற் றத்தின் மாற்றத்தினாலறிந்து, அந்த ஏக்கத்தைப்போக்கி இன்ப முண்டாக்கும் நோக்கத்துடன், அவன், தான்கூறிவந்தவரலாற்றைத் தொடர்ந்துகூறாது நிறுத்திக்கொண்டு, இடைப்பிறவரலாகக் கூறி யது, இக் கவியிற் கூறியதென்க. 'தீதிலன்', 'அழிவுண்டாமோ?' 'எவ்வுயிர்விடும் இராமன்?' என, ஒருவகை இருவகையோடமை யாமல் மூவகையாக இராமன் இறவாமையை உணர்த்தியது, அவ் ஏக்கத்தை நீக்கும்நோக்கத்தாலேயே என்னலாம்.

---

* புறப்பிரிவு - உள்ளத்தைவிட்டுப் பிரியாமல் உடம்பைவிட்டுப் பிரிதல்.

இக்கவி, சிறப்பாக இக்கவியின் இறுதி 'அடி, நனியினிய அதி சாதுரியவசனங்கள் நிரம்பிக் கழிபேருவகைவிளைப்பதாயிருப்பது கண்டு களிக்கத்தக்கது. ஈற்றடி, மிகவும் அசாதாரணமான அதி அற்புத கவிப்பகுதிகளுள் ஒன்றாயுள்ளது.

அநுமான் இடையில் நிறுத்திய இராமன்செய்திகளைத் தொடர்ந்துகூறல்.

102 'அந்நிலை ஆய அண்ணல், ஆண்டுநின் றன்னை நின்னைத்
துன்னிருங் கானும் யாறும் மலைகளும் தொடர்ந்து நாடி,
இன்னுயிர் இன்றி ஏகும் இயந்திரப் படிவம் ஒப்பான்,
தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயுவை வந்து சார்ந்தான்.'

இ-ள். 'தாயே! உன்னைக்காணாமையால் உயிர் இருக்கிறதோ, போய்விட்டதோ என்ற நிலையினனான இராமபிரான், உயிரில்லாமலே நடக்கும் சூத்திரப்பாவைபோன்றவனாய்ப் பர்ணசாலையிருந்த இடத்தைவிட்டு (ப் புறப்பட்டு மரங்கள்) நெருங்கிய காடுகளிலும் ஆறுகளிலும் மலைகளிலும் உன்னை (இடைவிடாமல்) தொடர்ந்து தேடிக்கொண்டு (செல்லும்போது) உயிரைவிலையாகக் கொடுத்துப் புகழைப் பெற்ற சடாயுவினிடம் வந்துசேர்ந்தான்.

'அன்னை' அண்மைவிளி. துன்னல் - நெருங்கல். கான் - காடு. படிவம் - வடிவம். பதுமை அல்லது பாவையென்ற பொருளுடைய 'படிமம்' என்று பாடமிருந்தால் சிறப்பாயிருக்கும். ஏடெழுதுவோரால் 'படிமம்' படிவம் என மயங்கி எழுதப்பட்டதுபோலும். 'வந்து சடாயுவைச் சார்ந்தான்' என இயைக்க. 'துன்னரும்' 'படிவமெய்யான்' 'படிவ மன்னன்' பாடபேதங்கள்.

இராவணன்கவர்ந்த சீதையைமீட்க, அவனை எதிர்த்துப் போர்புரிந்து உயிரிழந்து புகழடைந்த பெரியோனாதலால், சடாயுவைத் 'தன் உயிர் புகழ்க்கு விற்ற சடாயு' என இனிது சிறப்பித்தார்.

'இராமபிரான் சடாயுவிடம்சென்று சேர்கையில் அவன் குற்றுயிருடையவனாயினும் "உயிர்விற்ற" என்று இறந்தகாலத்தாற் கூறியது தெளிவினால்.'

இறக்குந்தறுவாயிலிருந்த சடாயுவை
இராமன் கண்டு பேசும்போது அவன் இறத்தல்.

['இராமபிரான், சடாயுவிடம் வந்தபோது, அவன் இறகறுப்புண்டு இரத்தவெள்ளத்திடையே குற்றுயிராய்க்கிடப்பதைக்கண்டு,

கொடுந்துன்பம் அடைந்து 'நீ, இந்த நிலைமையை எய்துவானேன்?' என, அவன், இராவணன் சீதைதிறத்திற்செய்த கொடிய வஞ்சனையைக் கூறக் கோபாக்கினி கொதித்துக் கதித்தெழாநிற்க இராமபிரான் "என் அம்பினால் எல்லா உலகங்களையும் எரித்துவிடுவேன்" என்று வில்லைநோக்கச் சடாயு, அவ்வாறுசெய்துவிடாமல் தடுப்பானாய்ச் "சிறியோனொருவன் செய்த தீங்குக்காக ஒருகுற்றமும் செய்யாத உலகோரெல்லோரையும் ஒழிக்கலாமோ!" என்று சாந்தப்படுத்த, அமைதி அடைந்து "இராவணன் எவ்வழி ஏகினான்? இருப்பிடம் யாது?" எனச் சடாயு, பேசத்தொடங்கியபோது பிராணன் நீங்கினான். இருவீரரும், எல்லையற்ற துன்பமுற்றுத் தந்தைமுறையினனான சடாயுவுக்குத் தகனம் முதலிய சரமகிரியைகள் சகலமும் முறையாகச் செய்துமுடித்தார்கள்.

## சீதையைத் திரும்பவும் தேடல்.

பின்பு, அவர்கள், திரும்பவும் உன்னைத் தேடுவாராகி, வழிமுழுதும் விழிபொழியும் நீராற் சேறாகக் காடுகளும் மலைகளும் கடந்துசென்றார்கள். இராமபிரான், உன்னை எங்கும் காணாமையால், வெந்தீயினால் இளகும் மெழுகுப்பாவைபோலச் சோகத்தினாற் கரையும் தேகத்தனாய்ச் சித்தங்கலங்கிப் புத்திமயங்கிச் "சீதாதேவியை நீ தாராவிடில் கோதாவிரியே! உன்னைக் கொளுத்திவிடுவேன்" என்றும், "குன்றே! என்தேவியைக்காட்டாயெனில், இன்றே உன்னைக் குலத்துடன் எரித்திட இந்த அம்பு ஒன்றேபோதும்" என்றும், மான்களைநோக்கிப் "பொன்மானால் என்மான் பிரிந்தாளாதலால், மானென்னும்பேரேயிராது வேரோடழிய மான்களையெல்லாம் நான் கொல்வேன்" என்றும் புலம்பியபோது, இளையபெருமாள் இனிதுமொழிந்த இதவசன மருந்தினால் மதிமயக்கநோய் மாறி மனந்தெளிந்தான்.

## சுக்கிரீவனுடன் சிநேகஞ்செய்து சீதையைத்தேட வானரசேனைகளை விடுதல்.

பின்பு, நான் முன்னம் சொன்னபடி வாலியை வதஞ்செய்து சுக்கிரீவனை அரசனாக்கி, உன்னைத்தேடும்படி வானரசேனைகளைத் திசைகளனைத்திலும் செல்லவிடுத்தான். தென்றிசைக்குவந்த சேனையைச் சேர்ந்த யான் இங்குவந்தேன். இவைகளே, நீ இராமபிரானைப் பிரிந்தபின்பு நிகழ்ந்த செய்திகள்' என்றான்.

## சீதை அநுமானை எவ்வாறு கடலைக்கடந்தாயென, அவன் காலாற்கடந்தேனெனல்.

சீதை, இராமன்வருந்தியதை நினைந்து வருத்தமும் தன்னை மறந்துவிடாமையை எண்ணி மகிழ்ச்சியும் கொண்டு, துன்பக்கண்ணீரும் இன்பக்கண்ணீரும் ஒருங்கு சொரிந்து 'அளவற்ற ஆழமும் அகலமும் உடைய கடலை எவ்வாறு கடந்தாய்?' என, அநுமான் 'உன் நாயகனுடைய திருவடிகளைத் தியானம்செய்யும் அன்பர்கள் தம் அறிவினால் மாயையாகிய பெருங்கடலைக் கடத்தல்போல, யான் என் காலினால் கருங்கடலைக் கடந்தேன்' எனச் சீதை, 'இவ்வளவு சிறியநீ, எவ்வளவோபெரிய கடலைக்கடந்தது, தவத்தினாலானதோ? சித்தியினாலானதோ எதனாலானது? இயம்புவாயாக என்றாள்.

## அநுமான் தன் இயற்கையுருவைக் காட்டல்.

அப்போது, அநுமான், கூப்பிய கையினனாகி, நிமிர்ந்துநின்றால் அண்டமுகடு மண்டையில் இடிக்குமென்று கூனிய உடலும் குனிந்த தலையும் உடையவனாய்த் 'தாயே! பார், கடலைக்கடந்தது இந்தக்காலாலேதான்' என்று தெரிவிப்பானாய்ச் சீதைக்குத் தன் பேருருவைப் பிரத்தியட்சமாகக் காட்டிநின்றான். மகாமேருபருவதத்தில் வளரும் மரங்களைச் சூழ்ந்து மின்மினிக்கூட்டங்கள் மொய்த்து மின்னிடுதல்போல அநுமான் உடம்பில்வளரும் உரோமங்களைச்சுற்றி விண்மீன் ஈட்டங்கள் நெருங்கி விளங்கின.

## அநுமான் பேருருக்கண்ட சீதை இராக்கதர்வீழ்ச்சியும் தன் சிறைமீட்சியும் முற்றுப்பெற்றனவாகக்கருதி மகிழ்தல்.

சீதை, அநுமானுடைய இயற்கைப் பேருருவை நோக்கி, அதன் அடிகளையே முடியக் காணமுடியாதவளாய், 'இனி இராக்கதரெல்லாரும் இறந்தவரே' என்னும் எக்களிப்பு மிக்கவளாய், பிரிந்த நாயகனைத் திரும்ப மேவினாற்போலும் பெருவகையுடையவளாய் 'இவ் உருவைக் காண அஞ்சுகின்றேன். இதனை ஒடுக்குவாய்' என, அவன் 'அன்னையின் ஆணைப்படி ஆகுக' என்று எல்லாரும் காணத் தக்க பழைய வடிவினனானான். அப்போது, சீதை, அகமிகமகிழ்ந்து அவனுக்குப் புகழ்மொழி புகல்வாளானாள்.]

## சீதை அநுமானைப் புகழ்தல்.

103 'இடந்தாய் உலகை மலையோடும், எடுத்தாய் விசும்பை, இவைசுமக்கும்
படந்தாழ் அரவை ஒருகையால் பறித்தாய் எனினும் பயன்இன்றால்;
நடந்தாய் இடையே என்றாலும் நாணும் நினக்கு நளிர்கடலைக்
கடந்தா யென்றால், என் ஆகும்? காற்றும் அன்ன கடுமையாய்.'

இ-ள். 'பூலோகத்தை(அதனிலுள்ள)மலைகளோடு(சேர்த்துப்) பேர்த்தாயென்றாலும், தேவலோகத்தைத் தூக்கிப்பிடித்தாயென்றாலும், இவ்வுலகங்களையெல்லாம் தாங்குகின்ற (ஆயிரம்)படங்களுடைய ஆதிசேடனை ஒருகையாலேயே (பற்றியிழுத்துப்) பறித்தாயென்றாலும் (இவ் அரிய செயல்களெதுவும், உன்பெருமைக்குத் தக்க) பிரயோசனமில்லாததாம். (அப்படிப்பட்ட பெருமையுடைய நீ, "கருங்கடல் கடந்தனன் காலினால்" என்று கூறி உன்னை இழிவுபடுத்தினாய். கடலின்) ஊடே (பிரயாசமின்றி அநாயாசமாக) நடந்தாயென்றாலும் அது உனக்கு நாணந்தருவதாம். (ஆகவே) நீ, கடலை (உழைப்பை உணர்த்தும்) கடத்தலைச்செய்தாயென்றால், அது (உன்னை மிக மிக இழிவுபடுத்துவதன்றி வேறு) யாதாம்?'

காற்று ஆம் அன்ன கடுமையாய் - வாயுவேக முடையோனே. 'ஆம்' சாரியை. 'அன்ன' உவம உருபு. இடத்தல் - பேர்த்தல். எடுத்தல் - தூக்கிப்பிடித்தல் (தமிழகராதி). விசும்பு - தேவலோகம். பயன்-பிரயோசனம்-பலன். நளிர்-குளிர். 'எனினும்' என்பதனோடு 'பறித்தாய்' என்ற அண்மைச்சொல்லேயன்றி 'இடந்தாய்' 'எடுத்தாய்' என்ற சேய்மைச்சொற்களும் முடிதல் கவனிக்கத்தக்கது.

'காற்றுமன்ன கடுமையாய்' என்றது கடலைக் காற்றானது வேகமாகவும் எளிதாகவும் கடத்தல்போல, அநுமான் கடந்தானென்று குறிப்பிப்பதாகக் கொள்ளலாம்.

சற்றுமுன் காட்டப்பட்ட அநுமானுடைய இயற்கைப் பேருடம்புடையானெவனுக்கும் பூமியைப்பேர்த்தல் முதலிய மேற்கூறிய பெருஞ்செயல்களெதுவும் சிறுசெயலாய்ப் பெருமையளியாததாமாதலால், அநுமான் கடலைக் கடந்ததாக அவன்சொன்னாலும் பிறர்சொன்னாலும், அது, அவனை இழிவுபடுத்துவதாமென்று சீதை அநுமானைப் புகழ்ந்தாளென்பது கருத்து. [தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

கடவுள் துணை.


# செந்தமிழ்.

தொகுதி-௩௨.] யுவஹு ஐப்பசிமீ [பகுதி-௧௨.

Vol. XXXII. October-November 1935. No. 12.


## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

(௩௧௯-ஆம் பக்கத்தொடர்ச்சி.)

104 'ஆழி நெடுங்கை ஆண்டகைதன் அருளும் புகழும் அழிவின்றி
ஊழி பலவும் நிலைநிறுத்தற் கொருவன் நீயே உளை ஆனாய்!
பாழி நெடுந்தோள் வீரா! நின் பெருமைக் கேற்பப் பகை இலங்கை
ஏழு கடற்கும் அப்புறத்த தாகா திருந்த திழிபன்றோ?'

இ-ள். 'இராமபிரானுடைய ஆணையும் கீர்த்தியும் (உலகமுழுவதும் பரவிப்) பல்லூழிகாலம் நிலைபெறச்செய்தற்கு, (அநேகர் அநாவசியகமென்னும்படி) நீ ஒருவனே (போதுமானவனாய்) உள்ளாய். (ஒரு கடலுக்கே அப்பாலுள்ளதாய்) எதிரியிடமான இலங்கை (ஏழுகடல்களையும் தாண்டவல்ல) உன்பெருமை (விளங்குதலு)க்கு ஏற்றபடியாக ஏழுகடல்களுக்கும் அப்புறத்ததாயில்லாமற்போனது ஒரு (பெருங்) குறையே.'

ஆழி நெடும் கை ஆண்டகை - (அரசர்க்குரிய ஆஞ்ஞா) சக்கரத்தையுடைய (முழந்தாளளவும்) நீண்ட கையையுடைய வீரன். இதே கருத்தை 'ஆசாநுபாகு' என்னும் வடமொழித்தொடர் குறித்தல் காண்க. அருள் - ஆணை. சூளாமணிப்படலத்தில் 'எத்தும் வென்றி' என்ற ௩௧-ஆம் பாட்டில் 'இராமன் ஆணை' யென்று

பொருள்பட 'மன் அருள்' என்பது வருதல் காண்க. உளை - உள்ளாய். பாழி - வலிமை. பகை இலங்கை - 'பகைப்புலம்' என்னும் எதிரியிடமான இலங்கைத்தீவு. இழிவு - தாழ்வு - குறைவு. 'ஒழிந்த திகழ்வன்றே' பிரதிபேதம்.

'ஆழி நெடுங்கை ஆண்டகை' என்ற சொற்றொடர், இராமன் அரசாளாமையினால், தசரதனைக் குறித்ததாகக் கூறுவாருளர். அத்தொடர் உபசாரமாக இராமனைக்குறித்ததாகக்கொள்ளலாம்; உண்மையாக இராமனைக்குறித்ததெனலுமாம். இதற்கு நியாயம் யாதெனில், தசரதசக்கரவர்த்தியின் ஆஞ்ஞாசக்கரம் கைகேயி கொண்ட வரத்தால் பரதனுடையதானதை அவன் இராமனிடம் ஏற்பிக்க, 'இதை எனதாக நீகொண்டு என் வனவாசகாலம் முடியுமளவும் அரசாள்வாயாக' என்று இராமன் தனதான சக்கரத்தைப் பரதனிடம் திரும்ப ஏற்பித்திருத்தலால், இராமனைச் சீதை 'ஆழி நெடுங்கை ஆண்டகை' என்றாள் என்பது. இதனால் அத்தொடர் இராமனைக்குறித்ததாகக்கொள்பவர் 'ஆழி' என்பதற்குச் 'சக்கரம்' என்ற பொருள்பொருந்தவில்லையென்றுகருதி 'மோதிரம்' என்று பொருள்கூறுவது இன்றியமையாததன்றாம். இராமன் கையில் 'சக்கரரேகை'யுண்மைபற்றி, 'ஆழி நெடுங்கை ஆண்டகை' எனப்பட்டானெனலுமாம். முன் அநுமான், சுக்கிரீவனைநோக்கி, இராமனுக்குச் 'சங்கு சக்கரக் குறியுள தடக்கையில் தாளில்' என்று கூறியிருப்பது காண்க. (நட்புக்கோட்படலம் ௭௬).

'அநுமானே! இராமபிரான் வெறுத்தாரை அவன் ஆணைப்படி அடக்கித் தண்டித்து அவனுக்குப் பிரதாபமும் அவன் விரும்பினார்க்கு இதம்செய்து அவனுக்குக் கீர்த்தியும் உண்டாக்கி அவ் இருவகைப் புகழ்களும் ஏழேழுலகத்தும் ஊழியூழிகாலத்தும் நிலைபெற்றுநின்று நிலவும்படிசெய்ய நீ ஒருவனேபோதும். உன்துணை உள்ளதாக, இலக்குமணன் சுக்கிரீவன்முதலியோர் துணையும்வானர

சேனைத்துணையும் மிகையாய் அநாவசியகமாமென்னும்படியான பெருமையை நீ உடையாயென்பதை உன் இயற்கைப்பேருருவங் கண்டு தெளிவாகத் தெரியலானேன். உன் பெருமைக்குத்தக்கபடி இலங்கை ஏழுகடல்களுக்கும் அப்பாலாயிருந்திருந்தால், அத்தனை கடல்களையும் தாண்டி அந்த லங்கையை அடைந்திருப்பாய். அப்போது, உலகத்தோர், உன்னை ஏழுகடல் தாண்டுவோனென மதித்திருப்பார். அதற்கிடமில்லாமல், நீ ஒருகடலே தாண்டுவோனென மதிக்கப்படும்படி இந்த இலங்கை ஒருகடலுக்கே அப்பாலுள்ளதாய் ஏழுகடல்களுக்கும் அப்புறப்பட்டதாயில்லாமற்போனது இரங்குதற்குரியதாய் உன்பெருமையைக் குறைப்பதாயுள்ளது' என்று சீதை அநுமானை வியந்து புகழ்ந்தாளென்பது கருத்து.

இதன்முன் அநுமான்பெருமைக்கு அவன் கடலைக்கடந்தான் என்பது இழிவென்று கூறிப் புகழ்ந்தவள், இப்போது அவன் தாண்டிய கடல் ஏழாயில்லாமல் ஒன்றாயிருந்தது அவன் பெருமைக்கு இழிவு என்று புகழ்ந்தாள்.

இராமலக்குமணருக்குத் துணையான அநுமான்பெருமையை அறியுமுன், 'இவ்வளவு பெரிய கடலை நம்மை மீட்கவருவார் எவ்வாறுகடப்பார்? இது சிறிதாயிருந்ததில்லையே?' என்று வருந்தியிருந்த சீதை, அவன்பெருமையை அறிந்தபின், அக்கடல் பெரிதாயிருப்பதுபோலப் பலவாயும் இல்லாமற்போயிற்றேயென்று இரங்கினளென்று இந்தக் கவியினும், அவன்பெருமைதெரியுமுன், எண்ணிறந்த இந்த இராக்கதப்பெருங்கூட்டத்தை, எத்துணைப் பராக்கிரமமுடையரேனும் இருவரேயான இராமலக்குமணர் எவ்வாறு வெல்வாரென்று ஏங்கியிருந்தவள், அவன்பெருமை தெரிந்தபின் 'அவ் இராக்கதரனைவரும் எம்மாத்திரம்? இமைப்பொழுதில் அழிந்தொழிவர்' என்று எக்களித்தாளென்று 'மின்னேரெயிற்று' என்ற 106-ஆம் கவியிலும் இனிது புனைந்துரைத்திருக்கும் அத்தியற்புத கற்பனைத்திறம் பெரிதும் பாராட்டத்தக்கது.

105 'அறிவும் ஈதே, உரு ஈதே, ஆற்றல் ஈதே, அரும்புலத்தின்
செறிவும் ஈதே, செயல் ஈதே, தேற்றம் ஈதே, தேற்றத்தின்
நெறியும் ஈதே, நினைவீதே, நீதி ஈதே, நினக்கென்றால்,
வெறியரன்றோ! குணங்களான்விரிஞ்சன்முதலாம்மேலானோர்.'

இ-ள். 'உனக்கு, விவேகம் இதுவே, சொரூபம் இதுவே, வல்லபம் இதுவே, அடக்குதற்குரிய ஐம்புலன்கள் அடங்கியிருக்குந்தன்மை இதுவே, மனத்தெளிவு இதுவே, மனத்தெளிவுக்குத் தக்க ஒழுக்கம் இதுவே, எண்ணம் இதுவே, நீதி இதுவே என்றால், (மனிதர்க்கும் அவரினும் உயர்ந்த தேவர்க்கும் அவர்களுள் உயர்ந்த தேவாதிபர்க்கும்) மேலான பிரமன்முதலியோர் (எல்லாச் சிறந்த குணங்களும் ஒருங்கே உடைய உன்னோடு ஒப்பிடப்படுங்கால்)ஒரு குணமுமில்லாததன்மையரே.'

ஆற்றல் - வலி. செறிதல் - அடங்குதல் (தமிழகராதி). தேற்றம் - தெளிவு. நெறி - ஒழுக்கம். வெறியர் - வெறுமையுடையார் - இல்லாதவர். விரிஞ்சன் - பிரமன்.

'இது' என்பதன் விகாரமாகிய 'ஈது,' நான் (சீதை)கண்டதன்மையுடையது என்ற பொருளை உணர்த்தியது.

'ஈது,' 'ஈது' என வந்த ஒவ்வொன்றுக்கும், இத்தன்மையது என்று கண்டவர் காட்டக் காணாதவர் கண்டறியக்கூடியதேயன்றிக் கண்டவர் சொல்லக் காணாதவர் கேட்டறியக்கூடாததாய்த் தனக்கு உயர்ந்ததில்லாததேயன்றி ஒத்ததுமில்லாத பெருமையுடையதாய் உள்ளதென்று பொருள்விரித்துரைக்கலாம்.

106 'மின்னேர் எயிற்று வல்அரக்கர் மிக்கம் நோக்கி, வீரற்குப்
பின்னை பிறந்தா னல்லதோர் துணைஇலாத பிழைநோக்கி,
உன்னை நினைந்தே உடைகின்றேன், ஒழிந்தேன் ஐயம். உயிர்உயிர்த்தேன்.
என்னை! நிருதர் என்ஆவர்! நீயே எங்கோன் துணையென்றால்'

இ-ள். 'வலிய அரக்கர்பெருக்கத்தைக்கண்டு, இராமபிரானுக்குத் தம்பி (ஒருவனை)யன்றி வேறொருதுணையுமில்லாத குறை

பாடுகருதி, (இருவர், இத்தனை இராக்கதரை எப்படி வெல்லப் போகிறார்களென்ற சந்தேகம்கொண்டு,) சிந்தனையி லாழ்ந்து (மத் தெறிதயிர்போல) மனமுடைந்துகொண்டிருந்த யான் சந்தேகம் (முழுதும்) நீங்கினேன். (இத்துணைப் பெருமையுடைய) நீயே எங்கோன்துணையாயிருக்கும்போது இவ் இராக்கதர் எம்மட்டு! (அலட்சியமான அற்ப அளவினரென்றபடி), யாதாவர்! (இருந்த இடந்தெரியாதபடி அழிந்தொழிவரென்றபடி).'

எயிறு - பல். வீக்கம் - மிகுதி. பிழை - குறைவு (தமிழகராதி). நோக்கி - கருதி ('அறநோக்கி' என்ற குறளுரை). என்னே இகழ்ச்சிக்குறிப்பு. என் - யாது. 'இவனே எங்கோன்' பிரதிபேதம்.

'என்னே' என்பதற்கு 'இது என்ன ஆச்சரியம்' என்றும், '(எனக்கு இனி) என்ன குறையுளது?' என்றும் பொருள்கூறுவர்.

'நீயே' என்ற பாடங்கொள்ளாமல் 'இவனே' என்ற பாடங் கொண்டால்,-அநுமானது இயற்கைப் பெருவடிவங்கண்டு வியந்து அவனை முன்னிலைப்படுத்திப் புனைந்து புகழ்ந்துகொண்டிருந்த சீதை, தன் சிறைமீட்சியும் பகைவர்வீழ்ச்சியும் பற்றிய நம்பிக்கை ஓங்க மகிழ்ச்சி மேலிட்டதனால், அவன் எதிரே யிருப்பதை யெண்ணாமல், தான் சொல்வதை அவன் கேட்கவேண்டுமென்று கருதாமல், அவன் கேட்கும்படியாகத் தனக்குத்தான் கூறியவைக ளாக இக்கவியிலும் அடுத்தகவியிலும் கூறப்பட்டிருப்பவைகளைக் கொள்ளல்வேண்டும்.

107 'மாண்டேனெனினும் பழுதன்றே, இன்றே, மாயச் சிறைநின்றும்
மீண்டேன், என்னை ஒறுத்தாரைக் குலங்க ளோடும் வேரறுத்தேன்,
பூண்டேன் எங்கோன் பொலங்கழலும், புகழே யன்றிப் புன்பழியும்
தீண்டேன்' என்று மனம்மகிழ்ந்தாள் திருவின் முகத்துத் திருஅன்னாள்.

இ-ள். 'இப்போதே, இறந்தேனாலும் குற்றமில்லை. (இராக் கதரது) வஞ்சகச் (செயலாலான) சிறையினின்றும் மீண்டேனாய்

விட்டேன், என்னை வருத்திய அரக்கர்வருக்கம் அனைத்தையும் அடியோடும் அழித்தேனாய்விட்டேன், எம்பெருமான் பொன்னடிகள் (என்முடிமேற்) சூடினேனாய்விட்டேன், இனிப் புகழேயன்றி இழிவான பழி யாதும் தீண்டப்படவேமாட்டேன்' என்று கூறிக் குதுகலித்தாள், (எவளென்றால்,) இலக்குமியினது (உறுப்புக்களிற் சிறந்த) முகத்தின் அழகு (உருவெடுத்தாற்) போன்றவளாகிய சீதை.

ஒறுத்தல் – வருத்துதல். இன்று – இப்போது (தமிழ்ச் சொல்லகராதி); 'இன்றே' என்பது, 'மீண்டேன்' என்பதனோடன்றி 'மாண்டேன்' 'வேரறுத்தேன்' 'பூண்டேன்' என்பவைகளோடும் பொருந்தும்படிநிற்றல் கவனிக்கத்தக்கது. பொலம் - அழகு. கழல் - கால். முந்திய 'திரு' இலக்குமியையும் பிந்திய 'திரு' அழகையும் குறித்தன.

இந்தப் பாட்டில் 'மாண்டேன்' என்பது முதலாகத் 'தீண்டேன்' என்பது இறுதியாக உள்ள பகுதியை 'இன்றே, என்னை ஒறுத்தாரைக் குலங்களோடும் வேரறுத்தேன், மாயச் சிறைநின்று மீண்டேன், எங்கோன் பொலங்கழலும் பூண்டேன், புகழேயன்றிப் புன்பழியும் தீண்டேன், மாண்டேனெனினும் பழுதன்றே' என்று பொருத்திப் பொருள்கொள்ளலும் பொருந்தும். அப்பொருளாவது:

'(உன் துணையுடைமையால், இராமலக்குமணர் இராக்கதரை அழிப்பது திண்ணமாதலால்,) என்னை வருத்திய இராக்கதரை இப்போதே அவர்கள் வமிசங்களுடன் நிர்மூலமாக்கினேனானேன், (இராக்கதர் அழிவு என் சிறை அழிவாதலால்) இப்போதே சிறையினின்று மீண்டேனானேன், (சிறைமீண்டேனாதலால்) இப்போதே (பிரிந்த என் நாயகனைத் திரும்ப அடைந்து) என் நாயகனது பொன்அடிகளை (என் முடிமேல்) அணிந்தேனானேன், (என் வாழ்க்கையின் இலட்சியங்களான சிறைமீட்சியும் என் நாயகன் திருவடி

அடைதலும் சித்தித்தனவாதலால்) இப்போதே இறந்துபோனேனாலும் குற்றமில்லை' என்று சீதை கூறினாள் என்பது.

இவ்வாறு எதிர்காலநிகழ்ச்சிகளை இறந்தகாலத்தாற்கூறியது தெளிவுபற்றி.

அநுமான் தன்னைத் தாழ்த்திக்கூறல்.

[அநுமான், தன்பெருமையைச் சீதை பாராட்டியதற்கு நன்றியறிகுறியாகவும் அவள்கொண்ட ஊக்கம் தளர்தலின்றி வளர்தற்பொருட்டுத் தான் கூறப்போவதற்குப் பூர்வாங்கமாகவும் அவளுடையபாதங்களில்விழுந்து பணிந்து 'இராமபிரானுக்கு என்னைப்போல ஏவினபணிகளைச்செய்யும் அடியவரான வானரசேனாபதிகள் கடல்மணல்போலக் கணக்கற்றவர்கள் இருக்கின்றார்கள். அடியேன் அவருள் கடையேன்' என்றுகூறி வானரப்படைமிகுதியை வருணிக்கின்றான்:

வானரப்படைப் பெருமை.

108 'வெள்ளம் ஏழு பத்துளதால், வீரன் சேனை! இவ்வேலைப்
பள்ளம் ஒருகை நீர் அள்ளிக் குடிக்கச் சாலும் பான்மையதோ!
கள்ள அரக்கர் கடிஇலங்கை காணு தொழிந்த தாலன்றோ,
உள்ள துணையும் உளதாவ தறிந்த பின்னும் உளதாமோ?'

இ-ள். 'இராமபிரானுடைய வானரப்படை, எழுபது வெள்ளமென்னும் (மிகப் பெரிய) இலக்கமுள்ளது! (அந்தப் படைவீரர் ஆளுக்கு) ஒருகைந்நீர் அள்ளிக் குடிக்க, ஆழமான கடல்நீர் (அத்தனையும்) காணுமோ? காணாது! (அவர்களுக்கு இலங்கையிருக்குமிடம் தெரிந்திருந்தால், அழித்திருப்பார்கள்.) இலங்கை (அழியாததாய்) இருக்குமளவும் இருப்பதாகுவது (அது இருக்குமிடம்) தெரியப்படாதொழிந்ததனாலேயே: தெரியப்பட்டபின்னும் (அழிக்கப்படாமல் அரைக்கணமும்) இருப்பதாமோ? (இருக்கவேமாட்டாதென்றபடி).' [என்று அநுமான் கூறினான்.]

வெள்ளம் - ஓரெண். 'பள்ளவேலை' யென இயைக்க. வேலை - கடல்; ஆகுபெயராய்க் கடல்நீரை உணர்த்தியது. 'வேலைப்பள்ளம்' என்பதை இருக்கிறபடியே கொண்டு, 'பள்ளம்' ஆகுபெயராய்ப் பள்ளத்துள்ள நீரை உணர்த்தியதெனலுமாம். நிந்தனைப்படலத்தில் 'பள்ள நீர்' என ஒருகவி தொடங்கல் காண்க. சாலும்பான்மையதோ - போதிய தகுதியுடையதோ. கள்ளம் - வஞ்சகம். கடி - காவல். துணை - அளவு. 'வெள்ள மெழுப துளதன்றே,' 'குடிக்கப் போதும்' என்பனவும் பாடங்கள்.

அநுமான், கடல்மணல்போலக் கணக்கிறந்தவரெனப் படைத் தலைவர்மிகுதியைப் பாரித்துரைத்தா னென்றும், அதனினும் அதிக நயத்துடன் விநோதமுமாகக் கடல்நீர்முழுதும் ஆளுக்கொரு கைந்நீரள்ளிக்குடித்தற் காற்றுது (நீராயிருந்த கடல் நிலமாய்விடும்) என்று படையாள்கள்மிகுதியை விதந்துரைத்தானென்றும் கூறிய கவிசாதுரியம், கழிபேருவகை விளைப்பதாயுள்ளது.

உருக்காட்டுபடலம் முற்றிற்று.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[கூ௨-ஆம் தொகுதியின் கூகூ௨-ஆம்பக்கத் தொடர்ச்சி.]

## சூளாமணிப்படலம்.

*சீதை, தன்னை இராவணன் கவர்ந்துசென்றபோது, கழற்றி யெறிந்த ஆபரணங்களுடன் சேர்த்தெறியாமல், மங்கலியத்துக்கு அடுத்த அணியாக மதித்து அடக்கமாகவைத்திருந்த சூளாமணியை இராமனிடம் கொண்டுபோய்த் தன்னைக் கண்டதற்கு அடையாளமாகக் கொடுக்கும்படி அநுமான்கையிற்கொடுத்ததைக் கூறுவது. சூடாமணியென்னும் வடமொழித்தொடர், ட ள ஒற்றுமைபற்றிச் சூளாமணியென வந்தது. சூளாமணி - முடிமணி - தலையணிகளுள் தலைமையான அணி.*

### அநுமான் சீதையை எடுத்துப்போய் இராமனிடம் விடுத்திட எண்ணுதல்.

*[அநுமான், தான் சீதையைக்கண்டபின்பும், அவளைத் துன் புற்றுக்கொண்டிருக்கவிட்டுப் போகலாகாதென்றும், அவளை இராமனிடம் கொண்டுபோய்ச்சேர்த்தலே செய்தற்பாலதென்றும் கருதி, அவளைநோக்கிக் கூறுகின்றான்:—*

### அநுமான் சீதையைநோக்கிக் கூறுதல்.

*'என் விண்ணப்பத்தைக் கோபியாது செவியேற்றருள்வாயாக. இராவணன் உன்னைக்கொல்வேனென்று பயங்காட்டியபடி கொன்று விடுதல்கூடும். அப்படி அவன் கொன்றபின், அவனை வெல்வது, வீரியமாமேயன்றிக் காரியமாகாது. காரியம் கெடாது காத்துக் கொண்டுவீரியஞ்செலுத்தல் விவேகிகள்செயல். உன்னைக்கொண்டு போய் இராமபிரானிடம் சேர்ப்பேன். இச்சமயம் அதற்கு ஏற்றதா யிருக்கின்றது. நீ, இப்போதே, துன்பமொழிய, என் தோள்மேல் ஏறுவையேல், இடையே எங்குந் தங்காமல், இமைப்பொழுதில் ஏகி, இராமபிரான் எழுந்தருளியிருக்கும் குன்றிலே குதிப்பேன். அரக்கர் தொடர்வரேல், அவர்களை என் சினந்தீரக் கொன்றுதொலைப் பேன். உன்னை உடன்கொண்டுபோகாமல் வெறுங்கையோடுதிரும்ப லாமோ? இராசனிடம் செல்வோன், ஏற்ற காணிக்கைகொண்டு*

செல்லல்வேண்டும். இராசராசனை இராமபிரானுக்கு உயிருக்குயிரான உன்னினும் உயர்ந்த காணிக்கை உண்டோ? உன் துன்பத்தை உடனே ஒழிக்காமல், எம்பெருமானிடம்போய், "உன் தேவி துன் புழந்துகொண்டிருக்கின்றாள்" என்று சொல்வேனேல், என் அடிமைத்தொழில் என்னும்? தேவியைக் கொண்டுவந்தேனென்று கூறாது, சும்மா, கண்டுவந்தேனென்று கழறுவேனோ?

இராவணன் உன்னைக் கவர்ந்ததனால், கோபத்தோடுகூடிய வீராவேசமும் கொடுந்துன்பமும் குடிகொண்ட நெஞ்சினனான இராமபிரான், துன்பம் நீங்கித் தேவிசமேதனாய், இங்கெழுந்தருளி இராக்கதரெல்லாரையும் கொல்லுதல், உன் பிரிவுத்துன்புடன் அவர்களைக் கொல்லுதலினும் சிறந்ததென்று செப்பவும்வேண்டுமோ? பிரிந்த ராமசீதையரைத் திரும்பச்சேர்த்தானென்னும்பெரும் பெருமையும் அடியேன் பெறும்படி இன்னருள்புரிந்து என் தோள் மேல் ஏறியருளுதி' என்றான்.

### சீதை அநுமான்வேண்டுகோளை மறுத்துக்கூறுதல்.

'நீ சொல்லியபடி செய்தல், உனக்கு அருமையானதன்று; செய்து முடிக்கவும்செய்வாய். ஆயினும், அது, எனது பெரிய பேதைமையுடைய சிறிய பெண்புத்திக்குத் தக்கதன்றென்று தோன்றுகின்றது. என் சிறையை என் நாயகன் மீட்காமல், வேறெவரேனும் மீட்பரேல், அது, அவன் வில்லாண்மைக்கு வடுவாய் முடியாதோ? தேவர்க்குரிய *அவியைத் திருடிய நாய்போல, இராமபிரானுக்குரிய என்னை வஞ்சித்து வௌவிய நீசன்போல, நீயும் வஞ்சனைசெய்ய நினையலாமோ? என் நாயகனது விற்போரில் இராவணன் இறந்துவீழ என்னைக் காமித்துநோக்கிய அவன்கண்களைக் காகங்கள் உண்டபோதுதான், என் உயிர் உண்டு என்பதற்குரியதாம். வெற்றித்தொனிவிளைக்கும் நாண் பூண்ட கோதண்டம் கொண்டு, இராமபிரான் இயற்றும் போரில், †கருத்துநாணற்ற அரக்கியர் கணவரையிழந்து கழுத்துநாண் அற்றாலன்றி, நாணினை

* அவி - தேவர்க்கு வேள்வித்தீயிற் கொடுக்கும் உணவு.
† கருத்துநாண் - மனவெட்கம்.

உள்ளிட்ட * நாற்குணங்களையுடைய என் பெண்மை, பெருமையுடையதாகாது.

என் கற்பின் மாண்பினால், இராக்கதசமூகமன்றி எல்லாஉலகங்களையும், என் சொற்கொண்டு சுட்டிடுவேன். அவ்வாறுசெய்தால், யான் பகைவனாற் கவரப்பட்டதனால் எம்பெருமான் வீரத்துக்கு உற்ற குற்றம் தீர, அவன் விற்றொழில்புரிந்து வெற்றிபெற்று, என் சிறையை மீட்டற்கு இடமின்றாய்விடுமென்று சும்மா இருந்தேன்.

உன் வேண்டுகோளை யான் மறுத்தற்கு வேறும் ஒரு காரணம் உண்டு. அது யாதெனில், ஆறி அவிந்த திப்போல, உன் ஐம்பொறிகளும் ஆறியமைந்தவைகளேயாயினும், சொல்லளவில் நீ ஆண் ஆதலால், ஆண்மக்களுள் என் நாயகன் ஒருவனே தீண்டுதற்குரிய என்தேகம் உன்னைத் தீண்டலாகாதென்பது. இராவணன் என்னைத் தொடமுடிந்திருந்தால், இவ்வளவு நீண்டகாலம் உயிரோடிருந்திரேன். தீண்டலாகாமையாலன்றே, அந்தக் கீழ்மகன், யான் இருக்கின்ற இந்த இலைக்குடிசையை அடியோடு பேர்த்துக்கொண்டு வந்தான்? "மனமில்லாத மாதரைத் தொட்டால், மண்டைவெடித்திடக்கடவது" என்று பிரமதேவன் இராவணனுக்கு இட்ட சாபம் ஒன்று இருக்கின்றதென்று விபீடணன்மகள் திரிசடை என்பால் அன்பால் இயம்பியிருத்தலாலும், எம்பிரான் வில்வலியினால் என்னைச் சிறைமீட்கவேண்டுமென்ற விருப்பினாலும், என் கற்பின் தூய்மையை உலகோர் அறிய மெய்ப்பித்துக்காட்டவேண்டுமென்ற கருத்தினாலும் இவ்வளவுகாலம் என் உயிரை விடாது வைத்திருந்தேன்.

என் கற்பினால் இராக்கதரை அழியாமைக்குக் காரணம், யான் இறந்தேனானாலும், என்னை வருத்தினோரை என் நாயகன் வென்று அவனுடைய வில்லாண்மை கறைபடாமற் காக்கவேண்டுமென்று கருதியதென்று முன்னே சொன்னேன்.

யான் இருக்கின்ற இந்த இலைக்குடில் இளையபெருமாள் இயற்றியதென்பதை, உண்மையை நுண்மையாக உணரும் உன் கண்

* நாற்குணம் - மடம் நாண் அச்சம் பயிர்ப்பு.

கொண்டு கண்டுகொள்ளுதி. என் நாயகனது பசிய திருமேனி போலப் பச்சிலைகள் எங்கும் பரவப்பெற்றும், அவனுடைய சிவந்த கண்ணும் வாயும் கையும் காலும் போலச் சிவந்த மலர்கள் இடையிடையே மலரப்பெற்றும் விளங்குகின்ற அந்தத் தாமரைத் தடாகத்தில் நீராடவும் பருகவும் போகும்பொழுதொழிய எப்பொழுதும் இந்த இலைக்குடிசையிலேயே இருந்துவருகின்றேன். நீ, என்னை எடுத்துச்செல்ல எண்ணிய எண்ணத்தைக் கைவிட்டு, இனி, இராமபிரானிடம் திரும்பிச்செல்வதே காரியமென்று கருதுவாயாக' என்றாள்.

### அநுமான் சீதை செப்பியதை ஒப்பி, இராமனிடம் யாதுசொல்லவேண்டுமெனல்.

அநுமான் சீதை சொன்னதை ஏற்றுக்கொண்டு 'உலகநாயகனுடைய கோப்பெருந்தேவியென்பதற்கு ஏற்பனவே கூறினாய்! எம் பெருமானிடம் யான் யாது தெரிவிக்கவேண்டுமென்பதைத் திருவாய்மலர்ந்தருள்க' என்றான்.

### சீதை கூறல்.

'யான், இங்கே, இன்னும் ஒருமாசகாலம் உயிரோடிருப்பேன். அதற்குள் இராமபிரான் வரவில்லையானால், அதன்பின்—அவன் மேல் ஆணை!—உயிரை விட்டுவிடுவேன். இதை உறுதியாக உன் உள்ளத்துள்ளே ஊன்றவைத்துக்கொள்வாயாக' என்று சீதை கூறிப் பின்னுங் கூறுகின்றாள்:—]

109 ' "ஆரம் தாழ்திரு மார்பற் கமைந்ததோர்
தாரம் தான்அல ளேனும், தயா எனும்
ஈரம் தான்அகத் தில்லையென் றாலும்,தன்
வீரம் காத்தலை வேண்"டென்று வேண்டுவாய்.'

இ-ள். ' "(யான் சிறைமீட்கப்படுதற்குத் தகுதியில்லேனாய்) இராமபிரானுக்கேற்ற இல்லாளல்லளாய்ப்போனாலும், (எத்தொடர்பும் இல்லாத ஏதிலார்பாலும் இயல்பாக அவனுக்குள்ள) தண்ணளி (கூட என்திறத்தில்) இல்லாதேபோனாலும் (—போகட்டும்—தன் காப்பில் இருந்தவளைக் கவர்ந்து சிறைவைத்தவனைக் கொன்று சிறைமீட்குதல் தன் வீரத்தைக் காத்தற்பொருட்டுச் செய்யக்

கடவதாதலால், அதைச் செய்து) வீரத்தைக்காத்தலை விரும்புவாய்'' என்று (என் வேண்டுகோளாக நீ அவனை) வேண்டிக்கொள்வாயாக.'

ஆரம் தாழ் திரு மார்பன்-மாலை தங்கிய அழகிய மார்பினனான இராமன். தயா - தயை. ஈரம் - குளிர்ச்சி. 'தண்(-குளிர்ச்சியான) அளி' (-கிருபை) என வழங்குவது, 'தயா எனும் ஈரம்' எனப்பட்டது. ஈரமென்றமட்டில் அமையாது, ஈரந்தான் என்றது, மனைவிக்குரிய காதலில்லாமற்போனாலும் மற்றவர்க்குரிய ஈரமும் எனப் பொருள்படலால், 'தான்' இழிவுசிறப்புப்பொருளுடையது.

சீதை, தன்னை இராமன் வெறுத்துச் சிறைமீட்கவேண்டாமென்று தீர்மானித்திருந்தாலும் அந்தத் தீர்மானத்தை அவசியமாக மாற்றும்படி, அவன் தன்னைச் சிறைமீட்கானேல், தன் வீரத்தைக் காவானாவானென்பதைக் குறிப்பித்து, அவனுடைய வீரம்பற்றிய மானவுணர்ச்சியைக் கிளர்வித்து, சிறைமீட்சிமுயற்சியைத் தீவிரமாகச் செய்யும்படி தூண்டி, அவன் தன்னைச் சிறைமீட்க வேண்டுமென்னும் விருப்பம் நிறைவேறும்படி சாதுரியமாகக்கூறிய நயம் பாராட்டத்தக்கது.

110. 'ஏத்தும் வென்றி இளையவற் கீதொரு
வார்த்தை கூறுதி: "மன் அருளால் எனைக்
காத்தி ருந்த தனக்கே கடன், இடை
கோத்த வெஞ்சிறை வீ''டென்று கூறுவாய்.'

இ-ள். '(எல்லாராலும்) புகழப்பட்ட வெற்றி (ப்பிரதாபத்தை)யுடைய இளையபெருமாளுக்கு இந்த வார்த்தையைச் சொல்வாய்! (அது யாதெனில்,) "யான் அவன்பாதுகாப்பிலிருக்குமத்தியில் ஏற்பட்ட எனது கொடிய சிறையை விடுதலைபுரிகுதல், இராமபிரானது ஆணைப்படி என்னைக் காத்திருந்த அவனுக்கே கடமையாம்'' என்று சொல்லுவாய்' (என்று யான் உன்னிடம் சொன்னேன் என்பது).

ஏத்துதல் - புகழ்தல். வென்றி - வெற்றி. அருள் - அருளிப்பாடு - ஆஞ்ஞை - கட்டளை. கடன் - கடமை. 'ஆர்த்தவென்றி', 'காத்திருந்தவற்கே கடனேன்றிடை' பிரதிபேதம்.

'ஏர்' என்பதற்கு எழுச்சியென்றும் 'ஏர்த்த' என்பதற்கு 'எழுச்சியையுடைய' வென்றும் பொருளுண்மையால், 'ஏர்த்த வென்றி' என்பது உண்மைப்பாடமாயிருந்திருக்கலாமென்றும், பிரதியெழுதுவோர் அப் பாடத்தின் பொருளறியாமையால் 'ஆர்த்த வென்றி' யென்றும் 'ஏத்தும்வென்றி' யென்றும் மாற்றியெழுதினரென்றும் தோற்றுகின்றது.

'ஏத்தும் வென்றி இளையவற் கொருவார்த்தை கூறுதி' என்பதில் கம்பர் அமைத்திருக்கும் கட்டுரைச்சுவை கவனிக்கத்தக்கது.

ரதை, தன அறைமீட்சியை இராமன் ...ரமாகச் செய்யும்படி தூண்டுதற்குரிய நியாயத்தைச் சொன்னாள். அப்போது, தன்னைச் சிறைமீட்கும்பொறுப்பு, தன்னைக் காத்தலைத் தம்பியிடம் ஏற்பித்திருந்த இராமனுக்கிருப்பதைக்காட்டிலும் அதிகமாக, அக்காத்தலை ஏற்றுக்கொண்டிருந்த இலக்குமணனுக்குண்டென்னும் நியாயத்தை உரைத்தாள். இராமனுக்காகக் கூறியது ஒருவகைச் சாதுரியமும் இலக்குமணனுக்காகக் கூறியது வேறுவகைச் சாதுரியமும் அமைந்திருத்தல் கவனிக்கத்தக்கது.

111 ' "திங்கள் ஒன்றில்என் செய்தவம் தீர்ந்ததால்;
இங்கு வந்திலனேயெனின், யாணர்நீர்க்
கங்கை யாற்றங் கரைஅடி யேற்குத்தன்
செங்கை யாற்கடன் செய்"கென்று செப்புவாய்.'

இ-ள். ' "(இது முதலாக) ஒருமாசகாலத்தோடு (இராமபிரான்வந்து என்னைச் சிறைமீட்பதற்காக என் பிராணனை விடாதிருப்பேனாகவென்று யான் மேற்கொண்ட) என் விரதம் முடிந்துவிடும். அதற்குள் (அந்த) எம்பிரான் வாரானேல், (யான் இறந்திடுவேன். இறந்த) எனக்கு அவன் (அயோத்திக்குத் திரும்பிப் போகும்வழியில்) கங்கைக்கரையில் (எள்ளும் நீரும் இறைக்கும்) அந்தியகருமத்தைச்செய்து முடித்திடுக" என்று செப்புவாய்.'

திங்கள் - மாதம். செய்தவம் - (இராமன் வருதற்காக உயிரைவிடாதுவைத்துக்கொண்டிருக்கும்) விரதம். 'தவம்' என்பது ஆகுபெயராய்த் தவப்பயனை உணர்த்துவதாகக்கொண்டு, 'செய்

தவம் தீர்ந்தது' என்பதற்கு, முற்பிறப்பிற் செய்த நல்வினைப்பய ஞக நான் ஆயுளோடிருக்குங்காலம் முடிந்துவிடுமென்றும் பொருள் கூறலாம். யாணர் - அழகு; புதுமை. யாணர் நீர்க் கங்கை - அழ கிய நீரையுடைய கங்கை; புதுவருவாய்நீரையுடைய கங்கை. அடி யேற்கு - (இராமனுக்கு) அடியவளாகிய எனக்கு. கடன் - அந்திய கருமம் (தமிழ்ச்சொல்லகராதி) - சாச்சடங்கு.

சீதை, வாக்குவல்ல அநுமானுடைய மனோதைரியமூட்டும் வசனங்களைக் கேட்டதனுலும் அவனுடைய, உலகமுழுதையும் ஒருங்கொழித்தற்கு ஏற்ற இயற்கைப் பேருடற் காட்சியைக் கண் டதனுலும் அத்தியந்த தைரியமும் நம்பிக்கையும் மகிழ்ச்சியும் அடைந்திருந்தாளென்பதை,

'மாண்டே னெனினும் பழுதன்றே: இன்றே மாயச் சிறைநின்றும்
மீண்டேன்: என்னை ஒறுத்தாரைக் குலங்க ளோடும் வேரறுத்தேன்:
பூண்டேன்: எங்கோன் பொலங்கழலும்: புகழே யன்றிப் புன்பழியும்
தீண்டேன்' என்று மனம் மகிழ்ந்தாள் திருவின் முகத்துத் திருஅன்னாள்.

என்றதனுல் தெரிந்தோம்.

மிக்கமுயற்சிசெய்தாரும்,நீண்டநேரம் விழித்திருந்தாரும், எதிர்செய(Reaction)லாக, முறையே, மிக்க தளர்ச்சியடைதலும் நெடிது துயிலுதலும் இயற்கைநிகழ்ச்சிகளாயிருத்தல்போல, மிக அதிகமான தைரியமும் நம்பிக்கையும் மகிழ்ச்சியும் அடைந்த சீதை எதிர்செயலாக அதைரியமும் ஏக்கமும் துக்கமும் மிகவும் அதிகமாக அடைந்தாளென்பதை இந்தக் கவியிலும் இதற்கடுத்த ஆறுகவிகளில் 'வங்தெனை' யென்றதொழிந்தவற்றிலும் காணலாம். (இந்த *உள்ளத்தேதிர்ச்சேயல்விவரணம், இயற்கைநிகழ்ச்சிவரு ணனையாய், மனத்தத்துவத்தைப் பற்றிக் கம்பர் நன்கறிந்திருந் ததைத் தெரிவிக்கின்றது.)

'வங்தெனை' என்ற கவியும், தனக்கு எச்செல்வத்திலும் சிறந்தசெல்வமாய் ஏனையமாதெவளாலும் பகிர்ந்துகொள்ளப்படாத தான தன் கணவனது முழுக்காதலாம் விழுச்செல்வத்தைப் பெற்ரு ளொருத்தி தான் இறத்தலால் அந்த அரும்பெறற் காதற்பயனை

---

* Description of mental reaction.

இழப்பதுபற்றி வருத்தமுறுவதைக் குறிப்பிப்பதால், அந்தக்கவி யும், அதன் முன்னும் பின்னுமுள்ள கவிகள்போல, சீதையின் துக் கத்தைத் தெரியச்செய்வதேயாம். அந்தக் கவியிற் கூறியதையும் அவள் துக்க உணர்ச்சியோடு தான் சொல்லினளென்பது, இப்பிறப் பில் இழந்த இராமன்சேர்க்கையை மறுபிறப்பில் அடைய வரம் வேண்டுதலை மொழியும் 'ஈண்டுநான்' என்ற அடுத்த கவியினால் தெளிவாம்.

தொடுத்துத் துக்கத்தைச் சுரீரென நெஞ்சுட்பாய்ந்து நிறை யச்செய்யும் இந்தத் 'திங்களொன்றில்' என்ற கவி முதலான ஏழு கவிகளும் வாசிப்போர்மனத்தைக் கரைத்துக் கண்ணீர் வெள்ள மாகப்பெருகச்செய்யும் பரமதுக்ககரமான பாட்டுக்களென்பது, அவைகளை அவரவர் படித்து அநுபவித்தறியக்கூடியதேயன்றி, எடுத்துச்சொல்லித் தெரிவிக்கவொண்ணாததாயிருத்தல் சொல்ல வேண்டியதில்லை.

112. 'சிறக்கும் மாமியர் மூவர்க்கும் "சீதை ஆண்
டிறக்கின் றாள்தொழு தாள்" எனும் இன்னசொல்,
அறத்தின் நாயகன் பால் அருள் இன்மையால்
மறக்கு மாயினும், நீமற வேல் ஐயா!'

இ-ள். '"சீதை, இலங்கையில் இறக்கின்றவள், மாமிமார் மூவர்களுக்கும் தெண்டம் சமர்ப்பித்தாள்" என்ற இந்த வார்த்தை யை (நீ இராமபிரானிடம் சொல். என்திறத்தில், அந்தத்) தரும நாயகன்பால் கருணையில்லாமையால் (அவன், அதை, என் மாமி மாருக்குச் சொல்ல) மறப்பானாலும் (நீ அவனுடன் அயோத்திக் குச் சென்றபோது, அவர்களிடம் சொல்ல) மறந்திடாதே' (என்று சீதை, மாமிமாரைத் திக்குநோக்கித் தெண்டனிட்டுக்கொண்டு சொன்னாள்.)

கோசலை கைகேயி சுமித்திரை மூவரும் தசரதனுடைய மற் றைய மனைவியர்போலாது பட்டமகிஷிகளாம் சிறப்புடையாராத லால், அம்மூவரையும் 'சிறக்கும் மாமியர்' என்றாள். மறவேல் - மற வாதே. மறக்கும் - மறப்பான்; ஆண்பாற்படர்க்கையில் வந்த 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைச்சொல்.

113. ' "வந்தெ னைக்கரம் பற்றிய வைகல்வாய்,
இந்த இப்பிற விக்கிரு மாதரைச்
சிந்தை யாலும் தொடேன்" என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்.'

இ-ள். ' "(இராமபிரான் மிதிலாநகரத்துக்கு) வந்து என்னைப் பாணிக்கிரகணம்பண்ணினதினத்தில் (என்னைத் தனியே சந்தித்த போது) இந்தச்சென்மத்தில் உன்னையன்றி வேறொரு மாதையும் சிந்தையினாலுங்கூடத் தீண்டமாட்டேன்" என்ற நல்வரத்தை அளித்தசெய்தியை (பக்கத்துள்ளார் காதுகேளாமல்) அவன் காது (மட்டும்) கேட்கும்படி (இரகசியமாகச்) சொல்வாயாக' (என்று சீதை சொன்னாள்.)

வார்த்தை - செய்தி (தமிழகராதி). 'தான் பிறன்கைப்பட்டமை பற்றி இராமபிரான் ஒருகால் தன்னை உபேக்ஷித்து வேறு மணஞ் செய்துகொள்வனோ வென்னும் ஐயத்தினால், சீதை, அப்பிரான் முன்கூறியுள்ள வார்த்தையை அறிவுறுத்துமாறு அநுமானுக்குக் கூறினள். கல்யாணத்திற்குப் "பாணிக்கிரகணம்" (கைப்பிடித்தல்) என ஒரு பெயருள்ளதனால் மணஞ்செய்துகொண்ட என்ற பொருளில் "கரம்பற்றிய" என்றார். சிந்தையால் தொடுதல் - எண்ணுதல்; அதனையும் செய்யேனெனவே உடம்பினால் தீண்டாமை கைமுதிக நியாயத்தால் தானே பெறப்படும்.' கைமுதிகநியாயம் - 'அது அப்படியானால், மற்றதனைப்பற்றிக் கூறுவதேன்' என்னும் வாதநெறி (தமிழகராதி).

சீதையை, அநுமான், இராமனிடம் யாது சொல்லவேண்டுமென்று கேட்டதற்கு, அவள், அவன் எதிர்பார்த்ததைச் சொல்லாமல், தன்னுடைய நம்பிக்கையின்மைபற்றியே கூறிவருகையில், இந்தக்கவியிற் கூறியது, அநுமான் அவளைக் கண்டதற்கு அடையாளமாகக் கூறத்தக்கதாயிருக்கின்றதாயினும், அவள் அவ்வாறு கருதிக் கூறவில்லையென்பது, முன்னும் பின்னுங் கூறியவைகளோடு சேர்த்துப் பார்த்தால் தெளிவாம். அவளை அநுமான் கண்டதற்கு அடையாளமாக இராமனுக்குக் கூறும்படி அவள் கூறியவை, இப் படலத்தில் 'நாகமொன்றிய' என்ற எஎ—ஆம் கவி முதலிய ஏழு கவி களிற் கூறப்பட்டவையே.

114. ' "ஈண்டு நான்இருந் தின்னுயிர் மாயினும்,
மீண்டு வந்து பிறந்துதன் மேனியைத்
தீண்ட லாவதொர் தீவினை தீர்வரம்
வேண்டி னாள்தொழு" தென்று விளம்புவாய்.'

இ-ள். ' "நான் இங்கே (சிறைமீட்கப்படாமல்) இருந்து இறந்துபோனாலும், திரும்பச் சென்மமெடுத்துவந்து எம்பெருமான் திருமேனியைத் தீண்டும்படியான நல்வரத்தைக் கும்பிட்டுவேண்டினேன்" என்று கூறுவாயாக' (என்று இராமனிருந்த திசைநோக்கித் தொழுதுகொண்டு சீதை சொன்னாள்.)

ஈண்டு - இங்கே - இலங்கையிலே. 'மீண்டு பிறந்துவந்து' என இயைக்க.

சீதை, அநுமானைநோக்கி, 'இராமபிரான், "இருமாதரைத் தொடேன்" என்று எனக்குச்செய்துகொடுத்திருக்கிற பிரதிக்கினைப்படி, வேறுமாதை மணஞ்செய்யானாயினும், "பிறன்மனை எய்திய பெண்ணைப் பேணுதல் திறனலதென்று" என்னைச் சிறைமீட்கானாயினன். அவன் வேண்டாதபடி பழிப்புக்கிடமாய்விட்ட இந்தத்தேகத்தைத் துறந்து, இறந்து, மறுபிறப்புப்பிறந்து, பழிப்பற்ற தேகத்துடன் வளர்ந்து, அவன் பிரதிக்கினைக்குப் பங்கமின்றித் திரும்பவும் அவன் தேவியாகும் வரத்தை வேண்டினேனென்று அவனிடம் தெரிவிப்பாயாக' என்றாளென்றவாறு.

சீதை, இராமன் தன்னைச்சிறைமீட்கவில்லையென்று வெறுத்து விசனப்பட்டுக்கூறும் மத்தியிலுங்கூட அவளுக்கு அவன்பாலிருந்த ஆழ்ந்த அன்பை அவளறியாமலே வெளிப்படுத்துவது இக்கவியின் உட்கிடைக்கருத்தாயிருத்தல் காண்க.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[கக-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

115. 'அரசு வீற்றிருந் தாளவும், ஆய்மணிப்
புரசை யானையின் வீதியிற் போகவும்
விரசு கோலங்கள் காண விதியிலேன்,
உரைசெய் தென்பல? ஊழ்வினை உன்னுவேன்.'

இ-ள். '(இராமபிரான் சிங்காதனத்தில்) இராசனாக வீற்றிருந்து அரசாட்சிசெய்யவும் யானைமீது வீதியிலே பவனிபோகவும் கொள்ளும் கோலங்களைக் கண்டு களித்தற்குப் பூர்வசென்மத்தில் புண்ணியஞ்செய்யாத பாவியேன், பலபடச்சொல்லிப் பயன் யாது? (அவ் இனிய காட்சிகளைக் காணக்கூடாமைபற்றி) என் பழவினையை நினை (ந்து வருந்து) கின்றேன்' (என்று சீதை சொன்னாள்.)

அரசுவீற்றிருத்தல், ஒருசொல்நீர்மையுடையதாய் அரசாட்சிமண்டபத்தில் சிங்காதனத்தில் கிரீடம் தரித்துச் செங்கோலேந்தி வெண்கொற்றக்குடைசாமரமுதலிய அரசர்க்குரியசின்னங்களுடன் கொலுவிருத்தலை யுணர்த்தியது. ஆய் - தெரிந்தெடுத்த. மணி - யானை முதுகின் இருபக்கத்தும் தொங்கவிடும் மணி. அம்மணிகள், யானை வருவதன் அபாயக்குறியாக ஒலித்துச் சனங்களை எச்சரித்துச் சாக்கிரதைப்படுத்துவன:

'ஆனைவரும் பின்னே மணி ஓசைவரும் முன்னே;
கேடுவரும் பின்னே மதி கெட்டுவரும் முன்னே'

என்பது காண்க. புரசை - புரோசை - யானைக்கழுத்துக் கயிறு. விரசுதல் - கலத்தல்; பொருந்தல். ஊழ்வினை - பழவினை. 'ஆளவும் போகவும் விரசு கோலங்கள் காண' எனவும் 'பல உரைசெய்தென்' எனவும் இயைக்க. 'உரைசெய் தென்னையென்' பிரதிபேதம்.

116. 'தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்,
அன்னை நோய்க்கும், பரதன் அங் காற்றுறும்
இன்னல் நோய்க்கும் அங் கேகுவ தன்றியே,
என்னை நோக்கிஇங் கெங்ஙனம் எய்துமோ?'

அவன் (காட்டைவிட்டுப்) போய் அ(ந்த) வான் நகர் புக்கு மௌலி வேய்வானன்றே! (இவை) மெய்யன்றே!' என்று கூட்டுக. இரண்டாம் அடியீற்றிலுள்ள 'ஆம்', பக்கத்துள்ள 'உய்வான்' என்பதனோடன்றித் தூரத்துள்ள 'வீவாய்' என்பதனோடும் பொருந்தநின்றது. இப்பாட்டுச் சந்தர்ப்பத்துக்குத்தக்க சந்தமுடையதாயிருத்தல் காண்க.

119 'கைத்தோ டும்சிறை கற்போயை
வைத்தோன் இன்னுயிர் வாழ்வானும்!
பொய்த்தே வில்லிகள் போவாராம்
இத்தோ டொப்ப தியாதுண்டே!'

இ-ள். '(தன்னுள்ளே - சிறையினுள்ளே - அகப்பட்டவர் யாரும்) வெறுத்து (நீங்கி) ஓடிப்போகும் (படி எண்ணும்) சிறையிலே உன்னை வைத்த இராவணன் (கொல்லப்படாமல்) பிழைத்திருப்பானும்! (அவனைக் கொல்லாமல்) இராமலக்குமணர்கள் (தமக்குரிய க்ஷத்திரியதருமம்) பொய்த்துப்போவார்களாம்! இதை யொப்பது, யாதிருக்கின்றது!' (எதுவுமில்லையென்றபடி).

கைத்தல் - வெறுத்தல். சிறை - சிறையில்: ஏழன்தொகை. கற்போயை - கற்புடையவளான உன்னை: வாலிவதைப்படலத்தில் இலக்குமணன் வாலியைநோக்கி 'முறையிலோயை' என்றதை ஒத்தது. இரண்டும் இரண்டாம்வேற்றுமையில்வந்த முன்னிலை யொருமைக் குறிப்புவினையாலணையும்பெயர்கள்.

[உன்னைத் துன்புறுத்திய இராவணாதி யிராக்கதரைக் கொல்லாத வில்லோடு இராமலக்குமணர், அயோத்திக்குச் செல்வாரோ! சுக்கிரீவமகாராசன் முதலான நாங்கள் துன்பக்கடலில் ஆழ்ந்து மாய்ந்துபோகாமல், எங்களை இன்பக்கரையேற்றி யிரட்சித்த இராமபிரானுக்கு யாங்கள் உன்னை மீட்டுக்கொடேமேல், எங்களினும் கடைப்பட்டார் யாரேனு முளராவரோ! முன்னமே, இராக்கதரெல்லவரையும்கொல்லுவதாக மகரிஷிகளுக்குவாக்களித்திருக்கிற இராமபிரான், அந்த அரக்கர்கள் உன்னை இந்நிலையாம்படி செய்தபின் அவர்களைக்கொல்லாமல் அயோத்திக்குச்செல்வானோ! அவன் உன்பொருட்டு அரக்கரை அழிப்பதனால், தேவர்பகைவரை மாய்த்தலும் தேவரைக் காத்தலுமாகிய துட்டநிக்கிரக சிட்டபரி

பாலனம்செய்து தருமத்தைத் தாபித்தானென்னும் சற்கீர்த்தியை அடைவாய். நீ, சிறிதுபொழுது சிறையிலிருந்து வருந்தலால், நல்லாரெல்லாரும் நிலையாகத் துன்பம்நீங்கும் பரமதருமத்தைச் செய்தாயாவாய்.

இராக்கதருக்குப் பயந்து, இப்போது ஒளித்துவாழும் தேவர்கள், அந்த இராக்கதருடைய இரத்தவெள்ளத்திலே பேய்கள் குளித்தலைக்கண்டு, அச்சமற்று வெளிப்பட்டுக் களிப்புற்றுவாழ்தலைக் காண்பாய். உகாந்தகாலத்துப் பேரிடிபோன்ற இராமபாணங்களால் இறந்த இராக்கதரது இரத்தக்கடல் பெருக்கெடுத்து ஏழுகடல்களோடு கலக்க, எட்டுக்கடல்களும் ஒரே இரத்தக்கடலாய் அலையெறிவதைக் காண்பாய். கணவரையிழந்த இராக்கதச் சூலிகள் கருவுற்றபெருவயிற்றிலறைந்துகொண்டு கலைந்தெறிந்த தாலிகள், வாலியும் கடப்பரிய பெரிய மலைகளாகக்குவிதலைக் காண்பாய். புண்ணியகாலத்திலே, உவர்நீர்க்கடலில்முழுகியவர்கள் உவர்நீங்க நன்னீராற்றிற் குளித்தல்போல, போர்க்காலத்தில் இராக்கதரது இரத்த நீர்க்கடலில் முழுகிய பேய்கள் இரத்தக்கறைநீங்க இராட்சசிகளின் கண்ணீராற்றிற் குளிப்பதைக் காண்பாய். இலங்கையிலே அரம்பையர் ஆடும் அரங்குகளிற் குரங்குகள் குதிப்பதைக் காண்பாய்.

இலங்கைநடுவே சிறையிருக்கும் உனது கற்புத்தீ, இராமபாணக்காற்றினால் வளர்ந்து பரந்திடச் சுற்றியுள்ள கரிய இராக்கதக் கூட்டமாகிய கரித்திரள் கனன்று எரிய, அந்த இலங்கையாகிய பொன் இளகி உருகுவதைக் காண்பாய். இராவணன் தலைகள் இராமபாணங்களால் தறியுண்டு தரையில் விழ, அவன் உன்னைக் காமித்து நோக்கிய கண்களை, அந்தத் தலைகள்மேலே தாவியிருந்து காக்கைகள் மூக்கினாற் கௌவியுண்பதைக் காண்குவாய். நீ, நீண்ட ஒருமாசகாலம் பொறுத்திருக்கவேண்டியதில்லை. நான் விரைந்து திரும்பிப்போய் இராமபிரானைக் காண்பதுதான் தாமதம். உடனே, இங்கு வந்துவிடுவான். உயிர் போய்விடவில்லை, இருக்கிறது என்று சொல்லத்தக்க அளவே சீவித்திருக்கின்றான். அவன் உன்னைத் தேடித்திரிந்த திசைகளெங்கும், விரகத்தீயால்வெதும்பும் அவன் திருமேனிவெப்பத்தால் தீந்துபோகாத தளிரோ இலையோ பூவோ பிஞ்சோ காயோ கனியோ செடியோ கொடியோ மரமோ வனமோ யாதும் இல்லை. இப்படிப்பட்டநிலையிலிருப்பவன் எப்படித் தாமதிப்பான்.

இராமலக்குமணரும் சுக்கிரீவாதியரும் நீ சேமமாயிருப்பதைக் கேட்ட சந்தோஷத்தை அனுபவித்தற்குக்கூடத் தங்கியிராமல், வானரசேனையுடன் புறப்பட்டுக் கடல் தூர்த்துத் திடராக்கி இங்கு வந்து, இலங்கைமதிலை வளைந்துவிடுவார்கள். அப்போது, வானர சேனை ஆர்ப்பரிக்கும் ஆரவாரத்தைக் காதுகுளிரக் கேட்பாய். அந்தச் சேனைமத்தியிலே, கருடாரூடனான திருமாலேபோல, என் தோள்மேல் வீற்றிருக்கும் இராமபிரானையும், உதயகிரிமீது தோன்றும் பாலசூரியன்போல அங்கதன்தோள்மேல்விளங்கும் இலக்குமணப்பெருமாளையும் கண்குளிரக் காண்பாய். சிறையிருக்கும் துன்பமும் மீட்சியுண்டோவென்னும் ஐயமும் நாயகனைப்பிரிந்த தனிமையும் நீங்குவாய்.]

120 ‘குராவருங் குழலி,நிற் குறித்த நாளினே,
விராவரு நெடுஞ்சிறை மீட்கி லானெனில்,
பராவரும் பழியொடும் பாவம் பற்றுதற்
கிராவணன் அவன்;இவன் இராமன்’ என்றனன்.

இ-ள். ‘(வளர்த்துரைப்பானேன்; முடிவாகச் சுருக்கிச்சொல்கிறேன்: கேள். நீ முடிவெல்லையாகக்) குறித்த ஒருமாசகாலத்துக்குள்ளே, (தர்மவானான இராமபிரான்) உன்னைச் சிறைமீட்காமற் போவானானால், (அதர்மவானாய்) இராவணனாவான். (அப்படி அதர்மவானான இராமனைநோக்க, இப்போது அதர்மவானாயுள்ள) இராவணன் (தர்மவானாய் அதர்மவானாகாத) இராமனாவான்’ என்றான். (சீதையை இராவணன் சிறைப்படுத்தியதினும் இராமன் சிறைமீட்காமை தீயதாமென்றபடி).

குராவருங்குழல் - குரவமலர்மாலை அணிந்த கூந்தல். குராமரத்தைக்குறிக்கும் ‘குரா,’ குராமரத்தின் மலருக்கு ஆகுபெயராக, அது மாலைக்கு ஆகுபெயராய்நின்றது. ‘வரும்,’ எதுகையில் நிற்றல்பற்றி ‘அணியும்’ என்னும் பொருள் குறித்தது. ‘குராவரும்’ என்பதற்குக் ‘குராமலர்கள் வாசனை வீசுகிற’ என்றும் பொருள் கூறுவர். சீதை இராவணனாற் கவரப்படுமுன் குராமலரணிந்திருந்தாளென்பது கொண்டு ‘குராவருங்குழலி’ என்றான். மூன்றும் அடி முற்றுமோனை. ‘குழலியிக்குறித்த’ பாடபேதம். ‘இராவணன் அல்லனே’ என்ற பாடத்துக்கு, இராமன் உன்னைச் சிறைமீட்கானெனில், (அவனைப்) பழியும் பாவமும் (பற்றும்; அப்படிப்) பற்று

தற்கு (அவன்) இராவணன் அல்லனே (ஆதலால், அவன் உன்னைச் சிறைமீட்கவேசெய்வான், ஒருகாலும் மீட்காதொழியான்) என்று பொருள்கொள்க.

### அநுமான் இராமனிடம்கூறும்படி சீதை கூறிய அடையாளநிகழ்ச்சிகள்.

[இவ்வாறு அநுமான் கூறியதைக்கேட்ட சீதை, சந்தேகம் தெளிந்து, சந்தோஷமடைந்து, இனி இவன் திரும்புதல் நன்றென் றெண்ணி, அவனை நோக்கி 'யான் கூறும் நிகழ்ச்சிகளை நீ என்னைக் கண்டுபேசியதற்கு அடையாளமாக எம்பெருமானிடம் கூறுவாய்' என்று அவைகளைக் கூறுகின்றாள்.

(ஏகாந்தத்தில் நிகழ்ந்த காகாசுரவிருத்தாந்தம்)

'நாங்கள் (சீதாராமர்) சித்திரகூடபருவதத்திலிருந்தபோது, இந்திரன்மகன் சயந்தன் காகமாகவந்து என்மார்பைக் கொத்த, எம்பெருமான் ஒரு புல்லைப் பிடுங்கி அம்பாக அமைத்து மந்தகதி யாகச் சென்று தாக்கும்படி ஏவ, அதனால் தொடரப்பட்ட அந்தக் காகம் பிரமன் பரமன் முதலிய தேவதேவர்களிடம் சென்று அபய மிட, அவரெல்லாரும் அடைக்கலமளித்தற்கஞ்சி மறுக்க, வேறு கதி யேதுமில்லையென்று மீண்டுவந்து எம்பிரானைச் சரணடைய, இரங்கி "அந்தப் புல்லாயுதம் உன் உயிரோடுபோகாமல் ஒரு கண் ணோடுபோக: நீ வடிவுகொண்ட காக்கை வருக்கம் இன்று முதல் இருகண்களுக்கும் ஒரு கண்மணியே உடையதாகுக." என்றருளி னான்.'

(இராமன் சீதை கைக்கிளிக்குக் கைகேயிபேரிடச்சொன்னது)

'நாங்கள் அயோத்தியில்வாழ்ந்தகாலத்திலே, "என் அருமைக் கிளிக்கு யார்பெயரிடல்வேண்டும்" என்று யான்கேட்டபோது, "என் அன்னை கைகேயிபேரிடுதி" என்றான்.'

என்று சீதை கூறி, இவ்அடையாளமொழிகள் போதுமென் றெண்ணித் தான் இராவணனால் அபகரிக்கப்பட்டு இலங்கைக்குக் கொண்டுவரப்பட்டபோது, வழியிலே மற்ற அணிகளைக் கழற்றி

பெறிந்தபோது இது ஒன்றுமட்டுமிருக்கட்டும்; ஒருசமயத்தில் உதவுமென்று சேலையில் முடித்துவைத்திருந்ததை அவிழ்த்து வெளியே எடுத்தபோது, அதன் பேரொளியால் இரவு பகல்போலாயிற்று: சூரியகாந்தக் கற்கள் தீயுமிழ்ந்தன; தாமரைகள் மலர்ந்தன; * சக்கரவாக ஆண் பெண்கள் கூடின; இராக்கதர், இஃது என்னே! ஆச்சரியம்! இரவிலே இரவி உதயமாயினன்! அப்படி உதயமானது கிடக்க; எப்படி அவன், இராவணனுக்கஞ்சி எப்போதும் இலங்கைக்குத் தெற்கேனும் வடக்கேனும் விலகிப்போகுதல்போலப் போகாமல், இன்று அஞ்சாமல் இலங்கைமத்தியிலே வந்தான்! இராவணனினும் வலியவனெவனையோ துணையாகக்கொண்டிருக்கிறானோவென்று ஐயமும் அச்சமுங் கொண்டார்கள்.

இவ்வாறு பகல்நிகழ்ச்சிகள் இரவில்நிகழ்தற்குக் காரணமான அந்த அணியைச் சீதை அநுமான்கையிற் கொடுத்து 'என் சிரசிலே சூடப்பெற்ற இந்தச் சூடாமணியை எம்பெருமான் திருவடிகளிற் சேர்ப்பாய்'† என்றுகூறிச் 'சேமமாய்ச் செல்வாயாக' என்று ஆசியுடன் விடைவழங்கினள். அவன் அதனைத் தன் வஸ்திரத்தில் பத்திரமாக முடித்துவைத்துக்கொண்டு வணங்கி அகன்றான்.]

சூளாமணிப்படலம் முற்றுப்பெற்றது.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

* இப்பறவைகள் இரவிலே பிரிந்து பகலிலே கூடுமென்பர்.

† கையிற்கொடுப்பாயென்பது கருத்து.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[ருகூ-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

## பொழிலிறுத்தபடலம்.

அனுமான், இராவணன்காவற்காடாகிய அசோகவனத்தை அழித்ததைக் கூறுவது. (பொழில்-சோலை. இறுத்தல்-ஒடித்தல்.)

### அனுமான், அரக்கரைப் போர்மூட்ட அசோகவனத்தை அழித்தல்.

[சீதையிடம் விடைபெற்றுச்சென்ற அனுமான், அவள் இருந்த அசோகவனத்தினூடே இராமன் இருந்த வடதிசைநோக்கி ஏகும்போது ஆலோசனையில் ஆழ்ந்து 'யான் இதுவரை செய்தன யாவும் எளியனவே. அரக்கரை அழித்து, இலங்கையை *இடந்து கடலிலெறிந்து சீதாபிராட்டியை இராமபிரான்திருவடிகளிற் சேர்த்தேனல்லேன். இது, எம்பிராட்டி விலக்கிய செயலாதலால், கிடக்க. இராவணனுடைய ஒருபது தலைகளையும் இருபதுதோள்களை யும் ஒருசேர எனது வாலினால் இறுக்கிப் பிணித்து நொறுக்கினே னில்லை. இராவணனை அழித்தல் இராமபிரான்செய்தற்பால தாதலால், இதுவும் கிடக்க. இராவணனெதிரே, அவனுடைய பட்டத்தரசி மந்தோதரியைக் கூந்தலைப்பிடித்திழுத்துக்கொண்டு போய்ச் சிறைவைக்கவும் செய்யவில்லை. இது, அவன் பிராட்டியைக் கவர்ந்த இழிசெயல்போல்வதாமாதலால், இதுவுமே கிடக்க. இச் செயல்கள்போலன்றி, எதிரிகளான இராக்கதரைக் கொல்லுதல், எவ்வகை ஆட்சேபத்துக்கும் இடமில்லாதது. ஆதலால், அது செய்வேன். அதற்கு அவரை அறைகூவிப் போர்மூட்டும்பொருட்டு இந்த அசோகவனத்தை அழிப்பேன். அழிக்கும் ஆரவாரங்கேட்டு, அவர் வந்து எதிர்ப்பர். அப்போது, அவரெல்லாரையும் அழிப் பேன்' என்றெண்ணினான்.

அவ்வாறெண்ணியவன், தனது இயற்கைப்பெருவடிவத்தை யெடுத்து அந்த அசோகவனத்து மரங்களைத் தனது மிகப்பெரிய கால்களால் துகைத்திடுவானானான்.]

---

* இடந்து - பெயர்த்து.

### மரங்கள் அடைந்த பலவகை அழிவுகள்.

121. முடிந்தன; பிளந்தன; முரிந்தன; நெரிந்த;
மடிந்தன; பொடிந்தன; மறிந்தன; முறிந்த;
இடிந்தன; தகர்ந்தன; எரிந்தன; கரிந்த;
ஒடிந்தன; ஒசிந்தன; உதிர்ந்தன; பிதிர்ந்த.

இ-ள். (அநுமானுடைய காலால் துகைக்கப்பட்டுச் சில மரங்கள்) அழிந்தன; (சில) பிளந்தன; (வேறுசில) வளைந்தன; (மற்றும் சில) நெரிந்தன; (மேலும் சில) மடிந்தன; (விஞ்சிய சில) பொடிந்தன; (மீட்டும் சில) மடங்கின; (பெயர்த்தும் சில) முறிந்தன; (பின்னும் சில) இடிந்தன; (இன்னும் சில) உடைந்தன; (அன்றியும் சில) எரிந்தன; (அல்லாத சில) கரிந்தன; (மற்றைய சில) ஒடிந்தன; (பிற சில) துவண்டன; (ஏனைய சில) உதிர்ந்தன; (எஞ்சிய சில) பிதிர்ந்தன.

முரிதல் - வளைதல். மறிதல் - மடங்குதல். ஒசிதல் - துவளல்.

இப்பாட்டில், மரங்கள் பலவகைக்கேடடைந்ததைக்குறித்தற்கு எதுகைத்தொடைமலிய எடுத்தாளப்பட்டிருக்கும் தொடுப்பான சொல்லடுக்கு வியந்து பாராட்டத்தக்கது.

### வீசியெறிந்தமரங்களால் விளைந்த விநோத சம்பவங்கள்.

[அநுமான் விண்ணில் வீசியெறிந்த விருக்கங்களால் தாக்கப்பட்டுத் தேவலோகத்து நந்தனவனம் சிதைவடைந்தது. அவன் கடலில் எறிந்த மரங்களுடன் சென்ற, தேன் மலர் காய் கனி வண்டு பறவைகளைக்கண்டு மேலெழுந்து உண்ட மீன்கள், அம் மரங்கள் தாக்க மடிந்தன. அம் மரங்களால் தூர்க்கப்பட்டதனால், முன், விண்வழியாக அவன் கடந்த கடல், மண்வழியாகக் கடக்கக்கூடியதாயிற்று. அவன் பிடுங்கியெறிந்த மரங்களால் இடிந்த இலங்கை மாளிகைகள், இடிவிழுந்து தகர்ந்த மலைகள்போன்றன.

அவன் விசையாக வீசிய விருக்கவருக்கம், விண்ணாட்டில் மேவிவிளங்கியது, அந்நாட்டிலும் அசோகவனமுள்ளதென்னும்படியிருந்தது. விண்ணவர், அவவினையால் மண்ணிற் பிறந்து தங்கித் தவவினையால் மீண்டும் விண்ணடைந்தாற்போலத் தேவதருக்கள்,

இராவணனால் தேவலோகத்திலிருந்து கொணர்ந்து இலங்கையில் அசோகவனத்தில் நடப்பட்டிருந்தவை, அனுமானால் மீண்டும் தேவலோகத்தை அடைந்தன. பலவகைப் பறவைகள் பயந் தொலிக்கும் ஒலியும் மரங்கள் முறிந்ததிரும் அதிர்ச்சியும் அனுமான் ஆரவாரிக்கும் ஆரவாரமும் எங்கும் பரவின.

அனுமானால் அந்தரத்தில் எறியப்பட்ட பொன்னாலும் மணியாலும் இயன்ற மரங்கள், *உற்பாதமாக இரவிலே வானத்தில் இடப்பட்ட இந்திரவில்லை ஒத்து விளங்கின†. அவன் சினந்து வீசியெறிந்த மரங்களிலிருந்த பறவைகள் கூட்டுடனே விண்ணுலகடைந்தன: அவன் கோபமே, கூட்டுடன் சுவர்க்கபதவியை அடைவிக்குமானால், அவன் கருணை, எத்துணை உயர்பதவியை எய்துவிக்குமென்று எவர்தாம் சொல்லவல்லர்.

சீதை தங்கியிருந்த மரம் ஒன்றேயொழிய, அசோகவனத்து மரம் அனைத்தும் அழிந்தது, பிரளயகாலத்தில் திருமால் உறையும் ஆலமர மொன்றேயொழிய அகில உலகமும் அழிந்ததை ஒத்தது.]

## சூரியோதயவருணனை.

122. உறுசுடர்ச் சூடைக் காசுக் கரசினை உயிரொப் பானுக்
கறிகுறி யாக விட்டாள்: ஆதலால், வறியள்! அந்தோ!
செறிகுழற் சீதைக் கென்றோர் சிகாமணி தெரிந்து வாங்கி
எறிகடல், ஈவ தென்ன எழுந்தனன் இரவி யென்பான்.

இ-ள். (இலக்குமியான சீதை, மற்றைய அணிகளைக் களைந் தெறிந்தபோது, எறிந்துவிடாமல் பாதுகாத்துவைத்திருந்த) சூடாமணியை (த் தன்னை அனுமான் கண்டதற்கு) அடையாளமாக (அவனிடம் கொடுத்து) அனுப்பிவிட்டாள். ஆதலால், ஐயோ! (இப்போது ஒரு நகையுமில்லாமல்) ஏழையாயிருக்கின்றாளென்று— (இலக்குமியைப் பெற்ற) கடல் எண்ணி, (அந்த இலக்குமியான) சீதைக்கு ஒரு சிகாமணியைத் தேடியெடுத்துக் கொடுப்பதுபோன்று (கடலினின்று) சூரியன் தோன்றினான்.

* உற்பாதம் - துர்க்குறி.

† வார்முர சிருந்துவறி தேயதிரு மாலோ
வந்திரவில் இந்திரவில் வானிலிடு மாலோ. (கலிங்கத்துப்பரணி.)

உறுதல் - மிகுதல். சூடை - முடி. காசு - இரத்தினம் - மணி. சூடைக்காசு - முடிமணி - சூடாமணி. சூடைக்காசுக்கு அரசு - சிறந்த சூடாமணி. சூடாமணி, சூளாமணி, முடிமணி, சிரோரத்தினம், சிகாமணி என்பவை ஒருபொருள்குறித்தவை. விடுதல் - அனுப்புதல். வறியள் - வறுமையுடையவள் - வெறுமையுடையவள் - (ஓர் ஆபரணமுமில்லாத) ஏழை. இரவி - சூரியன். பாடபேதங்கள்: காசவ்வுயிரினே, காசையுயிரினுக்கு.

சிறிதுநேரத்துக்குமுன் நிகழ்ந்த, சீதை அனுமானிடம் சூடாமணிகொடுத்தவரலாற்றை மிகஇனிமையாகச் சூரியோதயவருணனைக்கு உபயோகமாக எடுத்தாண்டிருக்கும் இனிய கவிசாதுரியம் பாராட்டத்தக்கது.

## அசோகவனத்தை அழித்த அனுமான்தோற்றமும் சீதையைக் காத்த அரக்கியர் ஓட்டமும்

[அசோகவனத்தை அழித்துவிட்டு வெறு வெளியில் தனியனாகநின்றஅனுமான், திரிலோகங்களையும் அளந்த திரிவிக்கிரமனையும் அமுதமதனகாலத்தில் ஆழிநடுவே நின்ற மந்தர மலையையும் உகாந்தகாலத்து உருத்திரமூர்த்தியையும் ஒத்துத் தோன்றினன். அவனுடைய விஞ்சையினால் விழிப்பொழிந்து உறக்கமுற்றுக்கிடந்த இராட்சசிகள் அசோகவனம் அழிக்கப்பட்ட அதிர்ச்சியினால் விழிப்படைந்து, எழுந்து, அவன் பெருவடிவைக் கண்டு பிரமித்து 'இந்த மாயவடிவம் யாதெனஅறிவாயோ?' என்று சீதையைக்கேட்க, அவள், 'மாயம்வல்ல அரக்கர் அறியாரெனின், யாரறிவார்?' என, அவர்கள் அஞ்சியோடியொளித்தனர்.

### அனுமான் ஒரு செய்குன்றைப் பிடுங்கி இலங்கைமேலெறிதல்.

இராவணனது ஏவலின்படி, பிரமதேவன், வேறெவரையுங்கொண்டு செய்வியாமல், தானே நிர்மாணஞ்செய்ததும் பொன்னாலும் மணியாலும் இயன்றதுமான மிகப்பெரிய செய்குன்று ஒன்று நின்றதை அனுமான் கண்டான். கண்டவன், தான் முன் கேட்டிருந்தவாறு, இராவணன் வெள்ளிமலையை வேரோடுபிடுங்கினது இழிவுபடும்படி மேருகிரியைப் பேர்ப்பான்போல, அச் செய்குன்றைப் பிடுங்கி இலங்கைமீது எறிந்தான்.

## அசோகவனம் அழிந்ததைக் காவற்றேவர் இராவணனுக்குத் தெரிவித்தல்.

அவ்வப் பருவங்களிற் காணப்படும் அழகிய மலர்களும் இனிய கனிகளும் எல்லாப்பருவங்களிலும் காணப்படுமாறு இராவணனேவலின்படிசெய்துகொண்டு அசோகவனத்தைக் காத்துக்கொண்டிருந்த, ஆறுபருவங்களுக்கும் அதிதேவதைகளான பருவத்தேவர்கள், பீதியாகிய பெருநெருப்பிட்ட உள்ளத்தினராய், அப்பீதியினால் சிறுநீரிட்ட உடையினராய், அனுமான் எறிந்த மரக்கிளைகளால் பீறிட்ட உடலினராய், ஒன்றோடொன்று பின்னித் தள்ளாடிய காலினராய், ஊளையிட்ட வாயினராய், ஓடி, இராவணனை அடைந்து, காலில் விழுந்து 'மலைபோலும் தோளுடைய வானரமொன்று, அசோகவனத்தைக் கையாலும் காலாலும் துகைத்தழித்துச் செய்குன்றைப் பிடுங்கியெறிந்து இலங்கைநகரம் பெரும்பாகம் அழியும்படிசெய்திட்டது' என்றார்கள்.

## தேவர்கூறியதை யாவர்நம்புவாரென்று இராவணன் சிரிக்கும்போது எல்லாரும் நம்பும்படி அனுமான் ஆரவாரித்தல்.

அந்தக் காவற்றேவரைநோக்கி, இராவணன், 'தனிப்பட்ட ஒருகுரங்கு நீங்கள் காத்த அசோகவனம் அனைத்தையும் அழித்ததன்றி, அரக்கர்காக்கும் பெருத்த செய்குன்றைப் பிடுங்கியெறிந்து இலங்கையையே சிதைத்தது! என்றீர்கள். இது ஆச்சரியம்! இப்படிப்பட்ட பேச்சை மூடரும் மொழியார். இதை யார் நம்புவார்' என்று பெருநகைசெய்யத் தேவர்கள் 'அந்த வானரனை மூவரில் ஒருவனென்னலாம். அவன் வலிமையை நீ இப்போதே காண்பாய்' என்றனர். அப்போது, பூமி பிளக்கவும் எட்டுத் திக்குங் காக்கும் தேவர்களும் திசையானைகளும் நிலைகெட்டோடவும், அஞ்சாத அரக்கக்கருப்பிணிகள் அஞ்சிக் கருப்பங்கலங்கவும், அண்டமே விண்டதோவென்று அயிர்ப்புண்டாகவும் அனுமான் ஆரவாரித்தான்.

பொழிலிறுத்தபடலம் முற்றிற்று.

[தொடரும்]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

ஸ்ரீ:

# மதிப்புரை.

நான் கண்டதும் கேட்டதும்:—இப்பெயர்கொண்ட புத்தகம், ஸ்ரீ மஹாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களால் எழுதப்பெற்றது; இனிய வசனநடையில் இயன்றுள்ளது.

ஆசிரியரவர்கள் தம் வாழ்நாளில் அவ்வப்போது நேரிற்கண்டும் கேட்டும் அறிந்த உண்மைச்செய்திகளைப் பிறரும் பயின்று பயன்கோடல் நன்று என்னும் பெருங்கருணைமேலீட்டால் மெய்யன்பர் பலர் வேண்டுகோட்கிணங்கி இதனை இயற்றியிருப்பதாகத் தெரிகின்றது. இம் முறையே இன்னும் பல அரிய கட்டுரைத் தொகுதிகள் வெளிவருவன உளவாம்.

எத்துணையோபல அருந்தமிழிலக்கண இலக்கிய நூல்கள் பரிசோதித்தும் உரைவகுத்தும் உலகுக்களித்த தமிழ்ப்பெருங் கிழமைத் தனித்தகைவள்ளலாகிய ஐயரவர்கள், தம் உபகாரத்திலும் குறையுளதுபோலக்கருதி, இளைஞர் முதியர் பெண்டிர் பேதை என்றித்திறத்த மக்கள் எனைவரும் இன்பந்துய்க்கப் பல்வேறுசுவைதழுவி, இக்காலம் எழுதிவரும் உரைநடைநூல்களிலே அவர்களுடைய பரோபகாரவாழ்க்கையின் சாரமானபகுதி பொதிந்துள்ளது என்னலாம். நிற்க.

இப்புத்தகம் தமிழ்க்கல்வியின் இளமாணவரெவரும் பிழையற எழுதவும் பேசவும் பயிலுதற்கு மிகவும் விரும்பி வாசித்தற்குரியதாம். இதன் விலை அணா 6. வேண்டுவோர் "தியாகராஜ விலாசம், பிள்ளையார்கோவில் தெரு, திருவேட்டீசுவரன்பேட்டை, திருவல்லிக்கேணி. P. O. சென்னை" என்ற விலாசத்தில் ஐயரவர்களிடம் பெறலாம்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[கசுக-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

## கிங்கரர்வதைப்படலம்.

*கிங்கரரென்னும் ஒருவகுப்பு இராக்கதரை அநுமான் கொன்றதைக் கூறுவது. (கிங்கரர்-கிங்கிலியர்-ஏவலர்.)*

### இராவணன் அநுமானைப் பிடித்துவரும்படி கிங்கரரை ஏவல்.

[அநுமான் செய்த ஆரவாரம், பிரளயகாலத்துக் கடலின் பெருமுழக்கத்தையும் இராமன் சிவதனுசை முறித்த பேரோசையையும் போன்று, குகைக்குள் இடியிடித்தாற்போல; இராவணன் செவிக்குள் இடித்து, இடிவிழுந்த மலைகள் குலுங்குதல்போல, அவனுடைய முடிபுனைந்த தலைகள் நடுங்கச்செய்தது. அவன், 'இது குரங்கின் கூப்பாடா' வென்று குறுமுறுவல் புரிந்து, 'என் ஆர்ப்பரிப்புக்கும் மேற்பட்டதாயிருக்கிறதே' யென்று பொறுமை கொண்டு, பக்கத்தில் நின்ற கிங்கரரைநோக்கி, 'இந்தக் குரங்கு எப்படியாயினும் தப்பிவிடாதபடி நாற்புறமும் மேற்புறமும் வளைந்து பிடித்துக் கொன்றுவிடாமற் கொண்டுவாருங்கள்' என்று கட்டளையிட்டான்.

அவர்கள், சர்வாயுததாரிகளாய், நிறத்தாலும் கொலைத் தொழிலாலும் பரப்பாலும் ஆலகாலவிஷத்தையும் யுகாந்தகாலத்துக் கடல்வெள்ளத்தையும் ஒத்துத் தலைகள் நிமிர்ந்து வானத்தை முட்டத் தோள்கள் விரிந்து திக்குக்களைத் தட்டத் தாள்கள் நடந்து மலைகளை எற்ற அநுமானைப் பற்றச் சென்றார்கள். அவர்கள், பிறையென விளங்கும் கோரப் பல்லும் பேரிகையென முழங்கும் வீரச்சொல்லும் உடைய பிலம்போலும் பெருவாயினர்கள்; 'போர் உண்டு' எனின், தேனுண்டதுபோலக் களிக்கும் சிந்தையர்கள்: கூட்டத்திற் காட்டையும் ஆரவாரத்தில் அலைகடலையும் ஆகிருதியில் மேருமலையையும் மிஞ்சியவர்கள்: முன் தேவரையும் அசுரரையும் சிறுபகையெனச் செயித்தவர்கள். அப்படிப்பட்டவர்கள், இப்பொழுது, மாமிசபட்சணிகளான தாங்கள் பலர், சாகபட்சணியான

தனிமைப்பட்ட அற்பக்குரங்கைப் பொருட்படுத்தி அமர்புரியும்படி யாயிற்றேயென்ற நாணம் மனத்தை வருத்த, முன்செல்வார் முதுகு தீயும்படி பின்செல்வார்மார்பு தாக்க முடுகிச்சென்று, மாருதத்தால் மேகமொழிந்து வெறுமையான வானம்போல, மாருதியால்மரங்கள் அழிந்து பாழான அசோகவனத்தை அடைந்து வளைந்தார்கள்.

## அனுமான் கிங்கரரைக் கோல்லல்.

அவர்களைக் கைலைமலைபோல நின்ற அனுமான் கண்டான். கண்டு, தன்னால் தள்ளுண்டு பக்கத்திற் கிடந்த பருமரமொன்றைக் கையிற்கொண்டு, கடலைக் கலக்க அதன் நடுவில் நின்ற மந்தரமலைபோல, அரக்கரைக் கலக்க அவர் நடுவே நின்றான். மலைகளைத் தாக்கும் இடியும் பின்னிடைய, அம்மரத்தால் அரக்கவீரர் தலைகளையும் தோள்களையும் தாக்க, மலைகளிலிருந்து அருவிகள் பெருகுதல்போல, அவர்கள் தலைகளும் தோள்களும் இரத்தம் சொரிய அவர்கள் தரையில் விழுந்து மரணமடைந்தார்கள். கதை கொண்டும் கணைகொண்டும் பொருதவர்கள், உதையுண்டு சிதையுண்டு மடிந்தார்கள். அவன் எடுத்து வீசியெறிந்ததனால், பலர் மலையிலும் பலர் கடலிலும் விழுந்து உடலையும் உலகத்தையும் ஒருங்குபிரிந்து வீரசொர்க்கம் மேவினார்கள். கை கால்கள் இழந்து முண்டமாகக் கிடந்த இராக்கதருடல்கள், இந்திரனாற் சிறகறுப்புண்டு நிலைபெயராது கிடந்த மலைகள்போன்றன. அவன் கையாலும் தோளாலும் காலாலும் வாலாலும் தாக்குண்டு பலர் செத்தார்கள். அடிக்கப்பட்டழிந்தார் அனேகர். இடிக்கப்பட்டிறந்தார் எண்ணிலர். பிடிக்கப்பட்டொழிந்தார் பெருந்தொகையினர். அச்சத்தால் மாய்ந்தார் அளவிலர். அவன் அவர்களைக் கையாலும் மெய்யாலும் காலாலும் வாலாலும் நெருக்கி யிறுக்கி நெறித்தான். அப்போது, அவன் உடல் ஆலையும், அவர்கள் உடல்கள் கரும்புகளும், அவர்கள் இரத்தம் கருப்பஞ்சாறும், இரத்தம் போய்ச்சேரும் கடல் கருப்பஞ்சாறு விழும் கூனையும் போன்றன.

வீரவெறிகொண்டு அரக்கர் தம் தோல்வியறியாராய் அனுமானைச் சூழ்ந்தனர். அப்போது, அவர்கள் மேகமும் அவன் மேகஞ்சூழ்ந்த சூரியனும் போலவும், அவர்கள் கடலும் அவன் கடல்நடு நின்ற மந்தரமும் போலவும், அவர்கள் அரவங்களும் அவன் கருடனும் போலவும், அவர்கள் யானைகளும் அவன் சிங்கமும் போலவும்

ஆனார்கள். அவர்கள் எய்தும் கொய்தும் எறிந்தும் பிளந்தும் பற்றியும் எற்றியும் வளைத்தும் துளைத்தும் செய்த புண்கள் அளவற்றனவாயிருந்தும் அவன் அவைகளை அலட்சியஞ்செய்து அவர்களைப் பொருது தொலைத்தான்.

அவன் வெற்றிபெற்றதுகண்டு அவன்மீது பூமழை பொழிந்தார்கள். அப்போது, 'பூவும் புண்களும் தெரிந்தில மாருதி புயத்தில்' என்னும்படி அரக்கரும் அமரரும் முறையே செய்தனவும் சிந்தியனவுமான புண்களும் பூக்களும் இது புண் இது பூ எனப் பகுத்தறியவொண்ணாதபடியிருந்தன.

கிங்கரர் அழிந்தது இராவணனுக்குத் தெரிவிக்கப்பட்டது.

அசோகவனத்தைக் காவல்காக்கும் தேவர்கூட்டத்தினர், கிங்கரர் இறந்ததைச் சொல்லினும் சொல்லாவிடினும் இராவணனுக்குக் கோபம்வந்திடுமேயென்று திகைப்புற்ற சிந்தையராய், அச்சம் பிடர்பிடித்துத் தள்ளக் காலொடுகால் பின்னத் தள்ளாடி நடுங்கி நடந்து, பிணங்கள்மேல் இடறிவிழுந்துசென்று அவனை அடைந்தார்கள். அடைந்தவர்கள் நடந்ததைச் சொல்ல நாவெழாமல், ஊமர்போலக் கைகளினாற் சைகைசெய்து தெரிவித்தார்கள். அவன் 'யான் ஏவிய கிங்கரர் இறந்தனரோ ? ஓடியொழிந்தனரோ ? யாதுற்றது ? வாய்விட்டுக் கூறுங்கள்' என, அவர்கள், 'அனைவரும், அஞ்சாது போர்புரிந்து பொய்ச்சாட்சிபுகல்வார்குலங்கள் நிர்மூலமாவதுபோல இறந்தார்கள்' என்றார்கள்.]

கிங்கரர்வதைப்படலம் முற்றியது.

## சம்புமாலிவதைப்படலம்.

அனுமான் சம்புமாலியென்ற படைத்தலைவனை அவன் படையுடன் கொன்றதைக் கூறுவது.

### இராவணன் அனுமானைப் பிடித்துக் கொணரும்படி சம்புமாலியை ஏவல்.

[இராவணன், அருகே, கும்பிடுகையனாய்நின்ற சம்புமாலியை நோக்கி, 'நீ சேனையோடுசென்று அந்தக் குரங்கைக் கொன்றுவிடாது பிடித்துக்கொண்டுவா' என்று கட்டளையிட்டான். அவன், 'வல்லோர் பல்லோர் இருக்க, "இது செய்யத்தக்கவன் இவனே"

என்று எம்பெருமான், இந்தக் கட்டளையை எனக்கிட்டான். என்னினும் தன்னியன்* இல்லை' யென்று சொல்லி, இராவணனது உயுத்த கோபமே உருக்கொண்டு புறப்பட்டாற்போலத் தன் சேனையோடும் தன் தந்தையும் பிறரும் தந்த சேனைகளோடும் புறப்பட்டுப்போனான்.

### சேனைத்தூளும் தோகையும்.

சேனை செல்லுதலால், இலங்கைநகரின் பொன்தரையினின்று எழுந்த தூள்கள் பறந்து பரந்து படிய, மேருமலைபோல வேறு மலையாவையும் பொன்மலைகளாயின; இந்திரன் நகர்போல எல்லா நகர்களும், பொன்னகர்களாயின. சம்புமாலி செல்லும் தேரைச் சூழ்ந்து பதினாயிரந் தேர்களும், அவற்றின் இரட்டி ஆனைகளும், அவற்றின் இரட்டி குதிரைகளும், அவற்றின் இரட்டி காலாட் படையும் சென்றன.

### அனுமான் போருக்கு ஆயத்தனாய் ஆரவாரித்தல்.

அனுமான் அசோகவனத்துள்ளே செல்லும் வழிமுகப்பிலேயுள்ள தோரணவாயிலிலே, இராக்கதசேனை எதிர்வருகையை நோக்கி நின்றான். அவன், மேகங்கள் வெருவி இடிகளைக் கக்க, நாகங்கள் நடுங்கி உயிரும் விடமும் ஒருங்கு கக்க, அரக்கர்கள் திடுக்கிட ஆரவாரித்தான். திடுக்குற்றமை தீர்ந்தவுடன் இராட்சச சேனை எதிராரவாரம் செய்தது.

### சம்புமாலி படைவகுப்பும் அனுமான் படைவகுப்பும்.

சம்புமாலி, தன் படையை முற்படை பக்கப்படை பிற்படைகளாக அணிவகுத்து அனுமான்மீது போர்புரிவானானான். அனுமானும், தன் நெற்றியே †நெற்றியென்னும் முன்னணிப்படையாகக் கைகளே கைகளென்னும் பக்க அணிப்படைகளாகக் கூழையே (வாலே) கூழையென்னும் பின்னணிப்படையாகத் தானே அணிவகுத்த சேனையாக, அமர்புரிதற்கு ஆயத்தனானான். (அமர்-போர்)

### அரக்கர்சேனை அழிதல்.

இராக்கதவீரர் அனுமான்மீது படைக்கலங்களை விடுத்தனர். அவன், அவைகளை அடித்தும் ஒடித்தும் அப்புறப்படுத்தினான்.

---

*தன்னியன் - பாக்கியவான்.

† நெற்றி, கை, கூழையென்பன படைவகுப்புக்களின் பெயர்கள். கூழை வாலுமாம்.

பின்பு, அவன், இராசன் செங்கோல் இராச்சியமெங்குஞ் செல்லுதல் போலவும் இருவினைகளை வென்ற ஞானவான்களின் அறிவு எங்கும் வியாபித்தல்போலவும் இராட்சசசேனையெங்குஞ் சென்று, காற்றடி போலவும் வேசையர்மனம்போலவும் ஓரிடத்துந்நில்லாது சுழன்று, ஒருவரையும் உய்யவிடாமல் எல்லாரையும் இருப்புத்தண்டு கொண்டு அடித்துக் கொன்றான்.

## சம்புமாலி சாகுதல்.

சம்புமாலி தனியனாகிக் கொடுங்கோபங்கொண்டு அனுமானை எதிர்த்தான். அனுமான், 'உன்னுடன் வந்தாரைக் காக்கமாட்டாதுபோனாய். ஒருதவியுமின்றி ஒருவனாயுள்ளாய். உன்னைக் கொல்லாதுவிடுகின்றேன். திரும்பிப்போ' என்றான். அவன், 'செத்துப்போனாருள் ஒருவன்போல என்னைஎண்ணினையோ!' என்று சீறி, ஒன்று பத்து நூறாயிரமாக அம்புகளை எய்தான். அனுமான், அவைகளனைத்தையும் இருப்புத்தடியால் விலக்கினான். அதனை அரக்கன் அம்பினால் அறுத்தான். அறுக்கவே, அனுமான், அவன் தேரிலே பாய்ந்து, அவன் வில்லைப் பிடுங்கி, அவன் கழுத்தில் மாட்டியிழுக்க, அவன் வாய்பிளந்து, அலறிவிழுந்து மடிந்தான்.

## சம்புமாலிசாவை அசோகவனகாவலர் இராவணனுக்கு அறிவித்தல்.

அசோகவனத்தைக்காக்கும் தேவர்கள், இராவணனிடம் போய்ச் சம்புமாலி சேனையோடு செத்துப்போனதைச் செப்பமாட்டாராய், விக்கி விம்மி அழ, அவன் சிரித்து, 'நடுங்காமல் நடந்ததைச் சொல்லுங்கள்' என, அவர்கள், 'சம்புமாலி உள்பட நம்மவரெல்லவரும் நாசமானார்கள். நாசஞ்செய்த குரங்கு ஒன்றே' என்றார்கள்.

## சேனைத்தலைவர் தெரிவித்தல்.

இராவணன் 'அந்தக் குரங்கை யானே போய்ப் பிடிப்பேன்' என்றான். அப்போது, அங்கு நின்ற பஞ்சசேனாபதிகளென்ற ஐந்து படைத்தலைவர்கள் அறிவிப்பாரானார்கள். (அவர்கள் அறிவிப்பு, அடுத்த படலத்தின் ஆரம்பத்திலுள்ளது.)]

சம்புமாலிவதைப்படலம் முற்றிற்று.

## பஞ்சசேனுபதிகள் வதைப்படலம்.

பஞ்சசேனுபதிகளென்னும் படைத்தலைவர் ஐவர்களைப் படைகளோடு அநுமான் அழித்ததை உரைப்பது.

[மேற்கூறிய பஞ்சசேனுபதிகள், 'அந்தக் குரங்கை யானே பிடிப்பேன்' என்றெழுந்த இராவணனைநோக்கிக் 'கருடபகவான் கொசுகினுடனே பொருதசெயல்போல், நீ ஏழைக் குரங்கை யெதிர்ப்பையானுல், அருவிநீரற்ற பருவதம்போல உன்னுல் மதநீர் மாறிய திசையானைகள் பயம் தொலைந்து மதம்பொழிவனவாம். உன்னை உன்னி உள்ளம் நடுங்கும் வெள்ளிமலை எள்ளளவு அச்சமும் இல்லாததாய்விடும். உன்னை எதிர்தலால் எய்துவது இழிவேயன்றி இலாபமில்லையென்று எண்ணி மூலைகளில் முடங்கியிருக்கும் மும்மூர்த்திகளின் முகங்கள் புன்முறுவல் பூப்பனவாம். அன்றி, எவர்துணையும் இல்லாதவனென் றெள்ளப்படுவாய். குரங்கு பிடிபடாத குறைவு, வெல்ல வல்லவ ரல்லவரை விட்டதனுல் விளைந்த விளைவு. எங்களை ஏவுக' என, இராவணன் இசைந்தான்.

அவர்கள், அவன் சம்மதிப்பை வெகுமதிப்பாகக்கொண்டு, உலகமூன்றையும் ஒருங்குபெற்றவர்போல உள்ளம் உவந்து, நெற்றி நிலம்பட விழுந்து பணிந்து, விடைபெற்றுப் படைசுற்றப் போர்க்குப் புறப்பட்டார்கள்.

அவர்கள் ஐவரும், பஞ்சபூதங்கள்போலப் பலம் படைத்தவர்கள்; அமரர்க்கும் முனிவர்க்கும் ஐம்பொறிபோலத் துன்பம் விளைப்பவர்கள்; இந்திரன் வச்சிராயுதமும் இயமன் தண்டாயுதமும் இம்மியளவு வடுவும் இயற்றுத தோள்களுடையவர்; சூரனைத் தொலைத்த சுப்பிரமணியனது மயிலினின்றும், பாரினைப் படைத்த பிரமனது அன்னத்தினின்றும் பறித்த இறகுகள் சொருகிய இரத்தின கிரீடத்தினர். இராவணன்மார்பிற் பாய்ந்து முறிந்து எஞ்சிய திசையானைக் கொம்புகளை அரிந்துசெய்த அழகொழுகும் குழைகள் அணிந்தவர். அந்த யானைகளின்மத்தகத்தில் அணிந்திருந்த பொன்னோடைகளைத் தம் நெற்றிப்பட்டங்களாகப் புனைந்தவர். அவர்களுடைய ஏனைய ஆபரணங்கள், இராவணன் குபேரனைவென்று அவன்செல்வத்தைக் கொள்ளைகொண்டநாளில் வாரிவந்தவை.

'இயமன், உனக்கன்றிப் பிரமனுக்கு ஆளாய், அவன் விதிப்படி உன் கோனுக்குட்பட்ட குடிகளின் உயிர்களையும் கவர்கின்றுன்'

எனக் கேட்டுச் சீறிய இராவணன் சிற்றத்தை மாற்ற, அவர்கள், காலனைப்பிடித்துக் கால்களையும் கைகளையும் கட்டிய சூரர்கள்.

அப்படிப்பட்டவர்கள் சேனைகளுடன் சென்று அனுமானை எதிர்த்தார்கள். சேனுவீரர் சோனுமாரியாக அம்புகளைப் பொழிந்தார்கள். அந்த அம்புகள் அவன்மேல் தாக்குதல் தினவுதீரச் சொறிதல்போலவாக, அவன் தூங்குவான்போலக் கண்மூடியிருந்தான். அவர்கள் அதுகண்டு சினங்கொண்டு நெருங்கியபோது ஓர் இரும்புத்தடியை எடுத்துச் சுழற்றியடித்து நால்வகைச் சேனைகளையும் நாசமாக்கினன். அவனால் விசைத்து வீசியெறியப்பட்டதனால்,— தம்மேல் உயர்த்தப்பட்ட சேலைக்கொடிகளையுடைய யானைக்கணங்கள் கடலில் விழுந்து அழுந்துவன, கடலிற் பாய்மரத்தோடு முழுகும் கப்பல்கள் ஒத்தன; கடலில்விழும் தேர்கள் கடலினின்றெழும் சூரியனது தேரினை நேர்வனவாயின; வாயினின்று இரத்தங் கக்கிக்கொண்டு கடலில்விழும் குதிரைகள், கடலில் உள்ளதும் வாயினின்று நெருப்புச்சுவாலை புறப்படுவதுமான வடவையென்னும் குதிரையை நிகர்த்தன; அவன் காலாட்படைகளை வாலாற் சுற்றிச் சுழற்றியெறிய, அப் படைக்கூட்டம் சுழன்றுகொண்டு கடலில்விழும் காட்சி, கடலில் அமுதமதனகாலத்தில், மந்தரமலை சுழலுந் தோற்றம்போன்றது.

கொல்லுதற்கு ஆயுதங்களாக, மலைகளும் மரங்களும் இரும்புத்தடிகளும் எண்ணிறந்தன இருந்தன; கொன்ற உயிர்களைக் கொண்டுபோக இயமன் சித்தமாயிருந்தான்; ஆனதனால், அளவற்ற அரக்கரனைவரும் அனுமானால் அடிபட்டுச் செத்துப்போனார்களன்றித் தப்பிப்போனார் எவரும் இலர்.

சேனைகள் யாவையும் செத்தொழிந்ததுதெரிந்து, சினங்கொண்டு, பஞ்சசேனுபதிகள் அனுமானை அணுகி அம்புமாரி பொழிந்தார்கள். அவன் அவைகளைத் தன்மேல் தாக்காமல் தடுத்து அழித்தான். பின்பு, ஐவருள் ஒருவன்தேரைச் சிதைத்தான். தேர்சிதைந்தவன் ஆகாயத்தில் எழ, அவனை அனுமான் இரும்புத்தடிகொண்டோச்ச, அதை அவன் வில்லினால் தாங்க, வில் முறிய, மலையை எடுக்க, எடுத்த மலை எறியப்படுமுன் அவனை அனுமான் இரும்புத்தடியால் அடித்துக் கொன்றான்.

மிஞ்சின நால்வரும் வெஞ்சினங்கொண்டு வில்லுகளை வளைத்து அம்புகளை எய்தார்கள். அனுமான் அவர்கள்மேல் ஒரு மலையை எறிய, அவர்கள் அதனைப் பொடியாக்கினார்கள். அவன் அந்த நால்வருள் ஒருவனைத் தேரோடெடுத்து மேலேயெறிய, எறியப் பட்டவன், அந்த இரதம் மேலேசென்று கீழேவிழுமுன் பூமியிற் குதித்தான். குதித்தவன்மேல், யானைமீது சிங்கம் பாய்ந்தாற் போலப் பாய்ந்து, குதித்து மிதித்துக் கொன்றான். எஞ்சிய மூவரும் 'எங்கே தப்புவாய்' என்று எதிர்க்க, அவர் இருந்த தேர்களில் இரண்டை இரண்டு கைகளி லெடுத்துக்கொண்டு எழுந்தான். எழவே, அவர்கள் ஆகாயத்திலே பாய, அவர்கள் மேலே தப்பிப்போகாமல் விரைந்து கிட்டப்போய் அவர்கள் பிடித்திருந்த வில்லுகளைத் தொடுத்திருந்த அம்புகளுடன் தொலைத்தான். தொலைக்கவே, நிராயுதரான அவர்கள், அவனுடன் ஆகாயப்போர்க் களத்தில் மல்லயுத்தம் செய்யலானார்கள்.

வெண்பல்லும் கருமேனியும் பகுவாயும் உடைய அவர்கள் வெண்மையான பல்லும் கருமையான உடலும் பிளந்த வாயுமுடைய பாம்புகள்போன்றனர். அனுமான் சூரியன் ஒத்தான். அவன் அவர்கள் தோள்களை வாலினால் வரிந்து இறுக்கி முறிக்க, அவர்கள் இறந்து பூமியில் விழுந்தார்கள். அப்போது ஆகாயத்தில் விளங்கிய அவன் பாம்புகள் நீங்கின பரிதியை நிகர்த்தான். தனியனாய்த் தப்பிநின்ற தலைவனது தலைமேலே, அனுமான் ஆகாயத்தினின்று குதிக்க, அவன் தேரோடு பூமிக்குள் அழுந்தி யிறந்தான்.

தீயவழிகளிற் சென்ற ஐவரையும் வென்ற அனுமான், தீவழிச்செல்லும் ஐம்பொறிகளையும் அடக்கிய அறிவை ஒத்தான்.

அசோகவனகாவலரான பருவத்தேவர் இராவணனிடம் சென்று பஞ்சசேனாபதிகள் படைகளோடு அனுமானால் அழிந்ததை அறிவித்தனர்.]

பஞ்சசேனாபதிகள் வதைப்படலம்
முற்றுப்பெற்றது.

[தொடரும்]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[உசா0-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

## அட்சகுமாரன் வதைப்படலம்.

இராவணன்மகன் அட்சகுமாரனென்பவனை அநுமான் கொன்றதைக் கூறுவது.

### அநுமானைப் பிடிக்க இராவணன் அநுமதிபெற்று அட்சகுமாரன் புறப்படுதல்

[பஞ்சசேனாபதிகள் படையோடு பட்டதைப் பருவத்தேவர் பகரக் கேட்டுக் கொடுங்கோபங்கொண்டு தானே அநுமானை எதிர்க்க எழுந்த இராவணனை அவன்மகன் அட்சன் தடுத்து 'ஐயனே! அந்தக் குரங்கைப்பிடிக்க அடியேனுக்கு அநுமதி அருளுதி. எளிய குரங்கை எதிர்த்தல் உன் பெருமைக்கு ஒவ்வாது. இச் சிறியகாரியத்தைச் செய்ய எனக்கு இடங்கொடு. நீ, இடம்பெயராது இங்கேயே யிருந்தருள்.

முன், இந்திரனைப் பிடித்துக்கொடுக்க யானிருக்கவும், என் அண்ணனை ஏவினாய். அதனால், என் சௌரியத்தைக் காட்டுதற்கு வாய்த்த சந்தர்ப்பம், எனக்குப் பயன்படாமற்போயிற்று. அந்தக் குரங்கு, இந்த இலங்கைக்கு இழிவையுண்டாக்க எண்ணி ஈசனே வேடமாறிவந்ததாயிருந்தாலும், அதனை அரைநொடிக்குள்ளே பிடித்துக்கொடுப்பேன்; தவறுவேனேல், தண்டனைசெய். படை கொடுசெல்ல, விடைகொடு' என்றான். இராவணன், அவனை, மகிழ்ந்துநோக்கித் 'தேரேறிச் சேனையோடு செல்லுதி' என்றான்.

## சேனைப்பெருக்கம்

அட்சனோடு சென்ற சேனை, கடல்போல அளவற்றதாயிருந்தது. கடலிலுள்ள மீனை எண்ணலாமானால் சேனையிலுள்ள தேர்களை யெண்ணலாம்; சுறுமீன்களை யெண்ணலாமானால், யானைகளையும், அலைகளை யெண்ணலாமானால், குதிரைகளையும், மணலை எண்ணலாமானால், காலாள்களையும் எண்ணலாம். அரக்க அரசகுமாரரான அட்சன் தோழர் பன்னீராயிரவரும் மந்திரிகள் தந்திரிகள் முதலானோர் மக்கள் பல லட்சத்தினரும் அவனுக்குத் துணையாகத் தொடர்ந்தார்கள்.

## அட்சன்சபதம்

அனுமான், அட்சகுமாரனை நோக்கி, இராவணனோ இந்திரசித்தோவென்று சந்தேகித்து, இருவருமல்லனென்று முடிவு செய்தான். அட்சன் அனுமானை நோக்கி, நகைத்து 'இந்தக் குரங்கா இராக்கதர்கூட்டத்தைக் கொன்றது?' என்று கூறச் சாரதி 'இதனை அலட்சியமாக எண்ணலாகாது. மன்னனோடு பொருத வாலி, குரங்கன்றோ? இதனைச் சாக்கிரதையாக எதிர்ப்பாயாக' என்றான். அட்சன், 'அசோகவனபங்கஞ்செய்த மட்டோடமையாமல், அளவற்ற அரக்கரை அழித்து நமக்கு மானபங்கத்தைச் செய்த குரங்கைக் கொல்லுதலோடு நில்லாமல், உலகெங்குஞ் சென்று, குரங்கு என்ற பேரேயில்லாமற்போகக் குரங்குக்குலத்தைக் கருவறுத்து நிர்மூலமாக்குவேன்' என்று, வெஞ்சினத்தோடு வஞ்சினங்கூறினான்.

## அரக்கர்படையை அனுமான் அழித்தல்

அரக்கர்சேனை அறக் காய்ந்துலர்ந்த புற்காடாகத் தான் அக்கினியாக, அனுமான், அந்தச் சேனையை அழிப்பானானான். போர்க்களம் தாழியாக, சேனை தயிராக, அனுமான் மத்தாக, அவனால் தாக்கப்பட்ட சேனை, மத்தெறியுண்ட தயிர்போல உடைந்து சிதறியது. அவன் சூரியனாக, அவன் பொருதல்

வெயிலெறித்தலாகச் சேனை வெயிலில் அகப்பட்ட புழுப்படும்பாடு பட்டது.

## அனும அட்ச யுத்தம்

அரக்கர்சேனை அனைத்தும் அழியக்கண்ட அட்சகுமாரன், சினமூண்டு, தீப்போலக் கண்கள் சிவக்கச் சென்று அநுமான்மேல் ஈரேழம்புகள் எய்தான். இவன், அந்த அம்புகளை இருப்புத் தடியால் அடித்துத் தரையில் வீழ்த்தினான். அவன், அம்புகளால் அந்தத் தடியைப் பொடியாக்கினான். இவன், வேறு ஆயுதம் யாதும் இல்லாமையால், கையே ஆயுதமாகக்கொண்டு, அவன் தேர்மீது தாவித் தேர்ப்பாகனையும் குதிரைகளையும் கொன்றான். அப்போது, அவன் எய்த வாளிகள் மார்பினும் தோள்களினும் அழுந்த, இவன் அவன்வில்லை ஒருகையினாற் பற்ற, அவன் அதனைப் பிடித்த கையோடு அடுத்தகையாலும் பற்றியிழுக்க, அது முறிந்தது. அது முறியவே, அவன் வாளையுருவிக் குத்த, இவன், அதை ஒடித்தெறிந்தான். வாட்போர் தோற்றவன், தோட்போர்செய்வானாய், அநுமானைக் கட்ட, இவன், அவனைத் தப்பவொட்டாமல் வாலினாற் சுற்றிக் கீழே தள்ளி, மேலே ஏறி, வாயினின்று பற்களும் கர்ணகுண்டலங்களினின்று கற்களும் உதிரக் கன்னங்களிலே அடித்துப் பிடர் பிடித்துக் குடர்பிதுங்கக் குத்தினான்: பின்பு, போர்க்களம் அம்மியாக, அவன் சதை அரைக்கும் அரிசியாக, இரத்தம் அரிசியை அரைத்தற்குதவும் நீராக, சதையொழிந்த எலும்புப்பகுதி அம்மிக்குழவியாக அரைத்தான். அதனால் குற்றுயிராகக் கிடந்த அவன், முற்றுயிரும் இழந்தான்.

## அட்சன் இறக்கக்கண்ட அரக்கவீரர் உயிர்தப்பச்செய்த உபாயங்கள்

அட்சகுமாரன் இறந்தபோது, இறவாமல் எஞ்சியிருந்த இராக்கதரிலே, சிலர் இரத்தவெள்ளத்துள் மூழ்கியும், சிலர் பிணக்குவியல்களுள் நுழைந்தும் மறைந்துகொண்டார்கள்: சிலர் செல்லுந் திசை தெரியாமல் திண்டாடித் திரிந்து வலியழிந்தார்கள்: சிலர்

எங்கும் போகாமல் நின்ற இடத்தே நின்றார்கள்: சிலர், கண்ட கண்ட திசைகளிலே தாறுமாறாக ஓடினார்கள். சிலர், ஓடும்போது எதிர்ந்து தழுவிய தம்மவரை நோக்கி 'நம்மவரல்லேம்; தேவரேம்' என்று உரைத்து உதறித் தள்ளிவிட்டு ஓடினார்கள்.

### இறந்தோர் உறவினர் எய்திய துயரம்

போர்க்களத்துக்குவந்து தேடித் தம் கணவருடலைக் கண்டு மேல்விழுந்து வெய்துயிர்த்து ஆவிநீங்கிய மாதர், காதலிருவர்க்கு உடம்பு இரண்டேயன்றி உயிர் ஒன்றேயென்பதை உருபிப்பார் போன்றார். உயிர்துறந்தோருடைய உறவினர் அழுத ஒலி உலக முழுதும் பரவியது.

### மண்டோதரி மறுகுதலும் இராவணன் இன்னலும்

அட்சகுமாரன் இறந்ததை யறிந்த மண்டோதரி இராவணன் அடியில் விழுந்து வயிற்றில் அறைந்து, வாய்விட்டலறி அழுதாள். அப்போது, அட்சகுமாரனும் சேனையும் அழிந்ததை அறிவிக்க வந்த அசோகவன காவற்றேவர்கள், இராவணன் அடைந்த கடுந் துயர்கண்டு, உள்ளே உண்டான உவகையைக் காட்டாமல், வெளியே தோன்றிய உவகைக் கண்ணீரைத் துக்கக்கண்ணீராகக்காட்டிக் கொண்டு, தாமும் அவன் காலில் விழுந்து கதறியழுதார்கள்.]

அட்சகுமாரன்வதைப்படலம் முற்றியது.

[தொடரும்]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௩.] தாதுஸ்ரீ புரட்டாசிமீ [பகுதி-௧௧.
Vol. XXXIII. September—October 1936. No. 11.

## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[உ௬௮-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

### பாசப்படலம்

இந்திரசித்து எய்த பிரமாத்திரம் பாம்புவடிவாகிக் கயிறு போல அனுமானைக் கட்டியதைக் கூறுவது. (பாசம் – கயிறு.)

#### இந்திரசித்து வீரம் கூறித் தேரில் ஏறல்

[இந்திரசித்து, அனுமானால் அட்சகுமாரன் கொல்லப்பட்டா னென்று கேட்டபோது, கோபமும் சோபமும் கூர, நெஞ்சு கொதிக்க, மூக்கு சுடுமூச்சு விட, மேனி வெதும்பி வியர்க்க, வீரவாதம் கூறித் தேரின்மீது ஏறினான்.]

#### தேய்ந்தது, தம்பி உடலன்று, தந்தை புகழென்று வருந்தல்

123. தம்பியை உன்னுந் தோறும் தாரைநீர் ததும்பும் கண்ணான்,
வம்பியல் சிலையை நோக்கி, வாய்மடித் துருத்து நக்கான்,
'கொம்பியல் மாய வாழ்க்கைக் குரங்கினாற் குரங்கா ஆற்றல்
எம்பியோ தேய்ந்தான்! எந்தை புகழன்றோ தேய்ந்த!' தென்றான்.

இ-ள். (இரதத்தில் ஏறிய இந்திரசித்து,) தம்பி (இறந்த செய்தி) யை எண்ணும்போதெல்லாம் தாரை (தாரையாக வடிகின்ற கண்) நீர் பொங்குங் கண்ணினன் (ஆகி இந்த வில் இருந்து என் பயன்! என் தம்பி உயிரைக் காவாதுபோயிற்றே! யென்று தன்) வில்லை உதட்டை மடித்துக் கடித்துக்கொண்டு, கோபித்துப் பார்த்து, (இந்தப் பயனற்ற, பரிகாசத்துக்கிடமான வில்லைத் தாங்கிக்கொண்டிருக்கிறேனேயென்று தன்னைத் தானே எள்ளி) ச் சிரித்தான். 'மரக்கொம்புகளில் வாழ்தலுடைய (அற்பக்) குரங்கினால் (தேய்க்கப்பட்டுத்) தாழாத வலிபடைத்திருந்த என் தம்பியோ தேய்ந்தான்! என் தந்தைபுகழன்றோ தேய்ந்தது!' என்று கூறினான்.

வம்பு-கயிறு - வில்லின் நாணியாகிய கயிறு. சிலை - வில். வாய்மடித்தல், கோபமெய்ப்பாடு. உருத்தல்-கோபித்தல். நகுதல்-சிரித்தல். நக்கான்-சிரித்தான். கொம்பு-மரக்கொம்பு. இயலல்-உலாவல்.(தமிழக.) மாயம்-மறைவு. மாய் (-மறை) பகுதி, அம் தொழிற்பெயர்விகுதி. மாயம், வஞ்சகமும் நிலையாமையுமாம். குராங்குதல் - தாழ்தல்; வளைதல். மாயவாழ்க்கை - எதிர்ப்பாரைக் கண்டால் ஓடி ஒளியும் இயல்புடைய வாழ்க்கை; வஞ்சகமாகச் சீவித்தல்; மனிதர்போல மனையில் ஓரிடத்தில் நிலையாக வாழாமல் நிலையில்லாது வாழ்தல்.

குரங்கினால் தேய்ந்தது, என்தம்பியோவென்னில், அன்று; மற்று யாதெனில், என் தந்தை புகழ் என்பது பட, 'எம்பியோ தேய்ந்தான்! எந்தை புகழன்றோ தேய்ந்த! தென்றான்' என்றார். தம்பியின் சாவினும் தந்தை புகழின் தேய்வு அதிக விசனத்துக் குரியதென்றெண்ணினனென்பது கருத்து.

போர்க்களம் அம்பியாக, அட்சகுமாரனது உடலின் சதை அரிசியாக, இரத்தம் நீராக, எலும்புக்கூடு அம்பிக் குழிவியாகத் 'தேய்த்தான் ஊழியின் உலகேழ் தேயினும் ஒருதன் புகழ் இறை

தேயாதான்' என்று முன் கவிக்கூற்றாகக் கூறியதை அநுவதித்து, இப்போது, இந்திரசித்தின்கூற்றாக 'எம்பியோ தேய்ந்தான் எந்தை புகழன்றோ தேய்ந்த தென்றான்' என்றாரென்பது கவனிக்கத்தக்கது.

## தம்பி சாவுக்காகத் தந்தையிடம் துக்கங்கொண்டாடிக் குரங்கைப் பிடித்துக்கொண்டுவருவதாகக் கூறிப் போதல்

[இந்திரசித்து, இராவணனை அடைந்து, தாளில் விழுந்து தம்பியிறந்ததற்காக அழுதான். தந்தை, மைந்தனை வாரியெடுத்து, மார்பிலணைத்துத் தானும் அழுதான். பின்பு, மகன், தந்தையை நோக்கி 'அந்தக் குரங்கு கடலைக் கடந்து அசோகவனத்தை அழித்த அசாதாரண ஆற்றலுடையதென அறிந்திருந்தும், ஆழ்ந்து ஆலோசியாமல், அதனிடம் கூட்டங்கூட்டமாக அரக்கரை அனுப்பினாய். ஆதலால், கொன்றனை நீயே யன்றோ அரக்கர்தங் குழுவை* என்றான்.

என்றவன், மேலும் கூறுவானாய், 'கிங்கரர் சம்புமாலி பஞ்ச சேனாபதிகள் என்பவர்களோடு சென்ற சேனாவீரரெல்லாரும் மாண்டாரேயன்றி மீண்டார் ஒருவருமில்லை என்றால், அந்தக் குரங்கை என் என்பது! திரிமூர்த்திகளின் ஒருமூர்த்தத்† மென்றன்றோ செப்பவேண்டும்! ஆயினும், நீ கவலையின்றி இங்கே இருப்பாயாக. யான் சென்று அதனை எளிதாகப் பிடித்துக் கொண்டுவந்து கொடுப்பேன்' என்று கூறிவிட்டுப் புறப்பட்டான்.]

### சேனைச் சிறப்பு

124. உடைந்தவல் விருள்நோற் றுப்பல் உருக்கொடக் கதிர்க்கு ழாங்கள்
மிடைந்தன மிலைச்சி யாங்கு மெய்யணி பலவும் மின்னக்
குடைந்துவெம் பகைவர் ஊன்தோய் கொற்றப்போர் வாள்வில் வீச,
அடைந்த, கார் அரக்கர் தானை அகலிடம் இடமின் றென்ன.

---

*குழு — கூட்டம். †மூர்த்தம் — வடிவம்.

இ-ள். (முன் சூரியனுக்குத்) தோற்றுப்போன இருட்டு, (அந்தச் சூரியனை வெல்லத்) தவஞ்செய்து, (செய்த தவத்தின் பயனுகப்) பல (கரிய) ரூபங்கொண்டு (வென்று, கவர்ந்த சூரிய) கிரணக் கற்றைகளை (வெற்றிச் சின்னங்களாக) அணிந்து கொண்டாற்போல, (அந்தக் கரியரூபமான) உடம்புகளிலே பல (வகை) ஆபரணங்கள் பிரகாசிக்கக் கரிய (ரூபிகளான) இராக்கதர் (கூடியான) சேனை, பூமி இடம் போதாதென்று சொல்லும்படி (பெருங்கூட்டமாக இந்திரசித்தைச் சூழ வந்து) சேர்ந்தது.

உடைதல் - தோல்வியடைதல். கதிர் - கிரணம். குழாம் - கூட்டம். மிடைந்தன மிலைச்சியாங்கு — நெருங்கினவாக அணிந்தாற் போல. வெம் பகைவர் ஊன்தோய் கொற்றம் போர் வாள் வில் வீச — கொடிய பகைவருடைய உடம்புகளுள் முழுகிய வெற்றியை யுடைய யுத்தத்துக்குரிய வாள்கள் ஒளியை வீச. 'பூதகணத் தரசேந்தி அனல்நின்று புறப்பட்ட' என்பதில், 'புறப்பட்டது' என்பது, 'புறப்பட்ட' என வந்ததுபோல, 'அடைந்தது' என்பது, 'அடைந்த' என, 'து' என்னும் ஒன்றன்பால் வினைவிகுதி தொக்கு வந்தது. அகலிடம் — பூமி.

கரிய இராக்கதருக்கு இருட்டின் துண்டங்களும் அந்த இராக்கதர் ஒன்றுகூடிய திரளான இராட்சச சேனைக்குத் துண்டப் படாத இருட்பரப்பும் இராக்கதர் அணிந்திருந்த ஆபரணங் களுக்குச் சூரியகிரணத் தொகுதிகளும் உவமை.

## தம்பியின் தேகத்தைக் கண்டு சோகங் கூர்தல்

[சேனை நடுவே சேனுவீரரெல்லாரினும் உயர்ந்தோனுக இந்திரசித்து நின்ற தோற்றம், பூமிமுழுதும் கவர்ந்து மூடிய பிரளயப் பெருங்கடல்மத்தியில் மகாமேரு நிற்கும் காட்சி போன்றது. அவன் சேனையுடன் அனுமான் நின்ற இடத்துக்குச் செல்வானுஞன். செல்லும்போது, யுத்தகளத்தை நோக்கி, அது,

பிணக்குவியல்களான மலைகளையும் இரத்தவெள்ளமான ஆறு கடல்களையும் ஆயுதக்கூட்டமான காட்டையும் பெற்று வேறோருலகம்போல விளங்கியதென்றெண்ணி வியப்புற்றான். எண்ணிறந்த வீரர் இறந்து கிடக்கின்றார்கள். இவர்களெல்லாரையுங் கொன்ற குரங்கு, ஒன்றே! 'எப்படை கோண்டு வெல்வ திராமன்வந் தெதிர்க்கின்!' என்றான். 'கண்ணனார் உயிரே அன்னார் கைப்படைக் கலத்திற்*காப்பார்' ஆக இருந்த வரம்பற்ற வீரர் மாண்டுகிடப்பதைக் கண்டு, புண்ணுள்ளே கோல்கொண்டு குத்தினாற்போல, மானத்தினால் வருந்தி மனம்புழுங்கினான். 'என் அத்தை சூர்ப்பநகைக்கு உற்ற அங்கபங்கமும் என் சிறியதந்தை கரனுக்கும்† தம்பி அட்சனுக்கும் நேர்ந்த மரணமும் மற்றைய வரம்பற்ற அரக்கர் வதமும் மானுடர் இருவராலும் வானரம் ஒன்றினாலும் ஏற்பட்டிருக்கின்றனவென்றால், என் வீரம் மிக நன்றாயிருக்கிறது!' என்றெண்ணினான். இவ்வாறு எண்ணிக் கோபம் கூர்ந்து செல்வோன், தேய்ப்புண்ட தம்பியின் தேகத்தைக் கையினின்று வில்லும் கண்ணினின்று நீரும் சோரக் கண்டான். கண்டவன், 'என் ஐயா! உன் தந்தையின் சௌரியத்துக்கு அஞ்சி எமன் உன் உயிர் கவர அஞ்சுவானே! எமலோகத்தோரன்றி எவ்வுலகத்தோரும் உன்னை மறைத்துவைக்க மனந்துணியாரே! அப்படியாக, நீ எவ்வுலகத்திலே இருக்கின்றாய்!' என்று புலம்பிச் சகோதரசோகத்தைத் தாங்கமாட்டாதவனானான். அப்போது, அந்தச் சோகம், ஆணியால் அடிக்கப்பட்ட ஆணி ஆழ்ந்து உள்ளடங்குதல்போல, தம்பியைக் கொன்றவனைக் கொல்ல எழுந்த கோபத்தால் தாக்குண்டு உள்ளடங்கியது.

---

* கைப் படைக்கலத்தின்—கையிலுள்ள ஆயுதம்போல.

† இராவணன் தாய் கேகசியின் தங்கை கும்பீநசிக்கும் அவன் தந்தை விச்சிரவமுனிவனுக்கும் பிறந்தவன் கரன்.

## இந்திரசித்தைக் கண்ட அனுமான் எண்ணங்கள்

அனுமான், எதிரே வந்த இந்திரசித்தைப் பார்த்து, 'யான் எண்ணிறந்த இராக்கதரை எமலோகத்துக்கு அனுப்பியது, இவனை இங்கே இட்டுவந்திருக்கிறது. இவன் இந்திரசித்தே. யான் இதுவரை போராடியது, போராட்டன்று; விளையாட்டே: இவனோடு பொருதலே போராம்: இதுவரை வெற்றியைப் பற்றிய சந்தேகம் இல்லாதிருந்தது, இப்போது உண்டாயிருக்கிறது. இவனை வெல்வது, இராவணனையும் வெல்வதாம்' என்றெண்ணினான்.

## போர்

அப்போது, இராட்சசசேனை போர்தொடங்க, அனுமான், ஒரு மராமரத்தை எடுத்துக்கொண்டான். அரக்கர் அனுமான் மேல் எய்த அம்புகள், பழுக்கக்காய்ச்சிய இரும்பு, பட்டடையைச் சுடாததுபோல, அவனை ஊறுசெய்யவில்லை. இந்திரசித்து, அனுமானால் படைமுழுவதும் அழிவுறுவதைப் பார்த்து, இவனுக்குச் சமீபமாக வந்து, வில்லின் நாணியை விரலினால் தெறித்து மிகுந்த ஒலியையுண்டாக்கினான். அவ்வொலிக்குக் காரணமான அந்த நாணியானது அதிர்ச்சியால் அற்றுப்போம்படி இவன் தோள்கொட்டி எதிரொலி எழுப்பினான். அவன், இவன் தலையிலும் மார்பிலும் தைக்கும்படி பலபல பாணங்களைத் தொடுத்தான். இவன் தனது, மிகப்பெரிய இயற்கைவடிவத்தை எடுத்தான். அவன், அவ்வடிவை முடியக் காணமுடியாது, ஒரு பாகத்தையே பார்த்துப் பிரமித்துக்கொண்டிருக்கும்போது, இவன், தன்மேல் எய்யப்பட்ட அம்புகள் திரும்பி எய்த அவன் மேலேயே போய்விழும்படி வீசியெறிந்துவிட்டு, அவன் தேரையும் பாகனையும் குதிரைகளையும் அறைந்து அழித்தான். அவன், வேறோர் தேரேறி, இவன் மேனிமுழுதும் மறைய, அம்புமாரி பொழிந்தான். இவன் அந்தத் தேர்மேற் பாய்ந்து, அவன் வில்லைப்

பறித்து முறித்தான். அந்த வில் முறிந்த ஓசை அடங்குமுன், அவன் வேறொரு வில்லை யெடுத்துப் பல பாணங்களைத் தொடுக்க, இவன் சற்றே அயர்ந்தான். அயர்ச்சி அகன்றவுடன், மேருவென்று கூறும்படியான தாரு* ஒன்றைப் பிடுங்கிச் சுழற்றி, அவன் விடுத்த கணைக ளனைத்தையும் முறித்து அவன் தலைமேல் அறைந்தான். மலையினின்றும் அருவிநீர் வடிதல்போலத் தலையினின்று இரத்த நீர்வழிய, அவன் சோர்ந்தான். சோர்வு தீர்வுறவே, சோனமாரியாக வாளிமாரி பொழிந்தான். இவன் அவனைத் தேரோடு மேலே எறிந்தான். அவன் நெடுந்தூரம் மேலே சென்று திரும்பிக் கீழே விழுந்தான். விழுந்தவுடனே, எழுந்து விரைந்து விண்மிசை ஏகினன். அப்போது, இவன், அவன் சேமத்தேர்களையெல்லாம் சிதைத்தான்.

## பிரமாத்திரத்தால் அனுமான் கட்டுணல்

அவன், ஏறத் தேருமில்லாமல், எதிர்க்க வழியுமில்லாமல், யாது செய்வதென்று நினைந்து, இதுவே தக்கதென்று துணிந்து பிரமாத்திரத்தைப் பிரயோகம் பண்ணினன். அது, பெரும்பாம்பு வடிவுகொண்டு, இவனைக் கயிறுபோல இறுகக் கட்டியது. இவன், தளர்ந்து சாய்ந்தான். அப்போது, உயிர்தப்ப ஒதுங்கிப் பதுங்கி ஒளிந்திருந்த இராக்கதர், ஓடிவந்து சூழ்ந்து, இவனைச் சுற்றியிருந்த நாகத்தைப் பற்றி யிழுத்தார்கள்.]

## கட்டுண்ட அனுமானது நிலைமையின் வருணனை

125. குரக்கு நல்வலம் குறைந்ததென் றுவலங் கொட்டி
இரைக்கும் மாநகர் எறிகட லொத்ததெம் மருங்கும்
திரைக்கும் மாசுணம் வாசுகி ஒத்தது: தேவர்
அரக்கர் ஒத்தனர்: மந்தரம் ஒத்தனன் அனுமான்.

* தாரு - மரம்.

இ-ள். குரங்கினது மிகுந்த பலம் குறைந்ததென எண்ணி (க் களிப்புற்று வெற்றிக்குறியாக) ஆர்த்து வாய்கொட்டி (இராக்கதர்) ஆரவாரஞ் செய்யப்பெற்ற இலங்கைமாநகரம் அலையடித்து ஒலிக்கின்ற பாற்கடல் ஒத்தது. (அனுமானது உடலின்) எல்லாப் பக்கங்களையும் (சுற்றித்) தன்னுள் அடக்கிய (பிரமாத்திரமாகிய) பெரும் பாம்பு (அமுதம் உண்டாகப் பாற்கடலைக் கடைந்த காலத்திற் கடைகயிறாக மந்தரமத்தைச் சுற்றிய) வாசுகிப்பாம்பு போன்றது. (இலங்கையைக் கலங்கச் செய்த) அனுமான், (பாற்கடலை மறுகச்செய்த) மந்தரமலையை ஒத்தான்.

ஆவலங்கொட்டல் - ஏககாலத்தில் ஒலித்துக்கொண்டும் கையால்வாயில் அடித்துக்கொண்டும்ஒருவகை ஓசை உண்டாக்கல். இரைத்தல் - ஆரவாரித்தல். எறிதல் - (அலை) அடித்தல். அலையடித்தலால் ஓசையுண்டாக்கல் குறிப்பு. திரைத்தல் - தன்னுள் அடக்கல். மாசுணம்-பெரும்பாம்பு. வாசுகி, அஷ்டமாநாகங்களுள் ஒன்று; அமுதமதனகாலத்திற் கடைகயிறாக உபயோகிக்கப் பட்டது.

கட்டுண்ட அனுமானைக் கண்ட இலங்கைவாசிகளின் எக்களிப்பு

[ இந்திரசித்து அனுமானைக் கட்டிவரக் கண்ட ஆண்பாலார் பெண்பாலார் பிள்ளைகள் பெரியோரான எல்லா இலங்கைவாசிகளும் எக்களித்த எக்களிப்புக்கு மிக்க களிப்பில்லை. அவர்கள் அடைந்த அத்தியந்த சந்தோஷம், இந்திரன் கட்டுண்டநாளில் அவர்கள் அடைந்ததை ஒத்தது.]

பாசப்படலம் முற்றியது.

[தொடரும்]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௩௩-ஆம் தோகுதியின் ௨௮௪-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

## பிணிவீட்டு படலம்

இந்திரசித்து, அனுமானைப் பிரமாத்திரத்தினற் கட்டியிருந்த கட்டை நீக்கியதைக் கூறுவது. (கட்டைநீக்கி யென்ற பொருளில் 'பிணியைவீட்டி' என மிதிலைக்காட்சிப்படலம் ௬௬-ல் வருதல் காண்க.)

### கட்டுண்ட அனுமானைக் கண்ட இராக்கதர் பேச்சும் செயலும்

[கட்டுண்டிருந்த அனுமானைக் கண்ட அரக்கரில் பலர், 'இவனைத் தப்பவிட்டால், எல்லாரையுங் கொன்றிடுவான்; அம்பால் எய்யுங்கள்; கல்லால் எறியுங்கள்; கத்தியால் வெட்டுங்கள்; உடலைப் பலகூறுபடுத்துங்கள்; தரையிலிட்டு அரையுங்கள்' என்ருர்கள். பலர், 'இந்தப்பயலை இத்தனைநேரம் உயிரோடிருக்கவிடுவதோ! உடனே கொல்வோம்' என்று கொல்ல எத்தனித்தார்கள். பலர், 'கடலுள் அமிழ்த்துங்கள்; தீயிலிட்டுக் கொளுத்துங்கள்' என்ருர்கள். (அனுமானுல் தந்தையர் தமையர் தம்பியரை இழந்த) பலர், 'என் தந்தையைத் தந்துபோ; என் தமையனைத் தந்துபோ; என் தம்பியைத் தந்துபோ' என்று மறித்தார்கள். கணவரை இழந்த இராட்சசிகள், 'இவனைக் கொன்று இவன்தலைமேலிருந்துதான் தாலிவாங்குவோம்' என்ருர்கள்.

மரத்தைக் காண்போர் அதன்மேல் ஊரும் எறும்பொழுக்கைக் காணுதவாறு, அனுமானைக் கண்ட சில இராட்சசிகள் அவன் தீங்குசெய்ய இடமின்றி அவனைக் கட்டியிருக்கும் நாகபாசத்தைப் பாராமல், தம்மைக் கொன்றிடுவானென்று பயந்து வயிற்றிலடித்துக்கொண்டு ஊருக்குவெளியே ஓடினர்கள்.

## அனுமான் ஆலோசனை

அநுமானைக் கட்டியிருந்த பாம்பைப்பற்றிப் பக்கத்துக்கு ஐம்பதினாயிரவராக நூறாயிரம் இராட்சசகிங்கரர் இழுத்துச்சென்றார்கள். அப்போது, அவன், 'என் தந்தை வாயுதேவனின் அன்புப் பலமும் தேவாதிபர்களும் சீதாபிராட்டியும் தந்துள்ள வரபலமும் எனக்கு இருத்தலால், இந்த நாகபாசத்தை எளிதிற் சிதைக்கவல்லேன். அது செய்யாது அடங்கியிருத்தலே இப்போதைக்கு ஏற்றது. இதனால், இராவணனைக் காணவும், அவனும் அவனுடைய அமைச்சரும் அறிய, இராமபிரான் ஆணையால் அவன் அடையும் ஆபத்துக்களை எடுத்துக் கூறவும், அதனால் அவன் மனஉறுதி குலைந்து சீதாபிராட்டியைச் சிறையினின்று விட்டுவிடவும் கூடும். இஃதன்றி, ஏக ராமபாணத்தினால் ஏழு மராமரங்கள் ஒருசேர ஊடுருவப்பட்டதும் வாலிமாண்டதும் வானரசைனியமகத்துவமும் புகலுதற்கு வசதி வாய்க்கும்' என்று எண்ணிக்கொண்டு சென்றான்.

## சீதை துயரம்

அநுமான் அகப்பட்டதை அறிந்த சீதை, குஞ்சுபிடிபட்ட பறவைபோலவும் கன்றுகவரப்பட்ட பசுப்போலவும் கதறினாள். இந்திரசித்து அநுமானை இராவணன் அரண்மனைக்குக் கொண்டு போனான்.

## இராவணன்கோலு

126 தலங்கள் மூன்றிற்கும் பிறிதொரு மதிதழைத் தென்ன,
அலங்கல் வெண்குடை தண்நிழல் அவிர்ஒளி பரப்ப,
வலங்கொள் தோளினான் மண்நின்றும் வான்உற எடுத்த
பொலங்கொள் மாமணி வெள்ளியங் குன்றெனப் பொலிய.

(இ-ள்.) (இராவணன் ஆளும்) மூன்று உலகங்களுக்கும் (பூவுலகமொன்றுக்கேயுரிய சந்திரன் போதாதென) வேறொரு சந்திரன் தோன்றினாற்போல (ச் சூழவும் முத்துச்) சரங்கள் தொங்குகின்ற (ஒற்றை) வெண் (கொற்றக்) குடை குளிர்ந்த

நிழலையும் பிரகாசிக்கின்ற ஒளியையும் பரவச்செய்யவும், (அந்தக் குடை) இராவணன் பூமியினின்று பெயர்த்தெடுத்து ஆகாயம் அளாவ மேலே தூக்கிய வெள்ளிமலைபோல விளங்கவும் (இராவணன் கொலுவிருந்தான்.)

அலங்கல்—மாலை; இங்கே குடையைச்சூழ்ந்து தொங்கக் கட்டியிருக்கும் முத்துச்சரங்களைக் குறித்தது; அசைதலென்னும் பொருளுடைய அலங்கலும் தொங்குதலென்னும் பொருளுடைய தொங்கலும், அசைதலும் தொங்குதலும் இயல்பாக உடைய மாலையை உணர்த்துதல் கவனிக்கத்தக்கது. வலம் - வலிமை; வெற்றி. பொலம் - பொன்; அழகு. 'வெண்குடைத் தண் கொடை' பாடபேதம்.

சிங்காதனத்துக்கு மேலாக அந்தரத்திலே விளங்கிய வெண் குடையின்காட்சி, இராவணன் பூமிக்குமேலாகத் தூக்கியபோது விண்ணில் விளங்கிய வெள்ளிமலையின் தோற்றம்போன்றதைக் கம்பர், கவிப்படத்தில் சொல்வருணங்கொண்டு கற்பனைசக்தித் *தூரிகையால், சித்திரகாரர் சித்திரந் ‡தீட்டுவதுபோலத் தீட்டிக் காட்டியிருப்பது, கண்டு களிக்கத்தக்கது.

இராவணன் கைலாசகிரியைப் பெயர்த்தெடுத்தவரலாறு கூறுமிடத்து, அவன் அம் மலையைத் தலைக்குமேலே தூக்கியதாகக் கூறுதலும் உளதாதலின், அங்ஙனம் உயர எடுக்கப்பட்ட வெள்ளி மலையோடு அவ் வெண்கொற்றக்குடை உவமிக்கப்பட்டது. வை. மு. கோ. குடையின் மேற்பகுதி வெள்ளிமலையையும் குடைக்காம்பு இராவணனையும் போன்றமை போதரும்.

[இராவணன்புயங்களில் திரிமூர்த்திகளின் ஆயுதவடுக்களும் காதல்மாதரின் நகவடுக்களும் காணப்பட்டன. அவன் இரத்தின கிரீடங்கள்பூண்ட பலதலைகளோடு சிங்காதனத்தில் கொலுவிருத்தல், நாகரத்தினங்களுடன் விளங்கும் பலதலைகளையுடைய

* தூரிகை – சித்திரம் எழுதும் குச்சு.

‡ தீட்டுதல் – எழுதுதல்; சித்திரித்தல்.

ஆதிசேடன் அரசிருத்தல்போன்றது. கரியபெரிய*காத்திரமுடைய அவன் பொன்முடிபுனைந்திருத்தல், கருங்கடல் பொன்மலையை முடியாகப்பூண்டிருத்தல்போன்றது. கருமலைபோன்ற அவன் செம்பொன்னுடையும் வெண்முத்தாபரணங்களும் விளங்க வீற்றிருத்தல், செவ்வந்திவான ஆடை உடுத்து நட்சத்திர ஆபரணங்கள் பூண்டு †அந்தகாரம் அரசுவீற்றிருத்தல் ஒத்தது.

தேவமாதர்கள் பக்கவாத்தியங்களோடு ஒற்றுமைப்பட்ட பாட்டாகிய அமுதத்தை இருபதுசெவிகளுக்கும் விருந்தாக வழங்கவும், முற்றத்துறந்த முனிவர்கள் வீட்டையும் வெறுத்து யாருடைய ஆட்டை விரும்புவார்களோ, அந்த மேனகை தாளத் தொனியொடும் மத்தள ஓசையொடும் பொருந்தத் தாள்கள் பெயர்த்து மனக்கருத்தைக் கண் கைகளின் அபிநயத்தாற் காட்டும் பரதநாட்டியம் இருபதுகண்களையும் களிப்பிக்கவும், தன்னைக் காதலிக்கும் மாதர்கண்களாகிய தாமரைகளை மலரச்செய்யும் சூரியனாகவும் தேவாசுரர்கைகளாகிய தாமரைகளைக் குவியச் செய்யும் சந்திரனாகவும் விளங்கினான்.

## அனுமான் இராவணனைக் கண்டு பேசுதல்

அந்தநிலையில் அவனை அனுமான் கண்டான். இராவணன், அனுமானைக் கொடுங்கோபங்கொண்டு பார்த்து 'நீ இங்குவந்த காரணம் யாது? நீ யார்? இந்திரனோ? இயமனோ? பிரமனோ? குமரனோ? அரனோ? அரியோ? வடிவம் மாறிவந்திருக்கின்ற நீ இவருள் எவன்? ஆர் உன்னை அனுப்பினவர்? என்ன காரியமாக இங்கு வந்தாய்? சொல்லென்று கட்டளையிடுகின்றேன். சோர்வில்லாதபடி சொல்' என, அனுமான் கூறுகின்றான்:—

'நீ அடுக்கிச்சொல்லிய அனைவருமல்லேன். அந்த அற்ப ஆற்றலினோர் ஆருடைய ஆளும் அல்லேன். ஒரு வில்வீரனது தூதனேன். அவன் ஆரென்று அறிய அவாவுவாயானால், அறைகின்றேன்; கேள். அவன், முனிவரும் தேவரும் தேவதேவர்மூவரும்

* காத்திரம் - உடம்பு. † அந்தகாரம் - இருள்.

முடித்தற்கரிய வென்பதேன்? முடித்தற்கு நினைத்தற்கே அரிய தான பெரியகாரியத்தை முடிக்கப் பிறந்திருக்கின்றான். அவன் உனது தேகபலமும் தேவரிடம்பெற்ற ஆயுதபலமும் ஆயுட்பலமும் பிற பல வரபலமும் பிரபலமான பெருஞ்செல்வமும் ஓரம்பினால் அடியோடழியச்செய்ய வந்திருக்கின்றான். அவன் நீசெயித்த தேவ ரல்லன், திசையானைகளல்லன், திக்குப்பாலகரல்லன், கயிலைமலை யல்லன், திரிமூர்த்திகளுமேயல்லன். மற்று, யாவனெனில், பூவுல கத்தைப் பொதுநீக்கி அரசாண்ட தசரதசக்கரவர்த்தியின் திருக் குமாரன்.]

மும்மூர்த்திகளான முழுமுற்கடவுளே இராமனாகியிருக்கின்றானெனல்

127 மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத் தாய
காலமும் கணக்கும் நீத்த காரணன், கைவில் ஏந்திச்
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும்விட் டயோத்தி வந்தான்.

இ-ள். முதலும் நடுவும் முடிவும் (என்னும் உண்டாதல் நிலை பெறுதல் ஒழிதலாகிய மூன்றும்) இல்லாததாய் (இறப்பு நிகழ்வு எதிர்வு என) மூவகைப்பட்டதான கால அளவையும் (வேறு) அளவுகளையும் கடந்த (சருவ) காரணன் (ஆன பரமன், சங்கர னாகித் தரித்திருந்த) சூலாயுதத்தையும் (திருமாலாகித்தாங்கி யிருந்த) சங்கசக்கரங்களையும் (பிரமனாகிப் பிடித்திருந்த) கமண்ட லத்தையும் கைவிட்டு, (கோதண்டம் என்னும்) வில்லைக் கைக் கொண்டு, (மூவராக முறையே வாழ்ந்த) கைலைமலையையும் ஆலிலையையும் தாமரைமலரையும் நீங்கிவந்து, (அயோத்தி நகரம் வசிக்குமிடமாக) இருக்கின்றான்.

மும்மைத்து - மூன்று தன்மையுடையது. கணக்கு - அளவு. 'கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே'. திருவாசகம். நீத்த - நீங்கிய; இங்கே கடந்த என்ற பொருள் குறித்தது. திகிரி-சக்கராயுதம். கரகம், கமண்டலம், குண்டிகை, ஜலபாத்திரம் என்பன ஒருபொருட்பெயர்கள். துறந்து - நீக்கி,

கடிதே உறுவதாயிருக்கின்றாய். ஆயினும், ஓர் உறுதி உரைக்கின்றேன். அதன்படி நடப்பாயானால், ஆயுள் நீடித்திருப்பாய். பெருந்தவஞ்செய்து பெற்ற வாழ்வைச் சீதையை வாதைப்படுத்திய பாதகத்தினால் பாழ்படச்செய்தலை உணர்கின்றாயில்லை: தீமை, நன்மையைச் செயிக்காதென்னும் உண்மையை ஓராதொழிந்தாய்.]

முறைதவறிய காமமுடிவு

128 திறம்தி றம்பிய காமச் செருக்கினால்
மறந்து தத்தம் மதியின் மயங்கினார்,
இறந்தி றந்திழிந் தேறுவ தேயலால்,
அறம்தி றம்பினர், ஆர்உளர் ஆயினார்.

இ-ள். முறைதவறிய காமக்களிப்பினால் தம்மை மறந்து மதிமயக்கமடைந்தவர்கள், மேலும் மேலும் முறைகடந்து, இழிவடைந்து, (அவ் இழிவு) மிகையுறுவதல்லாமல், (அந்தத்) தருமநெறிதவறிநடந்தவர், (குறைந்தவாழ்நாளுடையராய் இறந்தாரன்றி, இறவாது நிறைந்த வாழ்நாளுடையராய் நீடித்து) இருந்தார் யார்? (எவருமில்லை யென்றபடி).

திறம் - கற்பு; ஒழுக்கம். (தமிழகராதி). திறம்புதல் - தவறுதல். செருக்கு-களிப்பு. திறம் திறம்பிய காமச்செருக்கு-(மனையாளிடத்துமட்டும் காமம்நுகர்வதாகிய) கற்புநெறிதவறிய காமக்களிப்பு. இறந்து இறந்து இழிந்து - (மனையாள்மாட்டே காமம் நுகரும் கற்புநெறியை ஒருமுறை கடந்து அயல்மாதினிடத்துக் காமம்நுகர்ந்தவர்) மேலும் மேலும் (அக் கற்புநெறியைக்) கடத்தலும் (அதனால் மேலும் மேலும்) இழிவடைதலும் உற்று. ஏறுதல் - (இழிவில்) மிகுதல்.

சீதையை விட்டுவிடும்படி செப்புதல்

['முறைதவறிய காமத்தினால் இளமையிலேயே இறந்தவர்களின் எண் கணக்கிலடங்காது. அறநெறிக்கு மாறான சிற்றின்பவிருப்பும் பொருள்விருப்பும்போல அறிவை மயக்கும்

மயக்கமும் அவ்விருப்புக்களினின்று விடுதலையடைதலைப்போல அறிவைத் தெளிவிக்கும் தெளிவும் இல்லையென்பது, அறிவொழுக்கங்களிற் சிறந்த ஆன்றோர் துணிபு. இதுவரை இராசராயிருந்தாருள்ளே உன்னைப்போல நீதியறிவுடையாராய் எவரும் இருந்ததில்லை. வேதநீதிவிதிவழியொழுகும்விருப்பினனாயிருந்த நீ, தருமவரம்புகடக்கலாமோ! தீயை உட்பொதிந்த சேலைபோல, உலகமுழுதையும் ஒழிக்கவல்ல உன் உடல்வலிமை, உன் உள்ளத்துள் வைத்திருக்கும் சீதாதேவியைப் பற்றிய காமத்தீயினால் வெந்து நீறாய்விடும். பிரமன்முதலியோர் வரம் பிழைக்கும்: இராமபிரான்சரம் பிழையாது. "உனது அரும்பெறற்செல்வமும் அருமந்த சுற்றமும் ஆருயிரும் அழியாதிருக்கவேண்டுவையானால், சீதாதேவியைத் தருவாயாக" என்று சுக்கிரீவமகாராசன் சொன்னான்' என்றான்.

## இராவணன் அனுமானைக் கொல்லச்சொல்லல்

என்றவுடனே, இராவணன், 'எல்லாந்தெரிந்த எனக்கு இந்த நீதிகளைக் கூறியது ஒரு குரங்கு! நன்று நன்று!' என்று பெருஞ்சிரிப்புச் சிரித்தான். பின்பு, 'இராமன் வீரமும் சுக்கிரீவன் நீதியும் இருக்கட்டும்; நீ அவைகளைச் சொல்வது நிற்கட்டும். ஏனடா, தூதாகவந்த நீ அசோகவனத்தை அழித்து அரக்கரைக் கொன்றாய்? அதைச்சொல்' என்றான். அனுமான், 'உன்னைக் காட்டுவாரில்லாமையால், அசோகவனத்தை அழித்தேன். என்னைக் கொல்லவந்தவர்களைக் கொன்றேன்' என்றான். எனவே, இராவணன், கோபமூண்டு, 'இவனைக் கொல்லுங்கள்' எனக், கொல்லுவோர் நெருங்கியபோது, 'நில்லுங்கள்' என்று கூறி, எழுந்து, இராவணனை நோக்கிக் கூப்பியகையனாய் விபீடணன் கூறுகின்றான்.

## விபீடணன் தடுத்தல்

'நீ சினந்தது நியாயமன்று. பெருந்தவஞ்செய்து பிரமனிடம் பெற்ற வரத்தினால் மூன்றுலகங்களையும் செயித்துத் தனியாக

அரசாளும் நீ, தூதாகவந்தேனென்றுசொல்லியவனைக் கொல்லுவா யோ! மன்னருள் மாதரைக்கொன்றுருளரேனும் தூதரைக் கொன்றாரிலர். பகைவரிடத்தைத் துணிவுடன் அடைந்து தம்மை அனுப்பினவர்கூறியதை அஞ்சாதுகூறி மெய்ம்மை உரைத்தலே விரதமாகவுடைய தூதரைக் கொல்லலினும் பழிப்புக்கு ஏதுவாவது யாதுமில்லை. இவனைக் கொல்லுதல் நமது குலத்துக்கு இழுக்காம். நாம் இவனைக் கொன்றால், நமது பெருமிதவாழ்வைக்கண்டு பொறுமைகொண்டிருக்கும் தேவரும் தேவாதிபரும் சிரிப்பார்கள். இராம லக்குமணர்கள் சூர்ப்பனகையை அங்கபங்கம்செய்து 'இவ் விடத்துச் செய்திகளை இராவணனுக்கு உரை' என்று கூறிவிட் டாரேயன்றிக் கொன்றுவிட்டாரல்லர். இவனைக் கொல்வாயானால், இவன் இங்கே கண்ட காட்சிகளையும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் இராமனிடம் சொல்லாதபடி செய்தாயாவாய். அன்றியும், 'உன்னைக் கொல்லேன்'* என்று வாக்களித்திருக்கிறாய்' என்று கூறினான்.

## இராவணன், அனுமான்வாலைச் சுட்டு ஊரைவிட்டு ஓட்டும்படி கட்டளையிடல்

அதுகேட்டு, இராவணன், 'நீ கூறியது நியாயமே' என்று சொல்லி, அனுமானைநோக்கி 'நீபோய், இங்கு நிகழ்ந்த செய்திகளைத் தெரிவித்து, இராமலக்குமணரைக் கொண்டுவா' என்று கூறிப் பக்கத்துள்ளாரைப் பார்த்து 'இவன்வாலை மூலமறச்சுட்டு ஊரைச் சுற்றிக்கொண்டுபோய் ஓட்டிவிடுங்கள்' என்றான். எனவே, அவர் கள் அவன் ஆணையை நிறைவேற்ற ஆரம்பித்து எழுந்தார்கள்.

## அரக்கர் அனுமானைக் கயிறுகள்கொண்டு கட்டல்

அப்போது, இந்திரசித்து 'இவன் பிரமாத்திரத்துடனிருக்கும் போது சுடலாகாது. இவனைக் கயிறுகொண்டு கட்டுங்கள்' என்று அந்த அத்திரத்தை விடுவித்தான். இராக்கதர்கள், தேர்க்கயிறு

* 'நம்பினைக் கொல்லாம், நெஞ்சம் அஞ்சலை நுவல்தி என்றான்' (இப் படலம் அகூ.)

யானைக்கயிறு குதிரைக்கயிறு முதலாக, இராட்சசிகள் தாலிக் கயிறு நீங்கலாக, கண்ட கண்ட கயிறுகளையெல்லாம் கொண்டு வந்து அனுமானைக் கட்டினார்கள். அவன், 'யான் தெய்வப்படையைச் சிதைத்தேனாகாமல் அதனைப் பகைவன் தானே விடுவித்தது நலமாயிற்று. என்வாலைச் சுடச்சொல்லியது ஊரைச்சுடச்சொல்லியதாயிற்று' என்றெண்ணிக்கொண்டு பாசபந்தம்* நீங்கியும் நீங்காதவன்போலநடிக்கும் யோகிபோல, தான் நினைத்தமாத்திரையே அறுத்துவிடக்கூடிய எளிமையான †பாசபந்தத்துக்கு உட்பட்டு, வலிமையில்லாதவன்போல, அடங்கிச்சென்றான்.

## அரக்கர், அனுமான்வாலில் சீலையைச்சுற்றித் தீயைப் பற்றவைத்தல்

அவன் இராவணன் அரண்மனைவாசலுக்கு வெளியே வந்தபோது, அரக்கர் அவன் வால்முழுவதையும் துணிகொண்டு சுற்றி நெய்யும் எண்ணெயும்விட்டு நனைத்து நெருப்புப்பற்றவைத்தார்கள். 'சீதையைக் கண்டுபேசி அசோகவனத்தை அழித்து அட்சகுமாரன்முதலியோரைக் கொன்ற குரங்குக்குவந்தகதியைக் காணவாருங்கள்' என்று இராக்கதர் இலங்கைத்தெருக்களெல்லாம் சென்று பறையறைந்து சாற்றிச் செய்திதெரிவித்தார்கள்.

## சீதை, அனுமானைச் சுடாதிருக்கும்படி அக்கினிதேவனை வேண்டல்

அச்செய்தியைச் சில அரக்கர்கள் சென்று சீதைக்கும் தெரிவித்தார்கள். அவள், 'உயிர்பதைத்தாள், வேர்த்தாள், உலந்தாள், விம்மினாள், விழுந்தாள், அழுதாள், வெய்துயிர்த்தாள்.' (உலத்தல்-(நெஞ்சு) அழிதல். வெய்துயிர்த்தல்—சுடுமூச்சுவிடுதல்). பின்பு 'அக்கினிதேவனே! யான் கற்பினால் பரிசுத்தியுடையேனென்றால், உலகசாட்சியான நீ அனுமானைச் சுடாதிருப்பாயாக' என்று வேண்டினாள். அக்கினி அஞ்சி அடங்கினான். அனுமான்வால், மயிர்சிலிர்ப்புற எலும்புவரையும் குளிர்ச்சி பரவலுற்றது.

---

* பாசபந்தம்—பிறப்பிறப்பிற்குக் காரணமான கட்டு. †பாசபந்தம்—கயிற்றுக்கட்டு.

### தீ, தன்னைச் சுடாதது சீதைகற்பின்செயலென அனுமான் களித்தல்

*வாலில் வைத்த தீ சுவாலித்தெழுந்து உடம்புமுழுதும் மூடியும் சுடாதிருந்ததை உணர்ந்து, அனுமான் இந்த அற்புதம் சீதாதேவிகற்பினாலாகியதென்று களிப்புற்றான். உலகக்காட்சிகளை அறிவில்லாத ஐம்பொறிகள் காட்ட, அறிவு, அறிந்துகொள்ளுதல் போல, இலங்காநகரக்காட்சிகளை அறிவற்ற அரக்கர் காட்ட அனுமான் கண்டுகொண்டு சென்றான்.*

### இலங்கையை எரித்தல்

*அவன் இலங்கையின் முடிவெல்லையை அடைந்தபோது, வழுவி அகல்வதற்கு உரிய சமயம் வந்ததென்றெண்ணி விரைவாக விண்ணின்மேலெழுந்தான். எழவே, அவனை இருபக்கமும்பற்றி யிழுத்துச்சென்ற இராக்கதர் ஈரைம்பதினாயிரவரும் கீழேவீழ்ந் திறந்தார்கள். இனிச் செய்யற்பாலது இலங்கையை எரிக்கு இரை யாக்குவதேயென்று எண்ணி, எரிபற்றி எரியும் வாலை இலங்கை யெங்கும் செலுத்தினான். அந்த வால், சிவாம்சனான அனுமான் இலங்கையை எரிக்க எண்ணியதை அறிந்து சிவனுடைய எரியிரும்புப்படையாகிய மழுவாயுதம் அவன்பின் உற்றது போன்றது. ஈசனும் அனுமானும் தத்தம் தனுவினின்று முறையே முப்புரத்தையும் இலங்கையையும் எரிக்க ஏவிய கோலும் வாலும் ஒன்றையொன்று ஒத்திருந்தன. (தனு-வில்; உடம்பு. கோல்- அம்பு.) எரியும் வாலோடு அனுமான் இலங்காநகரமாடங்களின் மீது குதித்தது, மலைகளின்மேலே எரிந்துகொண்டு இடிவிழுவதை ஒத்தது.]*

பிணிவீட்டுபடலம் முற்றியது.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[உச-ஆம் பக்கத்தொடர்ச்சி.]

## இலங்கை யெரியூட்டுபடலம்

அனுமான் இலங்கையைக் கொளுத்தியதைக் கூறுவது. ஊர்சுடுபடலம் என்றும் பிரதிபேதமுண்டு.

### இலங்கை தீப்பற்ற, இராக்கதர் கூக்குரலிடல்

[அனுமானது வாலின் தீ, இலங்காநகரத்து வீடுதோறும் புகுந்து, கொடி விதானம் தூண் சுவர் முதலியவைகளைச் சுற்றிப் பற்றியெரித்தது. அதனால், அந்த நகரத்துள்ள அரக்கர், அஞ்சி அங்குமிங்கும் அலைந்து கூக்குரலிட்டனர்.

### அரக்கர் அரக்கியர் மயக்கம்

சிவந்த மாணிக்கமணிகளிழைத்த மாளிகைகளில், தீச்சுவாலை பற்றியபகுதியும் அந்தச்சுவாலை பிரதிபலித்தபகுதியும் வேற்றுமை தெரியாமையால், மாதர், எங்கே ஒதுங்குவதெனத் துணிய மாட்டாராய் மதிமயங்கி வருந்தினார்கள். போகுந்திசையறியாது புகைநடுவில் அகப்பட்டு அலையும் மாதர்களின் தோற்றம், இருண்ட சோலையிடையே உலாவும் மயில்களின் காட்சிபோன்றது. அரக்கரும் அரக்கியரும் தீச்சுவாலைபோலும் செம்பட்டமயிரினராதலால், யார்தலை தீப்பற்றியது, யார்தலை தீப்பற்றாதது என்று தெரியாராய், ஒருவர்தலையில் ஒருவர் மாறிமாறி நீர்சொரிந்து தீயவியவில்லையே என்று திகைத்தனர். ஒரு பிள்ளையை ஒக்கலில் வைத்து, ஒருபிள்ளையைக் கையிற்பிடித்துப் பலபிள்ளைகள் அழுதுதொடர, அரக்கியர் கதறிக்கொண்டு கடலில்விழுந்தனர்.

### பல தீக்கள் ஒன்றுபடல்

அடுப்புத்தீ விளக்குத்தீ ஓமத்தீ முதலிய பலதீக்கள், பகுத்தறியப்படாதபடி, வீடுமுழுதும் பற்றி ஏகமாக எங்கும் பரந்தெரியும் தீயொடு ஒன்றுபட்டது, பல சீவான்மாக்கள், முத்திநிலையில் வேற்றுமையில்லாதபடி, எங்கும் வியாபகமான பரமான்மாவோடு ஐக்கியப்பட்டிருப்பதுபோன்றது.

## தீப்பற்றிய யானைகள் முதலியவை

தீயினால் தாக்கப்பட்ட யானைகள், கழுத்திற் கட்டிய கயிறுகளையும் காலிற் பூட்டிய விலங்குகளையும் அறுத்து, தம்மைக் கட்டியிருந்த தூண்களைப் பறித்துக் காதை அசையாமல் நிறுத்தி, வாலை முதுகின்மேல் நீட்டித் துதிக்கையைத் தூக்கி வீரிட்டுக்கொண்டோடின. தீப்பற்றித் தோலுரிந்த யானைகள், இந்திரனது வெள்ளை யானைபோன்றன. தீக்குப் பயந்து கடலில்விழும் எருமைகள் மேகங்கள்போல, மாதர்கள் அன்னங்கள்போன்றனர்.

வண்டுகள், செந்தாமரைக்காடென்று மயங்கித் தீச்சுவாலையில் வீழ்ந்து இறந்தன. தீயினால் வெந்த மேகத்தின் நடுவே சூரியன் துலங்கும் தோற்றம், உலைக்கரிமத்தியில் உருகித்திரண்ட பொற்பிழம்பின் நற்காட்சிபோன்றது. தீக்குப் பயந்து கடலில் விழுந்த இராக்கதரின் செம்பட்டமயிர் எங்கும் தோன்றலால், கடலே தீப்பற்றி எரிவதுபோன்றது.

## புகையின்மிகுதி

கொழுநரைத்தேடிப் புகையுள்ளே புகுந்த அரக்கியர், மேகத்துள் மறையும் மின்கள்போன்றனர். தங்கள் மாளிகைகள் தீப்பற்றியெரியக்கண்டு தப்பிப் பிழைக்க விண்மீதே சென்ற 'இலவினும் சில முத்துள வெனும் நகை* இளையார்' ஆன இராட்சசிகள், புகையாற் சூழப்பட்டுத் திரைமத்தியில் உள்ள சித்திரப் பாவைபோன்றனர். இலங்கைமுழுதும் பற்றியெரியும் தீயின் புகை யெங்கும் பரவியதனால், அன்னங்களுக்கும் காகங்களுக்கும், பாற்கடலுக்கும் வேறுகடல்களுக்கும், வெள்ளிமலைக்கும் வேறு மலைகளுக்கும், வெள்ளையானைக்கும் வேறுயானைகளுக்கும் வேற்றுமைதெரியமுடியாதிருந்தது.

## இராவணன் தேவியருடன் இலங்கையை நீங்குதல்

ஊர் முழுதையும் சுட்ட தீ, இராவணன் அரண்மனையையும் சுட்டெரிக்கத்தொடங்கவே, அவன் தேவிமார் முதலியோருடன்

* இலவம்பூ இதழுக்கும் முத்து பல்லுக்கும் உவமை. நகை—பல்.

புட்பகவிமானமேறி, இலங்கையைவிட்டுப் போனான். ஆகாயகமனம் வல்ல மற்ற அரக்கர்களும் விண்மீது சென்று தீக்குத் தப்பினார்கள். அவ்வாறு தப்பிப்போகும் அறிவில்லாமையால், இலங்கைமாநகரம் இருந்த இடத்தேயிருந்து எரிந்து பாழாயிற்று.

தனக்கு எதிர்ப்பட்ட இராக்கதரை நோக்கி, இராவணன், 'இலங்கை எரியக் காரணம் என்ன?' என, அவர்கள், 'வாலைக் கொளுத்திய தீயைக்கொண்டு குரங்கு கொளுத்தியது இலங்கையை' என்றார்கள்.]

## இலங்கை எரிந்ததற்கு இராவணன் வருந்தல்

129\. 'இன்று புன்றொழிற் குரங்குதன் வலியினால் இலங்கை
நின்று வெந்துமா நீறெழு கின்றது! செந்தீத்
தின்று தேக்கிடு கின்றது! தேவர்கள் சிரிப்பார்!
நன்று! நன்று!! போர் வலி' யென இராவணன் நக்கான்.

இ - ள். 'அற்பத்தொழிலுடைய குரங்கின் வலிமையினால், இன்று, இலங்கை, நின்று எரிந்து சாம்பல்பறக்கின்றது! நெருப்பு, (இந்த நகரத்தை) உண்டுவிட்டு ஏப்பமிடுகின்றது! (நமக்கு அடங்கியிருந்த) தேவர்கள் (அவருள் ஒருவனாகிய அக்கினி நம்மூரை எரித்ததுகண்டு) சிரிப்பார்கள்! நமது போராண்மை நன்றாயிருக்கிறது! (மிகவும்) நன்றாயிருக்கிறது!!' என்று இராவணன் (வெட்கச்சிரிப்புச்) சிரித்தான்.

புன்மை—அற்பம். நகுதல்—சிரித்தல். நக்கான்—சிரித்தான்.

## அனுமான் சீதையை வணங்கி விடைகொண்டு செல்லல்

[அனுமான், இனிச் சுடவேண்டிய இடமில்லையென்று வாலைக் கடலிலே தோய்த்துத் தீயை அவித்தான். விண்வழியே சென்ற வித்தியாதரர் 'ஊரெங்கும் பரவிய தீ, சீதையின் சாலை இருக்கும் சோலைக்கு அருகேயும் செல்லவில்லை'யென்று சொல்லக் கேட்டு, அனுமான், மகிழ்ந்துசென்று, சீதைபாதங்களில் விழுந்து வணங்க, அவள், அவன் சேமமாயிருப்பது தெரிந்து, கவலைநீங்கிக் களித்து வாழ்த்த, அவன், 'வணக்கம், விடைபெற்றுக்கொள்கின்றேன்' என்று கூறிச் சென்றான்.

தீ அவிதல்

இனி நாமிருந்தால், அனுமான்துணையில்லாமையால், நம்மை அரக்கர் பிடித்து வருத்துவரென்று அக்கினிதேவன் ஒளித்துப் போயொழிந்தானென்னும்படி, இலங்கையை எரித்துக்கொண்டிருந்த தீ, அவிந்துபோயிற்று.]

இலங்கையெரியூட்டுபடலம் முற்றியது.

## திருவடி தொழுத படலம்.

அனுமான் (இலங்கையினின்று திரும்பிவந்து) இராமன் பாதங்களில் பணிந்ததைக் கூறுவது. இதன்பொருள், இராமனது திருவடிகளை அனுமான் தொழுத படலமென்று கூறுவதேயன்றித் 'திருவடி' என்னும் பெயருடைய அனுமான் இராமனைத் தொழுத படலமென்று கூறுவதும் உண்டு. கருடனைப் 'பெரிய திருவடி' யென்பதும் அனுமானைச் 'சிறிய திருவடி' யென்பதும் வைணவ சம்பிரதாயம். மீட்சிப்படலமென்றும் பிரதிபேதமுண்டு. மீட்சி – (அனுமான் இலங்கையினின்று) மீளுதல் – திரும்புதல்.

அனுமான் இலங்கையினின்று புறப்பட்டு வழியில்
மைநாக பருவதராசனைக் கண்டு
மகேந்திரமலைக்கு வரக்கண்ட வானரர் மகிழ்ச்சி பாராட்டல்

[சீதையிடம் விடைகொண்டு சென்ற அனுமான், இலங்கைக்குப் பக்கத்தேயுள்ள ஒரு குன்றின்மீது, சூரியன் உதயகிரியை அடைகுவதுபோல, அடைந்து, தன் இயற்கைப் பெருவடிவு கொண்டு, விண்வழியே விரைந்துசென்று, மைநாகபருவதராசனுக்கு, முன் இலங்கைக்குப் போகும்போது வாக்களித்திருந்தபடி அந்த மலையில் இறங்கி, விருந்தருந்தி, இலங்கையில் நிகழ்ந்த செய்திகளைக் கூறி, விடைபெற்றுப் புறப்பட்டுத் தான் திரும்பி வருகையை விரும்பி எதிர்பார்த்துக்கொண்டு தெற்கு நோக்கிய வண்ணமாய் மகேந்திரமலைமேலிருந்த அங்கதனுதியர்முன்பு வந்து குதித்தான். அவன் முகப்பொலிவினால், சென்றகாரியம் சித்தியானதென்று தெரிந்துகொண்ட வானரவீரர்கள், தமக்கு இரை

தேடிக்கொண்டுவர வெளியேபோயிருந்த தாய்ப்பறவை வரக் கண்ட குஞ்சுகள்போல, அவன் வரக்கண்டு மகிழ்கூர்ந்தார்கள். அந்த மகிழ்ச்சிமேலீட்டால், சிலர் ஆடினார்கள், சிலர் பாடினார்கள், சிலர் ஆர்த்தார்கள்*, சிலர் அவனை விழுங்குவார்போலப் பார்த்தார் கள். சிலர் தூக்கிச் சுமந்தார்கள். சிலர் இனிய கனிகளையும் தேனையுந் தேடிக்கொண்டுவந்து எதிரே வைத்து 'இவைகளை உண்டு இளைப்பாறுக. நீ வினைமுடித்து மீண்டுவந்தாயென்பது விளம்பாமலே விளங்குகின்றது. இப்போது உண்ணுக. உண்ட பின் விவரமுரைக்கலாம்' என்று உபசரித்தனர். சிலர் அவன் தலையிலும் முகத்திலும் தோளிலும் மார்பிலும் கையிலும் காலிலும் அம்புமுதலிய ஆயுதங்கள் செய்த காயங்களைக் கண்டு கசிந் துருகி உயிர்போவார்போன்று வருந்தினார்கள்.

### அனுமான், அங்கதனாதியரை வணங்கி, அவர்களெல்லாரையும் சீதை வாழ்த்தினளென, அவர்கள் தென்திசைநோக்கித் தெண்டனிடல்

அனுமான், முதலில், இளவரசனான அங்கதனையும், பின்பு, ஆண்டில் முதிர்ந்த சாம்பவானையும்வணங்கி, மற்றவர்களுக்கு உரிய மரியாதைகளை முறையாகச் செய்து, 'இங்கே உள்ளாரெல்லாருக் கும் எம்பெருமாட்டி வாழ்த்துக்கூறினள்' என்றான். எனவே, எல்லாரும் எழுந்து, சீதையிருந்த திக்குநோக்கித் தெண்டன்சமர்ப் பித்தார்கள். பின்பு, அவர்கள், 'நீ சென்றதுதொட்டு வந்தது வரையும் நடந்த செயல்களை ஒன்றும்விடாமல் உரைப்பாயாக' என, அனுமான் கூறுகின்றான்:]

### அனுமான், இலங்கை நிகழ்ச்சிகளில் தன் வீரச்செயல்களைக் கூறாது மற்றவைகளைக் கூறல்

130. ஆண்டகை தேவி உள்ளத் தருந்தவம் அமையச் சொல்லிப்,
பூண்டபே ரடையா ளங்கைக் கொண்டதும் புகன்று, போரில்
நீண்டவாள் அரக்க ரோடு நிகழ்ந்ததும் நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பான், தான்தன் வென்றியை விளம்ப வெள்கி. ൧

* ஆரவாரித்தார்கள்.

இ-ள். அநுமான், சீதையின் கற்பொழுக்கத்தைச் செவ்வையாகச் சொல்லி, (சூளாமணியாகிய) அடையாளத்தைக் கைக்கொண்டதையும் சொல்லித் தன் வெற்றியைத் தான்சொல்ல நாணியதனால், இராக்கதரோடு நிகழ்ந்த (போரில், தான் வென்ற)தையும் இலங்கையில் நெருப்பிட்டதையும் சொல்லாதுவிட்டான்.

ஆண்டகை—வீரன்; பெருமையிற் சிறந்தோன்: ஆண் தகை (-தன்மை) என்னும் இரண்டுசொற்கள், ஒன்றுசேர்ந்து, ஆண்டகையென ஒருசொல்லாகி, ஆண்மையென்னும் பொருளுடையதாய் ஆண்மையுடையானை உணர்த்தியது. ஆண்டகை தேவியென்பதற்கு இராமன் மனைவியெனப் பொருள்கொண்டால், முந்திய பாட்டில் உள்ள 'மருத்தின் மைந்தன்' (-வாயுவின்மகன்—அநுமான்) எழுவாயாம். பூண்ட-(சீதை) அணிந்த. வாள்—கொடுமை: வாளரக்கர் என்பதிற்போல; வாளரா என்பதிலும் வாள் கொடுமையை உணர்த்துதல் காண்க. செய்தவென்றியை, வென்றியை உரைப்ப, பாடபேதங்கள்.

ஆடவர்க்குத் தவநெறிபோல, மாதருக்குக் கற்புநெறியிருத்தல்பற்றிச் சீதைகற்பைத் தவமென்றான். அக் கற்பு, உடலைத் தூய்மையாக வைத்திருத்தலன்றி அதனினும் மிகமிக அருமையான, உள்ளத்தைத் தூய்மையாக வைத்திருத்தலும் உடையதென்பது விளங்க 'உள்ளத்து அருந்தவம்' என்றான்.

உள்ளக்கற்பு அருமையினும் அருமையானதென்பது, 'எம்பெருமானே! எனக்கு (ஒருவரன்று) ஐவர்கள் ஐம்புலன்கள் போலக் கணவராயிருக்கவேயும் (அம்மட்டில் திருப்தி அடையாமல்) இன்னும் வேறொருவன் கணவனாக வேண்டுமென்று என் மனம் உருகாநிற்கும். (ஆதலால் என்போலப்) பெண்ணாகப்பிறந்தவர்களெல்லாருக்கும், ஆடவரே யில்லாதிருந்தாலல்லாமல், நம்புதற்கில்லை' யென்று வசிட்டனது தருமபத்தினியான அருந்ததியையே ஒத்த சிறந்த கற்புடையாளான திரௌபதி கிருட்டிணனைநோக்கிக் கூறினாளென்னும் கருத்துடைய பாரதப்பாட்டினால் விளங்கும். அப்பாட்டு வருமாறு:—

‘ஐம்புலன் களும்போல் ஐவரும் பதிகள்
ஆகவும், இன்னும்வே ருெருவன்
என்பெருங் கொழுநன் ஆவதற் குருகும்,
இறைவனே! எனதுபே ரிதயம்!
அம்புவி தனிற்பெண் பிறந்தவ ரெவர்க்கும்,
ஆடவர் இலாமையி னல்லால்,
நம்புதற் குளதோ?’ என்றனள், வசிட்டன்
நல் அற மனைவியே அனையாள்.

(பழம்பொருந்துசருக்கம். உக)

இதனால், திரௌபதி கற்புடையளல்லளென்று கருதலாகாது. மாதர்கள் கற்புநெறியில் ஒழுகுதல்போலத் தவநெறியிலொழுகும் தவசிகள், தம் மனம் தம்மைத் தீயவழியிற் செல்லும்படி தூண்டும்போது அதற்கு உடன்படாமல், தம் மனத்தை அடக்கி ஆண்டு தம் தவத்தை நெறிபிறழாது கடைபோகக் காத்தல்போலத் திரௌபதி தன் மனத்தின் வழிச்செல்லாளாய்க் கற்பைக்காத்தாளென்பது, அவள், கவிக்கூற்ருக ‘வசிட்டன் நல்லற மனைவியே அனையா’ ளெனப்பட்டதனாலும் ‘யான் உருகுகின்றேன்’ என்னது ‘என் மனம் உருகும்’ என்றதனாலும் பெறப்படும். வேருெருவன் என் கணவனாக உருகும் என்மனம் என்ற திரௌபதி, பெண்ணாகப் பிறந்தவ ரெவரையும் நம்புதற்குளதோ? என்னது, பெண்பிறந்தவ ரெவர்க்கும் நம்புதற்குளதோ? என்றதனால், (மேலே ‘என்மனம்’ என்றதுகொண்டு ‘நம்புதற்குளதோ’ என்பதன்முன் அவர்கள்மனம் என்பது வருவித்தற்பாலதாய், அவள், என்மனம் எனக்கு நம்புதற்குரியதாயில்லாததுபோல, பெண்ணாகப் பிறந்தவரெல்லாருக்கும் அவர்கள் மனம் அவர்களுக்கு நம்புதற்குரியதாயில்லையென்ருளென்பதும், அதனால், மாதர்கள் மனத்தை அடக்கிக் கற்பைக் காத்தல் வேண்டுமென்று குறிப்பித்தாளென்பதும் பெறப்படும். இஃது, அகலிகைவெண்பாவிலுள்ள ஒருபாட்டை நினைவுறுத்துகின்றது. அது வருமாறு:—

நல்லார் உளத்தினிலும் நல்லா ரலார்உளத்தும்
பொல்லா நினைவு புகல்இயல்பே;— நல்லார்,
புகுந்தவுடன் அந்நினைவைப் போக்கிடுவர்; பொல்லார்,
மிகுந்துறைய விட்டிடுவர் வேட்டு.

(உறைய – தங்க. வேட்டு – விரும்பி.)

வானரர், 'நீ போர்செய்ததைப் புண்களும் வென்றதை மீண்டமையும் இலங்கையை எரித்ததைப் புகையும் சொல்லத் தெரிந்தோம்' எனல்

131. 'பொருதமை புண்ணே சொல்ல, வென்றமை போந்த தன்மை
உரைசெய, ஊர்தீயிட்ட தோங்கிரும் புகையே ஓதக்,
கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் செயலே காட்டத்,
தெரிதர உணர்ந்தேம் பின்னர் என்இனிச் செய்தும்' என்றார்.

இ - ள். '(நீ இராக்கதரோடு போர்செய்து வென்றதையும் இலங்கையை எரித்ததையும் கூறினாயில்லை. ஆயினும்,) நீ சொல்லாமலே,—போர்செய்தாயென்பதை (உன் உடம்பிலுள்ள) புண்கள் புகலுதலாலும், செயமடைந்தாயென்பதை நீ திரும்பி (க் குதூகலமாக) வந்தது கூறுதலாலும், இலங்கையை யெரித்தாயென்பதை (எரிபட்ட இலங்கையினின்று) உயர்ந்தெழுந்த பெரும்புகை (தூரத்துள்ள எங்களுக்குத் தோன்றிச்) சொல்லியதனாலும், எதிரிகளது பெருமையைச் சீதாதேவி திரும்பிவாராதது செப்புதலாலும் தெளிவாகத் தெரிந்துகொண்டோம். இனிமேல் யாதுசெய்யக்கடவேம்? (அதனை இசைப்பாயாக.)' என்று (வானரவீரர்) கூறினார்கள்.

பொருதல் – போர்செய்தல். போந்த – வந்த. இருமை – பெருமை. இரும்புகை – பெரும்புகை. கருதலர் – (உடன்பாடாக) எண்ணுதவர்- (எதிரிடையாக எண்ணும்) பகைவர். மீண்டிலா – திரும்பாத. தெரிதர – தெரிய. தர, துணைவினை. செய்தும் – செய்வோம்.

புண்ணே, புகையே, செயலே என்பவற்றோடு இயைய, போந்தமை என்பதன்பின் ஏகாரம் வருவித்துக்கொள்க. அந்த ஏகாரம்,

செய்யுளாதலால் தொக்கது. நான்கு ஏகாரங்களும் பிரிநிலை; நீ சொல்லாமலே என்ற பொருளை நயம்படக் குறித்தவை. பெருமை, கருதலர்களுடைய தொகைமிகுதியையும் வலிமைமிகுதியையும் உணர்த்திநின்றது. சொல்ல, உரைசெய, ஓத என்பவற்றுக்குப் பின் அவற்றின் தொடர்பாகவந்த, (இயல்பாகக் காண்பிக்க என்னும் பொருளுடைய) காட்ட என்பதைச் (செயற்கையாகச்) சொல்ல என்று தெரிவாகப் பொருள்படும்படி பிரயோகித்துக் கவி, மோனையமைத்திருப்பது, கவனிக்கத்தக்கது. வானரவீரரெல்லாருக்குமாக, அவருள் ஒருவர்கூறியதை அவர்களெல்லாரும் கூறியதாகக் கூறியிருப்பது, சொல்லாமலே தெரியக்கூடியதாம்.

இந்தப் பாட்டு வாசாலகமென்னும் பேச்சுத்திறமையும் ஊகித்து உணரும் வல்லமையும் ஒருங்கு அமையச்செய்த சமத்காரமான கவிகளுள் ஒன்றாம்.

## வானரர் புறப்பட்டு மதுவனம் அடைந்து தேனுண்டு களித்துவிளையாடல்

[அனுமான், 'இராமபிரானுக்குச் சீதாதேவி சேமமாயிருப்பதைச் சீக்கிரமாகத் தெரிவித்து அவனது கவலையை அகற்ற வேண்டும்' என, எல்லாரும் ஒருமுகமாக எழுந்து புறப்பட்டுக் குறித்த இலக்குத்தப்பாமல் வேகமாகச் செல்லும் இராமபாணம் போல, விரைந்துசென்று உச்சிநேரத்தில் கிட்கிந்தைக்குக் கிட்ட இருந்த மதுவனத்தை அடைந்தார்கள். அங்கே, வானரத்தலைவர்கள், அனுமானை நோக்கி 'இலங்கைக்குச் சென்ற நீ சித்திபெற்றுத் திரும்பவேண்டுமேயென்ற கவலையினால் நாங்கள் நெடுநாள் ஊணுறக்கமின்றி வருந்தியிருந்தோம். நீ சிறிது காலம் வாராது தாமதித்திருந்தாயானால் செத்தேபோகவிருந்த எங்களைச் சாவாமற் காத்தாய். அப்போது காத்ததுபோல, இப்போது யாங்கள் பசியால் இறவாமற் காப்பாயாக' என்றார்கள். அவன் அவர்களைக் கூட்டிக்கொண்டு அங்கதனிடம் சென்றான். எல்லாத் தலைவர்களும், அங்கதனைக் கைகூப்பித்தொழுது 'உன் சேனை தாகத்தால் தவிக்கின்றது. இந்த வனத்தில் உள்ள தேன்கூடுகளை அவர்களுக்கு அளிக்கவேண்டும்' என்று கூற, அதற்கு அவன் இசைந்தான்.

உடனே, வானரர்கள், தேன்கூடுகளினூடு, ஒருவருக்குமுன் ஒருவர் ஓடி, அக்கூடுகள் தொங்கும் கொம்புகளை ஒடித்து, தேனைத் தெவிட்ட உண்டு களிப்பாராயினர். ஒருவர் கைக்கொள்ள முயன்ற தேனை ஒருவர் கைக்கொண்டு ஓடுவர். ஒருவர் கையிலெடுத்து வாய்க்குக்கொண்டுபோகுந்தேனை ஒருவர்இடையேபுகுந்து பிடுங்கிக் கொள்வர். ஒருவர்மேலொருவர் விழுவர், ஏறுவர். ஒருவரையொருவர் தழுவுவர். இவ்வாறாக எல்லாரும் இனிதுகளித்து விளையாடிக் கொண்டிருந்தனர்.

### வானரர் மதுவனத்தை அழிக்காதபடி அவ்வனத்துக் காவலாளர்தலைவன் ததிமுகன் தடுத்தவனை அங்கதன் ரத்தம்கக்கக்குத்திச் 'சுக்கிரீவனிடம் போய்ச்சொல்' என விடுதல்

அப்போது, அந்த மதுவனத்துக் காவலாளர்கள்கண்டு சீறிச் 'சுக்கிரீவாக்கினையை மீறி உங்கள் உயிருக்கு முடிவு தேடிக்கொண்டீர்கள்' என்று கூறித் தங்கள் தலைவன் ததிமுகனிடம் சென்று, 'நாம் காக்கும் மதுவனத்தில் அங்கதன்சேனை அவன் அனுமதி பெற்றுப் புகுந்து, எதிரிகளும் செய்யக்கூசும் அழிவைச் செய்து விட்டது' என்று தெரிவித்தார்கள். அவன், 'அப்பன்* பட்டபாடு †மகனுக்குத் தெரியாதுபோலும்' என்று சொல்லித் தனது படையுடன் மதுவனத்துள்ளே புகுந்தான். புகவே, அங்கே களித்துக் கொண்டிருந்த வானரர், கண்டு பயந்து, அங்கதனிடம்போய், அபயமிட்டு அடியில் விழுந்தார்கள். ததிமுகன், அங்கதனெதிரே சென்று, அவன்மீது ஒரு பாறையைப் பேர்த்தெடுத்து வீசியெறிய, அவன் அதனைப் புறங்கையால் விலக்கித் ததிமுகனைப் பிடித்து இரத்தங்கக்கக் குத்திச் 'சுக்கிரீவனிடம்போய்ச் சொல்' என்று சொல்லிப் போகவிட்டான். அங்கதன்சேனைவீரர், தங்கள் தலைவர்களுக்கு இனிய கனிகளும் தேனுங் கொண்டுவந்து கொடுத்து உண்பித்து உவகையோடிருந்தார்கள். இது நிற்க.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

* அப்பன் - வாலி. † மகன் - அங்கதன்.

# கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௧௪௦-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

இலங்கையிலே சீதையைக் கண்டேனில்லை;
இற்பிறப்பும் பொறுமையும் கற்பும் நடிக்கக்கண்டே னெனல்.

140. 'விற்பெருந் தடந்தோள் வீர, வீங்குநீ ரிலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டே னல்லேன்;
இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை யென்ப தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்.'

இ-ள். 'வீரா (ஸ்ரீவீரனே, என்ன ஆச்சரியம்! காணக்கூடிய ஓர் உருவப்பொருளைத் தேடிச்சென்ற அடியேன், அதனைக் காணாமல், அதன் தானத்தில், காணக்கூடாத மூன்று அருவப்பொருள்களைக் கண்டேன். அந்த விவரத்தைக் கேட்டருள்.) இலங்கையிலே (அடியேன் தேடிச்சென்று) சீதாதேவியைக் கண்டேனில்லை. (வேறு கண்டது யாதோவெனில்,) உயர்குடிப்பிறப்பென்பதொரு குணமும் மகத்தான பொறுமையென்பதொரு குணமும் கற்பு என்னும் பெயரினையுடையதொரு குணமும் ஆனந்தநர்த்தனஞ் செய்துகொண்டிருந்ததைக் கண்டேன்' (என்பது, இற்பிறப்புமுதலிய மூன்றுகுணங்களின் சொரூபமாயுள்ளாள் சீதை யென்றவாறு.)

பெரும் வில் தடம் தோள் வீர - பெரிய வில்லை யேந்திய விசாலமான கையையுடைய வீரனே. வெற்பு வீங்கு நீர் இலங்கையில் - திரிகூடமலைமேலுள்ள, மிகுந்த நீரையுடைய கடல்சூழ்ந்த இலங்கை நகரில். இற்பிறப்பு-உயர்குடிப்பிறப்பு. இருமை-பெருமை. பொறை-பொறுமை. களிநடம்புரிதல் - களிப்போடு கூத்தாடல். இலங்கை வெற்பில் என்பது வெற்பிலங்கையில் என மாற்றியும் உருபுபிரித்துக்கூட்டியும் உரைக்கப்பட்டது.

சிங்காதனத்திலே அரசனும் அரசியும் அரசிளங்குழவியும் ஒருங்கு விளங்கக்கண்டு, அந்தக் கம்பீரமான காட்சியில் முழு மனமும் முழுகிய ஒருவன் சிங்காதனத்தைக் காணனன்றே; அவ்வாறே, சீதையினிடத்தே குடிப்பிறப்பும் பொறுமையும் கற்பும் ஆகிய முக்குணங்கள் மூர்த்தன்னியமாய் முனைந்துநின்று முற்பட்டுத்தோன்றிச் சொலிக்கக்கண்டு அந்தக் காட்சியில் மனம் அழுந்தி அவசானன அநுமான், அந்தச்சமயத்தில் அக்குணங்களைக் கண்டதன்றி, அவைகளையுடைய அவளைக் காணவில்லையென்பது கருத்து.

இயல்பாக வடிவமும் தொழிலு மில்லாத, கட்புலனுகாத இற்பிறப்பு முதலிய குணங்களின் சிறப்பு இனிது புலப்பட,

'இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை யென்ப தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்'

என, அவைகளைக் காணப்படும் உருவமும் செயலுமுடையனவாகக் கூறிய அதிசய கவிசாதுரியம் பாராட்டத்தக்கது.

### சீதை இராமனைப் பிரிந்தாளென்பது பொருந்தாதெனல்.

63. 141 'கண்ணினும் உளை நீ! தையல் கருத்தினும் உளை நீ! வாயின்
எண்ணினும் உளை நீ! கொங்கை இணைக்குவை தன்னின் ஓவா
தண்ணல்வெங் காமன் எய்த அலரம்பு தொளைத்த ஆறாப்
புண்ணினும் உளை நீ! நின்னைப் பிரிந்தமை பொருந்திற் றாமோ!'

இ-ள். '(நீ, எப்போதும்) சீதாதேவியின் கண்களிலிருக்கின்றாய்! கருத்திலுமிருக்கின்றாய்! மன்மதன் எய்த புட்பபாணங்கள் தொளைத்ததனாலுண்டான ஆறாத புண்களிலு மிருக்கின்றாய்! (இப்படியிருக்கவேயும்,) உன்னை அவள் பிரிந்திருக்கின்றாளென்று கூறுவது பொருத்தமான கூற்றாமோ ?'

உளை - உள்ளாய். எண் - எல்லை. வாயின் எண்ணில் - வாயின் எல்லையில் - வாயில். இணை - இரட்டை. குவை - மேடு - முகடு. ஓவாது - நீங்காமல் - இடைவிடாமல். அண்ணல் - பெருமை.

வெம்மை - கொடுமை. அண்ணல் வெம்காமன் - பெருங்கொடுமையுடைய மன்மதன். அலர் - பூ. தொளைத்த புண் - தொளைத்ததனால் உண்டாகிய புண்.

சீதை, எப்போதும் இராமனை உருவெளித்தோற்றமாகக் காணலால் அவன் அவள்கண்ணைவிட்டுப் பிரியாமையையும் அவனை அவள் சதா சிந்தித்துக்கொண்டிருத்தலால் சிந்தையைவிட்டுப் பிரியாமையையும் இடைவிடாமல் அவன்பெயரைச் சொல்லிக்கொண்டிருத்தலால் வாயைவிட்டுப் பிரியாமையையும் ஓயாது அவன் காதல்கூர்தலால் மன்மதன் அம்புசெய்த புண்ணைவிட்டுப் பிரியாமையையும் உடையாளென்பது உள்ளுறைபொருள்.

இதற்கு முந்தியபாட்டில், காணக்கூடாத குணங்கள் காணப்பட்டனவாகக்கூறியது அதிசயமானது. அந்த அதிசயத்துக்கு மேல் அதிசயமானது, இந்தப்பாட்டில் இராமனைப் பிரிந்த சீதையைப் பிரியாதவனென்றது. மேற்கொண்டும் அதிசயமானது, பிரிந்த தூலராமர் ஒருவராயிருக்க, வாயில்உள்ள ராமர் மனத்தில்உள்ள ராமர் கண்ணில்உள்ள ராமர் புண்ணில்உள்ள ராமராகச் சூக்கும ராமர் பலராயிருப்பதாகக் கூறியது.

சீதை இராவணனால் தீண்டப்படாமல் தூயளாயிருக்கின்றாளெனல்.

[இலங்கைநகரிலே, ஒருபுறத்திலே, அசோகவனமென்ற சோலையிலே, இளையபெருமாள் இயற்றிய சாலையிலே, 'தவம் செய்த தவமாம் தையல்'* ஆன சீதாதேவி உனது திருநாமத்தையே செபித்து உனது திருவுருவத்தையே தியானித்து அருந்தவம் புரிந்துகொண்டிருக்கக்கண்டேன். அவளுடைய கற்புத்தீயும் 'இராவணன், விரும்பாதவளைத் தொட்டால், தலைவெடித்துச் சாவக்கடவன்' என்று பிரமனிட்டிருந்த சாபத்தீயும் அகத்திக்கோட்டையும் புறத்திக்கோட்டையுமாய்த் தடையாயிருந்ததனால், அவளைத் தொடுதற்கு அஞ்சி அவளிருந்த சாலையோடு தூக்கிப்போனான்.]

* மகாத்துமாக்களாற் செய்யப்படும் மகிமையுடைய தவம் தானே தவஞ்செய்து அந்தத் தவப்பயனைப்பெற்ற சீதை - தவத்தின் தவப்பயன் வடிவெடுத்தாற்போன்றவள்.

சீதை கற்புநிலைகலங்காமை மாதர்களுக்கெல்லாருக்கும் உயர்ந்த மதிப்பை உண்டாக்கிய தேனல்.

142 'சோகத்தா ளாய நங்கை கற்பினால், தொழுதற் கொத்த
மாகத்தார் தேவி மாரும் வான்சிறப் புற்றார்; மற்றைப்
பாகத்தாள், இப்போ தீசன் மகுடத்தாள்; பதுமத் தாளும்
ஆகத்தா ளல்லள், மாயன் ஆயிரம் மௌலி மேலாள்.'

இ-ள். '(உனது பிரிவினால்) துன்பமுடையவளான சீதாபிராட்டி கற்புநிலை (கடுஞ்சோதனைக்குள்ளானகாலத்தும்) கலங்காமையினால் (அவள் உயர்வுற்றாளென்பானேன், 'தக்கவன் ஒருவன் வாழத் தன்குலமெல்லாம் வாழும்' என்றவாறு, பெண்ணாகிய அவளினமான பெண்களெல்லாருமே உயர்வுபெற்றார்கள். அப்படி உயர்வுபெற்ற பெண்கள் பூலோகத்துப்பெண்கள்மட்டுமோவென்னில், அன்று) தேவலோகத்துத் தெய்வப்பெண்களும் உயர்வடைந்தார்கள். (ஏனைய எல்லா உலகத்துப்பெண்களும் உயர்ந்தார்கள். பிராட்டியொருத்தியுடைய கற்பினால், பெண்களெல்லாரும் அடைந்த மேம்பாட்டைக் கொண்டாடுவாராய், ஆடவரெல்லாம், அவரவர் நாயகிமாரைத் தலைமேற்கொண்டு கௌரவப்படுத்தினார்கள். சீதாதேவி கற்புச்சோதனைக்குள்ளாகுமுன்) சிவபிரானுடைய பாகத்தாளாயிருந்த உமாதேவி, இப்போது (சோதனைக்குள்ளான சீதாதேவி கற்பு நிலைகலங்காமை தெரியலானபோது) அந்தப் பெருமானுடைய தலைமேலுள்ளாள். இலக்குமிதேவியும் திருமால் மார்பிலுறைபவளல்லளாய் அந்த அமலன்சிரமே லிருக்கின்றாள்.'

சோகம் - துக்கம். மாகம் - தேவலோகம். பதுமத்தாள் - இலக்குமி. மகுடம் - மௌலி. முடி - கிரீடம். மௌலியாளேயும் பாடம்.

'அர்த்தநாரீசுவரமூர்த்தத்திலே சிவபிரானது பாகம் வலப்புறமாதலால், இடப்புறம் "மற்றைப்பாகம்" எனப்பட்டது. "ஆயிர மௌலி" என்றது - விராட்ஸ்வரூபத்தின் நிலைமையைக் கருதி.' வை. மு. கோ.

சீதை ஒருத்தியின் கற்பினால் மாதர்களெல்லாருக்கும் மதிப்பு அதிகப்பட, ஆடவர் மாதரை முன்னினும் அதிகமாகக் கவுரவப் படுத்தினார்களென்பதைப் பாவனாரீதியான கவிமுறையாக, ஆச்சரியமும் ஆனந்தமுமுண்டாக,

'பாகத்தாள் இப்போ தீசன் மகுடத்தாள் பதுமத் தாளும்
ஆகத்தா ளல்லள் மாயன் ஆயிர மௌலி மேலாள்'

என்று கூறியிருத்தல் கவனிக்கத்தக்கது.

சீதையின் மேம்பாடு, 'உன்பெரும்,' 'பொன்னல,' 'உன்குலம்,' 'சோகத்தாள்' என்ற கவிகளில் ஆரோகணகதியாக உயர்தலுடன் பரவுதலும் உடையதாகக் கூறப்பட்டு அக்கவிகளிற் கடைசியான இந்தச் சோகத்தாள் என்ற பாட்டில் அத்தியந்த உச்சமும் வியாபகமும் அடைந்ததாகக் கூறப்பட்டிருத்தல் காண்க.

## அனுமான் சீதையை அசோகவனத்திற் கண்டே னெனல்.

[தெண்ணீர்க்கடலின் நடுவே இலங்கையைக் கண்ட அடியேன், அங்கே சாதாரணமாகச் சனசஞ்சாரமுள்ள எல்லா இடங்களிலும் விசேடமாக இராவணன் அரண்மனையிலும் தேவியைத் தேடிக் காணாமல் அசோகவனத்தை அடைந்தேன்; அங்கே கண்ணீர்க் கடலின் நடுவே அவளைக் கண்டேன்.]

## இரக்கமே பெண்ணுருக்கொண்டாற்போன்று சீதை சிறையிலிருக்கின்றா ளெனல்.

143 'அரக்கியர் அளவற் றார்கள், அலகையின் குழுவும் அஞ்ச
நெருக்கினர் காப்ப, நின்பால் நேசமே அச்சம் நீக்க,
இரக்கமென் றொன்று தானே எந்திழை வடிவ மாகித்
தருக்குயர் சிறையுற் றன்ன தகைமையள், தமியள் அம்மா!'

இ-ள். '(தாம் பயப்படாது பிறரைப் பயப்படுத்துமியல்புடைய பேய்கள், ஒன்றன்று, அனேகம் திரண்டுகூடியனவான பல) பேய்க்கூட்டங்களுமே பயப்படும்படி (இமிசிக்கும்) அரக்கியர் (ஒருவரல்ல) அளவற்றவர்கள் (தப்பிப்போதற்குச் சந்துவிடாது நெருங்கிச் சூழ்ந்துநின்று) வருத்தஞ்செய்துகொண்டு காவல் காத்துநிற்க, (அவ்வருத்தத்தால் ஏற்பட்ட) அச்சத்தை உன்பால் வைத்த அன்பு ஒன்றே (பக்கபலமில்லாமல்) நீக்காநிற்க, (அந்த அன்புத்துணையன்றி எந்தத்துணையு மில்லாது) தனியளாயுள்ள

சீதாதேவி, இரங்கிப்பரிதாபப்படத்தக்கதென்ற ஒருதன்மையானது ('பெண்ணொன்றால் பேயுமிரங்கும்' என்பதற்கிலக்கான) பெண்ணுருக்கொண்டு சிறையி லிருந்தாற்போன்ற தன்மையளாயிருக்கின்றாள்.'

அலகை - பேய். குழு - கூட்டம். நெருக்குதல் - வருத்துதல் (தமிழகராதி). நெருக்கினர் (முற்றெச்சம்) - நெருக்கி - வருத்தி. ஏந்திழை - பெண். தருக்கு (முதனிலைத்தொழிற்பெயர்) - தருக்குதல் - வருத்துதல் (தமிழகராதி). தருக்கு உயர் - வருத்துதல் மிகுந்த. சிறை - சிறைச்சாலை - காவற்கூடம். தகைமை - தன்மை. தமி - தனி. அம்மா, அதிசய இரக்கக்குறிப்பு.

பேய், பிறரைப் பயமுறுத்தும்; தான் பயமுறாது. அப்படிப்பட்ட பேய் தனியாகவன்றிக் கூட்டங்களாகவுள்ளவைகளும் அஞ்சும்படி, எனவே அதி அசாதாரண அச்சமுண்டாம்படி, அரக்கிகள் சீதையை வருந்தச்செய்தார்களென்பான் 'அலகையின் குழுவும் அஞ்ச நெருக்கினர்' என்றான். அப்படிப்பட்ட வருத்தப்படுத்துதலைப் பொருட்படுத்தாதபடிசெய்தது சீதை இராமன்பால் வைத்த நேசமென்றதனால், சீதையின் இராமநேசத்தை, அன்பென்பதை அறியாரும் அறியச்செய்தான்.

இரக்கமென் றொன்று தானோர் ஏந்திழை வடிவமாகித்
தருக்குயர் சிறையுற் றன்ன தகைமையள் தமியள் அம்மா!

என்ற இனிய அருமந்த இரக்கவருணனை, சீதையின் அதிபரிதாபகரமான நிலைமையை நன்குணரச்செய்து, கருங்கல்மனமுங் கரைந்துருகச்செய்வதா யுள்ளது. அது கருணைசொரூபியான இராமன் மனத்தை யாதுசெய்திருக்கு மென்பது பகரமுடியாததன்றிப் பாவிக்கவும் முடியாததா யுள்ளது.

இராமனைக்காட்டிலும் பாக்கியசாலியான ஆடவரில்லை யெனல்.

[எப்படிப்பட்ட பெருந்துன்பத்தையும் அச்சத்தையும் பொருட்படுத்தாதபடி செய்யவல்ல சிறந்த அன்பைச் சீதாதேவி உன்பால் வைத்திருக்கின்றாள். அப்படிப்பட்ட அன்பைத் தம் மனைவியரால் வைக்கப்பெற்றவர் எவரும் இலர்: ஆதலால், நீ ஆடவரனைவரினுஞ் சிறப்புடையையாய், அவரெவரும் அனுபவியாத, ஆணாகப்பிறந்ததன்பயனாக அனுபவிக்கும் செல்வங்களுட் சிறந்த செல்வத்தை அனுபவிப்பாயாயிருக்கின்றாய் யென்பதைத் தேவியைக் கண்டபோது தெரியலானேன்.

## இராவணன் இணங்கும்படி இரந்துவேண்டச் சீதை கடிந்து மறுத்தா ளேனல்.

அடியேன் தேவியை அணுகித் தெரிசித்துச் சேவைசெய்தற்கு ஏற்ற சமயத்தை எதிர்பார்த்திருந்தபோது, இராவணன் வந்து இறைஞ்சி இணங்கும்படி இரந்து வேண்ட, அவள் கொடுங்கோபங் கொண்டு கடுஞ்சொற்கூறி மறுக்க, அவன் அவளைக் கொல்லத் தொடங்கிவிட்டான். அப்போது, அவள் தூயகற்பும் உன்திரு வருளும் நல்லறமும் ஒன்றுகூடிக் காத்தன. அவன் அவளைத் தனக்கு இணக்கும்படி காவல்காத்துநின்ற இராட்சசிகளுக்குக் கட்டளையிட்டுச் சென்றான். அவர்கள் என் மந்திரவலியால் இறந்து போனார்போல உறங்குவாரானார்கள்.

## சீவனைவிடப்போன சீதையை இராமநாமம் இயம்பிக் காத்ததும் மோதிரங் காட்டியதும் கூறல்.

அப்போது பிராட்டி உயிரைவிட ஒருப்பட்டு ஒரு கொடியைக் கழுத்தில் இறுக மாட்டக் கண்டு, அடியேன் பதறிப் பக்கத்திலே போய்க் கையாற் றடுக்கமாட்டாது வாயாற்றடுப்பேனாய் உன் திரு நாமத்தை உச்சரித்தபோது, *குரக்குருக்கொண்ட அரக்கனோ வென்று ஐயுற்றாளானாலும், 'யான் இறக்கலுற்றபோது எம்பெரு மான்பேரைக் கூறி இறவாது காத்தாய்' என்று நன்றியுரைத்தாள். அடியேன், உன் செய்திகளைத் தெரிவித்து உன் மோதிரத்தைக் காட்டினேன். அது, அவளுக்கு அந்தியகாலத்தில் சாவாது காக் கும் தேவாமுதம்போன்றது.]

## எதிரிடையான இரண்டு அதிசயசம்பவங்கள் நிகழ்ந்தனவெனல்.

144 'ஒருகணத் திரண்டு கண்டேன் ஒளிமணி ஆழி ஆன்ற
திருமுலைத் தடத்து வைத்தாள்: வைத்தலும், செல்வ! நின்பால்
விரகமென் பதனின் வந்த வெங்கொழுந் தீயி னால்வெந்
துருகிய துடனே ஆறி வலித்தது குளிர்ப்புள் ளூற.'

இ-ள். 'சிமானே! ஒரு கணநேரத்துக்குள்ளே (ஒன்றுக்கொன் றெதிரிடையான) இரண்டு (வியப்பான நிகழ்ச்சிகளைக்) கண்டேன். (அவை எவையெனில், தேவி, உனது பொன்) மோதிரத்தை (உன் அன்பு தூண்டத் தன்) தனமுகட்டிலே வைத்தாள்: வைத்தவுடனே (உன் பிரிவுத்தீயாகிய) விரகாக்கினி (யினால் வெதுப்பப்பட்டிருந்த

* குரக்குரு—குரங்கின் வடிவம்.

அவள் திருமேனிவெம்மை) யினுல் (அந்த மோதிரம்) வெதும்பி உருகியது: உடனே (அம்மோதிரத்தை அனுப்பிய நீ "விரைவாய் வந்து சிறைமீட்பாய், திரும்ப உன்னைச் சேரலாம்" என்ற சந்தோஷ சிந்தனையினுல்) மனத்திலே குளிர்ச்சி உண்டாக (அது கொங்கை யுள்பட்ட உடம்பெங்கும் பரவிக் கொங்கைமீது வைக்கப்பட் டிருந்த மோதிரத்தையுங் குளிர்விக்க, அது) சூடாறி யிறுகிக் கட்டி யானது (ஆச்சரியம்! ஆச்சரியம்!! மிகவும் ஆச்சரியம்!!!).

மணி (-அழகுடைய) ஆழி (-மோதிரம்). ஆன்ற - அகன்ற - பரந்த. தடம் - உயர்ந்த இடம் (திருக்கோ. ச. சங்க அகராதி) - முகடு. விரகம் - பிரிவு. வலித்தல் - வன்மையாதல். ஊறல் - பெருகல் (தமிழகராதி). உள் (மனம்) குளிர்ப்பு ஊற என மாறுக. ஆழி ஊன்ற பாடபேதம்.

இராமன்பிரிவுநீட்சிபற்றிய சிந்தனையால் வெதும்பியிருந்த சீதைதேகம் அவனைத் திரும்பச் சேரலாமென்ற எண்ணத்தாற் குளிர்ச்சியடைந்ததென்பது கருத்து. இதனை அதிசயமும் ஆனந்த மும் உண்டாக உணர்த்துவானுய், இராமன்மோதிரம் முந்திய வெப்பத்தால் உருகிப் பிந்திய தட்பத்தால்* இறுகியதென்றுன். இது உயர்வுநவிற்சியணி. இதுபோலக் 'காதளவும் நீண்ட கண்' எனத் தமிழிலும், 'இருகாதுக்கும் எட்ட இளித்தான்'† என ஆங்கி லத்திலும், 'பிணமலை' 'இரத்தஆறு' என ஆங்கிலம் தமிழ் இரண்டி லும் வழங்குவன உயர்வுநவிற்சிக்கு உதாரணங்களாம்.

தேகத்தில் பொன் உருகும்படியான சூடு உண்டாகுதல் இயல்பன்று. மோதிரம் (பொன்,)உருகியபோது மோதிரவடிவத்தை யிழந்துவிடும்: பின்பு அது, குளிர்ந்து கட்டியாகும்போது பழைய மோதிர உருவத்தை அடையமாட்டாது. இவற்றுக் கெதிரிடை யாக, மோதிரம் உடற்சூட்டினுல் உருகியதென்றும், அப்படி உருகிய மோதிரம் உடற்குளிர்ச்சியால் இறுகியதென்றும் உரைத் தல் பொருத்தமன்றென்று கருதலாகாது. யாதாயினுமொன்றை இன்பமும் அதிசயமும் உண்டாக மிகைப்படுத்துக்கூறுவதே அதி சயோக்தியலங்காரமென்னும் உயர்வுநவிற்சியணியாம். இப்பாட்டி லுள்ள உயர்வுநவிற்சி, அதி அசாதாரண அற்புத கற்பனுசக்தி

* தட்பம்—குளிர்ச்சி. † கடைவாய்கள் காதுகளை அணுகவும் பற்கள் மிகவும் வெளிப்படவும் மூடச்சிரிப்புச் சிரித்தான் ('He grinned from ear to ear').

யுடையாராலேயே கூறக்கூடியது. இந்த உயர்வுநவிற்சிக்கவி, மராமரப்படலத்தில் வரும் 'ஊழிபேரினும்' என்ற முதற்கவிதொடக்கமாக 'ஏழு மாமரம்' என்ற கவி இறுதியாகத் தொடர்ச்சியாகப் பரமாச்சரியமும் பரமானந்தமும் பயக்கும் பதினான்கு உயர்வுநவிற்சிக்கவிகளையும் கலிங்கத்துப்பரணியில் உள்ள 'அணைகண்ட' என்ற அருமந்த அதிசய உயர்வுநவிற்சிக்கவியையும் நினைவுறச்செய்கின்றது.

'கடலில் திருவணைகட்டிய (இராமன் சேனையைச்சேர்ந்த) குரங்குக்கூட்டங்கள் (அந்தப் பாலைவனத்தில் அதி உட்டிணமான மணற்பரப்பிலுள்ள எண்ணிறந்த மணல்களுள்) ஒருமணல் (காணப்பெற்றிருக்குமானால், அதைக் கடலிற்போட்டுக் கடல்நீர் முழுவதையும் வற்றச்செய்து கடலைக் கடக்க அணைகட்டவேண்டிய வேலையை அனாவசியகமானதாகச் செய்திருக்கும். அந்த ஒருமணல்) காணாமையால் (கடலில் அணைகட்டுதற்கு) மலைகளையெடுத்து(க் கொண்டுவந்துபோட்டு வருந்தி) மயங்குவனவாயின' என்ற பொருளடங்கிய அந்தப்பாட்டு வருமாறு:

'அணைகண்ட குரங்கினங்கள் அலைகடலுக் கப்பாலை
மணலொன்று காணாமல் வரையெடுத்து மயங்கினவே.'

உண்மையில், கடலைச் சுவறச்செய்யும் சூட்டுமணல் உள்ளதன்று, உள்ளதாயினும் தொடக்கூடியதா யிராதென்றும், தேகச்சூட்டினால் மோதிரம் உருகாது, உருகி உருவழிந்த மோதிரப்பொன் சூடாறியபோது (கம்மியன் கைத்தொழிலாலன்றி) மோதிரமாகாதென்றும் ஆட்சேபிப்போர், கவிஞர்கள் மனோபாவனையாற் சிருட்டிக்கும் கற்பனாலோகக்காட்சிகளைக் காண மறுப்போராவார்.

சீதை, ஒருமாதத்துக்குட் சிறைமீட்கப்படாவிட்டால் சேத்திடுவே னென்று ளெனல்.

[அடியேன் உன் திருநாமம் தீட்டிய கணையாழியைக் காட்டிய போது கையில் வாங்கி, அநியாயம்மிகுந்த அரக்கரிருக்கும் ஊருக்கு வந்து *ஆசூசமடைந்ததென்று ஆயிரங்கலசம் புண்ணியதீர்த்தத்தினால் அபிடேகஞ்செய்வாள்போல, அதனை எம்பெருமாட்டி ஆனந்தக்கண்ணீரால் முழுக்காட்டினாள். மகிழ்ச்சியமுதை அமுது கொண்டு வாய்பேசாமல் மௌனமாயிருந்தாள். மெலிந்திருந்த

* ஆசூசமடைந்தது—தீட்டுப்பட்டது.

மேனி விம்முதலுற்றாள். ஆச்சரியத்தால் மூச்சடங்க, ஆவிபோனாள் போன்றிருந்தாள். அப்போது, அடியேன் அவள் பிரிந்த பின்பு நிகழ்ந்தவைகளையும் உன் துயரையும் உரைத்து, அவளிருக்குமிடம் அறியப்படாததனால் நீண்ட காலதாமதம் நேர்ந்ததென்று கூறக்கேட்டபின் நெடுமூச்சுவிடுவாளாய்ப் போன உயிர் மீளவந்தாள் போன்றாள். உன்னைப் பிரிந்தபின் தனக்கு நேர்ந்த ஆபத்தையும் துன்பத்தையும் அறிவித்தாள். முடிவில் 'இன்னும் ஒருமாதம் உயிரோடிருப்பேன். அதற்குள் எம்பெருமான் இன்னருள்புரியானெனில் இறந்திடுவேன்' என்று கூறித் தன் திருமுடியில் உன் திருவடிகள் பொருந்தத் தியானித்துத் திக்குநோக்கித் தெண்டனிட்டாள்.

## இராமன்கையிற் சூளாமணியைக் கொடுத்தல்.

'பின்பு, தன் முன்தானையில் முடிந்துவைத்திருந்த சூளாமணியை அவிழ்த்தெடுத்து அடையாளமாக அடியேன்கையிற் கொடுத்தாள். அதனைக் கண்களிக்கக் காண்பாயாக' என்று கூறி அனுமான் சூளாமணியை இராமன்கையிற் கொடுத்தான்.]

## சூளாமணியை வாங்கிய இராமன் மெய்ப்பாடுகள்

145 பையவுட் பயந்த காமம் பரிணமித் துயர்ந்து பொங்கி
மெய்யுற வெதும்பி யுள்ள மெலிவுறு நிலையை விட்டான்
ஐயனுக் கங்கி முன்னர் அங்கையாற் பற்றும் நங்கை
கையென லாயிற் றன்றே, கைபுக்க மணியின் காட்சி.

இ - ள். (சீதையின் சூளாமணி இராமன்கையி லுற்றபோது அதன் காட்சியாலும் பரிசத்தாலும் அவன்) நெஞ்சினுள்ளே மெள்ள உண்டாகிய சீதைகாதல் வளர்ந்து மேன்மே லோங்கியதனால் உடம்பு வெதும்பி மெலிவுற்றிருந்த நிலைமை நீங்கப்பெற்றான். அவன்கையை அடைந்த சூளாமணி அவனுக்குக்(கல்யாணகாலத்தில்) அக்கினி முன்னிலையில் அவன்கையாற்பற்றிய சீதை கைபோல (இன்பம் அளிப்பது) ஆயினது.

பைய - மெல்ல. பயத்தல் - உண்டாகுதல் (தமிழகராதி). பரிணமித்தல் - (வித்திலிருந்து மரம் உண்டாதல்போல) வளர்தல். மெய் - உடம்பு. அங்கி - அக்கினி. கை எனல் ஆயிற்று - கை போலுதலானது - கைபோன்றது. குலமுறைகிளத்துபடலத்தில்

'வில்லென்னும்' என்ற பாட்டில் 'அல்லென்னும் திருநிறத்த அரி' என்பதில் 'என்னும்' என்பது 'போலும்' என்று பொருள்பட நிற்றல் காண்க. அன்று ஏ அசைகள். காட்சி - தன்மை (தமிழக ராதி). பைப்பய பாடபேதம்.

முன் சீதையை மிதிலையிலே கன்னிமாடத்திலே கண்டு காதல் கொண்டு வருந்தியிருந்த இராமன் விவாககாலத்தில் அவள் கையைப் பற்றியபோது அவளை அடைந்தோமென்று மகிழ்ச்சியுற்றதுபோல, இப்போது அவள்பிரிவால் வருந்தும் அவன் அவளுடைய சூளாமணியைக் கையிற்கொண்டபோது 'இராவணனை விரைந்து வென்று இச் சூளாமணிக்குடையாளை மீட்டு அடைந்திடுவோம்' என்று களிப்படைந்தானென்பது ஈற்றடியிரண்டின் கருத்து.

146 பொடித்தன உரோமம்; மேன்மேற் பொழிந்தன கண்ணீர்; பொங்கித்
துடித்தன மார்பும் தோளும்; தோன்றின வியர்வின் துள்ளி;
மடித்தது மணிவாய்; ஆவி வருவது போவ தாகித்
தடித்தது மேனி: என்னே! ஆருளர் தன்மை தேர்வார்!

இ - ள். (அந்தச் சூளாமணியின் பரிசம் அதனை அணிந்திருந்த சீதையின் பரிசம்போன்றிருந்ததனால், இராமனுக்கு) உரோமம் சிலிர்த்தது; (ஆனந்தக்) கண்ணீர் மேன்மேலாகப் பொங்கி வழிந்தது; தோளும் மார்பும் துடித்தன; (இன்ப) வேர்வைத் துளிகள் (இனிது) வெளிப்பட்டன; வாய் மடித்தலுற்றது; (ஆனந்த மேலீட்டால்) உயிர் (வெளியே) போவதும் (உள்ளே) வருவதுமாகி உடம்பு பூரித்தது: என்ன ஆச்சரியம்! இத்தன்மைகளை ஆராய்ந்தறியவல்லார் யார் இருக்கின்றனர்? (எவருமில்லையென்றபடி).

பொடித்தல் - புளகித்தல் - சிலிர்த்தல். வியர்வு - வேர்வை. துள்ளி - துளி. மணி (-அழகு)வாய் - அழகியவாய். ஆவி - உயிர்.

சீதையினது சூளாமணியின்பரிசம் அவள் தேகப்பரிசமே போல, இராமனுக்குண்டாக்கிய மெய்ப்பாடுகளை வியப்புவிளைய விவரித்திருக்கும் வித்துவசாதுரியம் மெச்சத்தக்கது. அத்தியந்த சந்தோஷத்தாலும் சிலர் இறக்கும் உண்மையை மனத்துட் கொண்டு ஆவி அகன்றிடலாம்படியான பேரானந்தத்தை இராமன் அடைந்தான் என்பார் 'ஆவி வருவது போவதாகி'யென்றார்.

## இராமன் சேனையுடன் தென்கடற்கரை சேர்தல்.

[அப்போது அங்கதனுதியர் வந்து இராமசுக்கிரீவரை வணங்கினார்கள். சுக்கிரீவன் இராமனைநோக்கித் 'தேவியைத் தேடச்சென்றிருந்த சேனைகளெல்லாம் திரும்பிவந்துவிட்டன. அவளிருக்குமிடத்தை அறிந்துகொண்டோம். இனி வீணே காலஞ்செல்லவிடலாமோ?' என்றவுடனே, இராமன் எழுந்து 'நமது படைகள் புறப்படுக' என்றான். சேனைகளெல்லாம் திரண்டு தெற்குநோக்கிச் செல்வனவாயின. அப்போது இராமலக்குமணரை முறையே அனுமானும் அங்கதனும் வணங்கி வேண்டிக்கொண்டபடி முந்திய முன்னவன் பிந்திய முன்னவன்மீதும், முந்திய பின்னவன் பிந்திய பின்னவன்மீதும் ஏறிக் கருடாரூடனான திருமாலும் இடபாரூடனான சிவபிரானும்போலச் செல்வாரானார். தேனும் பழங்களும் கிழங்குகளும் கிடைக்கும் மலைப்பிரதேசமார்க்கமாகச் சேனை சென்றது. இலங்கையையும் இராக்கதரையும் பற்றிய எல்லா விவரங்களையும் அனுமான் சொல்லிக்கொண்டு செல்ல, எளிதாக வழிகடந்து எல்லாரும் பன்னிரண்டாம்நாள் தென்றிசைக்கடலைக் கண்டார்கள்.]

திருவடிதொழுதபடலம் முற்றியது.

சுந்தரகாண்டம் முற்றுப்பெற்றது.

[தொடரும்]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---